ओं नमः शिवाय । ओं उमायै नमः

# च्युतपुरमाहात्म्यम्

(शिव - स्कान्द - पाझपुराणेभ्यः सङ्कलितम्)

# வழுவூர் பெருமை

(சிவ - ஸ்காந்த - பாத்ம
புராணங்களிலிருந்து தொகுத்தது)
தமிழுரையுடன்



ओं नमः शिवाय। ओं उमायै नमः

# च्युतपुरमाहात्म्यम्

(शिव - स्कान्द - पाद्मपुराणेभ्यः सङ्कलितम्)

# வழுவூர் பெருமை

(சிவ - ஸ்காந்த - பாத்ம
புராணங்களிலிருந்து தொகுத்தது)

தமிழுரையுடன்


தொகுப்பாளர்

**வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ**

ஸ்ரீரங்கம்



வெளியிடுபவர்:

**மஹாபெரியவாள் ட்ரஸ்ட்**

Gurukrupa, 94, I.T.I. Layout, M.S.R.I.T.
Bangalore - 560 054

2009 ஸர்வதாரி



ஸ்ரீ பாலாங்குராம்பிகா



பிக்ஷாடனர்

# முன்னுரை

பரமபூஜ்ய ஸ்ரீ மஹாபெரியவாளின் பேரருளாலும் ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சரணர்களின் பேரருளாலும் வழிகாட்டலாலும் ஸ்ரீ மஹாபெரியவாள் டிரஸ்டின் புதிய பிரசுரமாக ஸ்ரீ ச்யுதபுரீ மாஹாத்ம்யம் வழுவூர் பெருமை என்ற இந்நூல் வெளியாகிறது. ஸ்ரீ குரு கிருபை தொடர்ந்து நம் விருப்பத்திற்குச் செயல் வடிவம் தந்து நிறைவு தருகிறது.,

க்ஷேத்திர மாஹாத்ம்யம் என்றொரு துறை பாரத இலக்கிய வரலாற்றில் இடம் பெறுகிறது. ஸ்ரீ வடாரண்ய க்ஷேத்திர மாஹாத்ம்யம், ஸ்ரீ வாஞ்சிய க்ஷேத்திர மாஹாத்ம்யம் என்ற தொடரில் இது மூன்றாவது.

ஒவ்வொரு சிறிய ஊரில் கூட ஒன்றிரண்டு தேவாலயம் இருக்கும். அவ்வூர் மக்களுக்கு அங்கு கோயில் கொண்டுள்ள தெய்வம் கிராம தெய்வம், குல தெய்வமும் இஷ்ட தெய்வமுமாகக் கூட இருக்கும். அது வைகுண்டத்திற்கும் கைலாஸத்திற்கும், மேருவிற்கும், இமயத்திற்கும் மேலான க்ஷேத்திரம். அதற்கு எதிரிலுள்ள குளமோ ஆறோ கங்கைக்கும் நர்மதைக்கும் மேலானதென்ற நம்பிக்கை. எந்தவொரு நெருக்கடி யிலும் காப்பது தெய்வம் ஒன்றே. அதனை ஒவ்வொரு நொடியிலும் உள்ளத்தில் கொள்வது வாழ்க்கைக்குப் பெரிதும் உதவக்கூடியது என்ற எண்ணம் எந்த நல்ல மனிதனுக்கும் உண்டு.

முன்பு வயிற்றுப் பிழைப்பிற்குத் தம் ஊரைவிட்டு வெளியேறுவது மிகக் குறைவு. க்ஷேத்திர யாத்திரையாக வெளியூர் செல்வதும் ஒரு சிலருக்கே எளிதாயிருக்கும். அதனால் காசி, ராமேசுவரம், துவாரகை, ஜகன்னாதம் என க்ஷேத்திரமனைத்தும் தம் தம் ஊரில் கூடியள்ளதாக, கங்கையும், யமுனையும், நர்மதையும், ஸிந்துவும் தம் ஊர் குளத்திலும் தம் எதிரில் உள்ள தீர்த்த பாத்திரத்திலும் உள்ளதாகக் காண்பது மக்களின் தெய்வீக உள்ளப் பாங்கின் பிரதிபலிப்பாகும். ஊரை க்ஷேத்திரமென்றும் சிறு நீராதாரத்தையும் தீர்த்தமெனவும் தாம்

பருகும் நீரைக் கூடத் தீர்த்தம் கங்காமிருதம் எனக் கருதுவதும் நம் இரத்தத்தில் ஊறிய பண்பாடு, தெய்வம் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளது என்ற எண்ணத்தின் பிரதிபலிப்பு இது.

வழுவூர் என்ற க்ஷேத்திரம் தமிழ்நாட்டில் மாயூரம் - திருவாரூர்ப் பாதையில் மாயூரத்திற்கே 7-8 கிலோ மீடர் தூரத்திலுள்ள மிகச் சிறிய கிராமம். அங்கொரு அளவுக்கு மீறிய பெருங்கோயிலும் நீர்த் தேக்கமும் உள்ளது. காவிரியின் மற்ரெரு தோற்றமான வீர சோழ ஆற்றின் கரையில் அமைந்தது. வீரசோழன் முதலிய பல சோழ அரசர்களின் ஆட்சிக் குட்பட்ட பெரு நகரமாயிருந்ததே இன்று சிற்றூராக உள்ளது. நால்வர் பாடல் பெருத வைப்பு ஸ்தலத்தில் ஒன்று. திருவாலங்காடு, திருவெண்காடு, சிதம்பரம், மதுரை, கும்பகோணம், திருவதிகை, திருச்செங்காட்டான்குடி, கைலாஸம் என்ற எட்டுடன் வழுவூரும் ஒரு தாண்டவ க்ஷேத்திரமாகும்.

பிரளய காலத்தில் பிரளய நீரில் நீர்த்து பிரளயத் தீயில் சாம்பலாகி, பிரளயக் காற்ருல் மறையக் கூடிய உலகில் அப்போதும் மறையாமல் சிதையாமல் பிரளயத்தைவென்ற காஞ்சீ, சீர்காழி, கும்பகோணம், நீடூர், சாக்கோட்டை, கீழ்வேளூர், திருப்புறம்பியம், திருநெல்வாயில் முதலிய க்ஷேத்திரங்களுடன் வழுவூரும் முக்கிய இடம் பெறும். பிரளயத்தில் கரைகிற பிரும்மாண்டத்தின் பரவெளியில் அழியா உருப்பெற்ற தென்பதால் இதனை ச்யுதபுரீ, பிரளயத்திலிருந்து நழுவிய - வழுவிய ஊர், வழுவூர், நழுவூர் என்பர்.

தக்ஷிண கைலாஸம் என்ற புகழ் பெற்ற ஸ்ரீ காளஹஸ்தி, திருச்சிராப்பள்ளி, திரிகோண மலை முதலியவற்றுடன் வழுவூரும் தென் கைலாஸம் என்று புகழ்பெற்றது.

ஸ்வதந்த்ரர், லோக பைரவர், கால பைரவர், உக்ர பைரவர், நிர் வாண பைரவர், பீஷண பைரவர் முதலிய பைரவரிடையே வழுவூரிலுள்ள கஜாஸுர ஸம்ஹார மூர்த்தியும் பிக்ஷாடன மூர்த்தியுமான கங்கால பைரவர் இடம் பெறுவார்.

புகழ் பெற்ற 8 வீர ஸ்தான (வீரட்டான)ங்களில் திருக்கண்டியூர், திருக்கடவூர், திருவதிகை, திருப்பறியலூர், திருக்கோவலூர், திருக்குறுக்கை, திருவிற்குடி இவற்றுடன் வழுவூரும் இடம் பெறும். பெரும்பாலும் இவை மாயூரத்தைச் சுற்றி உள்ளவை என்பதும் நினைவிற் கொள்ளலாம்.

மாயூரம் நாகை நன்னிலம் திருவாரூர் என்ற வட்டத்திலுள்ள பல ஊர்களுடன் இந்த கிருத்திவாஸருக்குத் தொடர்புள்ளது. வஸிஷ்டர், அத்திரி, அகஸ்தியர், கண்வர், காத்யாயனர், முதலிய ருஷிகளின் தொடர்பும் பல கோடி அரசர்களின் பாதுகாப்பும் இத்தலத்திற்கு உள்ளதை இந்நூலிலிருந்து காணலாம்.

பிப்பலாரண்யம் (அசிக்காடு), பதரீவனம் (இலந்தங்குடி), சமீவனம் (கோவில்பத்து), தேவதாருவனம் (பெருஞ்சேரி) என்ற நான்கு காடுகள் சூழ்ந்த இடம் இன்று சிற்றூர்களாகக் காட்சி தருகிறது. இதனைச் சுற்றியுள்ள பண்டாரவாடை, திருக்கொள்ளிக் காடு, பந்தணை நல்லூர், தர்மபுரம், மாயூரம், தேரழுந்தூர், கூழையூர், பெருஞ்சேரி, இலந்தங்குடி, முதலிய பல ஊர்கள் இந்நூலில் குறிப்பிடப் பெறுகின்றன.

சிதம்பரம் போன்று சித்ஸபாநாதராக இங்கு முனிவருக்கு நடனத்துடன் ஜ்ஞான உபதேசம் செய்கிற இடமாக அழகிய ஜ்ஞான ஸபை இங்குள்ளது. ஸத்யோஜாதர், வாமதேவர், அகோரர், தத்புருஷர், ஈசானர் என்ற ஐந்து இறங்கு துறைகள் கொண்ட பஞ்ச பிரும்ம தீர்த்தம் உள்ளேயுள்ள வற்றாத ஐந்து ஊற்றுவாய்களால் எப்போதும் தெளிந்த நீர் நிறைந்து காணப் பெறுகிறது. இதனை ஒட்டி மூகமோசனம் ஜ்ஞானாம்ருதம் ஹ்ருத்தாபஹரம் முதலிய தீர்த்தங்கள் ஆங்காங்கு உள்ளன.

இந்நூலில் உள்ள க்ஷேத்திரங்களனைத்தும் காண ஏறக்குறைய 50 கிலோ மீட்டர் அளவு சுற்றிவர வேண்டியிருக்கும்.

இந்த க்ஷேத்திரத்திலுள்ள கஜஸம்ஹார மூர்த்தியும் பாலாங்குராம்பிகையும் பிக்ஷாடனரும் மோஹினியும்

கண்கொள்ளாக் காட்சி தருகின்றனர். இங்குள்ள நர்த்தனக் காட்சியில் இறைவனின் திருவடிகளில் முத்திரைகளும் பல தத்துவங்களை உணர்த்துகின்றன. பிக்ஷாடனரும் மோகினியும் இன்றும் பரம மோஹன வடிவில் காட்சி தருகின்றனர். பிக்ஷாடனர் காட்சி தருகிற பல க்ஷேத்திரங்கள் உண்டு. தாருகா வனத்து ருஷிகளின் ஆபிசார வேள்வியில் வெளியான புலியை அழித்துத் தோல் ஆடை உடுத்திய கோலத்தைப் பாபநாசத்தை அடுத்த திருப்பாலைத் துறையில் காணலாம். மேலைப் பெரும் பள்ளம். திருவலம்புரம், படராசு, திருவாவடுதுறை திருப்பராய்த்துறை, பிக்ஷாண்டார் கோயில் முதலிய இடங்களில் காணலாம். தேரழுந்தூரில் இந்த்ரன், உபரிசிரவஸ். முதலியவர் அங்குள்ள அத்தியாபகேசரின் மீது தேரில் சென்றதால், தேர் தன் நிலை இழந்து விழுந்து பூமியில் அழுந்தியது என ரதமக்னபுரம் - தேரழுந்தூராகியது. பிக்ஷாடனரது லிங்கமும், மோஹினியின் மறைவிடமும் இணைந்து பண்டார வாடையில் கைலாஸநாதராகக் காட்சி தருகிறார். அங்குள்ள ஹ்ருத்தாபஹர தீர்த்தம் புகழ் பெற்றது.

வழுவூரில் கஜ ஸம்ஹார மூர்த்தியின் பின் புறத்தில் சிதம்பர ரஹஸ்யம் போல் இங்கும் ஒரு ரஹஸ்ய யந்த்ர முள்ளது. முன் சுவற்றில் வரையப்பட்டிருந்ததாகவும் பின்னர் தாமிரப் பட்டத்தில் வரையப் பெற்றதாகவும் வரலாறு.

எழுத்தில் வடிக்க வொண்ணாத பல வியத்தகு பெருமைகள் கொண்ட வழுவூரின் பெருமை, சிவபுராணத்திலும் ஸ்காந்தத்திலும் பாத்ம புராணத்திலும் இடம் பெற்றுள்ளது. ஸம்ஸ்க்ருதத்திலுள்ள அந்நூல் தொகுப்பு இன்று கிடைப்பது அரிது. அதனைக் தமிழில் கருத்துரையுடன் ஸ்ரீ மஹாபெரியவாள் டிரஸ்ட் வெளியிடுகிறது.

சுருக்கமாக இத்தலத்தின் வரலாறு :-

தாருகாவனத்து முனிவர்கள் இறைவனுக்கு எதிராகச் செய்த ஆபிசார வேள்வியில் தோன்றிய யானையை,

இறைவன்பால் ஏவிட, இறைவன் அந்த யானையை அழித்துத் தோலைப் போர்த்து அருளிய வரலாறு இத்தலத்திற்குரிய வீரச் செயலாகும். இத்தலத்துக்குரிய மூர்த்தி கஜஸம்ஹார மூர்த்தியாவார்.

ராஜகோபுரம் ஐந்து நிலைகளையுடையது. கிழக்கு நோக்கியது. அழகான ராஜகோபுரம். கோயிலின் முன்பு பஞ்ச பிரும்ம தீர்த்தம் எனப்படும் குளம் உள்ளது. விசாலமான உள் இடம். உள்ளே நுழைந்தால் நந்தியும், முன்னால் விநாயகரும் உள்ளனர். அடுத்துள்ள உள் வாயிலைத் தாண்டின் வீரட்டேஸ்வர சுவாமி தர்சனம்.

உள் வாயிலில் உள்ள த்வார கணபதியையும், சுப்பிரமணியரையும் வணங்கி, இருபுறமும் சுதையாலான துவாரபாலகர்களையும் தொழுது சென்றால் முன் மண்டபத்தை அடையலாம். உள் பிராகாரத்தில் வலம் வரும்போது, வரிசையாக சண்டேசுவரர், விநாயகர், நால்வர், இரு கணபதிகள், தொடர்ந்து அறுபத்து மூவரின் மூல உருவங்கள், தல விநாயகர் ஆகியோர் உள்ளனர். அடுத்து, 'உமை முருகுடையான் சந்நிதி' உள்ளது. தொடர்ந்து ஜேஷ்டாதேவி, நாகர்கள், பிடாரி, சப்தமாதர் வழிபட்ட லிங்கங்கள், பைரவர்கள் சந்நிதிகள் உள்ளனர்.

அடுத்து வள்ளி தெய்வயானை சுப்பிரமணியரும், பக்கத்தில் பால்சுப்பிரமணியரும், கஜலட்மியும் உள்ளனர். இவற்றையடுத்து பிராகாரச் சுற்றில் விக்கிரமசோழன் அருள் பெற்ற வரலாறு, அழகான வண்ண ஓவியங்களாக எழுதப்பட்டுள்ளது. தொடர்ந்து பிராகாரத்தில் சனி பகவான், பைரவர், சூர்யன், சந்திரன், நவக்கிரகங்கள் உள்ளன.

முன் மண்டபத்தில் வலப்பால் பிட்சாடனர் உருவம் உள்ளது. பெரிய அருமையான திருமேனி. பக்கத்தில் மோகினி உருவம் உள்ளது. வாயில் நுழைந்ததும் வலப்பால் 'கஜசம்ஹார மூர்த்தி' தரிசனம் தருகின்றார். இம்மூர்த்தி மிகவும்

அற்புதமானதும், அருமையானதும், வேறு எங்கும் காண முடியாத அழகு வாய்ந்ததுமாகும்.

யானையின் தோலுரித்து, யானையை அழித்து, சிரசின் மீது சுற்றிய வண்ணம், இறைவன் வீர நடனமாடுகின்றார். யானையின் வால்புறம் சிரசின் மீது தெரிகிறது. திருமேனி ஓங்கார வடிவில் அமைந்துள்ளது. கைவீசி திருவடிகள் முருக்கியவாறு, மடித்து, திருவடியின் உட்புறம் (புறங்கால் பகுதி) தெரியுமாறு நடனமாடும் அற்புதமே அற்புதம். புறங்கால் தரிசனத்தை இங்கு, இம்மூர்த்தியில் கண்டு தொழுது களிக்க முடிகிறது. இம்மூர்த்தியின் அழகை எவ்வளவு வருணித்தாலும் நிறைவுறாது. நேரில் கண்டு தொழுவதாலேயே நிறைவு பெறும். இத்திருமேனிக்குப் பக்கத்தில் அம்பாளின் திருமேனி அதியற்புதத்தோடு திகழ்கின்றது. ஒரு பாதத்தைச் சுற்று திருப்பி, நடந்து செல்ல முயலும் கோலத்தில் உள்ளது. அம்பாளின் இடுப்பில் முருகப் பெருமான் காட்சி தருகின்றார். அவருடைய ஒரு விரல் பக்கத்தில் உள்ள மூர்த்தியைச் சுட்டிக் காட்டும் அமைப்பில் உள்ளது. இதுவும் உற்று நோக்குவார்க்கு உள்ளூற மகிழ்ச்சியளிப்பதாகும்.

''அபிசார வேள்வியில் வந்தெழுந்த யானை, இறைவனை நோக்கி உக்கிரத்தோடு ஓடி வந்தபோது, அதையழிக்க வேண்டி, இறைவன், அந்த யானையின் உடலுள் புகுந்தார். அப்போது உலகமெல்லாம் இருண்டது. அம்பிகை அஞ்சினர். செய்வதறியாது திகைத்தார். இறைவன் தன்னுள் புகுந்ததால், தாளாத யானை, பஞ்சபிரும்ம தீர்த்தத்தில் - வட கிழக்கு மூலையில் விழுந்தது. இறைவன் அதையழித்துத் தீர்த்தத்தின் தென்மேற்கு மூலையில் எழுந்து வந்தார். தன் கணவன் இல்லாமையால், வழியின்றித் திகைத்த அம்பிகை, தன் தந்தை வீட்டிற்குச் செல்வதற்கு முயன்றார். அப்போது இறைவன் எழுந்து வெளிப்படவே, குமரனாகிய முருகப் பெருமான், தன் தாய்க்கு, 'இதோ தந்தையார்' என்று சுட்டிக் காட்டினாராம்.

# विषयानुक्रमणिका

## (शिवपुराणतः - *சிவ புராணம்*)

*அத்யாயம்* *பக்கம்*

1. विषयानुप्रवेशः - முன்னுரை .................................................... 1

2. च्युतपुरमहिमा - வழுவூர் பெருமை. ..........................................9

3. ब्रह्मनिर्मितं क्षेत्रम् -

பிரும்மா உருவாக்கிய க்ஷேத்திரம் ......................................24

4. कृष्णायानुग्रहः वर्णाश्रमाचारः

கிருஷ்ணனுக்கு அருள் புரிந்தது வர்ண -

ஆசிரம - நடைமுறை ..........................................................38

5. शनिनिग्रहः - சனியை அடக்குதல் .........................................59

6. शन्यनुग्रहः - சனிக்கு அருள் புரிதல் .......................................79

7. शनिपीडापहरणं - சனியின் பீடையின் விடுதலை. ..................91

8. कल्माषपाद-हेमशृङ्खलवृत्तम्

கல்மாஷ பாதர் - ஹேம சிருங்கலர் வரலாறு. .................. 112

9. कल्माषपाद पीडानिवृत्तिः

கல்மாஷபாதரின் துயரம் நீங்குதல் .................................. 137

10. बदरीवनमाहात्म्यम्

இலந்தங்காட்டின் பெருமை ............................................ 160

11. बालाङ्कुराम्बिका - कृपावती

பாலாங்குராம்பிகை - கிருபாவதி .................................... 180

12. शम्भुशर्मचरितम् - சம்புசர்மனின் வரலாறு .......................... 195

13. शमीवन माहात्म्यम् - वीरचोलचरितम्

வன்னிக் காட்டின் பெருமை - வீர சோழன் வரலாறு ........... 212

14. देवदारुवन माहात्म्यम् -शिवविष्णवोः ऋषिमोहनं, शास्तुरवतारः
தேவதாருவனப் பெருமை, சிவனும், விஷ்ணுவும்
ருஷிகளை மயக்குதல். சாஸ்தாவின் தோற்றம் ............... 239

15. भिक्षाटनो मोहिनी च பிட்சாடனரும், மோகினியும். .......... 253

16. अरुन्धत्यनुग्रहः - அருந்ததிக்கு அருள் புரிதல். ............... 262

17. लिङ्गयोनिसंयोगः - லிங்கமும் யோனியுமிணைதல். ........... 275

18. मुनिभ्यो ब्रह्मण उपदेशः
முனிவருக்கு பிரும்மாவின் உபதேசம். ........................ 287

19. मुनिभ्यः कालहस्तीश - भिक्षाटनानुग्रहः முனிவர்களுக்கு
காலஹஸ்தீசரும் பிக்ஷாடனரும் அருள் புரிதல். ........... 298

20. देवदारुवने ज्ञानसभायां दक्षिणामूर्तिः
தேவதாரு வனத்தில் ஜ்ஞான ஸபையில்
தக்ஷிணா மூர்த்தி. ............................................................ 304

21. दक्षिणामूर्तेरुपदेशः
தக்ஷிணா மூர்த்தியின் உபதேசம். ................................. 313

22. गजासुरोपरोधः - वेदपादस्तवः
கஜாஸுரனின் முற்றுகை. வேதபாத ஸ்தவம். ............... 328

23. गजासुरवधः - मूकमोचनतीर्थमहिमा
கஜாஸுரனை அழித்தல், மூகமோசன தீர்த்தப் பெருமை.347

24. ईशमूर्तयः - ஈச மூர்த்திகள். ................................................ 361

25. वाक्पतीशः सोमेशश्च - வாக்பதீசரும், ஸோமேசரும். ......... 376

26. स्वान्तरनायिकामाहात्म्यं, दत्तचोलचरितम्
ஸ்வாந்தர நாயிகையின் பெருமை,
தத்தசோழனின் வரலாறு. ............................................... 396

27. ज्ञानसभेशमन्त्रोद्धारः
ஞான ஸபேசரின் மந்திர வடிவம். ................................. 410

கோயில் வெளி கோபுரம்



வெளி கோபுரம் உட்பகுதி - குளம் நந்தி



கோயிலின் உட் பகுதி



உள் கோபுர வாயில்

28. ज्ञानसभेशमन्त्रोद्धारः

ஞான ஸபேசரின் மந்திர வடிவம். .................................. 419

29. चित्सभेश सभाचक्रराजः

சித்ஸபேச ஸபை சக்கிர ராஜம். ...................................... 432

30. च्युतपुरीमाहात्म्यम् - வழுவூர் பெருமை. ............................ 457

—★—

## स्कान्दपुराणतः - ஸ்காந்த புராணத்திலிருந்து

1. दक्षिणकैलासः - தென் கைலாஸம் .................................... 476

2. कात्यायनेन - कण्वे विज्ञापना

காத்யாயனர் கண்வரிடம் விண்ணப்பித்தல் ................. 480

3. अगस्त्यकृतं शिवस्तोत्रम् அகஸ்தியர் சிவனைத் துதித்தல். .... 486

4. शिवसंकल्पः - சிவனது திட்டம். ........................................ 489

5. भिक्षाटनम् - பிக்ஷாடனம். ................................................. 492

6. शास्तुरवतारः - சாஸ்தா தோன்றியது. ................................ 496

7. शास्तुः शिवेनानुग्रहः - சிவன் சாஸ்தாவிற்கு அருள் புரிதல். 498

8. भिक्षाटनलीला - பிக்ஷாடன லீலை. ..................................... 501

9. मुनिकृताभिचार निष्फलीकरणम्

முனிவரது அபிசாரத்தை முறியடித்தல். ........................ 503

10. रथमग्नपुरचरितम् - தேரழுந்தூர் ஸ்தல வரலாறு. ................ 507

11. वागीशादिमूर्तिमहिमा

வாகீசர் முதலிய மூர்த்திகளின் பெருமை. ...................... 510

—★—

## पाद्मपुराणतः - பாத்ம புராணத்திலிருந்து

1. विष्णुशेषसंवादः
விஷ்ணு - சேஷ ஸம்வாதம். ........................................ 515

2. च्युतपुरमहिमा - வழுவூர் பெருமை ................................. 528

3. भस्मासुरसंहारः - பஸ்மாஸுரனின் வதம் ........................ 538

4. ऋषिगणमोहनम् - ருஷிகளை மயக்குதல். .......................... 549

5. ऋषिभ्यो ज्ञानोपदेशः
ருஷிகளுக்கு ஜ்ஞானோபதேசம். ................................. 566

6. सत्यव्रतचरितम् - ஸத்யவிரதனின் வரலாறு. .................... 587

7. सुमतिचरितम् - ஸுமதியின் வரலாறு. ............................. 618

8. सारस्वतकूपम् - कृष्णवर्मचरितम्
ஸாரஸ்வத கூபம் - கிருஷ்ணவர்மனின் வரலாறு. ........ 641

9. सुदेवचरितम् - ஸுதேவனின் வரலாறு. ........................... 657

10. क्षेत्रनियमाः - க்ஷேத்திர நியமங்கள். ................................ 681

अनुबन्धः - आवरणदेवता नामावलिः ।
च्युतपुरीशाष्टोत्तरशतनामस्तोत्रं, नामावलिः
श्री बालाङ्कुराम्बिकाष्टोत्तरशतनामस्तोत्रं नामावलिः

---

அனுபந்தம் :- ஆவரண தேவதா நாமாவளி, ச்யுதபுரீசாஷ்டாத்தர, சதநாம ஸ்தோத்திரம், நாமாவளி, ஸ்ரீ பாலாங்குராம்பகாஷ்டோத்தர சதநாம ஸ்தோத்திரம், நாமாவளி ............................................................... 685

श्री गुरुभ्यो नमः
श्रीबालाङ्कुराम्बासमेत श्रीकृत्तिवासेश्वराय नमः।
श्रीवेदव्यासमहामुनिप्रणीतश्रीशिवपुराणे

# च्युतपुरमाहात्म्यम्

## प्रथमोऽध्यायः

### पुराणानि

वागीशाद्याः सुमनसः सर्वार्थानामुपक्रमे।
यं नत्वा कृतकृत्याः स्युस्तं नमामि गजाननम्॥

करस्थकदलीचूतपनसेक्षुकमोदकम्।
बालसूर्यप्रभं वन्दे देवं बालगणाधिपम्॥

समस्तविद्याकुसुमैरलङ्कृतां शशिप्रभां बालशशाङ्कशेखराम्।
अयुग्मनेत्रामरविन्दजप्रियां नमामि देवीं वरदां सरस्वतीम्॥

वन्दे च्युतपुरीं शुभ्रां वन्दे नागाब्जिनीमपि।
वन्दे बालाङ्कुरां देवीं वन्दे श्रीकृत्तिवाससम्॥

*ஸ்ரீ பாலாங்குராம்பா ஸமேத ஸ்ரீ க்ருத்திவாஸேச்வராய நம:*

*ஸ்ரீவேதவியாஸர் இயற்றிய ஸ்ரீ சிவபுராணத்தில்*

# ச்யுதபுரமாஹாத்மியம்.

*அத்தியாயம் - 1*

புராணங்கள்

*பிரும்மா முதலிய தேவர்கள் பணிகளனைத்தையும் தொடங்குமுன் செயல் நிறைவைப் பெற எவரை*

வணங்குகின்றனரோ அந்த யானைமுகத்தோனை வணங்குகிறேன்.

வாழைப்பழம் மாம்பழம் பலாப்பழம் கரும்பு மற்றும் கொழுக்கட்டையைக் கைகளில் கொண்ட இளஞ்சூரிய ஒளி கொண்ட தேவரான பாலகணேசரை வணங்குகிறேன்.

அனைத்துக் கல்விமுறைகள் என்ற பூக்களால் அலங்கரிக்கப்பெற்றவள், சந்திரன் போன்று ஒளிர்பவள், இளம்சந்திரனை முடியில் கொண்டவள், மூன்று கண்களுள்ளவள், தாமரையில் தோன்றிய பிரமனின் இனியவள், விரும்பியதைத் தருபவள், அந்த ஸரஸ்வதீ தேவியை வணங்குகிறேன்.

தூய்மைமிக்க ச்யுதபுரியை (வழுதூரை) வணங்குகிறேன். அங்குள்ள யானைக் குளத்தை (ஹஸ்திபுஷ்கரிணியை) வணங்குகிறேன். பாலாங்குரா தேவியை வணங்குகிறேன். ஸ்ரீ கிருத்திவாஸரை வணங்குகிறேன்.

पावने नैमिशारण्ये पुण्यवृक्षसमाकुले ।
अगण्यगुणसङ्कीर्णे शरण्ये सर्वपक्षिणाम् ॥ १

वापीकूपतटाकाद्यैरपापैस्समलङ्कृते ।
अपायरहितेशार्चासूपायस्थलशोभिते ॥ २

तत्र स्थिता महात्मानो भस्मोद्धूलितविग्रहाः ।
निःस्मरावेशहृदयास्सस्मेराननपङ्कजाः ॥ ३

भृगुर्वसिष्ठो माण्डव्यः कण्वः कात्यायनोऽङ्गिराः ।
सुमन्तुर्वामदेवोऽत्रिर्देवलो मुद्गलोऽमलः ॥ ४

गालवोद्दालकामन्दाः कैवल्यः कङ्कणो जटः ।
एते च मुनयश्चान्ये शिवभक्तिपरायणाः ॥ ५

शिवलिङ्गार्चनासक्तमानसाब्जा दयालवः ।
शिष्टैश्शिष्यैः प्रशिष्यैश्च ब्रह्मिष्ठा वेदपारगाः ॥ ६

परोपकारनिरताः सिद्धाः शिवपरायणाः ।
पुण्यवत्याश्च गोमत्या जलाप्लुतकलेबराः ॥ ७

परप्रियरता नित्यं पञ्चयज्ञपरायणाः ।
तस्थुस्तत्पुलिने रम्ये लिङ्गे सोममहेशितुः ॥ ८

अर्चयन्तः सदा भक्त्या नीलकण्ठं त्रियम्बकम् ।

*புனிதமிக்க நைமிசவனம். புனிதமரங்கள் நிறைந்தது. எண்ணற்ற சிறப்பு கொண்டது. பறவைகளனைத்தின் புகலிடம்: ஓடைகள், கிணறுகள், குளங்கள் முதலிய புனித நீர் நிலைகளால் அழகியது. குறையின்றி ஈசனை வழிபட உதவுகிற இடம், அங்கு உடல் எங்கும் திருநீறு பூசிய பெரியோர்கள் உள்ளனர். காமத்திற்கு இடம் தராதவர். புன்சிரிப்புள்ள இனியமுகப் பொலிவுள்ளவர். பிருகு, வஸிஷ்டர், மாண்டவ்யர், கண்வர், காத்யாயனர், அங்கிரஸ், ஸுமந்து, வாமதேவர், அத்திரி, தேவலர், முத்கலர், அமலர், காலவர், உத்தாலகர், அமந்தர், கைவல்யர், கங்கணர், ஜடர் என சிவபக்தரான முனிவர் பலர். சிவலிங்கத்தை வழிபடுவதில் ஈடுபட்டவர். தயைமிக்கவர், வேதத்தின் கரைகண்டவர். பிரும்ம அனுபவத்தில் நிலைத்தவர், பிறருக்கு உதவுவதில் ஆர்வமிக்கவர், சித்தி பெற்றவர். சிவனையே புகலிடமாகக் கொண்டவர். புனிதமிக்க கோமதியாற்று நீரில் நீராடுபவர். பிரும்மயஜ்ஞும் தேவயஜ்ஞும் ருஷியஜ்ஞும் மனுஷ்ய யஜ்ஞும் பூதயஜ்ஞும் என்ற ஐந்தையும் தினமும் நிறைவுறச் செய்பவர். கோமதி நதியின் மணற்திட்டில் அமர்ந்து நீலகண்டனான சிவனை வழிப்பட்டுவந்தனர். (1-8)*

तत्राजगाम भगवान्सूतः पौराणिकोत्तमः ॥ ९

अष्टादशपुराणज्ञः शिष्टाचारप्रवर्तकः ।
रुद्राक्षमालाभरणो भवपादाब्जवल्लभः ॥ १०

भस्मोद्धूलितसर्वाङ्गस्त्रिपुण्ड्राङ्कितमस्तकः ।
सर्वशास्त्रार्थतत्वज्ञो वेदवेदान्तपारगः ॥ ११

व्यासप्रसादात्सम्पन्नो व्यासवद्धूतकल्मषः ।
परोपकारनिरतो विशेषज्ञानपारगः ॥ १२

जितेन्द्रियो जितक्रोधो जीवन्मुक्तो जगद्गुरुः ।
तमाश्रममनुप्राप्तं संभ्रमोत्फुल्ललोचनाः ॥ १३

उत्थाय पुरतो गत्वा महाभक्तिसमन्विताः ।
कथा विचित्राः श्रोतुं ते परिवव्रुः समन्ततः ॥ १४

अर्घ्यपाद्यादिभिस्तं ते सम्पूज्य विधिवत्पुनः ।
स्वागतं कुशलं सूतेत्यब्रुवन्मुनिपुङ्गवाः ॥ १५

तैरुक्तस्सोऽपि मुनिभिः विनयाद्रोमहर्षणः ।
अभिवाद्य मुनींस्तांस्तु सर्वानेव कृताञ्जलिः ॥ १६

अपृच्छत्स तपोवृद्धिमृषिभिश्चाभिनन्दितः ।
ततस्तेषूपविष्टेषु सर्वेष्वेव तपस्विषु ॥ १७

निर्दिष्टमासनं भेजे विनयेनैव सूतजः ।
सुखासीनं ततस्तं तु विश्रान्तमुपलक्ष्य च ॥ १८

अपृच्छन्मुनयश्शैवकथां पुण्यामिदं वचः ।
श्रोतुकामा महात्मनो हरपादाब्जवल्लभाः ॥ १९

*அங்கு ஸூதர் வந்தார். பதினெட்டு புராணங்களிலும் தேர்ந்தவர். நற்பண்பைப் புகட்டுபவர். ருத்திராக்ஷமாலையணிந்து சிவனின் திருவடிகளின் பணிந்து. விபூதி பூசியவர். எல்லா வேத - வேதாந்த - சாஸ்த்ரங்களிலும் வியாஸரின் அருளால் கரைகண்டவர். வியாஸரைப்போன்று தூயவர். பிறருக்கு உதவுபவர், பேரறிவாளர், புலனடக்கம் உள்ளவர். ஜீவன் முக்தர், உலகின் குரு, இத்தகைய ஸூதரைக் கண்டதும் பரபரப்பால் கண்கள் மலர பெரும் பக்தியுடன் முனிவரனைவரும் அவரைச் சூழ்ந்து நின்று அர்க்கியம் பாத்தியம் முதலியவற்ருல் உபசரித்து வரவேற்றுக் குசலம்*

*கேட்டனர். ஸூதரும் அவர்களை வணங்கி தவவளர்ச்சி பற்றி வினவினார். முனிவர்களால் பாராட்டப் பெற்று அவர்கள் தந்த ஆஸனத்தில் அவர்கள் அமர்ந்ததும் தானும் அமர்ந்தார். இனிதமர்ந்த ஸூதரிடம் சிவனது புனிதக் கதைகள் கேட்டனர். (9–19)*

मुनय ऊचुः -

अष्टादश पुराणानि सेतिहासानि तत्त्वतः ।
त्वत्तः श्रुतान्यनेकानि श्रोतव्यांशोऽत्र विद्यते ॥ २०

ब्राह्मं पुराणं प्रथमं द्वितीयं पाद्ममेव च ।
तृतीयं वैष्णवं प्रोक्तं चतुर्थं शैवमुच्यते ॥ २१

ततो भागवतश्चैव भविष्यं नारदीयकम् ।
मार्कण्डेयं तथाऽऽग्नेयं ब्रह्मकै(वै)वर्तकं तथा ॥ २२

लैङ्गं तथैव वाराहं स्कान्दं वामनमेव च ।
कूर्मं मात्स्यं गारुडञ्च ब्रह्माण्डञ्च ततः परम् ॥ २३

आद्येष्वष्टादशेष्वेषु पुराणेषु महत्सु च ।
चतुर्थं शैवमित्युक्तं पुराणं पण्डितोत्तम ॥ २४

तच्च शैवपुराणञ्च संख्यया ग्रन्थतः पुनः ।
भवता लक्षमित्युक्तं नानापुण्यकथाश्रुतम् ॥ २५

संहिताद्वादशैर्युक्तं शिवज्ञानप्रदायकम् ।
आद्या विद्येश्वराख्या च द्वितीया रौद्रसंहिता ॥ २६

वैनायिकी तृतीया च चतुर्थोमाख्यसंहिता ।
पञ्चमी मातृकाख्यैकादशरुद्राह्वया ततः ॥ २७

कैलाससंहिता पश्चात् शतरुद्राख्यसंहिता ।
नवमी कोटिरुद्राख्यसंहिता च ततः परम् ॥ २८

सहस्रकोटिरुद्राख्यसंहिता दशमी स्मृता ।
वायवीयाभिधा पश्चात्संहितैकादशी स्मृता ॥ २९

धर्माह्वया द्वादशी चेत्येवं द्वादश संहिताः ।
विद्येशा दशसाहस्रैः युता ग्रन्थैश्च तत्वतः ॥ ३०

रौद्री वैनायकी चोमा मातृकाख्या ततःपरम् ।
प्रत्येकमष्टसाहस्रैर्ग्रन्थैश्चापि समन्विताः ॥ ३१

त्रयोदशसहस्रैश्च ग्रन्थैरपि समन्विता ।
अथैकादशरुद्राख्या संहिता परमार्थदा ॥ ३२

कैलाससंहिता चैव षट्सहस्रैर्विनिर्मिता ।
शतरुद्राह्वया ग्रन्थैस्त्रिसहस्रैस्समन्विता ॥ ३३

कोटिरुद्राह्वया ग्रन्थैर्नवभिश्च समन्विता ।
सहस्रकोटिरुद्राख्याऽप्येकादशसहस्रकैः ॥ ३४

चतुस्सहस्रैर्ग्रन्थैश्च वायव्याख्याऽथ संहिता ।
ग्रन्थैर्द्वादशसाहस्रैस्सम्मिता धर्मसंहिता ॥ ३५

तदेवं लक्षमित्युक्तं शैवं शाखाविभेदतः ।
आद्या विद्येश्वराख्या या सा चैवेशानसंहिता ॥ ३६

विद्येश्वरेण कथिता शिवायै च शिवेन यत् ।
ईशानसंहिता चेति प्रोक्ता विद्येश्वराह्वया ॥ ३७

शिवज्ञानप्रदा ग्रन्थैर्दशसाहस्रकैर्मिता ।
कालस्य दमनं तत्र दक्षाध्वरनिबर्हणम् ॥ ३८

निग्रहस्त्रिपुराणाञ्च संहारश्च मनोभुवः ।
जलन्धरस्य मथनमन्धकासुरमर्दनम् ॥ ३९

विधातुस्तु(विरिञ्चस्य)शिरश्छेदः प्रोक्तान्येतानि विस्तरात् ।
गजासुरवधं तत्र प्रोक्तं विस्तरतो महत् ।। ४०

गजासुरवधं तद्वै श्रोतुकामाऽधुना वयम् ।
ब्रूहि विस्तरतश्शम्भोश्चरित्रं तत्कृतञ्च नः ।। ४१

*ஸூதரே! பிராம்ஹம், பாத்மம், வைஷ்ணவம், சைவம், பாகவதம், பவிஷ்யம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்னேநேயம், பிரும்மகை(வை)வர்தம், லிங்கம், வாராஹம், ஸ்காந்தம், வாமனம், கூர்மம், மத்ஸ்யம், காருடம், பிரும்மாண்டம், எனப் பதினெட்டு புராணங்களை உமது முகமாகக் கேட்டுள்ளோம். அவற்றில் சிவபுராணம் லக்ஷம் சுலோகங்கள் கொண்டது. வித்யேச்வரீ, ரௌத்ரீ, வைநாயகீ, உமா, மாத்ருகா, ஏகாதசருத்ரா, கைலாஸா, சதருத்ரா, கோடிருத்ரா, ஸஹஸ்ர கோடிருத்ரா, வாயவீயா, தர்மா என 12 ஸம்ஹிதைகள் கொண்டது அவற்றில் ரௌத்ரீ, வைநாயகீ, உமா மாத்ருகா என நான்கும் எட்டாயிர சுலோகங்கள் கொண்டவை. ஏகாதசருத்ரா 13 ஆயிரம் சுலோகங்கள் கொண்டது. கைலாஸஸம்ஹிதையில் 6,000, சதருத்ராவில் 3000, கோடிருத்ராவில் 9000, ஸஹஸ்ரகோடிருத்ராவில் 11,000, வாயவ்யாவில் 4000, தர்மாவில் 12,000 சுலோகங்கள் உள்ளன.*

*வித்யேச்வரான சிவன் கூறிய விச்வேச்வர ஸம்ஹிதை எனும் ஈசான ஸம்ஹிதை தேவிக்கு சிவன் உபதேசித்தது. 10,000 சுலோகங்கள் கொண்ட அதில் யமனை அடக்கியது. தக்ஷனின் வேள்வியைக் குலைத்தது. திரிபுர ஸம்ஹாரம், மன்மதனை அழித்தது. ஜலந்தரனையும் அந்தகாஸுரனையும் அழித்தது, பிரும்மாவின் தலையைக் கொய்தது. கஜாஸுரனைக் கொன்றது முதலியவை விரிவாகக் கூறப்பட்டன. கஜாஸுரவதம் பற்றி விரிவுடன் கேட்க விரும்புகிறோம் என்று விண்ணப்பித்தனர். (20-41)*

सूत उवाच—

साधु साधु महाप्राज्ञास्सत्प्रसङ्ग उदाहृतः ।

भवपाशहरो नृणां श्रोतॄणामघनाशनः ॥ ४२

शान्तिदः पुष्टिदश्चैव सर्वशत्रुविनाशनः ।
आरोग्यदः पुत्रदश्च वक्तृश्रोतृसुखप्रदः ॥ ४३

मङ्गलानामाकरश्च शिवज्ञानपयोनिधिः ।
शिवभक्तिप्रदः श्रेष्ठभाग्यदः श्रवणान्नृणाम् ॥ ४४

अहमभ्यागतो ह्यत्र श्रावितुं शिवसत्कथाम् ।
तादृग्विधः कृतः प्रश्नः प्राज्ञैर्युष्माभिरादरात् ॥ ४५

अहो सुकृतिनो यूयं यत्कथाश्रवणोत्सुकाः ।
वयं हि धन्या विप्रेन्द्रा यत्कथाऽस्माभिरुच्यते ॥ ४६

इममेव पुरा प्रश्नं पार्वती सर्वमङ्गला ।
अपृच्छत्परमेशानमीश्वरं जगतां गुरुम् ॥ ४७

तथैव भगवानाह गजमर्दनसत्कथाम् ।
भक्तिमुक्तिप्रदां नृणां श्रोतॄणां श्रवणामृताम् ॥ ४८

विस्तार्य यच्चरित्रञ्च कारुण्यात्प्रोक्तवान्शिवः ।
तदहं वः प्रवक्ष्यामि गजासुरवधात् श्रुतम् ॥ ४९

सर्वपापप्रशमनीं शिवायै शिववर्णिताम् ।
धर्मार्थकाममोक्षोरुफलदां श्रवणान्नृणाम् ॥ ५०

सकृच्च पठतां भक्त्या साम्बभक्तिप्रदां नृणाम् ।
वाजिमेधफलदां सर्वयोगिगणादृताम् ॥ ५१

अतिविचित्रमनेकफलप्रदं शिवचरित्रमिभेन्द्रवधाश्रितम् ।
मधु पवित्रतरं शृणुतादरात्तुहिनगोत्रसुतेशविनिर्मितम् ॥ ५२

इति प्रथमोऽध्यायः ॥

★

*ஸூதர் கூறினார் - நல்லதொரு வாய்ப்பு இது. ஸம்ஸாரபந்தம் விலக, பாபம் நீங்க, அமைதியும் செழிப்பும் நோயின்மையும் வம்சவளர்ச்சியும் பெற எதிரிகள் அழிய இது ஏற்றது. மங்களம் நிரம்பும். சிவஜ்ஞானம் பெற்று அவரைப் பக்தியுடன் வழிபட ஏற்றது. நானும் சிவனது பெருமையைக் கூற வந்தேன். உங்களது ஆர்வமும் இதற்கு உதவுகிறது. நீங்கள் புண்ய சாலிகள். இதே வரலாற்றைப் பார்வதியும் சிவனிடம் கேட்டாள். கருணையுடன் சிவன் அவளுக்குக் கூறிய வரலாற்றைக் கூறுகிறேன். கேட்டதும் அறம் பொருள் இன்பம் விடுதலை என்ற நான்கும் நெருங்கும். அச்வமேதம் புரிந்த புண்யபலன் கிட்டும். கேட்பீர். என்றார். (42-52)*

*முதல் அத்தியாயம் முற்றிற்று.*

—★—

# अथ द्वितीयोऽध्यायः

## च्युतपुरमहिमा

सूत उवाच—

श्रीमत्कैलासशिखरे कलधौतमये शुभे।
दिव्यवृक्षफलैर्जुष्टे सिद्धगन्धर्वसेविते॥ १

दिव्यसिंहासनासीनं सूर्यकोटिसमप्रभम्।
शङ्करं जगतां नाथं चन्द्रखण्डावतंसिनम्॥ २

ईशानं सर्वविद्यानां भूतानामीश्वरं प्रभुम्।
ब्रह्मणोऽधिपतिं ब्रह्माधिपतिं शिवमव्ययम्॥ ३

स्तुत्वा स्तुत्या च परया नत्वा च गिरिकन्यका।
कृताञ्जलिरुवाचेदं युष्मत्पृष्टं मुनीश्वराः॥ ४

देव्युवाच—

शिव शङ्कर भद्रेश भक्तानुग्रहतत्पर।

मन्नाथ जगतां नाथ प्रसन्नो भव कामद ।। ५

कृतं पुरा महादेव गजासुरनिबर्हणम् ।
मया सार्धमिति प्रोक्तं त्वया कारुण्यचेतसा ।। ६

इदानीं तच्चरित्रं ते श्रोतुं कौतूहलं हि मे ।
विस्तार्य वद कारुण्याद्विस्मृतप्रायमेव तत् ।। ७

कुत्र वा तत्कृतं शम्भो माहात्म्यं तस्य किं विभो ।
कस्मिन्देशे तु तत्क्षेत्रं कतिविस्तारमस्य वै ।। ८

के पूजां तत्र ते चक्रुस्तत्कृतानाञ्च किं फलम् ।
कानि तीर्थानि तिष्ठन्ति तत्क्षेत्रस्य च नाम किम् ।। ९

भवता विष्णुना सार्धं कथं भिक्षाटनं कृतम् ।
कस्मादिभासुरोद्भूतो बबाधे कान्मुनीनसौ ।। १०

कथं च स वधं प्राप्तः कुत्र वा गजपुङ्गवः ।
तत्तीर्थेषु प्रधानं किं तीर्थमद्भुतविक्रमम् ।। ११

एतत्सर्वं महादेव ब्रूहि कारुण्यतो मयि ।
इत्युक्तः पार्वतीनाथो मृडान्या स्वप्रकाशया ।। १२

मन्दं विहस्य विप्रेन्द्राः करुणापूर्णलोचनः ।
आत्माभिन्नां महादेवीं समालिङ्ग्येदमब्रवीत् ।। १३

शिव उवाच—

साधु पृष्टं महादेवि लोकानां हितकाम्यया ।
तत्क्षेत्रस्य च माहात्म्यं तत्तीर्थानाञ्च वैभवम् ।। १४

माहात्म्यं तद्वनानाञ्च पिप्पलारण्यकादिनाम् ।
गजासुरवधोद्भूतं माहात्म्यञ्च महेश्वरि ।। १५

एवमादिचरित्राणि शिवस्य मम सुन्दरि।
सहस्रवक्त्रषड्वक्त्रश्चतुर्वक्त्रोऽहमीश्वरि ।। १६

यथार्थमक्षमो वक्तुं कल्पकोटिशतैरपि।
तथापि वक्ष्ये कारुण्यात् स्नेहात्तव वरानने ।। १७

प्रोक्तं पृष्टं त्वया यत्तत् शृणुष्वैकाग्रमानसा।

## *அத்தியாயம் - 2*

## *வழுவூரின் பெருமை*

*ஸூதர் கூறுகிறார் - பெருமைமிக்க கைலாஸசிகரம். தங்கமயமானது. தெய்வாம்சமிக்க மரங்கள் நிறைந்தது. சித்தரும் கந்தர்வரும் பழகுமிடம். அங்கு திவ்யமான சிங்காதனத்தில் அமர்ந்த சிவன். கோடி ஸூர்ய ஒளி கொண்டவர். உலகின் நாதர். சந்திரனின் துண்டைச் சிரஸில் தரித்தவர். எல்லா வித்தியைகளுக்கும் ஈசன். பிரும்மனுக்கும் தலைவன். அவரிடம் பார்வதி சிறந்த பக்தியுடன் வணங்கிக் கேட்டாள்.*

*''பெருமானே! என் நாதரே, பக்தருக்கு அருள்பவரே! அருள் புரிவீர். கஜாஸுரனை முன்னர் மாய்த்தீர். நானும் கூட இருந்தேன். அந்த வரலாற்றை விரித்துக் கூறுவீர். இன்று அது நினைவிலில்லை. எங்கு அது நிகழ்ந்தது? அந்த க்ஷேத்திரம், அங்குள்ள தீர்த்தங்கள், அங்கு தாங்கள் விஷ்ணுவுடன் நிகழ்த்திய பிக்ஷாடனம், கஜாஸுர வதம் முதலியவற்றை விரிவாகக் கூறுவீர் என. இதனைத் தன்ஞெளிமிக்க உமை கேட்டதும் பரிவுடன் அவளை அணைத்தவாறே அவ்விடத்தின் பெருமையை விளக்கினார். (1-18)*

## च्युतपुरमहिमा

मेरोर्दक्षिणपार्श्वे च वर्षे भारतसंज्ञके ।। १८

भरतस्य च खण्डे च क्षेत्रमस्ति महीतले।
कावेर्या दक्षिणे तीरे क्रोशमात्रविदूरतः ।। १९

स्थलं मम प्रियतरं विद्धि पङ्कजलोचने ।
श्रीमच्च्युतपुरं नाम क्षेत्राणामुत्तमोत्तमम् ।। २०

शैवानि सन्ति क्षेत्राणि बहून्यन्यानि भूतले ।
श्रीमच्च्युतपुरं तेभ्यो मम प्रेमरसास्पदम् ।। २१

इति स्थानस्य चाग्नेयकोणस्य क्रोशमात्रतः ।
समन्तात्क्रोशमात्रं तत्स्थानं तेजोमयं शिवे ।। २२

पदे पदे च तीर्थानि भूतसिद्धकृतानि च ।
स्वायंभुवानि लिङ्गानि तिष्ठन्त्यत्र पदे पदे ।। २३

चिदानन्दमयं साक्षाल्लिङ्गं स्वायम्भुवं मम ।
तत्र स्थितानां लिङ्गानामधीशममरेश्वरि ।। २४

राजते कृत्तिवासेशनामकं गिरिकन्यके ।
विराडीशाह्वयं पूर्वं मल्लिङ्गमतिसुन्दरम् ।। २५

पुरा शब्दस्समुद्भूतो मायाया मन्नियोगतः ।
शब्दो वेदमयादब्धेर्नवनीतमिवोत्थितः ।। २६

तस्मादभूत्स्पर्शतत्त्वं तस्माद्रूपं ततो रसः ।
तस्माद्रसादभूद्गन्धतत्त्वं पर्वतकन्यके ।। २७

एषु भूतेषु वै देवि जायन्ते पञ्चमूर्तयः ।
शिवस्सर्वज्ञतापन्नश्शब्दजां मूर्तिमाविशत् ।। २८

ईक्षितृत्वं गतस्त्वीशः स्पर्शजां मूर्तिमाविशत् ।
रुद्रस्तु रूपमूर्तिञ्च प्राविशद्गिरिकन्यके ।। २९

रुद्रेण च जले क्षिप्तं वीर्यं मूर्त्यभिमानिना ।
तदण्डमभवद्धैमं सहस्रकिरणप्रभम् ।। ३०

विष्णुस्तत्प्राविशद्देवो रसमूर्तिर्मदाज्ञया ।
ब्रह्माऽपि गन्धजां मूर्तिं प्राविशद्वामलोचने ॥ ३१

ईश्वरस्स्पर्शमूर्तिस्स्यात् शब्दमूर्तिस्सदाशिवः ।
रुद्रस्तेजोमयस्साक्षाद्रसमूर्तिर्जनार्दनः ॥ ३२

गन्धमूर्तिश्चतुर्वक्त्र इत्येताः पञ्च मूर्तयः ।
एवं मूर्तिषु जातास्ते पञ्चभूतेषु सुन्दरि ॥ ३३

सर्वेन्द्रियाणां प्राणानां जायन्ते च समष्टयः ।

*மேருமலையின் வலப்புறத்தில் பாரத வர்ஷத்தில் பரதகண்டத்தில் காவேரியின் தென்கரையில் ஒரு குரோசதூரத்தில் ச்யுதபுரம் உள்ளது. எனது க்ஷேத்திரங்களில் இது சிறந்தது. எனக்கு இனிய இடம். ஒளி நிரம்பியது. அருகருகே பல தீர்த்தங்கள். தானே தோன்றிய லிங்கங்கள். அவற்றில் சிறந்த கிருத்திவாஸேசலிங்கம் மிக அழகியது. விராடீசர் என்பர். முன்னர் உலகம் தோன்றும்போது முதலில் என் மாயையால் தோன்றியது ஒலி. வேதமெனும் கடலைக்கடைந்தெடுத்த வெண்ணெய் போன்ற பிரணவ ஒலி. அதிலிருந்து ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற தத்துவங்களும் அவற்றின் ஆதாரனமான ஐந்து மூர்த்திகளும் தோன்றின. ஸர்வஜ்ஞ (எல்லாமறிகிற) சக்தியுள்ள மூர்த்தி சப்த தத்துவத்தை ஆட்கொண்டது. எல்லாவற்றையும் கண்காணிக்கிற ஈக்ஷிதா என்ற மூர்த்தி ஸ்பர்சதத்துவத்தை ஆட்கொண்டது. ருத்திரன் ரூபமூர்த்தியினுள் நுழைந்து, தன் வீர்யத்தை ஜல தத்துவத்தில் செலுத்தியது. அது ஆயிரம் கதிரொளி கொண்ட தங்கமயமான முட்டை வடிவம் பெற்றது. ரஸ மூர்த்தியான விஷ்ணு என் ஆணையால் அதனுள் நுழைந்தார். பிரும்மாவும் கந்தமூர்த்தியில் நுழைந்தார். ஸதாசிவர் சப்த மூர்த்தியாக, ஈச்வரன் ஸ்பர்ச மூர்த்தியாக, ருத்ரர் ரூப(தேஜோ) மூர்த்தியாக, விஷ்ணு ரஸ மூர்த்தியாக, பிரும்மா கந்த மூர்த்தியாக ஐந்து மூர்த்திகளும் முறையே படைப்பில் இறங்கி இந்திரியங்களும் பிராணனும் தோன்றும்படி செய்து உலகமாகத் தோற்றுவித்தனர். (19-34)*

एता हिरण्यगर्भस्य कूटस्थस्य महात्मनः ॥ ३४
अन्तः करणदेहस्य प्राणाश्च करणानि च ।
ब्रह्मा हिरण्यगर्भोऽभूत् तस्य प्राणा हरिस्स्वयम् ॥ ३५

सूत्रात्माऽभून्महादेवस्तयोरन्तर्नियामकः ।
स पुनर्गिरिजे देवि ब्रह्माण्डं मन्नियोगतः ॥ ३६

पञ्चभ्यस्स्थूलभूतेभ्यो जायन्ते सर्वलोकतः ।
हरिर्नारायणो देवो ममाज्ञावशमागतः ॥ ३७

हिरण्यगर्भं स्त्रीरूपं कारयित्वा ममाज्ञया ।
तस्यां विराजमसृजद्देवि ब्रह्माण्डविग्रहम् ॥ ३८

विराडात्मा महादेवि भक्त्या मत्पदसिद्धये ।
षडाधारेषु संपूज्य शिवं मामम्बिकापतिम् ॥ ३९

अण्डाद्बहिष्ठमपरं ज्योतिर्दध्रे विराट् स्वयम् ।
तद्ब्रह्मरन्ध्रात्तज्ज्योतिरापातालं च्युतं पुरा ॥ ४०

तस्माच्च्युताच्च्युतपुरं विज्ञेयं वामलोचने ।
अत्र च्युतपुरे पूर्वं स्वनाम्ना परिकल्प्य च ॥ ४१

पूजयामास मल्लिङ्गं विराडीशं स्वयंभु तत् ।
प्राप्तवान्मत्पदं देवि हरिब्रह्मेशदुर्लभम् ॥ ४२

तदाप्रभृति मल्लिङ्गं विराडीश इति प्रिये ।
तन्नाम्ना मम देवेशि प्रसिद्धिमगमद्भुवि ॥ ४३

खण्ड्यादिसप्तस्थानेषु विराजा जातु पूजितः ।
अत्र च्युतपुरे तेन सदा संपूजितोऽस्म्यहम् ॥ ४४

स त्वया सहितो नित्यं श्रीमद्बालाङ्कुराम्बया ।
त्रैकालिकविनिर्मुक्तेर्नित्ये सन्निहितः शिवे ॥ ४५

*படைப்பில் பிரும்மா கூடஸ்தராக (படைப்பின் முதல்வராக) உடல் உள்ளம் பொறிகள் என்ற கூட்டமைப்பின் தங்கம் போன்ற ஸூக்ஷ்ம நிலையைத் தோற்றுவித்ததால் அவரை ஹிரண்யகர்ப்பர் என்பர். பிராணனுக விஷ்ணு இயக்கி ஸூத்ராத்மா ஆனுர். இவ்விருவரையும் ஆட்டுவிப்பராக அந்தர்யாமி ஆக மகாதேவர் விளங்கினுர். ஐந்து பூதங்களும் (பரஸ்பரம் இணைந்து) ஸ்தூல பூதநிலை பெற்று உலகமாயிற்று. ஹரி என்ற நாராயணன், ஹிரண்யகர்ப்பரைப் பெண்ணுக்கி, அவளிடத்தில் விராட் என்ற பிரும்மாண்டம் என்ற உலகின் மூல நிலையைத் தோற்றுவித்தார்.*

*விராட்புருஷனும் என் நிலையைத் தாங்க ஆறு ஆதாரங்களாகத் தன்னை உருவகப்படுத்தி சிவஞன என்னை வழிபட்டு, தனக்கும் (பிரும்மாண்டத்திற்கும்) அப்பாற்பட்ட என்னை ஜ்யோதிவடிவில் உள்ளத்தில் தாங்கினுர். பிரும்மாண்டத்திற்கு அப்பாற்பட்ட பெருவெளியிலிருந்த என்னை தன் மூலாதாரமாகிற பாதாளம் வரை பாயும்படி (பிரும்மந்திரத்திற்கு மேல் வெளியிலிருந்த பரசிவத்தை பிரும்மரந்திரம் வழியே ஆஜ்ஞையிலிருந்து மூலாதாரம் வரை பாயும்படி) செய்து இத்தலத்தில் வழிபட்டதால் இது ச்யுதபுரம் (வழுவூர்) ஆனது. அங்கு விராட்புருஷனின் ஈசஞன (விராடீசஞன) என்னை லிங்கவடிவில் வழிபட்டார். கண்டியூர் முதலிய ஏழு வீரட்டானங்களில் விராட்புருஷனுல் வழிபடப் பெற்ற நான் பாலாங்குராதேவியான உன்னுடன் முக்காலத்திலும் முக்தி அளிக்க இங்கு தோன்றியுள்ளேன். (35-52)*

## विराट्पुरुषदेहे क्षेत्राणि तेषु च्युतपुरम्

विराजः पुरुषस्यास्य ब्रह्माण्डो देह उच्यते।
षडाधारेषु तस्यास्य राजितानि स्थलानि मे ॥ ४६

काञ्चीपुरं स्यादाधारमाहुर्जम्बूवनं शिवे।
स्वाधिष्ठानं महादेवि शोणाद्रिर्मणिपूरकम् ॥ ४७

अनाहतं व्याघ्रपुरं कालहस्तीपुरं प्रिये।

विशुद्धिस्थानमित्युक्तमाज्ञापूरविमुक्तकम् ।। ४८

द्वादशान्तन्तु कैलासो विराजः पुरुषस्य वै ।
द्वादशान्तात्परं देवि चेदं च्युतपुराभिधम् ।। ४९

वायुस्थानञ्च काञ्ची स्याद्गजारण्यं ध्वजस्थलम् ।
शोणाचलो भवेन्नाभिर्हृदयं पुण्डरीकपूः ।। ५०

कालहस्ती गलस्थानं काशी भ्रूमध्यमा भवेत् ।
कैलासो ब्रह्मरन्ध्रान्तं दन्तश्च्युतपुराभिधम् ।। ५१

ब्रह्माङ्कुरमिदं लिङ्गं विराजा पूजितं पुरा ।
आपातालगतं चारु राजते मम शोभनम् ।। ५२

விராட்புருஷனின் உடற்பகுதியான தலங்கள்

*விராட்புருஷனின் உடல் இந்த பிரும்மாண்டம். அதனுள் ஆறு ஆதாரஸ்தானங்கள் உள்ளன. காஞ்சீபுரம் இதன் மூலாதாரம். திருவானைக்கா ஸ்வாதிஷ்டானம். திருவண்ணாமலை மணிபூரகம். புலியூர் (சிதம்பரம்) அநாஹதம். காளஹஸ்தி விசுத்தி. ஆஜ்ஞை காசி. துவாத சாந்தம் என்ற ஷடாதார எல்லை கைலாஸம். இவற்றிற்கப்பாற்பட்டது ச்யுதபுரம். வாயு ஸ்தானம் காஞ்சீபுரம். திருவானைக்கா உயிர்நிலை. திருவண்ணாமலை தொப்புள். சிதம்பரம் இதயம். காளஹஸ்தி தொண்டை. காசி புருவத்தின் நடுப்பகுதி. கைலாஸம் பிரும்மரந்திரம். பற்கள் ச்யுதபுரம். இப்படி பிரும்மம் முளையாக வெளிப்பட்ட இந்த விராடீசலிங்கத்தை விராட்புருஷன் வழிபட்டார். பாதாளம் வரை இது பரவியுள்ளது. (46-52)*

नीलनीरदसङ्काशं पूर्वास्यं क्षेत्रमध्यगम् ।
दर्शनात्स्मरणाच्चापि भुक्तिमुक्तिफलप्रदम् ।। ५३

विष्णुना ब्रह्मणा चैव विक्रमेण नृपेण वै ।

शनैश्चरेण देवेन कल्माषच्चरणेन च ।। ५४

च्चोलेन पूजितं देवि कण्वकात्यायनादिभिः ।
चत्वारिंशत्सहस्रैश्च साष्टभिश्च मुनीश्वरैः ।। ५५

अरुन्धत्या वसिष्ठेन भक्त्या सम्पूजितं पुरा ।
एवमादिनृपैर्देवैर्मुनिभिर्वेदपारगैः ।। ५६

महापतिव्रताभिस्स्यात्पूजितं स्वेष्टसिद्धये ।
तस्य लिङ्गस्य पुरतस्तीर्थमस्ति महत्तरम् ।। ५७

हस्तिपुष्करिणी नाम पञ्चब्रह्माभिधं पुनः ।
यत्र पूर्वं पुरो ब्रह्मा शिवस्य मम चाखनत् ।। ५८

प्रतिष्ठाप्य च यत्तीर्थे पञ्च ब्रह्माणि सुन्दरि ।
तपस्तप्त्वा महाघोरं स्वेष्टसिद्धिमवाप्तवान् ।। ५९

यत्र स्नात्वा महाविष्णुः कृष्णो गोपालवेषधृक् ।
संस्थाप्य मामकं लिङ्गं कृत्तिवासेशनामकम् ।। ६०

श्रीमच्युतपुरेशानं प्राप्तवान्स्वमनोरथम् ।
आवृतं पिप्पलवनैः शमीवनसमावृतम् ।। ६१

बदरीवनषण्डैश्च देवदारुवनैर्वृतम् ।
नानाश्चर्ययुतं क्षेत्रं भोगमोक्षफलप्रदम् ।। ६२

जीवन्मुक्तिकरं देवि विशेषाच्च कलौ युगे ।
पञ्चब्रह्माभिधे तीर्थे स्नात्वा नत्वा च शङ्करम् ।। ६३

विधूतसर्वपापस्सन्विष्णुलोके महीयते ।
आदित्ये वृश्चिकं प्राप्ते सूर्यवारे च मानवः ।। ६४

हस्तिपुष्करिणीतीर्थे स्नात्वा दत्वा द्विजाय वै ।

यत्किञ्चित्कृत्तिवासेशं श्रीमच्युतपुरेश्वरम् ।। ६५

प्रणम्य च परिक्रम्य दीपं दत्वा यथाविधि ।
अर्कलोकमवाप्नोति सर्वभोगसमन्वितम् ।। ६६

कार्तिक्यां सोमवारे च पूर्णिमायां विशेषतः ।
अत्र स्नात्वा च देवेशं गजचर्मावृतं शिवम् ।। ६७

दक्षिणाभिमुखं देवमट्टहासमुखाम्बुजम् ।
दृष्ट्वा नत्वा च पुरुषश्चन्द्रलोकमवाप्नुयात् ।। ६८

तत्र भुक्त्वाऽप्यनेकांश्च दुर्लभानन्यकर्मणाम् ।
सप्तजन्मनि भूलोके सार्वभौमो भविष्यति ।। ६९

अत्र गोचर्ममात्रं तु भूमिदानं करोति यः ।
द्विजाय वेदविदुषे दरिद्राय कुटुम्बिने ।। ७०

श्रोत्रियाय वरिष्ठाय सदाचाररताय च ।
पञ्चाशत्कोटिविस्तीर्णां स्वर्णरत्नैरलङ्कृताम् ।। ७१

सुसर्वौषधिसस्याढ्यां सशैलवनकाननाम् ।
दत्वा ब्रह्मविदे यच्च तत्प्राप्नोति न संशयः ।। ७२

अत्र स्नात्वा नरो भक्त्या हस्तिपुष्करिणीजले ।
कृत्तिवासेश्वरप्रीत्यै विदुषे ब्राह्मणाय च ।। ७३

धेनुदानं यो ददाति तस्य पुण्यफलं शृणु ।
काश्यां शतसहस्राणि धेनूनां ग्रहणे रवेः ।। ७४

दत्वा यत्फलमाप्नोति ब्राह्मणाय कुटुम्बिने ।
तत्कोटिगुणितं प्राप्य शिवसायुज्यमाप्नुयात् ।। ७५

श्रीमच्युतपुरे नित्यं ददात्यन्नं द्विजाय यः ।

हस्तिपुष्करिणीतीर्थे स्नात्वा दृष्ट्वा च शङ्करम् ॥ ७६

सर्वेष्वेति शिवक्षेत्रेष्वन्नदानफलानि सः ।
अत्र च्युतपुरेशानं दृष्ट्वा बालाङ्कुराम्बिकाम् ॥ ७७

हस्तिपुष्करिणीस्नानं कृत्वा नत्वा गजान्तकम् ।
स नरो भवति क्षिप्रं क्षेत्रायुश्श्रीयशांसिभाक् ॥ ७८

पञ्चब्रह्माभिधे तीर्थे स्नानं कृत्वा विधानतः ।
पितॄनुद्दिश्य यः श्राद्धमस्य तीरे करोति वै ॥ ७९

गयाश्राद्धफलं प्राप्य यान्ति तत्पितरः शिवम् ।
ब्रह्महत्यासुरापानस्वर्णस्तेयादिपातकैः ॥ ८०

ये युता ब्राह्मणक्षत्रवैश्यशूद्रादयो नराः ।
ये मातृपितृहन्तारो मित्रविश्वस्तघातकाः ॥ ८१

गोबालस्त्रीप्रहर्तारो भ्रूणहा गुरुहा नृहा ।
भृतकाध्यायिनः षण्डा वेदविक्रयिणश्च ये ॥ ८२

दुष्प्रतिग्रहकर्तारो दुश्शीला दुर्नयाश्च ये ।
ये चान्ये पापकर्तारो हस्तिपुष्करिणीजले ॥ ८३

கிழக்கு நோக்கிய லிங்கத் திருமேனி கண்டாலும் நினைத்தாலும் செழிப்பும் முக்தியும் தருவது. விஷ்ணு, பிரும்மா, விக்ரமன், சனி, கல்மாஷபாதன், கண்வர் காத்யாயனர் முதலான 48 ஆயிரம் முனிவர்கள், அருந்ததி, வஸிஷ்டர் எனப்பலரால் வழிபடப் பெற்றது. இந்த லிங்கத்தின் எதிரில் ஹஸ்திபுஷ்கரிணீ என்றும் பஞ்ச பிரும்ம தீர்த்தம் என்றும் பெயருள்ள தீர்த்தம் உள்ளது. ஸத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் என்று ஐந்து பிரும்ம நிலைகளை இங்கு வழிபட்டபின் பிரும்மா இந்த தடாகத்தைத் தோன்டினார். விஷ்ணு கிருஷ்ணனாகத்

தோன்றியபோது இந்த தீர்த்தத்தில் நீராடி கிருத்திவாஸேசரை வழிபட்டுள்ளார்.

இதனைச் சுற்றி ஆரசமரக்காடு (பிப்பலவனம்) வன்னிமரக்காடு (சமீவனம்) இலந்தை மரக்காடு (பதரீவனம்) தேவதாரு மரக்காடு (தேவதாரு வனம்) என நான்கு காடுகள் உள்ளன. ஜீவன் முக்தி அளிக்கிற புண்யத்தலம். பஞ்சப்பிரும்ம தீர்த்தத்தில் நீராடி சிவனை வழிபட ஜீவன் முக்தி கிட்டும்.

கார்த்திகை மாதத்து ஞாயிறுகளில் இவ்வாறு வழிபட்டு வலம் வந்து தீபதானம் செய்ய ஸௌர்யலோகம் செல்வர். கார்த்திகை மாதத்துத் திங்களில் அதிலும் பௌர்ணமி கூடும்போது யானைத்தோல் போர்த்தித் தென்திசை நோக்கியமர்ந்தவரைக் கண்டுவழிபட சந்திர லோகம் செல்வர். மறுபடி பிறந்தாலும் சக்ரவர்த்தியாகத் திகழ்வர். வேதமறிந்த ஏழை அந்தணனுக்குச் சிறிதளவு பூமியைத் தானம் செய்தாலும் பூமண்டலத்தையே தானம் செய்த புண்யம் கிட்டும். இங்கு ஒரு கோதானம் செய்தாலும், காசியில் நூறுயிரக்கணக்கான கோதானத்தின் பலன் கிட்டும். ஒரு குடும்பியான அந்தணனுக்கு இட்ட அன்னதானம் எல்லா சிவக்ஷேத்திரங்களிலும் செய்த அன்னதானத்திற்கு ஈடாகும்.

மறைந்த முன்னோர்களை முன்னிட்டு இந்த தீர்த்தக்கரையில் செய்த சிராத்தம் கயா சிராத்தத்திற்கு ஈடாகும். பிரும்மஹத்தி, மது அருந்துதல், தங்கத் திருட்டு, தாய் தந்தையரின் கொலை, நண்பர், தன்னை நம்பியவர், பசு, மனைவி, கரு, குரு, இவர்களை அழித்த பாபம் விலகும்.

கூலி வாங்கி வேதம்கற்பிப்பது, வேதத்தை விற்பது, தகாத தானம் வாங்குதல், நடைமுறை தவறுதல் முதலிய பாபங்களும் ஹஸ்திபுஷ்கரிணியில் நீராடுவதால் நீங்கும். (53-83)

सद्योजाताभिधे तीर्थे देवि मत्पुरतः स्थिते ।
नाभिमात्रोदके स्थित्वा ध्यायन्तो गजभेदिनम् ।। ८४

अट्टहासमुखाम्भोजं चन्द्रखण्डावतंसकम्।
कपालशूलचर्मासिमहाभुजगडिण्डिमैः ॥ ८५

विलसद्बाहुषट्कैश्च राजमानं त्रियम्बकम्।
गजचर्माप्रतिरथं श्रीभुजद्वयपङ्कजम् ॥ ८६

तिर्यक्प्रकुञ्चितबृहद्वामपादसरोरुहम्।
हस्तिमस्तकसन्नृत्यद्दक्षिणाङ्घ्रिसरोरुहम् ॥ ८७

ब्रह्मविष्णुमहादेवैरुपास्यं गुणमूर्तिभिः ।
आपादलम्बिमाणिक्यखण्डमालाविराजितम् ॥ ८८

रक्तभुग्गणनाथाभ्यां सेव्यमानं निरन्तरम्।
बालाङ्कुराम्बिकावक्त्रालोकलोलविलोचनम् ॥ ८९

जपन्तो मन्त्रकं कुर्युस्त्रिः स्नानं तज्जलेऽमले।
उद्धूल्य भस्मना देहं स्थूलरुद्राक्षमालिकाः ॥ ९०

शुक्लवस्त्रपरीधानाश्शुक्लवस्त्रोत्तरीयकाः ।
प्रदक्षिणत्रयं कृत्वा प्रणम्य परमेश्वरम् ॥ ९१

पुनः प्रदक्षिणं कृत्वा मुक्ताः स्युः पापपञ्जरात्।
ब्रह्मप्रलयकालेऽपि नष्टे सर्वे चराचरे ॥ ९२

एतच्च्युतत्वादावाभ्यां सह तस्मान्महाजलात्।
श्रीमच्च्युतपुरश्चेति कीर्तितं ब्रह्मणा शिवे।
ब्रह्मरन्ध्रात्परमिदं विराजोऽस्य महात्मनः ॥ ९३

पिप्पलद्रुवनमण्डितं शमीकाननातिरमणीयभूतलम्।
तत्पुरं बदरिकावनाञ्चितं देवदारुवनमध्यगं बभौ ॥ ९४

ब्रह्मविष्णुमुनिभिश्च पूजितं वर्णये च्युतपुरं किमित्यहम्।
अत्र जन्तुरपि जीवितात्यये मुक्तिमावहति मत्कृपाबलात् ॥ ९५

अत्र ये कृतनिकेतना नराः कृत्तिवाससमुपासका भृशम्।
उद्वहन्त्यमृतकन्यकाश्च ते वर्णधर्मनिरता मदाश्रयात्॥ ९६

ये भजन्ति गजभेदिनं शिवं मामुमे प्रतिदिनञ्च भक्तितः।
ते लभन्त इह पुत्रपौत्रकान्सत्पदञ्च मुनिमण्डलात्परम्॥

अत्र भक्तिमति ये नरे प्रिये वित्तधान्यतिलभूमिमास्तिकाः।
अर्पयन्ति विनताश्च भक्तितो यान्ति मुक्तिमपि मत्कृपाबलात्॥ ९८

सेवनार्थमतिभक्तितोऽगजे ताम्रमृत्कनकरौप्यनिर्मितान्।
दापयन्ति कलशान्मम प्रियान् तेऽपि यान्ति मम लोकमम्बिके॥ ९९

ये वहन्ति मम सेचनाय वै तीर्थनीरघटमात्रमास्तिकाः।
ते वहन्ति मरणात्परं शिवे सिद्धसिन्धुमधिमूर्ध्नि चाद्रिजे॥ १००

यः प्रफुल्लकरवीरचम्पकाम्भोजकल्पितमनोज्ञमालया।
लिङ्गमर्चयति मामकं वपुस्तस्य सर्पकृतभूषणं परे॥ १०१

अत्र जप्तमपि चाल्पमप्युमे सन्निधौ मम महाफलप्रदम्।
इत्यनेकविधशास्त्रनिर्णयः सत्यमेव गदितो मया तव॥ १०२

अघशतसहितोऽप्यनास्तिको यो
निगमसमूहयुतो द्विजेन्द्रमुख्यः।
च्युतपुरमवलम्ब्य केवलं स
व्रजति पदं मम शाश्वतं महेशि॥ १०३

इति द्वितीयोऽध्यायः॥

*என் முன்னே உள்ள ஸத்யோஜாதம் என்றதுறையில் இறங்கி இடுப்பளவு நீரில் நின்று கஜாஸுரனை அழித்த என்னை இவ்வாறு த்யானிக்க வேண்டும். அட்டஹாஸம் புரிகிற முகம், சந்திரனுலான தலையணி, கபாலம், சூலம், கேடயம், கத்தி, நாகம் மற்றும் முரசு ஏந்திய ஆறு கைகள். யானைத்*

*தோலை விரித்த தாமரை போன்ற இரு கைகள் குறுக்கே மடித்துள்ள இடதுகால், யானையின் மத்தகத்தின் மீது நடனம் புரிகிற வலது கால், முக்குண மூர்த்திகளான பிரும்மா, விஷ்ணு மற்றும் ருத்ரரின் வழிபாடு, கால்வரை தொங்குகிற மாணிக்கத்தாலான மணிமாலை. ரக்தம் பருகுகிற இரு கணநாதர் வழிபடுதல், பாலாங்குராம்பிகை உடனிருக்க அவளைக் காண்கிற கடைக்கண்பார்வை. இக்கோலத்தில் என்னை உள்ளத்தில் கண்டு. என் மந்திரத்தை ஜபித்து நீராடி விபூதிபூசி, பெரும் ருத்திராக்ஷமாலையணிந்து, வெண்ணிற ஆடைமேலாடை தரித்து, மூன்று தடவை என்னை வலம் வரப் பாபச்சிறை அகலும்.*

*பிரும்மாண்டமே அழிந்த பின்னரும் இவற்றினுள் அகப்படாமல் நழுவி பிரளய காலத்துக்காரணநீர்க் கடலினுள் கலக்காமல் நிற்குமிடமான வழுவூரில் நான்கு காடுகளுக்கிடையே உள்ள இந்த புரத்தின் அழகை எவ்வாறு வர்ணிக்க இயலும் ? இங்கு வசித்து கிருத்திவாஸரை வழிபடுபவர், வர்ண தர்மத்திலிருந்து வழுவாதிருப்பதால் தேவருலகத்துப் பெண்களை மணப்பர். ஸப்த ரிஷி மண்டலத்திற்கப்பால் இடம் பெறுவர். இங்கு தனம் தான்யம் தாம்ரம் முதலிய உலோகத்தாலோ மண்ணாலோ ஆன பாத்திரம் தானம் செய்பவர் மேனிலை பெறுவர். என்னை நீராட்ட நீர்க்குடம் ஏந்திவருபவர் மரணத்திற்குப் பின் சிறப்புறுவர். அரளி சம்பகம் தாமரை முதலான அழகிய பூமாலையால் லிங்கத்தை அலங்கரிப்பவர் மேனிலை பெறுவர். மந்திரங்களை முடிந்தவரை அல்ப எண்ணிக்கையில் ஜபித்தாலும் ஸித்தி பெறுவர். பல பாபங்களைச் செய்தவரும் நாஸ்திகரும் கூட இங்கு வசிப்பதால் என் திருவடி அடைவர் (84-104)*

—★—

# अथ तृतीयोऽध्यायः

## च्युतपुरप्रादुर्भावः

शिव उवाच——

पुरा कदाचिद्देवेशि मन्मुखात्प्राप्य पद्मभूः ।
सर्वान्वेदानभूत्स्रष्टुमशक्तो विश्वमात्मनः ॥ १

सृष्टिं कामयमानोऽसौ जगतां पङ्कजासनः ।
त्रैलोक्याधिपतिं साम्बं मां प्रसन्नयुतं शिवे ॥ २

अत्र च्युतपुरे तप्तुमाजगाम महामनाः ।
खात्वा सरोवरं हस्तैर्मत्पुरस्तात्प्रजापतिः ॥ ३

पञ्च ब्रह्माणि संस्थाप्य तताप तप उत्तमम् ।
ईशानं सरसो मध्ये तत्पूर्वं पुरुषाभिधम् ॥ ४

तद्दक्षिणे ह्यघोराख्यं सद्योजातञ्च पश्चिमे ।
उत्तरे वामदेवाख्यमेवं स्थापितवान्विधिः ॥ ५

कण्ठमात्रजले स्थित्वा तत्र तीर्थेऽब्जसम्भवः ।
ध्यायन्मामम्बिकानाथं नीलकण्ठं परात्परम् ॥ ६

चिदानन्दमयं नित्यं निर्विकल्पं निरञ्जनम् ।
रुद्राध्यायाश्रयं शान्तमप्रमेयमरूपकम् ॥ ७

ध्यातं त्रिमूर्तिभिः शुद्धमचिन्त्यमकृतात्मभिः ।
रुद्राध्यायजपं कुर्वन्वेदसारतरं सदा ॥ ८

निराहारो महातेजाः शतवर्षं तताप सः ।
धूमपानरतो वेधाः पुनः पञ्चाग्निमध्यगः ॥ ९

तीर्थे त्रिषवणं स्नात्वा त्रिकालं मां समर्चयन्।
तर्पयन्सलिले जुह्वद्धुतेन च ततप सः ॥ १०

एवं वर्षाण्यनेकानि निर्गतानि च वेधसः ।
रुद्राध्यायजपैस्सार्धं शिवध्यानरतस्य च ॥ ११

इति प्रतपतस्तस्य दुस्तरं तप उत्तमम्।
ब्रह्मणो ब्रह्मरन्ध्राच्च सधूमोऽग्निर्बभूव ह ॥ १२

जाते तपोऽग्नौ वैधस्येऽसह्यं सर्वचराचरैः ।
अभूद्ब्रह्माण्डपर्यन्तं मुनिदेवमहोरगैः ॥ १३

அத்தியாயம் - 3

*தலம் தோன்றிய வரலாறு.*

*சிவன் தேவியிடம் கூறுகிறார். என்னிடமிருந்து வேதங்களை ஓதக்கற்ற பிரும்மா உலகைத் தன்னிடமிருந்து தோற்றுவிக்க இயலாதவராக, மூவுலக அதிபதியான என்னைக் குறித்து வழுவூரில் தவமியற்றத் தொடங்கினார். என் லிங்கத்தின் முன் தன் கைகளால் ஒரு தடாகத்தைத் தோண்டி அதன் நடுவில் ஈசானரையும் கிழக்கில் தத்புருஷரையும் தெற்கில் அகோரரையும் மேற்கில் ஸத்யோ ஜாதரையும் வடக்கில் வாம தேவரையும் மந்திரவடிவில் அமைத்து நீர் நிலையில் கழுத்தளவில் ஆழ்ந்து என்னை இவ்வாறு த்யானித்தார். அம்பிகையின் நாதர், நீலக் கழுத்தினர். சித்தும் ஆனந்தமுமானவர். நித்யர், மாறுபாடடையாதவர். அப்பழுக்கற்றவர். ருத்ராத்தியாயத்தில் விளக்கப் பெறுபவர். வேதத்தின் உட்பொருள். மும்மூர்த்திகளாலும் தியானிக்கப்பெறுபவர். தேர்ச்சி பெறாதவரால் உணர இயலாதவர். இவ்வாறு த்யானத்துடன் ருத்ராத்யாயத்தை ஜபித்தவாறே உணவின்றி நூறாண்டுகள் தவமிருந்தார். ஆவியே உணவு. நாற்புறத்திலும் நடுவிலும் தீமூட்டி அதனிடையே நின்றார். தடாகத்தில் மூன்று வேளைகளிலும் நீராடி வழிபட்டார். என்னைக் குறித்து நீரால் தர்பணமும்*

*நெய்யால் ஹோமமும் செய்தார். பல ஆண்டுகள் கழிந்தன. அவர் தலையிலிருந்து புகையினுடன் தவத் தீ ஆவியாக வெளியேறிப் பரவியது. (1-13).*

ततो देवो महादेवः प्रसन्नोऽभवमम्बिके।
नवकुन्देन्दुनीहारगोक्षीरधवलप्रभः ॥ १४

सुधांशुखण्डविलसज्जटामकुटमण्डितः ।
रोचनातिलकोद्भासिफालस्थानललोचनः ॥ १५

इन्द्रनीलमणिच्छायातनुभ्रूयुगलान्वितः ।
मध्यस्थितद्विरेफाब्जदलायतशुभेक्षणः ॥ १६

स्वास्याब्जगलदामोदं पातुमिच्छत्सुनासिकः ।
मन्दस्मेरविनिष्यन्दद्द्रुग्विलसिताधरः ॥ १७

रत्नकुण्डलनिर्गच्छद्भदारुणीकृतगण्डकः ।
कस्तूरिकाभ्रमकरकालकूटगलान्तरः ॥ १८

उपकण्ठलसन्मुक्तादामावलिविराजितः ।
कल्पप्रसूनस्रग्बृन्दकमनीयभुजान्तरः ॥ १९

कटकाङ्गदकेयूरलसद्बाहुचतुष्टयः ।
करपङ्कजसद्भासिकुठारैणवराभयः ॥ २०

कटीतटलसद्व्याघ्रचर्माम्बरमनोहरः ।
गूढगुल्फद्वयाश्लिष्टमाणिक्यांसातिसुन्दरः ॥ २१

मञ्जुमञ्जीरनिनदैर्निराकृतसुसारसः ।
वृत्तताम्रतनुस्निग्धस्वपादाङ्गुलिसुन्दरः ॥ २२

स्ववामभागनिलयां श्रीमन्मरकतप्रभाम्।
स्फुटनीलोत्पलाभासिदक्षहस्तसरोरुहाम्॥ २३

मन्दस्मितमुखाम्भोजां स्वनाथालोकतत्पराम्।
प्रलम्बितलसद्दामबाहुपाशमनोहराम्।। २४

वृत्तपीनोन्नतकुचसुवर्णकलशद्वयाम्।
तनुमध्यां पृथुश्रोणीं मणिकाञ्चीमनोहराम्।। २५

बन्धूकसदृशारक्तारुणक्षौमाम्बरावृताम्।
कन्दर्पकाहलीसाम्यजङ्घायुगलशोभिताम्।। २६

गूढगुल्फां जिताम्भोजचरणारुणपङ्कजाम्।
नीवारशूकवत्तन्वीं सच्चिदानन्ददायिनीम्।। २७

वीक्षयन्पर्वतेन्द्रस्य तनयां मत्कृपामयीम्।
अस्पर्शयं विरिञ्चस्य ब्रह्मरन्ध्रं स्वपाणिना ।। २८

प्रसन्नोऽहं विधातस्ते भक्तस्यैवं वचोऽब्रवीत्।
इति ब्रुवन्तं मां देवि त्वया सह सरोजभूः ।। २९

उन्मील्य नयने ब्रह्मा दृष्ट्वा मामिष्टदं शिवम्।
तुष्टाव वाग्भिरिष्टाभिर्विशिष्टामरसेवितम्।। ३०

*தவத்தீயால் பிரும்மாண்டத்திலுள்ள அனைவரும் வாடினர். மஹா தேவனாகிய நான் அங்கு தோன்றினேன். முல்லைப்பூ, பனிக்கட்டி, பசுவின்பால் போன்ற தூய வெண்ணிற உடல், சந்திரத்துண்டு துலங்கும் சடைமண்டலம், நெற்றியில் கோரோசனையாலான திலகம், இந்திரநீல மணி போன்ற புருவமயிர் சுருள், தாமரை போன்று அழகியதும் வண்டு போன்று நிலையாது அலைவதுமான நீண்ட கண்கள், தாமரை போன்ற முகத்தின் நறுமணத்தை முகர ஆவல் கொண்ட நாசி, புன்சிரிப்பு ததும்புகிற பற்களின் ஒளியால் துலங்குகிற உதடு, ரத்ன குண்டலத்தின் ஒளியால் சிவந்த கன்னமேடு, கஸ்தூரிப் பூச்சு என்று பிரமிக்கச் செய்கிற காலகூடம் கொண்ட கழுத்து, கழுத்தையொட்டித் துலங்குகிற முத்துச் சரடு, கற்பகப் பூக்களால் அழகிய மார்பு, கடகம்,*

தோள்வளை, கேயூரம் துலங்குகிற நான்கு கைகள், கைகளில் கோடரி, மான், வர - அபயமுத்திரை, இடுப்பில் அழகூட்டுகிற புலித்தோலாடை, மறைந்த கணுக்கால்களில் மாணிக்யம் பதித்த காலணிகள், உருண்டு சிவந்து மழமழப்புள்ள கால்விரல்கள், தன் இடது பாகத்தில் அமர்ந்த தேவி மரகதம் போன்ற பச்சை மேனியள், மலர்ந்த நீல அல்லிப்பூ போன்ற வலது கையில் தாமரை ஏந்தியவள், புன் சிலிர்ப்பால் மலர்ந்த முகம், தன் கணவரைப் பார்ப்பதில் ஆர்வமிக்க கண்கள், கீழ் நோக்கித் தொங்குகிற இடதுகை, உருண்டு திரண்டு உயர்ந்து நிற்கிற தங்கக்கலசம் போன்ற ஸ்தனங்கள், சிறுத்த இடை, தடித்தபுட்டம், ரத்தின ஒட்டியாணத்தால் அழகிய இடுப்பு, செம்பரத்தைப் பூபோன்று சிவந்த பட்டாடை, மன்மதனின் அம்புறுத்தூணி போன்று கணைக்கால்கள், வெளியே புலப்படாத கணுக்கால் மூட்டு, தாமரையை வெல்கிற சிவந்த திருவடிகள், நீவாரப்புல் போன்று மெலிந்த உடல் வனப்பு, ஸத் - சித்து - ஆனந்த வடிவினள். இவ்வாறு என் கிருபையே வடிவான பார்வதியை நோக்கியவாறே பிரும்மாவின் சிரஸில் கை பதித்தேன். 'உனக்கு அருள்புரிகிறேன்' என்று நான் கூறியதும் கண்களைத் திறந்து விரும்பியதைத் தரமுன் வந்துள்ள என்னை பிரும்மா துதித்தார். (14-30)

ब्रह्मोवाच—

ओङ्कारमध्यगमनन्तगुणप्रभाव-
मोजस्विनं विधुविधीशनताङ्घ्रिपद्मम्।
ओङ्कारगम्यमखिलात्मकमात्मरूपं
श्रीकृत्तिवाससमनीशमहं भजामि॥ ३१

नागेन्द्रभूषणमचञ्चलमप्रमेयं
नागेन्द्रचर्मवसनं नयनाभिरामम्।
नानाचराचरलयावनसृष्टिहेतुं
श्रीकृत्तिवाससमनीशमहं भजामि॥ ३२

मार्ताण्डकोटिसमतेजसमन्तकारिं
मानाभिमानरहितैर्मुनिभिर्निषेव्यम्।
मारावलेपकलमाङ्कुरकालवह्निं
श्रीकृत्तिवाससमनीशमहं भजामि ।। ३३

शिक्षाविचक्षणमधोक्षजचन्द्रसूर्यं
रक्षाविचित्रतरदक्षमखस्य देवम्।
अक्षोभ्यमाश्रितजनामरवृक्षमाद्यं
श्रीकृत्तिवाससमनीशमहं भजामि ।। ३४

वामाश्रिताचलसुताकुचकुङ्कुमाङ्क-
वामोरुवक्षसमचिन्त्यमहाप्रभावम्।
वाताम्बुवह्निधरणीगगनातिरूपं
श्रीकृत्तिवाससमनीशमहं भजामि ।। ३५

यल्लिङ्गमर्च्य सरमः पुरुषोत्तमस्त-
द्विष्णुत्वमाप हरिनीलमयं महात्मा।
तं नीलकण्ठमगजाधिपमात्मदेवं
श्रीकृत्तिवाससमनीशमहं भजामि ।। ३६

एतां स्तुतिं विधिकृतां विमलाशयो यः
प्रोत्थाय चोषसि मदर्पितचित्तपद्मः।
भक्त्या पठेदिह सुपुत्रधनादिकामान्
सम्प्राप्य देहविरमे पदमेति शैवम्।। ३७

*பிரும்மா சிவனைத் துதித்தல் - ஓங்காரத்தின் நடுவில் உள்ளவர், எல்லையற்ற குணச்சிறப்புள்ளவர், ஆற்றல்மிக்கவர், சந்திரன், பிரும்மா மற்றும் ஈசுவரனால் திருவடிகளில் வணங்கப் பெற்றவர். ஓங்காரத்தால் உணரத்தக்கவர், எல்லாமானவர், ஆத்மாவானவர், மேலானவரற்றவர். அந்த கிருத்திவாஸரை வழிபடுகிறேன். (31)*

*சிறந்த நாகாபரணம் பூண்டவர். சலிக்காதவர், மதிப்பிட முடியாதவர். யானைத் தோலாடையணிந்தவர், கண்களுக்கு இனியவர், உலகனைத்தையும் படைத்துக் காப்பவர், அந்த கிருத்திவாஸரை வழிபடுகிறேன். (32)*

*கோடி ஸூர்யஒளி கொண்டவர், யமனின் எதிரி, தற்புகழ்ச்சி இறுமாப்பு அற்ற முனிவர்களால் வழிபடப்பெற்றவர், மன்மதனின் திமிராகிற தான்ய முளையை அழிக்கிற காலாக்கினி, அந்த கிருத்திவாஸரை வழிபடுகிறேன். (33)*

*விஷ்ணு சந்திரன் ஸூர்யன் இவர்களின் பாதுகாப்பில் இருந்த தக்ஷனின் வேள்வியை சிக்ஷிப்பதில் தேர்ந்தவர். குழப்ப முடியாதவர், அண்டியவரின் கல்பகமரம், முதலிலிருப்பவர், அந்த கிருத்திவாஸரை வழிபடுகிறேன். (34)*

*இடதுபுறத்திலமர்ந்த மலைமகளின் மார்பகத்தின் குங்குமப் பூச்சால் சிவந்த இடது மார்பகமுள்ளவர். சிந்திக்க இயலாத பேராற்றல் கொண்டவர், வாயு, ஜலம், அக்னி, பூமி, ஆகாயம் என்ற ஐந்து பூத நிலைகளுக்கு அப்பாற்பட்டவர், அந்த கிருத்திவாஸரை வழிபடுகிறேன். (35)*

*பெருமாளான புருஷோத்தமன் லக்ஷ்மியுடன் எவரது லிங்கத்தை வழிபட்டு பச்சையுரு பெற்றுரோ நீலக் கழுத்தினரும் மலைமகளின் நாதரும் என் தெய்வமுமான அந்த கிருத்திவாஸரை வழிபடுகிறேன். (36)*

*விடியற்காலையில் எழுந்து உள்ளத்தூய்மையுடன் என்னிடம் உள்ளத்தைப் பதித்துப் பக்தியுடன் பிரும்மாவின் இந்த ஸ்துதியைக் கூறுபவன் மக்கட்பேறு பெருஞ்செல்வம் பெற்று வாழ்ந்து இறுதியில் முக்திபெறுவான். (37)*

इति स्तुतोऽहं देवेशि ब्रह्मणा विश्वकर्मणा ।
वरं वृणीष्व वै ब्रह्मन्वरदोऽस्मीति तेऽब्रवम् ।। ३८

त्रैलोक्यजयिनं विष्णुतनुजं सर्वहृद्गतम्।
ललाटचक्षुषा देवोऽदहत्पुष्पशरासनम्॥ १२२

இதனிடையே சனியும் தன் ஆயுதங்களுடன் கோபம் மிக்கவனாக வழுதூருக்கருகே வந்தான். காடுகள் எரிந்து சாம்பலாயின. மலைகளும் கோட்டைகளும் அழிந்தன. சனியின் பரபரப்பை உணர்ந்த சிவன் தன் அருகே நின்ற ரக்தம் குடிக்கிற ரக்தபாயீ என்ற இரு கணத்தலைவர்களை அழைத்தார். நான்கு கைகளும் பருத்த உடலும் கதை ஏந்தி பிரளய காலத்தீ போன்று வீர்யம் மிக்க அவ்விருவர் சிவனது ஆணைப்படி சனியின் அருகே வந்தனர். பயங்கரமான தெற்றிப் பற்களும் கண்களும் கொண்டு புருவ நெரிப்புடன் நிற்கிற சனியிடம் கூறினர். "ஸூர்யனின் புதல்வனே! சிவனை அண்டிநிற்கிற அமைதியுடன் பிறருக்கு உதவுகிற பக்தர் பெருமான்களைப்பற்றி நீ அறியமாட்டாய். உனக்கு நல்லது நடக்கட்டும். உன் அண்ணன் யமன் சிவபக்தனான மார்கண்டேயனிடம் நிலையறியாமல் தவறாக நடந்துகொண்டதைக் கண்ட சிவபெருமான் இடது காலால் அவனை உதைத்து அழித்தார். மூவுலகையும் வென்றவனும் விஷ்ணுவின் புதல்வனும் பூவை வில்லாகக் கொண்டவனும், எல்லோர் உள்ளத்திலும் புகுபவனுமான மன்மதனை நெற்றிக் கண்ணால் சுட்டெரித்தார். கவனம் கொள்வாய்" என்றனர். (103-112).

मुनिरुवाच—

इत्युक्तवन्तौ गणपौ प्रहसन्प्राह सूर्यजः।
आर्भट्याविनयात्क्रूरवचनं श्रोतृनिष्ठुरम्॥ ११३

शनिरुवाच—

हे दुर्मदौ च दुर्बुद्धी दुरहङ्कारमानिनौ।
अज्ञात्वा मम माहात्म्यं जल्पेथे हि युवां वृथा॥ ११४

विष्णोर्द्वादशकेनैव मया तन्नेत्रमाहृतम्।
ब्रह्मणो जन्मराशिस्थो जहाराहं वरं शिरः॥ ११५

व्यकारि भिक्षुकश्शम्भुरष्टमस्थेन शूलिनः ।
ममाग्रजो यमोऽप्येवं ताडितस्त्रिपुरारिणा ॥ ११६

द्वादशस्थेन च मया यमस्याशेषसंहृतः ।
पीडितान्येवमादीनि कालकालेन वै मया ॥ ११७

एवं स्थिते मयि शनौ क रुद्रः क हरिर्विधिः ।
निवर्तेथां गणाध्यक्षौ मा भ्रंशेथां ममाग्रतः ॥ ११८

*காதுகளுக்குக் கொடூரமான இச்சொல்லைக் கேட்ட சனி, கணத்தலைவரைப் பரிகசிப்பவனாக காதிற்குக் கொடூரமான சொல்லைப் பண்பற்றுத் திமிருடன் கூறினான்.*

*திமிரும் துர்புத்தியும் கொண்ட கணத்தலைவர்களே! என் பெருமை உணராமல் வீணாகப் பேசுகிறீர். பன்னிரண்டாம் ராசியில் அமர்ந்து ஹரியின் கண்ணைப் பறித்தேன். பிரும்மாவின் ஜன்ம ராசியில் அமர்ந்து அவரது தலையைப் பறித்தேன். சிவனது எட்டாம் ராசியில் அமர்ந்து சிவனைப் பிச்சையாண்டியாக்கினேன். என் அண்ணன் யமனது பன்னிரண்டாம் ராசியிலமர்ந்து சிவனிடம் உதைவாங்கச் செய்தேன். கால புருஷனுக்கும் காலனான என்னிடம் சிவனும் விஷ்ணுவும் பிரும்மாவுமே வலிவிழந்தனர். என் முன் நிற்காதீர். திரும்புவீர் என்றான். (113-118)*

इत्युक्त्वा भास्करिर्ब्रह्मन्क्षेत्रे च्युतपुरे वरे ।
अवारोहत्स्यन्दनाच्च पद्भ्यामाक्रम्य भूतलम् ॥ ११९

आक्रान्तं शनिना सर्वं क्षेत्रं च्युतपुरान्तरम् ।
दूषितेन शिवं देवं कृत्तिवासेश्वराह्वयम् ॥ १२०

ततस्तौ शनिवाक्यानि सगर्वाणि निशम्य च ।
जाताभिषङ्गसंरक्तलोचनौ शनिमूचतुः ॥ १२१

गणनाथावूचतुः ।
रे रे शने महापापिन् शिवभक्तावमानकृत् ।
शिवनिन्दापरस्त्वञ्च शिवद्रोही च सूर्यज ॥ १२२

यः शिवं शिवभक्तांश्च द्रुह्यति द्राक्च निन्दति ।
पापीयान्स च दुष्टात्मा पीडितव्यो महात्मभिः ॥ १२३

शिवद्रव्यापहरणं शिवनिन्दा च कुत्रचित् ।
निन्दा च शिवभक्तानां प्रायश्चित्तैर्न शुध्यति ॥ १२४

शिवं यच्छिवभक्तांश्च यमानुज विनिन्दसि ।
अत एव शिवद्रोही भवसि त्वं न संशयः ॥ १२५

मा गन्तव्यस्त्वया देशश्श्रीमच्युतपुरान्तरः ।
यद्यागतोऽसि संरुध्यमानोऽप्यङ्घ्रिमदाव ते ॥ १२६

शिवपादाम्बुजं स्पृष्ट्वा मार्तण्डज न संशयः ।

*இவ்வாறு கூறி சனி வழுவூரில் தேரிலிருந்து இறங்கிக் கால்களைத் தரையில் ஊன்றினான். உடன் அந்த க்ஷேத்திரம் பாழடைந்தது. இதனைக்கண்ட கணத்தலைவர்கள் சனியை ஏசினர். ''மஹாபாபியே! சிவபக்தர்களை அவமதித்தாய். சிவனை ஏசினாய்! சிவனுக்குத் துரோகம் புரிந்தாய். இவ்வாறு செய்பவன் பெரும்பாவி, தண்டனைக்கு உரியவன். சிவனின் சொத்தைப் பறிப்பதும் சிவநிந்தை புரிவதும் சிவனடியார்களை நிந்திப்பதும் பரிகாரமற்ற பாபங்கள். நீ பெரும் சிவத்துரோகி. சிவன் கோயில் கொண்டுள்ள இவ்வூரில் நீ நுழையக் கூடாது. தடுத்த பின்னரும் உட்புகுந்ததால் உன் கால்களைச் சிதைப்போம். சிவனது திருவடிகள் மீது ஆணை'' என்றனர். (119-126).*

कण्व उवाच—

इत्युक्तोऽपि शनिस्ताभ्यां तयोर्वाक्यं गणेन्द्रयोः ॥ १२७

अशृण्वन्निव गर्वेण वेगेन पुनरागतः ।
ततः कोपयुतौ वीरौ गणेन्द्रौ तं रवेस्सुतम् ।। १२८

प्रतिदुद्रुवतुर्गृह्य गदे परमभास्वरे ।
ब्रुवन्तौ तिष्ठ तिष्ठेति निर्दहन्ताविवेक्षणैः ।। १२९

आजघ्नतुर्गदाभ्यां तौ सौरेर्जानुयुगं तदा ।
ताभ्यां निहन्यमानोऽसौ भग्नजानुर्यमानुजः ।। १३०

निपपातावनौ सौरिर्हाहेति विरुदन्शनिः ।
निपात्यागरुकान्तारे भङ्क्त्वा पादौ शनिं त्वमू ।। १३१

आजग्मतुर्गणेशानौ कृत्तिवासेशसन्निधिम् ।
चोलोऽपि मुक्तपीडोऽसौ शनेर्विक्रमभूपतिः ।। १३२

पुनः श्रीकृत्तिवासेशलिङ्गं सम्पूज्य भक्तितः ।
शिवस्याग्नेयभागेऽसौ सुक्रोशार्धमिते स्थले ।। १३३

लिङ्गं विक्रमचोलेश इति नाम्ना प्रतिष्ठितम् ।
तत्पूजां विविधां कृत्वा चोलविक्रमभूपतिः ।।
जगाम स्वपुरं रम्यं नानाजनसमाकुलम् ।। १३४

च्युतनगरनिवासं कृत्तिवासेशलिङ्गं
कुसुमसलिलपत्रैर्विक्रमश्चोलनाथः ।
दृढतरवरभक्त्याभ्यर्च्य साम्राज्यलक्ष्मीं
प्रचुरधनसुसस्यां भूमिमाप प्रसादात् ।। १३५

*இதனைக் கேட்டபின்னரும் காதுகேளாதவன் போல் பொருட்படுத்தாமல் செருக்குடன் சனி முன்னேறினான். அதனைக்கண்ட கணத்தலைவர்கள் சினமுற்றுப் பேரொளிமிக்க கதைகளை ஏந்தி சனியின் முழங்கால்களில் அடித்தனர். முழங்கால்கள் ஒடியத் தரையில் வீழ்ந்த சனி ஹா ஹா*

எனக்கதறினான். அகிற் காட்டில் சனி விழுந்ததும் கணத்தலைவரிருவரும் கிருத்திவாஸப் பெருமானிடம் வந்து சேர்ந்தனர். சோழனும் நோய் நீங்கிப் பெருமானை வணங்கித் துதித்தான். சிவலிங்கத்தின் தென்கிழக்கில் விக்ரம சோளேச்வரர் என்ற லிங்கத்தை ஸ்தாபித்து வழிபட்டுப்பின் தன் நகரம் சென்றான். ச்யுத நகரத்திலமர்ந்த கிருத்தி வாஸப் பெருமானின் லிங்கத்தை பக்தியுடன் பூக்களும் இலைகளும் தீர்த்த நீரும் கொண்டு வழிபட்ட சோழ அரசன், செல்வமும் தானியச் செழிப்பும் மிக்க நாட்டை ஈசனின் அருளால் பெற்றான். *(128-135)*.

—*—

## अथ षष्ठोऽध्यायः ।

कात्यायन उवाच—
भगवन्योगिनां वर्य कण्व कामारिवल्लभ ।
किं कृतं शनिना भग्नपादेनादित्यसूनुना ॥ १

तद्विस्तार्य वद ब्रह्मन् चरित्रं भानुजस्य वै ।
अत्याश्चर्यकरं नृणां श्रोतॄणामपि सद्गुरो ॥ २

कण्व उवाच—
सूर्यात्मजस्य चरितं पवित्रं पापनाशनम् ।
शनिपीडाहरं रम्यं श्रवणात्पठनादपि ॥ ३

वक्ष्यामि तव विप्रेन्द्र पङ्गुत्वञ्चागतं शनेः ।
सावधानेन मनसा शृणुष्वैतद्द्विजोत्तम ॥ ४

भग्नपादे शनौ विप्र सर्वलोकभयङ्करे ।
आदित्यसोमभूसुनुबुधजीवभृगूद्भवाः ॥ ५

शनैराश्वासयामासुश्शनिं पङ्गुत्वमागतम् ।

सूर्यादय ऊचुः ।
मा खिदार्यमसन्तान कालकालेन कल्पितम् ।। ६

अन्यथा कर्तुमीशाः के कर्म कामान्तकारिणः ।
त्रिपुरस्य च संहर्तुर्विष्णोर्गर्वापहारिणः ।। ७

तस्य कृत्यं हि दिनकृत्सन्तान दुरतिक्रमम् ।
वयं भक्ता महेशस्य त्रिकालशिवपूजकाः ।। ८

शिवध्यानरता नित्यं भूतिरुद्राक्षधारिणः ।
विद्वांसः शिवभक्ताश्च पूजकाश्च विशेषतः ।। ९

शिवनामजपासक्ताः शिवाज्ञावशवर्तिनः ।
तवाप्यस्ति शिवे भक्तिः सौरे त्वं शिवपूजकः ।। १०

त्रिकालभूतिरुद्राक्षधारणे तत्परो ह्यभूः ।
एतादृशस्त्वं भक्तस्य तिरस्कारं महेशितुः ।। ११

कृतवानसि तामस्या बुद्ध्या विक्रमभूपतेः ।
महात्मनो महाबाहोश्चक्रवर्तिवरस्य च ।। १२

ब्रह्मण्यस्य प्रजारक्षानिपुणस्य महीभुजः ।
किञ्च तस्य महेशस्य गणनाथौ दुरासदौ ।। १३

नाशयामासतुर्गर्वं कालस्याप्यग्रजस्य ते ।
तयोरप्यपराधञ्च कृतवान्गणनाथयोः ।। १४

करीन्द्रमस्तके नृत्यच्छिवान्तिकनिवासिनोः ।
तयोः कृतेऽपराधे ते व्यथाऽप्येतादृशी शने ।। १५

त्वया प्राप्ता महाभाग मा खिदस्त्वमितः परम् ।
शिवद्रव्यापहरणं शिवनिन्दा गुरोरपि ।। १६

द्रोहो भक्तस्य कामारेर्महापीडाकराः क्षणात्।
अत एव जनाः सर्वे न कुर्युर्द्रोहचिन्तनम्॥ १७

शिवस्य शिवभक्तानां गुरूणामपि भास्करे।
शिवं चिन्तय देवेशं दैत्यारिविधिपूजितम्॥ १८

मा रोदीर्भास्करे चिन्त्य गदाप्रहरजां व्यथाम्।
मन्दं मन्दं सुगच्छामः कृत्तिवासेशसन्निधिम्॥ १९

शनैश्चरोत्तिष्ठ विभोः पार्श्वं यामः शनैर्वयम्।

அத்தியாயம் - 6

*காத்யாயனர் ஸூர்யனின் புதல்வனை சனி காலொடிந்தபின் என்ன செய்தான் எனக் கண்வரிடம் விளக்கம் கேட்டார். கண்வர் அந்த வரலாற்றைக் கூறினார். உலகைப் பயமுறச் செய்த சனி கால் ஊனமுற்றபோது ஸூர்யன், சந்திரன், குஜன், புதன், குரு, சுக்ரன் என்ற ஆறு கிரஹநாதர்களும் சனிக்கு ஆறுதல் அளித்தனர். ''சூர்யனின் புதல்வனே! வருந்தாதே! யமனுக்கு யமனும் மன்மதனை அழித்தவருமான சிவனது செயலை மாற்ற எவராலும் இயலாது. திரிபுரர்களை அழித்தவரும் விஷ்ணுவின் செருக்கை அடக்கியவருமான பெருமானது செயல் மீற முடியாதது. நாங்கள் அனைவரும் சிவனது அடியார்களே. சிவனைத் தியானிப்பதிலும் வழிபாட்டிலும் அவரது நாம ஜபத்திலும், அவரது ஆணைக்கு உட்படுவதிலும் மகிழ்பவரே. உனக்கும் சிவபக்தி உண்டு. நீயும் சிவனை வழிபட்டவனே. மூன்று வேளைகளிலும் விபூதி - ருத்திராக்ஷம் தரித்தவனே. உன் அறிவு தமோகுணத்தால் மழுங்கியதும் சிவபக்தனை அவமதித்தாய். விக்ரம சோழன் சிறந்த சிவபக்தன். பெரும்வீரனை சக்ரவர்த்தி. அந்தணரை மதிப்பவன். மக்களைக் காப்பதில் தேர்ந்தவன். இதே இரு கணத்தலைவர்கள் தான் உன் அண்ணன் யமனது செருக்கை அடக்கியவர். யானையின் மத்தகத்தின் மீது நடனமாடுகிற பெருமானின் அணுக்கத் தொண்டர்களான இருவரிடமும் நீ தவறாக நடந்தாய். அதன்விளைவே இந்த நிலை.*

இனி வருந்தாதே! சிவனது பொருளைப் பறிப்பதும் சிவ நிந்தையும் குருத்துரோகமும் சிவனடியார்களைத் துன்புறுத்துவதும் மக்கள் மனத்தால் கூட நினைக்கத் தகாத குற்றங்கள். இந்திரனும் பிரும்மாவும் வணங்குகிற சிவனைத் தியானிப்பாய். கதையடியால் நேர்ந்த வேதனையைச் சிந்தியாதே. மெள்ள மெள்ள சிவபெருமானது அருகாமையை அடைவோம். எழுவாய். பெருமானை மெல்லச் சென்றடைவோம் என்றனர். *(1-20)*

कण्व उवाच—

यदा मन्दं सुगच्छाम इति ते प्रब्रुवन्ति तम् ॥ २०

तदा प्रभृति विप्रेन्द्र मन्द इत्युच्यते तु सः ।
शनैश्चरेति च यदा प्राहुस्सूर्यादयो द्विज ॥ २१

तदारभ्य शनेर्नाम प्रसिद्धं तेन भूसुर ।
ततः प्रोचुश्शनिं भूयो हरिदश्वादिषड्ग्रहाः ॥ २२

गदाप्रहरितं दीनं गजारिगणनाथयोः ।
अर्चयामः स्तुमो देवं कृत्तिवासेशमीश्वरम् ॥ २३

अभिषेकात्स्तवाच्छम्भुः सुप्रीतो गिरिजापतिः ।
अस्माभिः प्रस्तुतो देवः प्रसन्नो नो भविष्यति ॥ २४

स्तोत्रप्रियोऽभिषेकेन तुष्टश्चन्द्रार्धशेखरः ।
उत्तिष्ठ भानुतनय यामः कुम्भ्यरिसन्निधिम् ॥ २५

शोकं त्यज महाबुद्धे मा खिदस्त्वं यमानुज ।
कण्व उवाच—
इत्युक्तो भानुतनयो ग्रहः सूर्येन्दुभार्गवैः ॥ २६

आजगाम स तैस्साकं शनैश्च्युतपुरं शनिः ।
ग्रहैः सार्धं यास्यमानो हरसन्निधिमर्कजः ॥ २७

स्रुतक्षतजलिप्ताङ्गः शक्रोपलसमद्युतिः ।
गणनाथगदाभग्नजानुर्मन्दगतिः प्रभोः ॥ २८

स गैरिकेन्द्रनीलाश्मशैलो भातीव जङ्गमः ।
आगत्य स ग्रहैस्सौरिर्भग्नपादोऽतिमन्दतः ॥ २९

साष्टाङ्गं प्रणिपत्येशं कृत्तिवासेश्वरं प्रभुम् ।
आरेभे तं महाभक्त्या पूजितुं श्रद्धया सह ॥ ३०

पञ्चब्रह्माभिधे तीर्थे स्नात्वा मन्दं विधानतः ।
भस्मोद्धूलितसर्वाङ्गस्त्रिपुण्ड्राङ्कितफालकः ॥ ३१

रुद्राक्षमालया शोभिकण्ठोरोहस्तमस्तकः ।
अभिषिच्य महादेवं पञ्चब्रह्माख्यतीर्थकैः ॥ ३२

नालिकेरजलैः क्षीरैः गव्यैर्दिव्यभवैः शनिः ।
शमीदलैः स्ववारे च पूजयामास शङ्करम् ॥ ३३

निवेद्य पायसापूपशाल्यन्नं घृतसंयुतम् ।
सव्यञ्जनं मधुयुतं दध्यन्नं कदलीफलैः ॥ ३४

नालिकेरफलैर्युक्तमिक्षुखण्डोपशोभितम् ।
दत्वा ताम्बूलममलं देवदेवाय शम्भवे ॥ ३५

प्रणिपत्य महादेवं कृत्तिवासेश्वराह्वयम् ।
तुष्टाव परया भक्त्या शनिः स्वाघप्रशान्तये ॥ ३६

*மந்தநடையில் சென்றடைவோம் என மற்றக்கிரகங்கள் கூற மந்தன் எனச் சனியைக் குறிப்பிடுவது வழக்கில் வந்தது. மெள்ள நட என்றழைத்ததால் சனைச்சரன் (மெள்ள நடப்பவன்) என்ற பெயர் நிலைத்தது. ஸூர்யன் முதலானோர், கஜாரியின் கணத்தலைவர்களால் கதையால் அடிக்கப்பட்டதால் இரங்கத்தக்க நிலையில் உள்ள சனியை அபிஷேகம் அர்ச்சனை துதி முதலியவற்றால் சிவபெருமானது அன்பைப் பெற்று*

இவற்றால் மகிழ்வுற்ற பெருமானது அருளைப் பெற அழைத்தனர். ஸூர்யன் முதலானவருடன் கூட மெல்ல வழுவூரை அடைந்து சிவனது அருகாமையை அடைந்த சனி மெள்ள பெருமானது திருவடிகளில் வணங்கி எழுந்து சிரத்தையுடன் பஞ்சபிரும்ம தீர்த்தத்தில் நீராடி விபூதி ருத்ராக்ஷம் தரித்து பஞ்சபிரும்ம நீராலும் இளநீராலும் பசுவின் பாலாலும் சிவனை நீராட்டினன். தன் கிழமைகளில் பெருமானை வன்னியிலையால் அர்ச்சித்து, பாயஸம், அப்பம், நெய்யிட்ட அன்னம், தேன், தயிர், வாழைப்பழம், தேங்காய், கரும்புத்துண்டு முதலியவற்றை நிவேதனம் செய்து, தாம்பூலமளித்து வணங்கித் தன் தவற்றைப் பொறுத்தருள வேண்டித் துதித்தான். (21-36).

शनिरुवाच—

कृतजलधिनिषङ्गं सोमभानूरथाङ्गं
शुभनिगमतुरङ्गं ज्यायितप्राग्भुजङ्गम्।
कलितपुरविभङ्गं कल्पितक्ष्माशताङ्गं
स्मर हृदय शुभाङ्गं कृत्तिवासेशलिङ्गम्॥ ३७

विमलवृषतुरङ्गं वीतरागानुषङ्गं
विबुधहृदयसङ्गं ब्रह्महृत्पद्मभृङ्गम्।
करकलितकुरङ्गं कञ्जनेत्रैकसङ्गं
स्मर हृदय शुभाङ्गं कृत्तिवासेशलिङ्गम्॥ ३८

शिरसि विधृतगङ्गं शीतभानूत्तमाङ्गं
शमितमनसिजाङ्गं शान्तचित्तान्तरङ्गम्।
भसितधवलिताङ्गं कालतूलस्फुलिङ्गं
स्मर हृदय शुभाङ्गं कृत्तिवासेशलिङ्गम्॥ ३९

दनुजकुलविभङ्गं दक्षयज्ञाभिषङ्गं
विबुधनिवहतुङ्गं वेदवेदान्तरङ्गम्।

प्रणवशिखरिशृङ्गं पार्वतीप्राणलिङ्गं
स्मर हृदय शुभाङ्गं कृत्तिवासेशलिङ्गम्॥ ४०

अवितदहरलिङ्गं वासकैलासशृङ्गं
परमयमिपतङ्गं ज्ञानवापीतरङ्गम्।
विकृतकलुषभङ्गं धारिताजास्थिभङ्गं
स्मर हृदय शुभाङ्गं कृत्तिवासेशलिङ्गम्॥ ४१

कण्व उवाच—

शनिनैतत्कृतं स्तोत्रं यः पठेच्च दिने दिने।
शृणुयाद्वा विशेषेण शिवभक्तिसमन्वितः॥ ४२

तस्य मृत्युभयं नास्ति शनिपीडा कदाचन।
नवग्रहाणां पीडा च भूतपीडा च न क्वचित्॥ ४३

*சனி இயற்றிய துதி கடலை அம்புறத்தூணியாக, சந்திரனையும் ஸூர்யனையும் தேர்க்காலாக, தூயவேதங்களைக் குதிரைகளாக, நாக அரசனை நாணாக, பூமியைத் தேராகக் கொண்டு திரிபுரஸம்ஹாரம் செய்த கிருத்திவாஸேச லிங்கத்தை உள்ளமே! நினைப்பாய். (37)*

*தூய காளையை வாகனமாக்கி, சிறிதும் பற்றற்று, பேரறிஞரின் இதயத்தைப் பற்றி, பிரும்மாவின் இதயத் தாமரை மீது வண்டாகச் சுற்றி, கையில் மானை ஏந்தி தாமரைக் கண்ணனான விஷ்ணுவுடன் ஓட்டி மங்களமான வடிவில் காட்சி தருகிற கிருத்தி வாஸரை உள்ளமே! நினைப்பாய். (38)*

*தலையில் கங்கையைத் தாங்கி, சந்திரனை முடியில் தாங்கி, மன்மதனின் உருவைச் சிதைத்து, சாந்திமிக்க முனிவரின் இதயத்தினுள் மறைபொருளாகி, விபூதியால் பளபளக்கிற உடல்பகுதியுடன், காலனாகிய பஞ்சை நெருப்புப் பொறியாகி எரித்து நிற்கின்ற கிருத்திவாஸரை இதயமே! நினைவில் கொள்வாய். (39)*

*அஸுர குலத்தை அழித்தவர். தக்ஷனின் வேள்வியைக் குலைத்தவர். தேவர்களில் உயர்ந்தவர், வேதத்தின் உட்பொருள், பிரணவமலையின் கொடுமுடி, பார்வதியின் உயிரின் அடையாளம், இந்த கிருத்திவாஸரை உள்ளமே! நினைவில் கொள்வாய். (40)*

*தஹரம் எனும் பெருவெளியின் அடையாளம், கைலாஸ சிருங்கத்தில் வசிப்பவர். மாபெரும் முனிவரின் உள்ளத்தின் ஸௌர்ய ஒளி, ஜ்ஞானமெனும் ஓடையின் அலை, குற்றங்குறைகளை அகற்றுபவர். பிரும்மாவின் கபாலத்தைத் தாங்கியவர், இந்த கிருத்திவாஸரை உள்ளமே! நினைவில் கொள்வாய். (41)*

*சனியின் இந்தத் துதியைப் படிப்பவரும் கேட்கின்றவருமான சிவபக்தருக்கு மரண பயமோ சனி பாதையோ கிரகபீடையோ பூத பீடையோ நேராது. (42-43)*

एवं स्तुत्वा महादेवं कृत्तिवासेश्वरं प्रभुम् ।
प्रह्वकायोऽतिभक्त्या च तिष्ठति स्म शिवाग्रतः ॥ ४४

अर्कपुत्रकृतस्तोत्रः पूजाभक्तिभिरीश्वरः ।
लिङ्गादाविरभूत्तस्माददतिसन्तुष्टचेतनः ॥ ४५

बालाङ्कुराम्बिकायुक्तो बालार्कायुतसुप्रभः ।
त्रिणेत्रोऽष्टभुजप्रोद्यत्कपालत्रिशिखादिभिः ।
आयुधैरद्भुताकारो हरः प्रोवाच तं शनिम् ॥ ४६

ईश्वर उवाच—
प्रसन्नोऽस्मि शनेऽतीव भक्त्या सत्पूजया तव ।
स्तोत्रेण त्वत्प्रणीतेन वरदोऽस्मीह सांप्रतम् ॥ ४७

वरान्वरय भद्रं ते मार्तण्डतनुसम्भव ।
बहूनिष्टाननन्यांश्चासुलभानन्यदुर्लभान् ॥ ४८

*சனியின் துதியிலும் வழிபாட்டிலும் பக்தியிலும் மகிழ்ந்த சிவன் லிங்கத்திலிருந்து பாலாங்குராம்பிகையுடன், வெளிப்பட்டு கோடி இளஞ்சூரிய ஒளியுடன் முக்கண்ணராக எட்டுகைகளிலும் ஏந்திய கபாலம் திரிசூலம் முதலிய ஆயுதங்களுடன் வியக்கத்தக்கவாறு காட்சிதந்தார். சனியிடம் கூறினார்:- ''சனியே! உன்பக்தியிலும் வழிபாட்டிலும் நீ செய்த துதியிலும் மகிழ்ந்தவனாக உனக்கு வரமளிக்கிறேன். சூரியனின் புதல்வனே! எளிதில் கிட்டாததும் பிறருக்கு எவ்வகையிலும் கிட்டாததுமான வரத்தைக் கேட்பாய் என்றார். (44-48)*

शनिरुवाच—

यदि प्रसन्नो भगवान्स्तवेनानेन शङ्कर।
यद्यस्ति मयि कारुण्यं देहि मे प्रार्थितान्वरान्॥ ४९

मया कृतापराधं ते भक्तरोधनमद्य वै।
क्षमस्व करुणासिन्धो भक्तस्य मम शङ्कर॥ ५०

प्रभग्नजानुयुग्मं मे स्वस्थं भवतु शाश्वतम्।
तव कारुण्यबलतः प्रसीद परमेश्वर॥ ५१

मत्कृतेन स्तवेन त्वां यस्स्तौति मम वासरे।
शमीदलैः कोमलैश्च पूजयित्वा विशेषतः।
तस्याभीष्टं देहि शम्भो मत्पीडा न भवेत्कचित्॥ ५२

यो विद्वान्प्रातरुत्थाय मद्दिने मत्कृतेन भो।
स्तोत्रेण त्वां स्तुवन्भक्त्या स्नात्वा सन्ध्यामुपास्य च॥ ५३

तिलतैलेन ते लिङ्गमभिषिच्य जलेन च।
गव्यैः पयोभिर्दधिभिर्घृतैर्नव्यैः पुनर्जलैः॥ ५४

नीलपद्मैः प्रसूनैश्च नीलैर्नव्यैश्शमीदलैः।
सम्पूज्य विधिवद्भक्त्या गन्धपूर्वैर्महेश्वरम्॥ ५५

माषापूपैस्तिलैर्मिश्रं माषान्नन्तु निवेदयेत्।
माषचूर्णयुतश्चान्नं तैलाक्तं तव शङ्कर ॥ ५६

तस्य दीर्घायुरतुलं शाश्वती श्रीर्भवेत्प्रभो।
चतुरष्टविलग्नेषु नवमद्वादशेषु च ॥ ५७

यस्य राशिषु देवेश मया तत्संस्थितेषु वै।
गोचरे वाऽष्टवर्गे वा विषमर्क्षे स्थितस्य च ॥ ५८

तस्य पीडा च न भवेन्मम मर्त्यस्य शाश्वत।
यो नरः पूजयेद्भक्त्या त्वद्भक्तं मां कृपानिधे ॥ ५९

मद्दिने तु विशेषेण त्वत्पूजानन्तरं विभो।
नीलवस्त्रयुगेनैव नीलवस्त्रैश्च निर्व्रणैः ॥ ६०

नीलगन्धैरिन्द्रशिलाकल्पैर्नव्यैश्शमीदलैः।
नीलोत्पलैरनर्घ्यैश्च मन्नामद्वादशैरपि ॥ ६१

(शनेः द्वादशनामानि)
कोणश्शनैश्चरो मन्दश्छायाहृदयनन्दनः।
मार्ताण्डजस्तथा सौरिः पातङ्गिर्ग्रहनायकः ॥ ६२

ब्रह्मण्यः क्रूरकर्मा च नीलवस्त्रोऽञ्जनद्युतिः।
द्वादशैतानि नामानि त्वया वै कल्पितानि तैः ॥ ६३

तस्य वै मास्तु मत्पीडा प्रसादात्तव शङ्कर।
कण्व उवाच—
इत्युक्त्वा प्राञ्जलिर्भूत्वा सानन्दाश्रुकणश्शनिः ॥ ६४

तस्थौ शिवाग्रतो विप्र विनयावनतो मुने।

சனி வேண்டினார் - என் துதியில் நிறைவு பெற்று என்னிடம் பரிவிருந்தால் நான் கோருவதை வழங்குவீர்.

*பக்தனுக்கு இடையூறு விளைவித்த என் குற்றத்தைப் பொறுத்தருள்வீர். ஒடிந்த இரு முழங்கால்களும் நேராகட்டும். என் கிழமைகளில் என் துதியால் துதித்து வன்னி இலைகளால் வழிபடுபவர் விரும்பியதை அருள்வீர். அவருக்கு என்னால் பீடை நேராது. விடியற்காலையில் எழுந்திருந்து நீராடி ஸந்தியா தேவியை வழிபட்டு நல்லெண்ணெயால் லிங்கத்திற்கு அபிஷேகம் செய்வித்து நீராலும் பசுவின் பாலாலும் தயிர் புத்துருக்கு நெய் முதலியவற்றாலும் நீராட்டி நீலப்பட்டாடை அணிவித்துப் புதிய வன்னியிலையால் அர்ச்சித்துச் சந்தனம் முதலிய உபசாரங்கள் செய்து உளுந்து வடை, எள் கலந்த உளுந்தன்னம், நல்லெண்ணெய் கலந்த உளுந்தன்னம் இவற்றை நிவேதனம் செய்து வழிபட நீண்ட ஆயுளும் நிலைத்த செல்வமும் பெறுவான். லக்னம், 4-8-9-12 ராசிகளில் எனது இருக்கையாலும் கோசரத்திலோ அஷ்டவர்க்கத்திலோ தகாத நட்சத்திரத்திலோ எனது இருக்கையாலும் ஏற்படுகிற பீடை உண்டாகாது. என் கிழமைகளில் உம்மை வழிபட்டபின் நீல ஆடை இரண்டாலும் புண்படாத நீல நிறமும் நறுமணமும் கொண்ட வன்னி இலைகளாலும் நீல அல்லிப் பூவாலும் உன்னை வழிபட்டு கோணர், சனைச்சரர், மந்தர், சாயாவின் இதயத்தை மகிழ்விக்கிற மகன், ஸூர்யனின் மகன், ஸௌரி, பாதங்கி, கிரஹ நாயகன், ப்ரம்ஹண்யன், க்ரூர கர்மா, நீலவஸ்திரன், அஞ்ஜனத்யுதி என்ற நீர் இட்ட என் பன்னிரு நாமங்களைக் கூறுபவனுக்கும் என் பீடை நேரக் கூடாது என்று பெருமானிடம் வேண்டி கண்களில் நீர் மல்க கைக் கூப்பி சனி நின்றான். (50-64)*

ततः शनिवचश्श्रुत्वा शङ्करो जगतां गुरुः ॥ ६५

उवाच प्राञ्जलिं सौरिं प्रति सोमार्धशेखरः ।

शिव उवाच—

शने त्वया भाषितं यत्तत्तथैव भविष्यति ॥ ६६

तथैव तेऽपराधस्तु क्षान्त एव मयार्कज ।

मद्भक्ताभ्यां कृतं यत्ते जानुयुग्मं प्रभञ्जितम् ॥ ६७

तत्तथैव भवेत्तावत्पङ्गुत्वं भवतु ध्रुवम् ।
भक्तैर्यद्यत्कृतं लोके नान्यथा कर्तुमक्षमः ॥ ६८

तथाऽपि मन्दगमनं भविष्यति मदाज्ञया ।
मन्दः शनैश्चरः पङ्गुरिति ख्यातिं गमिष्यसि ॥ ६९

भेदितव्यं रोहिणीभं न कदाचित्त्वया शने ।
द्वादशाब्दं तु दुर्भिक्षं न भवेच्च कदाचन ॥ ७०

त्वमपि श्रद्धया युक्तो मल्लिङ्गं पूजय स्वयम् ।
शमीदलैश्च ते वारे नवनीलोत्पलैरपि ॥ ७१

कण्व उवाच ।
इत्युक्त्वा देवदेवेशः कृत्तिवासेश्वरप्रभुः ।
तस्मिन् लिङ्गमये बिम्बे तिरोधत्तेऽगजासखः ॥ ७२

*சனியின் கோரிக்கைகளை ஏற்ற உலக குருவான சங்கரன் சனியிடம் சொன்னார் - ''நீ கோரியதனைத்தும் நடக்கும். உனது தவறு மன்னிக்கப்பட்டது. என் பக்தர்களான கணத்தலைவர்கள் விளைவித்த முழங்கால்களின் முறிவு அப்படியே இருக்கும். நொண்டி நிலை அப்படியே நிற்கும். பக்தர்களின் செயல் மாற்ற இயலாதது. உனது மந்தநடை, மந்தன், சனைச்சரன், நொண்டி என்ற பெயர் மாறாது. அது அவ்வாறு புகழப் பெறும். எப்போதும் ரோஹிணீ நட்சத்திரத்தைப் பிளந்து செல்லக் கூடாது. பன்னிரண்டாண்டுப் பஞ்சம் நேரக்கூடாது. உன் கிழமைகளில் புதிய , வன்னி இலைகளாலும நீலோத்பலப்பூவாலும் என் லிங்கத்தை வழிபடுவாயாக எனக் கூறி தேவதேவனான கிருத்திவாஸப் பெருமான் பார்வதியுடன் லிங்கத்தினுள் மறைந்தார். (65-72)*

शनैश्चरोऽपि देवेशमादित्यादिग्रहैः सह ।
सम्पूज्य परया भक्त्या स्थाप्य लिङ्गं स्वनामतः ॥ ७३

देवस्य पश्चिमे भागे विमानस्य शिवस्य च ।
संपूज्य तं महादेवं तस्यैवेशानकोणतः ॥ ७४

स्थितवानंशतो मन्दः शिवसेवातिकांक्षया ।
यो नरः पूजयेत्सौरिं श्रीमच्युतपुरे वरे ॥ ७५

कृत्तिवासेश्वरेशानकोणस्थं सर्वभाग्यदम् ।
भोगवान् भाग्यवान् ब्रह्मन्नायुष्मान् स भवेन्नरः ॥ ७६

पुत्रमित्रकलत्रादिसंपन्नः पशुमान्भवेत् ।
शृणुयाद्वाचयेदेतदध्यायं प्रातरेव यः ।
तस्य सौरिभयं नास्ति तत्पीडा च कदाचन ॥ ७७

इति षष्ठोऽध्यायः

*சனியும் மற்ற ஸூர்யன் முதலான கிரகங்களுடன் சிவனை வழிபட்டான். தன் பெயரில் சனைச்சரேசன் என லிங்கத்தை ஈசனின் விமானத்தின் மேற்கில் அமைத்து பிரதிஷ்டை செய்து அதன் வடகிழக்கு மூலையில் நின்று வழிபட்டான். வழுவூரில் வடகிழக்கிலுள்ள அந்த சனியை வழிபட வாழ்க்கை நிறைவுபெறும். பாக்யம் ஆயுள் மக்கள் மனைவி பசு முதலியதனைத்தும் கூடும். காலையில் இக்கதையைக் கேட்பவருக்கும் சனி பீடை ஏற்படாது.(73-77)*

—*—

## अथ सप्तमोऽध्यायः

कण्व उवाच—

शमीवनस्य माहात्म्यं पुनर्वक्ष्यामि तु द्विज ।
यः श्रुत्वा शनिपीडाया विमुक्तः कृपयेशितुः ॥ १

यो नरः पूजयेद्भक्त्या कृत्तिवासेश्वरं प्रभुम् ।
शमीदलैर्मन्दवारे शनिपीडा न तस्य वै ॥ २

पाणिभ्यां विधृतं चापबाणौ नीलाञ्जनप्रभम्।
शिवस्येशानकोणस्थं कृत्तिवासेश्वरस्य च ॥ ३

पञ्चब्रह्माख्यतीर्थस्य मूलस्थञ्च शमीतरोः।
दक्षिणाभिमुखं देवं शनिं सर्वार्थसिद्धिदम् ॥ ४

वायसोपरिसंस्थञ्च नीलवस्त्रधरं शुभम्।
नामभिर्यो द्वादशभिस्संपूजयति भक्तितः ॥ ५

शमीबिल्वदलैः सौरिवारे चागसुताधिपम्।
न तस्य शनिपीडा च सूर्यादिग्रहसम्भवा ॥ ६

अस्मिन्नर्थे पुरावृत्तमितिहासं पुरातनम्।
शृण्वतां सर्वपापघ्नं श्रवणानन्ददायकम् ॥ ७

कल्माषपादचोलाख्यश्रितं भक्तिप्रदं शिवे।
शनिपीडापहरणं वच्मि कात्यायनानघ ॥ ८

அத்தியாயம் - 7

*சமீவனத்தின் பெருமை பற்றிக் காத்யாயனருக்குக் கண்வர் மேலும் விளக்குகிறார். சனிக்கிழமையன்று வன்னியிலை கொண்டு கிருத்திவாஸேசனை வழிபடச் சனிபீடை விலகும். கிருத்திவாஸேசனின் வடகிழக்கில் பஞ்சபிரும்ம தீர்த்தக்கரையில் வன்னி மரத்தடியில் காக்கையின் மீது தெற்கு நோக்கி அமர்ந்துள்ள நீல ஆடை தரித்த சனி பகவானை அவரது பன்னிரு திருநாமங்களால் துதித்து சனியன்று கிருத்திவாஸரை வன்னியிலையும் வில்வதளமும் கொண்டு வழிபடுபவனுக்கு சனி பீடையோ, ஸூர்யன் முதலான மற்ற கிரகங்களின் பீடையோ பாதிக்காது. இதனை கல்மாஷபாத சோழனின் வரலாறு கூறும். (1-8)*

पुरा कृतयुगे ब्रह्मन्कल्पे गारुडसंज्ञिके।
आसीत्कल्माषचरणचोलाख्योऽस्मिन् महीतले ॥ ९

चोलदेशनिवासी च द्राविडक्षत्रियो महान्।
चक्रवर्ती महाधीरस्सर्वयज्ञेषु दीक्षितः ॥ १०

सर्वलक्षणसंपन्नस्सिंहशार्दूलविक्रमः।
वेदशास्त्रार्थतत्वज्ञो धनुर्वेदसमाहितः ॥ ११

सर्वलोकप्रियः प्राज्ञः पूर्णचन्द्रनिभाननः।
आजानुबाहुः शीतांशुसमवर्णः प्रतापवान्॥ १२

मत्तमातङ्गगमनः परहन्ता शिवार्चकः।
पद्मपत्रविशालाक्षो ब्रह्मण्यो ब्रह्मतत्परः ॥ १३

तस्य भार्या च विदुषी युवती ह्यतिसुन्दरी।
सौन्दर्याधिकृतानङ्गमहिला चारुलोचना ॥ १४

नाम्ना हेमलता देवी सर्वलक्षणलक्षिता।
भारतीव कलाभिज्ञा महालक्ष्मीव सद्गुणा ॥ १५

सुप्रजा देवमातेव गिरिजेव पतिव्रता।
धरित्रीव क्षमायुक्ता बभूव पतिवल्लभा ॥ १६

गौरीपूजारता नित्यं तत्प्रीत्यै नृपवल्लभा।
युवतीपूजनरता ब्राह्मणानां विशेषतः ॥ १७

बालौ च सुकुमाराङ्गौ पीयूषकरतेजसौ।
नाम्ना शोणसुशोणाक्षौ तयोः पुत्रौ बभूवतुः ॥ १८

*கிருதயுகத்தில் கருடகல்பத்தில் கல்மாஷபாத சோழன் சோழ தேசத்தரசனாக இருந்தான். எல்லா வேள்விகளையும் புரிந்தவன். எல்லா லக்ஷணங்களும் பொருந்தியவன், சிங்கம் புலிபோல் பிறரை எதிர்ப்பவன். வேத சாஸ்த்ர நுட்பமறிந்தவன். தனுர் வேதத்தில் ஆழ்ந்த நிபுணன். மக்களனைவருக்கும் இனியவன். பேரறிஞன். பூர்ண*

நிலவொளி கொண்ட முகமுள்ளவன். நீண்ட தோளன். மதயானையின் நடைகொண்டவன். சிவனை வழிபடுபவன். அந்தணருக்கு இதமானவன். பரம்பொருளை நாடுபவன். அவனது மனைவி அறிவாளியும் அழகியுமான ஹேமலதா, ஸரஸ்வதிபோல் கலைகளில் தேர்ந்தவள், மஹாலக்ஷ்மிபோன்று சிறப்புமிக்கவள். அதிதி போன்று நன்மக்களைப் பெற்றவள், உமையைப் போல் கற்புக்கரசி. பூமியைப் போன்று பெருமைமிக்கவள், கௌரியை வழிபடுபவள். ஸுமங்கலிகளையும் அந்தணர்களையும் வழிபடுபவள். அவளுக்கு இருபுதல்வர்கள். சோணன் (சோணாக்ஷன்) ஸுசோணாக்ஷன் என. (9-18)

अथ कल्माषचरणो वासवोपमविक्रमः ।
विधायाधिपुरीमेष वासं तत्र स्थितो नृपः ॥ १९

यस्य दक्षिणभागे तु कुटिला नाम वै नदी ।
उपकण्ठे प्रवहति सुधासारोपमोदका ॥ २०

यत्र देवो महादेवो हरीषुर्मेदिनीरथः ।
जघान त्रिपुरं वेदतुरगो ब्रह्मसारथिः ॥ २१

शशास राज्यं तत्रैव स्ववर्णाश्रमधर्मवित् ।
रक्षिता स्वस्य धर्मस्य स्वजनस्य सुरक्षिता ॥ २२

ततः पालयतो राज्यं धर्मेणास्य महीपतेः ।
वसन्तकालः संप्राप्तः सर्वलोकसुखप्रदः ॥ २३

कल्माषपादचोलोऽथ तस्मिन्काले मुदान्वितः ।
शृङ्गारोपवनं प्राप सभार्यो हृन्मनोहरम् ॥ २४

जम्बूजम्बीरनारङ्गनिम्बोदुम्बरचम्पकैः ।
कपित्थाश्वत्थपार्थद्रुविटपावलिपाटलैः ॥ २५

प्लक्षाक्षवृक्षरुद्राक्षभद्राक्षतरुवीथिभिः ।
पलाशाशोकवकुलचूतभूरुहराजिभिः ॥ २६

रसालतालहिन्तालकृतमालतमालकैः ।
मन्दारचन्दनानन्तसन्तानहरिचन्दनैः ॥ २७

कदम्बबृन्दकांपिल्लनिकुरुम्बैर्विराजितम् ।
वंशकिंशुकवृक्षैश्च शोभितं तत्र तत्र च ॥ २८

यूथिकावीथिविलसन्माधवीधवराजितम् ।
मतल्लीशिवमल्लीसद्गिरिमल्लीसुवेल्लितम् ॥ २९

सुमल्लिकामरुवकैस्तत्र तत्र विराजितम् ।
रक्ताश्वमारश्वेताश्वरिपुभिस्समलङ्कृतम् ॥ ३०

कुन्ददाडिमबृन्दैश्च मुकुन्दतरुभिश्शुभम् ।
मधूकतिन्त्रिणीवृक्षप्रमुखैरपि रञ्जितम् ॥ ३१

तन्मध्ये मण्टपं रम्यं तप्तहाटकशोभितम् ।
षोडशस्तम्भसंयुक्तं मणिकाञ्चनवेदिकम् ॥ ३२

तत्प्राप्य हेमलतया देव्या कल्माषपान्नृपः ।
भुक्त्वा दिव्यान्नमतुलं नानाव्यञ्जनशोभितम् ॥ ३३

घृतक्षीरसमायुक्तं दधिमध्वमृतोपमम् ।
कल्माषपात्तु चोलोऽसौ स्थितवांस्तत्र भार्यया ॥ ३४

*கல்மாஷபாதன் இனிய நீருள்ள குடிலா, (கெடிலம்) நதியின் கரையில் அமைந்த அதி(அதிகை)புரியைத் தலைநகராக்கி ஆண்டான். அங்கு தான் சிவபெருமான் விஷ்ணுவை அம்பாக, பூமியைத் தேராக, வேதங்களைக் குதிரைகளாக, பிரும்மாவைச் சாரதியாகக் கொண்டு திரிபுரங்களை எரித்தார். கல்மாஷபாதன் ஒரு வஸந்த ருதுவில் தன் கேளிக்கைத் தோட்டத்தில் மனைவியுடன் உல்லாஸமாக*

இருந்தான். நாவல், எலுமிச்சை, நார்த்தை, வேம்பு, அத்தி, சம்பகம், விலா, அரசு, மருது, இச்சி, தான்றி, ருத்ராக்ஷம், பத்ராக்ஷம், புரசு, அசோகம், மகிழ், மா, ரஸாளு, பனை, கூந்தல்பனை, வெற்றிலைக் கொடி, மந்தாரை, சந்தனம், நன்ஞரி, சந்தனம், ஹரி சந்தனம் முதலிய கல்பக மரங்கள் அடுக்குமல்லி, ஓமம், சிவமல்லி, முல்லை, மலைமல்லி, மருதாணி, செவ்வரளி, வெள்ளையரளி, ஜாதி, மாதுளை, மோந்தன் வாழை, இலுப்பை, புளி முதலிய மரங்களும் செடிகளும் கொடிகளும் அடர்ந்த தோட்டத்தினிடையே பதினறு தூண்கள் கொண்ட அழகிய ரத்னமண்டபம், அதிலமர்ந்து சிறந்த சுவைமிக்க உணவேற்று உலாவினன். *(19-34)*

एतस्मिन्नन्तरे भूपं शक्रवैश्रवणोपमम् ।
शनैश्शनैश्चरः प्राह गूढदेहो दिवि स्थितः ॥ ३५

शनिरुवाच—

कल्माषपादचोलार्हन् शिवभक्तिमतां वर ।
शनैश्चरोऽहं वक्ष्यामि शिवभक्तो विशेषतः ॥ ३६

व्ययजन्मकुटुम्बस्थो नरान्पीड्ये नराधिप ।
छेदबृंहणसंहारत्रयावृत्त्या नरायुषि ॥ ३७

व्ययजन्मकुडुम्बस्थस्तव चोलमहीपते ।
विविधासु च पीडासु कथं कार्यं त्वदायुषि ॥ ३८

छेदनं प्रथमं राजन्बृंहणं तदनन्तरम् ।
मारणं तदनु प्रोक्तमित्यावृत्तिर्भविष्यति ॥ ३९

हे राजन्यौवने चान्ते ह्यागमिष्ये कदा नृप ।
कण्व उवाच—
इत्युक्तवति पातङ्गौ चोलः कल्माषभूपतिः ॥ ४०

किञ्चिद्विहस्य महिषीमवदन्नृपसत्तमः ।

*இந்திரனையும் குபேரனையும் ஒத்த அந்த அரசனிடம் சனி வானில் மறைந்து நின்று கூறினான். ''சிவபக்தரான கல்மாஷபாதரே! சிவபக்தனை சனி பேசுகிறேன். வியயம், ஜன்மம், குடும்பம் (12-1-2) என்ற ராசிகளில் நான் இருக்கும்போது சேதம், வளர்ச்சி, மங்குதல் (தங்கு-மொங்கு-மங்கு) என்ற வரிசையில் மக்களைப் பிடிப்பது வழக்கம். இப்போது உனக்கு அந்நிலை வந்துள்ளது. யௌவனத்திலும் முதுமையிலும் திரும்பத் வருவேன். எப்போது நான் உன்னிடம் வரலாம் என்றார். கல்மாஷசரணன் இதனை கேட்டு நகைத்து மனைவியிடம் கூறினான். (35-40)*

चोल उवाच—

अपि श्रुतं हेमलते शनिवाक्यं नृपात्मजे ।। ४१

पीडयिष्य इति प्रोक्तं शनिना सूर्यजन्मना ।
यदि पीडिष्यते सौरिश्शिवपूजापरायणम् ।। ४२

भक्तं मां देवि किं कुर्यामहं तत्पूजनादृते ।
एतस्मिन्समये त्राता शिव एव न चापरः ।। ४३

यवीयान्स हि कालस्य कालतुल्यपराक्रमः ।
कालकालो हि गौरीशः कालस्यापि नियामकः ।। ४४

शनैश्चरभयात्त्राता शिव एव न चान्यथा ।
किं कार्यमत्र कल्याणि त्वद्बुद्ध्या च विचार्यताम् ।। ४५

यथा नान्यं यजे देवि त्रिणेत्रं शङ्करं विना ।
कण्व उवाच—
एवं वदति भूपाले देवी हेमलता नृपम् ।। ४६

प्रोवाच प्राञ्जलिर्वाक्यं धर्मयुक्तमिदं सती ।

*ஹேமலதே! சனியின் சொல்லைக் கேட்டாயா? சனி என்னைத் துன்புறுத்தவிருக்கிறார். சிவனை வழிபடுகிற என்னை அவர் பீடித்தால் சிவனை மீண்டும் வழிபடுவதைத் தவிர வேறு வழியில்லை. இந்நிலையில் காப்பவர் சிவன் ஒருவரே! யமனைப் போன்ற வலிவுமிக்க அவரது தம்பி சனியிடமிருந்து நேர்கிற துயரை யமனை அழித்த சிவனே போக்கவல்லவர். முக்கண்ணனான சிவனைத் தவிர வேற தைவத்தை வழிபடத் தெரியாத எனக்கு இந்நிலையில் செய்யத்தக்கதை நீ சிந்திப்பாய் என்றான். ஹேமலதையும் சிந்தித்துக் கூறினாள். (41-46).*

देव्युवाच—

चोलभूप महाराज शिवभक्तवर प्रभो ॥ ४७

शृणु विज्ञापनं मेऽद्य हितं तव वरानन ।
शिवश्च शिवभक्तश्च द्वौ मतौ लोकपूजितौ ॥ ४८

वरीयानुभयोर्मध्ये भक्त एव नराधिप ।
भक्ताभिमानी सर्वेशो भक्तानां पालने रतः ॥ ४९

दृढभक्तिप्रियः शम्भुर्भक्तवश्यः सदाशिवः ।
भक्तेन प्रार्थितं वस्तु ददात्येव महेश्वरः ।
देहं वा स्वपदं वाऽपि त्रैलोक्यैश्वर्यमेव वा ॥ ५०

भिन्दन्ति शैलानुदधीन्पिबन्ति
व्यत्यासयन्ति क्षितिमन्तरिक्षम् ।
तृणीकरिष्यन्ति विधीशविष्णून्
किं किं न कुर्वन्ति महेशभक्ताः॥ ५१

सृजन्ति रक्षन्ति च संहरन्ति जगन्ति सव्येतरचारुबाहोः ।
कनिष्ठिकाङ्गुल्यतिचङ्क्रमेण किं किं न कुर्वन्ति महेशभक्ताः ॥ ५२

चरन्त्यतिक्रम्य च कालचक्राण्यवन्ति भक्तानपि शङ्करस्य ।
चिरं तपोभिः शिवमर्चयन्ति किं किं न कुर्वन्ति महेशभक्ताः ॥ ५३

अत एव महाराज भक्ताज्ञां परिपालय।
साम्बस्य त्रिपुरारातेराज्ञामिव दुरत्ययाम्॥ ५४

विधेहि भक्तपूजां च शिवार्चामिव पार्थिव।
अयं शनैश्चरो भक्तः शिवस्य परमात्मनः॥ ५५

कालस्यापि च पीडाकृच्छिवस्य वशमागतः।
शिवपूजापरो नित्यं महात्माऽसौ जितेन्द्रियः॥ ५६

कालानुसारी निष्कालो गौरीनाथेन चोदितः।
यद्यागच्छति पीडार्थं तव भक्तस्य भूमिप॥ ५७

तस्य पूजा त्वया कार्या भक्तत्वादीश्वरस्य भो।
तथा तस्य महापूजां प्रकुर्वाणस्य ते नृप॥ ५८

प्रसीदति महाभक्तः शनिः कारुण्यचेतसा।
शिवपूजां प्रकुर्वाणः शिवस्तोत्रपरायणः॥ ५९

पूजयस्व च मार्ताण्डिं महाशैवं नराधिप।
न त्वां शास्यामि राजेन्द्र तवोपायः प्रचोदितः॥ ६०

शिष्याऽहं तव भार्यात्वादुज्ञापितं मनसि स्थितम्।

*''சிவபக்தரான சோழஅரசரே! நான் விண்ணப்பிப்பதைக் கேட்பீர். சிவபெருமானும் சிவனடியாரும் உலகின் வழிபாட்டைப்பெறுபவர். இவ்விருவரில் சிவனடியார் சிறந்தவர். ஈசன் தன் பக்தரை நேசிப்பவர். பக்தரைக் காப்பவர். பக்தியின் வசப்படுபவர். பக்தன் நாடுவதை உடன் அளிப்பவர். தன் பதவியை மூவுலகின் ஆளுமையை ஏன்? தன்னையே பக்தனுக்கு வழங்குபவர். ஈசனின் பக்தர்கள் மலையைப் பிளப்பர்; கடலைக் குடிப்பர். பூமியையும் வானையும் இடம் மாற்றுவர். படைப்பு காப்பு மறைப்பு என எதனையும் இடதுகை விரல் சுண்டுதலால் செய்வர். காலச்சுழலைத் தாண்டி நிற்பர். நீண்ட தவத்தால் சிவனை வழிபடுவர். சனிபகவானும்*

சிவபக்தரே! சிவனது வசப்பட்டவர். இந்த பக்தரின் ஆணையையும் சிவனது ஆணையாக மதித்து பக்தரை மதித்து வழிபடுவீர். உம்மைத் துன்புறுத்தவே இந்த சிவபக்தர் முனைவாராயினும் சிவபக்தரானதால் உம்மால் வழிபடத்தக்கவர். காலத்தையொட்டிச் செயல்படுபவர். தன் விருப்பப்படி காலத்தை மாற்றுதவர். கௌரீமணாளனுல் ஏவப்பட்டே வருகிறார். அவர் உம்மைத் துன்புறுத்த வருகிறுரெனில் ஈசுவரனது பக்தரான நீர் அதனை மதிக்கக் கடவீர். நீர் அவரை மதித்து வழிபட்டால் அவர் உம்மிடம் பரிவு காட்டக் கூடும். சிவனை வழிபடுபவரும் சிவனைத் துதிப்பதில் ஆர்வமிக்கவருமான நீர் மஹாசைவனுன ஸூர்ய குமாரனையும் வழிபடுவீர். நான் உமக்கு ஆணையிடவில்லை. உபாயம் கூறினேன். உம் மனைவியானதால் உமக்குக் கட்டுப்பட்டவள். என் மனத்தில் உள்ளதை விண்ணப்பித்தேன். (47-60)

कण्व उवाच-

एवमुक्तस्तया देव्या चोलः कल्माषपान्नृपः ॥ ६१

संप्रीतः प्रत्युवाचेमां शिवभक्तियुतं वचः ।

राजोवाच——

अयि हेमलते देवि सत्यमुक्तं त्वयानघे ॥ ६२

शनैश्चरस्य भक्तस्य विषये कमलेक्षणे ।
अप्रत्यक्षस्य मन्दस्य कर्तुमिच्छामि नार्चनम् ॥ ६३

यदि भक्तः शिवे सौरिर्मद्गृहाङ्गणमागतः ।
तदा पूजां करिष्यामि विधिवत्साघ्र्यपात्रकः ॥ ६४

अपरोक्षार्चनं शम्भोर्लिङ्गे वा प्रतिमासु वा ।
तं मन्दं गन्धपुष्पाद्यैर्धूपदीपनिवेदनैः ॥ ६६

नान्यं यजे महेशानादपरोक्षे त्रियम्बकात् ।

शिवावरणपूजासु ग्रहपूजां तदाज्ञया ।। ६६

कृतवानस्मि कल्याणि मया सत्यमुदीरितम् ।

कण्व उवाच—

इत्युक्तवति कल्माषपादचोले द्विजोत्तम ।। ६७

प्रोवाच महिषी वाक्यं भर्तारं स्नेहसंयुतम् ।

*சிவபக்தியை வெளிப்படுத்துகிற தன் தேவியின் சொல்லை கல்மாஷபாத அரசன் கேட்டு மகிழ்ந்தான். அவளிடம் சொன்னான் - ''ஹேமலதே! சிவபக்தனை சனி விஷயத்தில் நீ சொன்னது உண்மை. மறைந்து நின்று பேசுகிற சனியை நான் அர்ச்சிக்க விரும்பவில்லை. அந்த சிவபக்தரான சனி என் வீட்டுவாசலுக்கு வந்தால் அர்க்க்யம் பாத்யம் முதலானவற்றால் உபசரிப்பேன். லிங்கத்தில் அல்லது மூர்த்தியில் புலப்படாத ஒருவரான சிவனுக்கு மட்டுமே வழிபாடு. அந்த முக்கண்ணனை சிவனைத் தவிர புலனுக்கு உட்படாத வேறொருவரை வழிபடமாட்டேன். சிவனது ஆவரண பூஜையில் ஆவரண தேவதையாக கிரகங்களை சிவனது ஆணையின்படி வழிபடுவதுண்டு. இது உண்மையே''. இவ்வாறு கூறிய கணவர் கல்மாஷபாதரிடம் ராணி ஹேமலதை மறுபடி அன்புடன் கூறினாள். (62-67)*

महिष्युवाच–

कान्त राजेन्द्र मार्ताण्डिमर्चिष्येऽहं त्वदाज्ञया ।। ६८

कदापि पीडामकरोन्न शनिः शिववल्लभः ।

यथा शमीदलैर्बिल्वपत्रैरन्नैस्समाषकैः ।। ६९

कृष्णगोवृषदानैश्च विप्रेभ्यो लोहदक्षिणैः ।

स्तोत्रपाठैस्स्तवीयैश्च तन्नामस्मरणैरपि ।। ७०

शमीसमिद्भिर्होमैश्च प्रीणयिष्ये शनैश्चरम् ।

कण्व उवाच—

इत्युक्त्वा राजमहिषी मण्टपान्निर्गता बहिः ॥ ७१

नमस्कृत्याब्रवीत्सौरिमुन्मुखा प्राञ्जलिः शनिम् ।

*''கணவரே! உமது உத்தரவுடன் நான் சனியை வழிபடுகிறேன். சிவபக்தரான அவர் என்றும் நம்மைத் துன்புறுத்தவில்லை. வன்னியிலையாலும் வில்வ இலையாலும் அர்ச்சித்து, உளுந்து கலந்த அன்னத்தை நிவேதனம் செய்து, கருநிறக் காளை, பசுக்களை இரும்பாலான காசுதக்ஷிணையுடன் அந்தணருக்குத் தானம் செய்துத் துதித்து அவரது நாமம் கூறி வன்னிசமித்தால் ஹோமம் செய்து சனியைத் திருப்திப் படுத்துவேன்.'' என்று கூறி மண்டபத்தை விட்டு வெளியேறி சனியை முன்னிட்டு வணங்கிக் கை கூப்பித்துத் துதித்தாள். (69-71)*

नमः सूर्यात्मजायास्मै शनये शिवयोगिने ॥ ७२

वैकर्तनाय नीलाय छायापुत्राय ते नमः ।
नमो नीलमयूखाय ग्रहराजाय सौरये ॥ ७३

नमः पुरुषगात्राय शृणु विज्ञापनं मम ।
भर्तुः प्राणान्परिहर विधास्येऽहं त्वदर्चनम् ॥ ७४

सुकुमारं पतिं रक्ष भास्करे भक्तवत्सल ।
कण्व उवाच—
एवं वदन्त्यां राजेन्द्रमहिष्यां वै शनैश्चरः ॥ ७५

प्रीणयन्राजमहिषीमब्रवीत्खेऽम्बुदान्तरः ।

*''ஸூர்யனின் புதல்வரும் சிவயோகியும் நீல நிறத்தவரும், சாயாதேவியின் புதல்வரும் நீல ஒளி கொண்டவரும், கிரஹங்களின் அரசரும், மனித வடிவில் தோன்றுபவருமான சனிதேவனுக்குப் பல நமஸ்காரங்கள். என் விண்ணப்பத்திற்குச் செவி சாய்ப்பீர். என் கணவரின் உயிரை விட்டுவிடுவீர். உமக்குப் பூஜை செய்கிறேன். அழகிய*

*என் கணவரைக் காப்பாற்றுவீர். பக்தரிடம் பரிவுள்ள சனிபகவானே'' என வேண்டினுள். இதனை வானில் மேகத்தினிடையே நின்று கேட்ட சனி அவளை மகிழ்வித்துக் கூறினுர். (69-76)*

शनिरुवाच—
अये हेमलते देवि कृतं मद्यजनं त्वया ॥ ७६

सार्धद्वयाब्दं मद्बाधां सोढ्वा तिष्ठतु भूमिपः ।
मदर्चनाच्च चोलस्य महाभक्त्या महेश्वरे ॥ ७७

प्राणान्विहाय राजर्षेः पीडयिष्ये तु पार्थिवम् ।
कण्व उवाच—
एवमुक्त्वा तु मार्ताण्डिर्महिषीमपि भूमिपम् ॥ ७८

प्राविशत्तत्पुरे रम्ये पीडां कर्तुं नृपोत्तमम् ।
चोलोऽपि महिषीवाक्याच्छनिवाचं निशम्य च ॥ ७९

विवेशाधिपुरं रम्यां तुरङ्गगजसङ्कुलाम् ।
शनैश्चरे प्रविशति नगरं चोलभूपतेः ॥ ८०

गजाश्वतुरगा योधा व्याधिभिः पीडिता मृताः ।
तालुजङ्घा महाघोरा रुरुधुः कारणं विना ॥ ८१

आधिपुर्याश्चतुर्द्वारं रथवाजिगजैर्भटैः ।
तद्रात्रौ चोलनृपतिर्माहात्म्यं कृत्तिवाससः ॥ ८२

श्रीमच्युतपुरस्यापि वैभवं श्रुतवान्द्विजात् ।
तच्चिन्तयित्वा सकलं तद्रात्रावेव भूपतिः ॥ ८३

भार्यया च कुमाराभ्यां निर्ययौ सधनः पुमान् ।
गत्वा सुदूरमध्वानं रात्रावेव महीपतिः ॥ ८४

प्रापापरेद्युर्नगरं पुण्डरीकाभिधं द्विज ।

तत्रोवास महीपालो वेश्यामाश्रित्य काञ्चन ।। ८५

नाम्ना चानङ्गकुसुमां मदनस्यापि मोहिनीम् ।

*``ஹேமலதை ராணியே! என்னை வழிபட்டாய். இரண்டரை ஆண்டுகள் அரசன் என் துன்புறுத்தலைப் பொறுத்து வாழட்டும். நீ என்னை வழிபட்டதாலும், ஈசனிடம் அரசர் கொண்டுள்ள பக்தியாலும் ராஜரிஷியின் உயிர் நீங்காது. மற்ற வகையில் என் பீடையை அவர் ஏற்கட்டும்.'' இவ்வாறு கூறிய சனி உடன் அரசனை வாட்ட அவனது நகரத்துள் நுழைந்தார். சோழனும் ராணியின் மூலம் சனியின் வாக்கைக் கேட்டு, குதிரை யானை முதலிய படைகள் சூழ்ந்த நகரினுள் நுழைந்தான். சோழ அரசரின் நகரினுள் சனியும் நுழைந்தார். உடன் யானை குதிரை மற்றும் படைவீரர்கள் நோயுற்று மாண்டனர். அதிபுரியின் நான்கு கோட்டை வாசல்களிலும் தாலுஜங்கர் என்ற எதிரிப்படையினர் தம் குதிரை-யானைப்படையுடன் முற்றுகையிட்டனர். அன்றிரவு அதிபுரியிலிருந்த அரசன் ஒரு அந்தணர் வாயிலாக வழுவூரின் பெருமை பற்றியறிந்தான். உடன் தன் மனைவிமக்களுடன் போதிய செல்வத்துடன் கிளம்பி எவருமறியாதபடி வெகுதூரம் சென்று மறுநாள் புண்டரீகபுரம் (சிதம்பரம்) சென்றடைந்தான். மன்மதனையும் மயக்குகின்ற அநங்ககுஸுமா என்ற வேசியின் வீட்டில் தங்கினான். (77-86)*

सा च राजानमाश्रित्य रतिखेलनतत्परा ।। ८६

मोहयित्वा स्वसौन्दर्यैर्धनं जग्राह मासतः ।
स्वचेटीं च समाहूय प्रोवाचैवं नृपं प्रति ।। ८७

वेश्योवाच–

हे बाले वद राजानं चोलं कल्माषपान्नृपम् ।
धनाभावान्महाराज नागन्तव्यं ममान्तिकम् ।। ८८

तव वासो गृहे मास्तु पल्लवागमनाशनः ।
यत्र कुत्रापि गन्तव्यं सभार्यः ससुतो नृप ।। ८९

कण्व उवाच—
इत्येवं प्रेरितवती वेश्या राज्ञे स्वचेटिकाम् ।
साऽपि चेटी प्रोक्तवती तद्वाक्यं पार्थिवाय वै ।। ९०

ततः स राजा निरगाद्वेश्यागाराद्विमानितः ।
नृपः स वेश्यया त्यक्तो निश्वसंश्चिन्तयन्शिवम् ।। ९१

श्रीमच्च्युतपुरं प्राप कावेर्या दक्षिणे तटे ।
क्रोशमात्रमिते चोलः स्थितं मुनिजनाश्रयम् ।। ९२

वापीकूपतटाकाद्यैर्निर्मलोदकपूरितैः ।
कुञ्जराशनकान्तारशमीबदरिकावनैः ।। ९३

देवदारुवनैश्चापि शोभितं सिद्धसेवितम् ।
हेमशृङ्खलराजेन पालितं तत्पुरं महत् ।। ९४

कृत्तिवासेश्वरेणाऽपि राजितं त्रिपुरारिणा ।
पञ्चभागं पुरः शम्भोर्ब्रह्मतीर्थेन रञ्जितम् ।। ९५

राजराजोपमो राजा चोलस्तत्राकरोत्स्थितिम् ।
सुशोणशोणनेत्राभ्यां सह हेमलतान्वितः ।। ९६

हेमशृङ्खलराजेन कदाचित्कृत्तिवाससः ।
निर्गच्छता दर्शनार्थं दृष्टोऽभूत्स नराधिपः ।। ९७

को भवानिति पृष्टश्च मत्सेवाञ्च करोषि किम् ।
इति पृष्टस्तथा राजा तेन भूपेन वै मुने ।। ९८

कतिमात्रं भृतिर्देया वद क्षत्रियबान्धव ।

*அவள் அரசனை மயக்கி அவனிடமிருந்த செல்வத்தைப் பறித்துத் தனது சேடியின் வாயிலாக, செல்வமிழந்தவருக்கு இவ்வீட்டில் இடமில்லை. பல்லவன் வரவிற்கு இது இடையூறு. மனைவி மக்களுடன் வேறிடம் செல்வாய் எனக் கூறி விரட்டி விட்டாள். தன் ஏழ்மையை உணர்ந்த அரசன் மனைவி மக்களுடன் கிளம்பி காவேரியின் வடகரையிலிருந்த வழுவூரைச் சென்றடைந்தான். முனிவர்கள் தவமிருக்குமிடம். ஓடைகளும் கிணறுகளும் குளங்களும் தூய நீர் நிலைகளாக விளங்கின. சுற்றிலும் வன்னி - இலந்தை முதலியன நிறைந்த காடுகள். ஹேமசிருங்கலன் என்ற அரசன் ஆளுகைக்கு உட்பட்டது. திரிபுரமெரித்த கிருத்திவாஸப் பெருமானின் ஆலயமமைந்தத் தலம், பஞ்சபிரம்ம தீர்த்தம் சிவபெருமானின் எதிரில். சோழன் தன் மனைவி மக்களுடன் அங்கு தங்கியிருந்த போது அங்கு ஈசனைக் காண வந்த ஹேம சிருங்கல அரசன் சோழனைக் கண்டான். நீர் யார்? என்னிடம் பணிபுரிவீரா? என்ன ஊதியம் கேட்பீர் என்று கேட்டான். (87-99)*

चोल उवाच—

द्राविडक्षत्रियवर राजन्हाटकशृङ्खल ॥ ९९

अहं च्युतपुरावासं कर्तुमिच्छामि साम्प्रतम् ।
वस्त्रान्नदानमात्रेण तव सेवां करोमि भोः ॥ १००

एवं कल्माषच्चरणचोले वदति पार्थिवे ।
प्रत्युवाच तदा रुक्मशृङ्खलश्चोलभूपतिः ॥ १०१

हेमशृङ्खल उवाच—

तथैव दीयते राजन्स्थीयतां मत्समीपतः ।
संसेव्य शङ्करं बालाङ्कुराम्बासहितं प्रभुम् ॥ १०२

कण्व उवाच—

कल्माषपादमित्युक्त्वा सुस्नात्वा हेमशृङ्खलः ।
स्ववेश्म गतवान्राजा स्तुतो मागधवन्दिभिः ॥ १०३

ततः कल्माषचरणचोलो हेमलतान्वितः ।
कुमाराभ्यां सुशोणाक्षशोणाभ्यां सहितः प्रभुः ॥ १०४

श्रीमच्युतपुरावासं कृतवान्मासमात्रकम् ।
सुखेन शङ्करं पूज्य शमीबिल्वदलैर्नृपः ॥ १०५

*''தமிழரசே! ஹேமசிருங்கலரே! நான் வழுவூரில் தங்கி வாழ விரும்புகிறேன். உடையும் உணவும் பெற்றால் போதும். உமக்கு ஊழியம் புரிவேன்.'' என்று கல்மாஷபாதன் கூறியதும் ஹேம சிருங்கலன் 'அவ்வாறே ஆகட்டும். என் அருகில் இருப்பீர். பாலாங்குராம்பிகையுடன் கூடிய சிவபெருமானை வழிபடுவீர்' எனக் கூறி ஹேமசிருங்கலன் தீர்த்தத்தில் நீராடி விட்டுத் தன் மாளிகை சென்றான். கல்மாஷபாதனும் ஹேமலதை சோணன் மற்றும் ஸுசோணாக்ஷனுடன் சிவனை வழிபட்டு ஒரு மாதம் வரை இனிது வாழ்ந்தான். (100-105)*

ततः कनकशृङ्खलो मदनवैरिसेवाच्छलात्
स चोलनृपतेर्गृहं समहिषीसुतस्यापि च ।
समाप गिरिजापतेर्यजनकालवर्ये तदा
विलोक्य महिषीं नृपो मदनबाणपीडामगात् ॥ १०६

अभ्यागते च नृपतौ कल्माषाङ्घ्रिर्ददौ नृपः ।
आसनं शोभनं तस्य स्थितवांस्तत्र भूमिपः ॥ १०७

कल्माषाङ्घ्रिनृपस्य धर्ममहतीं कामाङ्गनाङ्गप्रभां
शम्भोः पूजनतत्परं निजपतिं शुश्रूषमाणां प्रियाम् ।
इच्छन्हेमलतां विधातुमनिशं स्वस्य प्रियां भूमिपो
ब्रह्मन्हाटकशृङ्खलो वदति तं कल्माषपादं नृपः ॥ १०८

हेमशृङ्खल उवाच—

कल्माषपाद शृणु वाक्यमेतत्त्वं प्रोच्यमानश्च मया शिवात्मन् ।
सभक्तिपूर्वं शिवयोः प्रसाददानक्षमं भक्तिदमम्बिकायाम् ॥

बालाङ्कुराम्बिकां देवीं राजन्भार्गववासरे।
पूजयिष्ये महादेवीं श्वोभूते च दिने नृप ॥ ११०

देवीप्रीत्यै च तरुणीपूजा कार्या मया परम्।
तव भार्या हेमलता पूजार्थं प्रेर्यतां त्वया ॥ १११

देवीं सम्पूज्य विधिवत्तव देवीमनिन्दिताम्।
अलङ्कृत्य महारत्नमालाभी रत्नकङ्कणैः ॥ ११२

पट्टवस्त्रैश्च विविधै रत्नताटङ्ककुण्डलैः।
माणिक्यवलयैश्चापि पुनस्सम्प्रेर्यते मया ॥ ११३

*ஹேமசிருங்கலன் சிவனை வழிபடுகிற சாக்கில் சோழன் வசித்த வீட்டிற்கு வந்தவன் சிவனது வழிபாட்டிற்கு வந்த சோழனின் மனைவி ஹேமலதையைக் கண்டு அவளிடம் காமம் கொண்டான். வீட்டிற்கு வந்த ஹேமசிருங்கலனை வரவேற்று உபசரித்து ஆஸனம் தந்து அமர்த்திச் சோழன் தன் மனைவியுடன் ஈசனை வழிபடத் தொடங்கினான். அப்போது ஹேமலதையைத் தன் மனைவியாக்கி மகிழ நினைத்த ஹேமசிருங்கலன் கல்மாஷபாதனிடம் கூறினான் - ''கல்மாஷபாதரே! என் சொல் கேட்பீர். சிவனது அருளைப் பெற அம்பிகையிடம் பக்தி கொள்ள, பாலாங்குராம் பிகையை நான் வெள்ளிக்கிழமை யன்று வழிபட உள்ளேன். தேவியை மகிழ்விக்க, ஸுமங்கலி பூஜை செய்வேன். உன் மனைவி ஹேமலதையை அந்த பூஜைக்கு என் மாளிகைக்கு அனுப்புவீர். உம் மனைவியை ரத்னமாலைகள் ரத்ன வளைகள் பட்டாடைகள் ரத்னதாடங்கம், குண்டலம், மாணிக்யக் கல்லாலான வளைகள் இவற்றை அணிவித்து தேவியாக முறைப்படி வழிபட்டுப்பின் உம்மிடம் அனுப்புவேன்.'' என்றான். (106-113)*

कण्व उवाच—

इत्युक्तवति भूपाले राजानं हेमशृङ्खले।
कल्माषपादभूपालश्चोलं प्रत्यब्रवीच्च तम्॥ ११४

कल्माषपाद उवाच–

हेमशृङ्खल राजेन्द्र श्वोभूते प्रेर्यते मया ।
संपूज्य गिरिजामाशु मद्भार्या च विसृज्यताम् ।। ११५

इत्युक्त्वा नरशार्दूलश्शनैश्चरवशं गतः ।
राजा स तं विसृज्याथ भार्यां हेमलतां जगौ ।। ११६

कल्माषपाद उवाच–

प्रिये हेमलते सुभ्रूस्त्वत्कृतार्चातितोषितः ।
शनैश्चरः प्रसन्नोऽभूद्भक्ताभीष्टफलप्रदः ।। ११७

न श्रुतं च त्वया देवि नृपो हाटकशृङ्खलः ।
यदुवाच तदाचक्षे शृणु मे वदतश्शुभे ।। ११८

श्वः काले पूजयेऽहं तां श्रीमद्बालाङ्कुराम्बिकाम् ।
सुवासिन्यर्चना तत्र कार्या देवीप्रियाय वै ।। ११९

राजंस्तव प्रिया देवी प्रेर्यतां पूजनाय वै ।
तामलङ्कृत्य विधिवन्मणिहाटकभूषणैः ।। १२०

पट्टवस्त्रैरनेकैश्च मणिताटङ्ककुण्डलैः ।
कटकाङ्गदकेयूरवलयैरतिसुन्दरैः ।। १२१

सम्पूज्य महिलां राजन्महिषीं तव मासमाम् ।
पूजयित्वा पायसेन पुनस्संप्रेर्यते मया ।। १२२

इत्युक्त्वा प्रार्थयित्वाऽसौ गतवान्हेमशृङ्गलः ।
तत्र गत्वा त्वमपि च सञ्जुष्टायाहि पूजनम् ।। १२३

*இவ்வாறு ஹேமசிருங்கலன் வேண்டியதும் கல்மாஷபாதன் அதனை ஏற்று, ''நாளை என் மனைவியை அனுப்புகிறேன். வழிபாடு முடிவடைந்ததும் திரும்ப அவளை*

*என்னிடம் அனுப்புவீர் என்றான். இப்போது சோழன் சனியின் வசப்பட்டான். ஹேமலதாவிடம் சொன்னான். ''ஹேமலதே! உன் வழிபாட்டில் மகிழ்ந்து சனிபகவான் அருள்புரிந்து பக்தன் விரும்பிதைத் தர உள்ளார். ஹேமசிருங்கலன் பாலாங்குராம்பிகையை வழிபடும்போது தேவியை மகிழ்விக்க ஸுமங்கலியை வழிபடவேண்டும். ''இதன் பொருட்டு உன் மனைவியை என் மாளிகைக்கு அனுப்புவாய். அங்கு லக்ஷ்மீ போன்ற உன் ராணியை ஆடை ஆபரணம் முதலியவற்றால் அலங்கரித்து பாயஸ உணவளித்து மறுபடி உன்னிடமனுப்புகிறேன்'' என ஹேமசிருங்கலன் வேண்டிச் சென்றான். நீ அந்த வழிபாட்டை ஏற்று வருவாயாக என்றான். (117-123)*

कण्व उवाच—

एवमुक्तवति ब्रह्मन्कल्माषचरणे नृपे ।
देवी हेमलता भूपं भर्तारमिदमब्रवीत् ।। १२४

देव्युवाच—

राजेन्द्र शिवभक्तार्य शृणु विज्ञापनं मम ।
एतस्मिन्समये किञ्चित्कापट्यं विद्यते विभो ।। १२५

लोके कामातुर इति विश्रुतो हेमशृङ्खलः ।
तव भार्या त्वहं लोके लावण्यातिशाया श्रुता ।। १२६

देवीपूजाछलेनैवं नृपतिर्हर्तुमुद्यतः ।
तवाज्ञापालनरता गमिष्येऽहं वरानन ।। १२७

त्वदन्यं पुरुषं लोके वामपादेन न स्पृशे ।
इमौ कुमारौ संरक्ष त्वद्देहं परिपालय ।। १२८

देवेन शनिना सर्वं कृतमित्यवधारय ।
कण्व उवाच—

इत्युक्तवत्यां तस्यां वै राजराजोपमो नृपः ॥ १२९

प्रत्यब्रवीच्च महिषीं निजभक्तां पतिव्रताम्।
कल्माषपाद उवाच—
मैवं वचः प्रवक्तव्यं त्वया हेमलते प्रिये ॥ १३०

शिवभक्तोऽतिदान्तश्च स राजा हेमशृङ्खलः।
देवीप्रीत्यर्थमेव त्वां पूजितुं प्रापयत्यलम् ॥ १३१

बालाङ्कुराम्बिकापादवल्लभो हेमशृङ्खलः।
प्रतिमार्गवारं स युवतीं पार्वतीधिया ॥ १३२

शुभैर्वस्त्रैरर्चयति रत्नाकल्पैरनूपमैः।
निश्शङ्का भव कल्याणि गच्छ तन्मन्दिरं शुभम् ॥ १३३

तूष्णीं किं विविधैर्वाक्यैर्मां क्लेशयसि दैन्यदैः।
यद्यकामयतार्यां त्वामचिरादेव नश्यति।
असौ राजा महादेवकृपया वामलोचने ॥ १३४

कण्व उवाच—

इत्येवमुक्त्वा नृपतिर्महात्मा
कल्माषपादो महिलां स्वकीयाम्।
विसर्जयामास सरेति भार्यां
जगाम शम्भुं मनसा शरण्यम् ॥ १३५

इति सप्तमोऽध्यायः

*இதனைக் கேட்ட ஹேமலதை கணவனிடம் கூறினாள். 'சிவபக்தரான அரசே! ஐயனே! என் விண்ணப்பத்தைக் கேட்பீர். இந்த தருணத்தில் சிறிது வஞ்சகம் உள்ளது. ஊரில் ஹேமசிருங்கலன் காமவேட்கை மிக்கவன் எனக் கேள்விப்படுகிறேன். உன் மனைவியான நானும் ஊரில்*

பேரழகி எனக் கூறப்படுபவள். ஸுமங்கலி பூஜை என்ற பெயரில் என்னை அந்த அரசன் பறிக்க விரும்புகிறார் போலும். உம் ஆணைப்படி நான் சென்று வருகிறேன். உம்மைத் தவிர வேறொருவரை இடது காலால் கூடத் தொடமாட்டேன். இவ்விரு புதல்வர்களையும் பாதுகாப்பீர். சனிதேவனின் செயல் என்பதை உணர்வீர் என்றாள்.

சோழ அரசன் இதனைக் கேட்டபின் தன் மீது பக்தி கொண்ட கற்பரசியிடம் கூறினான். "நீ இவ்வாறு கூறக் கூடாது. ஹேமசிருங்கலன் சிவபக்தன். மிக அடக்கமுள்ளவன். தேவியை மகிழ்விக்கவே உன்னைப் பூஜிக்கிறான். பாலாங்குரா தேவியிடம் பக்திகொண்ட அவன் ஒவ்வொரு வெள்ளிக் கிழமையிலும் பார்வதி என்ற எண்ணத்துடன் ஒரு பெண்ணை ஆடை ஆபரணங்களளித்து பூஜிக்கிறான். ஐயம் வேண்டாம். அவன் மாளிகைக்குச் செல். பலவிதமாகப் பேசி என்னைக் குழப்பாதே. உன்னை அவன் காமத்தால் பெறவிரும்பினால் விரைவில் அழிந்துவிடுவான். மஹாதேவனின் அருள் அப்படி" என்று ஆறுதலளித்து சிவனை உள்ளத்தில் கொண்டு சென்று வா என மனைவியை அனுப்பினான். *(124-135)*

—*—

## अथ अष्टमोऽध्यायः

### कल्माषपाद हेमशृङ्खलचरितम्

कण्व उवाच–

एवमुक्ता नृपतिना तत्प्रिया सा पतिव्रता ।
तत्पादयोर्नमस्कृत्य ससार नृपमन्दिरम् ।। १

तामागतां गृहं मारमहिलोपमविग्रहाम् ।
तिलोत्तमामिवानल्पलावण्यैकनिकेतनाम् ।। २

पातिव्रत्यैकनिरतां वसिष्ठगृहिणीमिव ।

घम्मिल्लमध्यविलसन्मल्लिकादामसुन्दराम्॥ ३

द्विरेफमालासुषमाधिक्कारालकभासुराम्।
अर्धपीयूषभानुश्रीन्यक्कारालिकमञ्जुलाम्॥ ४

कामकार्मुकसौन्दर्यहसद्भ्रूयुगलान्विताम्।
कर्णपूरोत्पलस्पर्धिकिञ्चिच्चञ्चललोचनाम्॥ ५

तिलप्रसूनरम्यश्रीचोरनासामनोहराम्।
मुक्तामाणिक्यवैडूर्यदामशोभिशिरोधराम्॥ ६

मन्दस्मेरविनिष्यन्दद्दन्तकान्त्यासनाधराम्।
ताटङ्करत्नमणिभामञ्जरीपिञ्जराननाम्॥ ७

शङ्खवृत्तमृदुस्निग्धत्रिरेखावृतकन्धराम्।
माणिक्याङ्गदकेयूरवलयोर्मिकबाहुकाम्॥ ८

कामशृङ्गारराज्यश्रीहेमकुम्भायितस्तनाम्।
प्रभाप्रवाहिनीनाथभङ्गीकृतवलित्रयाम्॥ ९

अभिख्यावाहिनीपूरस्वावर्त्तायितनाभिकाम्।
अतिसूक्ष्मलसन्मध्यमणिकाञ्चीमनोहराम्॥ १०

अनङ्गरथचक्रश्रीहरवृत्तनितम्बिनीम्।
रम्भाकाण्डप्रभाचोरचारूरुद्वयभास्वराम्॥ ११

कन्दर्पकाहलीसाम्यजङ्घायुगलराजिताम्।
गूढगुल्फद्वयाश्लिष्टमणिहंसकमञ्जलाम्॥ १२

स्फुटत्कोकनदच्छायापहरत्पदपङ्कजाम्।
मणिमञ्जीरनिनदैस्तिरस्कृतसुसारसाम्॥ १३

कल्माषपादचोलेशयोषां दोषाकरप्रभाम्।

दृष्ट्वा हेमलतां राजा स्वगृहान्तर्निविश्य च ।
मन्मथाविष्टहृदयो बभाषे हेमशृङ्खलः ॥ १४

## அத்தியாயம் - 8

### கல்மாஷபாதன் - ஹேமசிருங்கலன் வரலாறு

*கண்வர் காத்யாயனரிடம் கூறுகிறார் - சோழஅரசன் கூறியபடி. ஹேமலதை அவனது கால்களில் வணங்கி அரசமாளிகைக்குச் சென்றாள். தன் மாளிகையினுள் நுழைகிற அவளை அரசன் கண்டான். ரதி திலோத்தமை போன்று அழகின் ஒரே வைப்பிடம். அருந்ததியைப் போல் கற்பில் கவனம் கொண்டவள். கேசமுடியில் மல்லிகை மாலை சூடியுள்ளவள். கருவண்டு வரிசையைத் தோல்வியுறச் செய்கிற கூந்தல். அர்த்தசந்திரனின் ஒளியை மங்கச்செய்கிற நெற்றி, காமனின் வில்லழகை நகைக்கிற இரு புருவங்கள், காதணியைத் தொடுகிற கடைக்கண், எள்ளின் பூ போன்ற நாசியழகு, முத்து மாணிக்கம் மற்றும் வைடூர்யத்தாலான கழுத்தணி, புன் சிரிப்பால் வெளியான பற்களின் ஒளி, தாடங்கத்தின் ஒளிச்சிதறலால் அழகிய முகம், சங்கு போன்று உருண்ட மென்மைமிக்க மழமழப்புள்ள மூன்று கோடுகள் பதிந்த கழுத்து, மாணிக்யத் தோள்வளை - கேயூரம் - வளை மோதிரங்களால் அழகிய கைகள். காமனின் சிங்கார அரசின் சிங்காரக் குடம் போன்ற மார்பகம், ஒளியலை வீசுகிற வயிற்றின் மும்மடிப்புகள், அழகலைகளின் சுழிப்பு போன்ற தொப்புள். மிக நுண்ணிய ஒலிக்கின்ற ரத்னச்சதங்கைகள் கொண்ட ஒட்டியாணமணிந்த இடுப்பு, மன்மதனின் தேர்ச்சக்கிரம் போன்ற உருண்டுதிரண்ட புட்டம், வாழைதண்டின் ஒளியைத் திருடுகிற அழகிய இரு துடைகள், மன்மதனின் அம்புறுத் தூணிபோன்ற இருகணைக் கால்கள், கணுக்கால் முண்டை மறைக்கின்ற ரத்தினக் காலணிகள், மலர்ந்த தாமரை போன்ற அழகிய திருவடிகள், அன்னப் பேடுகளின் ஒலியை மங்கச் செய்கிற சதங்கை ஒலி என ஒவ்வோர் அங்கமும் அழகுக் களஞ்சியமாக முன்னே*

*தோன்றுகிற கல்மாஷபாதனின் மனைவியான ஹேமலதையைக் கண்ட ஹேமசிருங்கலன் காமவசப் பட்டவனாக அவளுடன் பேசினான். (1-14)*

हेमशृङ्खल उवाच—

अयि हेमलते सुभ्रूः प्रयत्नादागतासि हि।
राज्यभ्रष्टं नृपं त्यक्त्वा कल्माषाङ्घ्रिं ममान्तिकम्॥ १५

मम भार्या भवेदानीं कामभोगप्रदायिनी।
इदं राज्यमिमं देहं तवाधीनं कुरुष्व ह॥ १६

तव दासोऽस्मि भृत्योऽस्मि शिष्योऽस्मि हरिणेक्षणे।
दासभूतमिमं कान्ते प्रतिगृह्णीष्व मां प्रिये॥ १७

कण्व उवाच—

इत्युक्ता सा हेमलता तेन भूपेन तं नृपम्।
कामातुरश्च मनसा चिन्तयन्ती शनैश्चरम्॥ १८

शनैश्चर विभो सूर्यतनय ग्रहनायक।
तव पूजाविधिरतां किं मां पीडयसीदृशीम्॥ १९

पतिप्रियां पतौ भक्तां सुप्रजां तापसीमिति।
प्रोवाच नीतिसंयुक्तां वाणीं वाणीसमा गिरा॥ २०

पातिव्रत्यं पालयन्ती राजानं हेमशृङ्खलम्।

*''அழகிய புருவமுள்ள ஹேமலதையே! அரசை இழந்த கல்மாஷபாதனை விட்டு என்னருகே முயன்று வந்துள்ளாய். என் மனைவியாவாய். எனக்கு இன்பமளிப்பாய். இவ்வுடலையும் இந்த அரசையும் உனதாக்கிக் கொள்வாய். நான் உன் அடிமை, பணியாள், கட்டுக்கடங்கியவன், இவனை ஏற்பாய் என வேண்டினான்.*

*அரசன் இவ்வாறு கூறியதைக் கேட்ட ஹேமலதை அரசன் காமவசப்பட்டுள்ளதை உணர்ந்து சனி தேவனைத் த்யானித்தாள். சனைச்சர! ஸூர்யனின் புதல்வரே! கிரகங்களின் தலைவரே! உம்மை வழிபடுகிற என்னை ஏன் இவ்வாறு வாட்டுகிறீர்! பதியிடம் பக்தியும் அன்பும் கொண்ட நான் தவம் புரிபவள். இரு புதல்வர்களின் தாய். காப்பீராக என வேண்டினாள். தன் கற்பைக் காப்பவளாக நேர்மையுடன் அரசனிடம் வேண்டினாள். (14-20)*

हेमलतोवाच—

हेमशृङ्खल राजेन्द्र त्वं मानधनपुङ्गवः ॥ २१

कलत्रवान्क्षत्रियश्च मैवं मां वक्तुमर्हसि ।
अस्वर्ग्यमयशस्यञ्च निरायुष्यञ्च भूमिप ॥ २२

ऐश्वर्यनाशनं पापं परदाराभिमर्शनम् ।
परदाराभिगामी यस्स तु सर्वत्र निन्दितः ॥ २३

निस्तेजाश्च दरिद्रश्च स भवेन्नरकालयः ।
दण्डको रावणोऽप्यत्र दृष्टान्तावनीपती ॥ २४

परदाराभिमर्शेन हतौ तौ लोकविश्रुतौ
विद्वान्भक्तश्च शूरश्च शङ्करे लोकशङ्करे ॥ २५

एवं त्वं मा कृथा राजन्परदाराभिमर्शनम् ।

*பேரரசே! நீர் மானமெனும் செல்வம்மிக்கவர். மனைவி மக்களுள்ளவர். க்ஷத்திரியர். என்னிடம் இவ்வாறு பேசுவது தகாது. பிறர் மனைவியை நாடுவது, மறுமையில் கேடுநேரும். புகழ் மங்கும். ஆயுளைக் குறைக்கும். ஆளுமையை அழிக்கும். பிறர் மனைவியைத் தீண்டுபவனை மக்கள் ஏசுவர். ஒளி மங்கி, செல்வமிழந்து நரகத்தில் விழ நேரும். தண்டகனும், ராவணனும் இதற்கு உதாரணம். பிறர் மனைவியைத் தீண்டியதால் அழிந்தவர். நீர் அறிவாளி, சூரன், சிவபக்தர், நீர் பிறர் மனைவியைத் தீண்டாதீர் என்றாள். (22-25)*

कण्व उवाच–
इत्युक्तोऽपि तया हेमशृङ्खलो मारमोहितः ।। २६

सहसोत्थाय पस्पर्श भोक्तुं हेमलतां सतीम् ।
तस्मिन्स्पृशति भूपाले सा सती लोकविश्रुता ।। २७

ज्वालामालामयी ब्रह्मन्बभूव नृपवल्लभा ।
तादृग्भूतां हेमलतां राजा कनकशृङ्खलः ।। २८

ज्वलदग्निनिभां नित्यं शीघ्रं तत्याज भीतितः ।
ततः क्रोधसमाविष्टः खड्गमुद्यम्य सुप्रभाम् ।। २९

राजेन्द्रो विनिहन्तुं तामाजगाम त्वरान्वितः ।
एतस्मिन्समये ब्रह्मन्जपन्ती शैवमुत्तमम् ।। ३०

पञ्चाक्षरं महामन्त्रं सर्वभूतवशीकरम् ।
निहन्तुमुद्यतं कामबाणपीडितविग्रहम् ।। ३१

हेमशृङ्खलराजानं चाटुवाग्भिर्निरुन्धती ।
तच्छ्रोत्रमधुरं ब्रह्मन्पातिव्रत्यानुसम्मतम् ।। ३२

प्रोवाच वचनं चारु नीतियुक्तं दयान्वितम् ।

*இவ்வாறு கூறப்பட்டபின்னரும் காமத்தால், தன்னிலை இழந்த ஹேமசிருங்கலன் சட்டென எழுந்து அவளை அணைக்க முயன்றான். உடன் அந்த கற்புக்கரசியான ஹேமலதை தீப்பிழம்பாக மாறினாள். அதனை உணர்ந்த ஹேம சிருங்கலன் பயந்து அவளைக் கைவிட்டான். கோபத்துடன் கையில் கத்தியை உருவி எடுத்து அவளைக் கொல்லமுயன்றான். அவள் உடன் சிவபஞ்சாக்ஷரம் ஜபிக்கத் தொடங்கி, காமவசப்பட்ட அரசனை அழகிய சொற்களால் தடுத்து நிறுத்தினாள். நீதியும் நேர்மையும் பரிவும் துலங்கப் பேசினாள். (27-32)*

हेमलतोवाच–
राजन्नहं न हन्तव्या स्त्रीवधस्ते विगर्हितः ॥ ३३

यतः शूरश्च धीरश्च क्षत्रियस्त्वं विशेषतः ।
यदि त्वमिच्छसि मम शरीरं हेमशृङ्खल ॥ ३४

दास्ये सार्धद्वयाब्दस्यानन्तरं यदि जीविता ।
श्रीमच्च्युतपुरेशस्य कृत्तिवासेश्वरस्य मे ॥ ३५

प्रीत्यर्थमधुनाऽऽरब्धं व्रतमस्त्यर्थसिद्धये ।
अकामां रोगिणीं खिन्नामन्तर्वर्त्नीं रजस्वलाम् ॥ ३६

व्रतस्थां कामिनीं कामी को गच्छन्सुखमाप्नुयात् ।
अतस्त्वं राजशार्दूल शान्तरागो भविष्यसि ॥ ३७

सार्धद्वयसमादूर्ध्वं भविष्यति मनोरथः ।
कण्व उवाच–
एवमुक्तस्तया हेमशृङ्खलो मुनिपुङ्गव ॥ ३८

अब्रवीत्पार्श्वतः स्वस्थां पद्माक्षीं नाम भामिनीम् ।
अन्तःपुरचरां शुद्धां नीतियुक्तां महामतिः ॥ ३९

प्रणम्रां प्राञ्जलिं राजा किञ्चित्कोपसमन्वितः ।
हेमशृङ्खल उवाच–
एहि पद्माक्षि चोलोऽहं कुर्वे वै वशगामिमाम् ॥ ४०

सार्धसंवत्सरद्वन्द्वं प्रतीक्ष्ये तावदङ्गने ।
कण्व उवाच–
इत्युक्त्वा राजमहिषीं स्वभृत्याश्च नराधिपः ॥ ४१

स्वस्थचित्तोऽभवद्राज्यं शशास च्युतपट्टणे ।

*அரசரே! என்னைக் கொல்லாதீர். பெண் கொலை பெரும் பாவம். நீர் சூரர், தீரர், க்ஷத்திரியர், உமக்கு என் உடல் தேவையானால் இரண்டரை ஆண்டுகள் பொறுத்திருப்பீர். கிருத்திவாஸப் பெருமானைக் குறித்துக் கடும் விரதத்தைக்*

*தொடங்கியுள்ளேன். தன்னை விரும்பாதவளும், நோயாளியும், துயருற்றவளும், கர்ப்பிணியும், மாதவிடாய் கொண்டவளும், விரதத்தில் உள்ளவளும், வேறொருவனை விரும்புபவளுமான பெண் இன்பம் தரமாட்டாள். இரண்டரை ஆண்டுகளுக்குப் பின் உம் கனவு நிறைவுறும் என்றாள். இதனைக் கேட்ட அரசன் தன் அருகிலுள பத்மாக்ஷி என்ற அழகியை அழைத்தான். அந்தப்புரத்து மங்கை அவள். நேர்மையுள்ளவள். வணங்கிக் கைகூப்பி நிற்கும் அவளிடம் கோபமுள்ள அரசன் இரண்டரையாண்டுகள் வரை பொறுத்திருந்து இவளை வசப்படுத்துவேன் எனக் கூறிவிட்டு அமைதியுற்றுத் தன் ராணியுடன் வழுவூரை ஆண்டான். (34-12)*

ततः कल्माषचरणस्स्वभार्यागमनं नृपः ॥ ४२

आसार्यं वीक्षमाणश्चावतस्थेऽप्रीतमानसः ।
ततश्शोकेन महता निश्वसंश्च पुनः पुनः ॥ ४३

चिन्तया दह्यमानोऽसौ निरगात्स्वगृहान्तरात् ।
गृहीत्वा सुतयोर्हस्तमर्धरात्रौ महीपतिः ॥ ४४

तस्माच्च्युतपुरं प्रायादुदीचीं दिशमाधिना ।
ततो मरुद्वृधां दृष्ट्वा कण्ठदघ्नोदकां शिवाम् ॥ ४५

मुहूर्तं चिन्तयामास स्वपुत्रतरणे नृपः ।
तच्चिन्तयित्वा राजेन्द्रो ज्येष्ठपुत्रमनिन्दितम् ॥ ४६

स्थापयामास सरितो गृह्णानस्स उदक्तटे ।
ततोऽसौ च सुतं राजा स्थितं नेतुमुदक्तटम् ॥ ४७

आययौ च सुतं राजा स्थितं नेतुमुदक्तटम् ।

*கல்மாஷபாதன் தன்மனைவின் வருகையை மாலைவரை எதிர்பார்த்து வராததால் கவலையுற்றுப் பெருமூச்சுடன் சோகம் சுட்டெரிக்கப் புதல்வர்களைக் கைகளால் பற்றியவாறு வீட்டை விட்டு வெளியேறினன். நள்ளிரவில் வடக்கு நோக்கிச்*

*சென்று கழுத்து வரை ஆழமாக ஓடுகிற காவிரியைக் கண்டு கலங்கிப் புதல்வர்கள் நதியைக் கடக்க இயலாததைச் சிந்தித்து மூத்தவனை இக்கரையில் அமரச்செய்து சிறியவனைத் தோளில் தூக்கி ஆற்றைக் கடந்து அக்கரையில் அமரச்செய்தான். மறுபடி இக்கரைக்கு வந்து மூத்தவனுடன் ஆற்றைக் கடக்க முயன்றான். (43-48)*

तदानीं पुरपालैश्च मृग्यमाणाश्च तस्कराः ॥ ४८

राजाश्ववरमत्युच्चं मुष्णन्तस्संभ्रमान्विताः ।
कल्माषपादचोलस्य पश्चाद्भागे तुरङ्गमम् ॥ ४९

राजकीयं विबध्वा ते दुद्रुवुर्भीतिविह्वलाः ।
ततो नगरपालैश्च मार्गमाणैश्च तस्करान् ॥ ५०

गृहीतो राजशार्दूलो वदद्भिश्चोर इत्यपि ।
बद्धश्च नगरीपालैश्चचोरेति ताडितः ॥ ५१

राजद्वारेऽप्यसौ नीतः पश्चाद्बद्धमहाभुजः ।
राज्ञे निवेदयामासुः पुरपालास्ससम्भ्रमाः ॥ ५२

पुरपाला ऊचुः—

बध्वाऽऽनीतोऽश्वहृद्राजंस्तव हाटकशृङ्खल ।
कथमाज्ञापनीयोऽसावस्माभिरनुशाधि नः ॥ ५३

प्राणान्तं वाङ्गहीनं वा बन्धनं क्रियतामिति । ५४

तैरुक्तस्स्वपुरीपालै रात्रौ हाटकशृङ्खलः ।
अविचार्य मदाविष्टो प्रोवाचैवं तु तान्प्रति ॥ ५५

हेमशृङ्गल उवाच—

पुरपालास्तथाभूतं मुष्णन्तं तुरगोत्तमम् ।
यूयं वै पृच्छताव्यग्राः कस्त्वं कस्मादिहागतः ॥ ५६

कस्यां जातौ समुत्पन्नः केनाऽपि प्रेषितः किमु।
सत्यं वद त्यजामस्त्वां सप्राणं शासनादिति ॥ ൫൭

कण्व उवाच–

इत्युक्त्वा नगरीपालास्तथा पृष्ट्वा नृपोत्तमम्।
ऊचुस्ते स्वमहीपालं कल्माषचरणेरितम् ॥ ൫൮

*அரசனின் குதிரை ஒன்றைத் திருடிய கள்வர்கள் தன்னைப் பிடிக்க வந்த காவலர்களிடம் பயந்து குதிரையைக் கல்மாஷபாதனின் பின்புறம் கட்டிவிட்டு மறைந்தனர். காவலர் குதிரையுடன் நின்ற கல்மாஷபாதரைக் கள்வன் என நினைத்துக் கட்டிப் போட்டு குதிரையைத் திருடிய கள்வன் என உரக்கக் கூறி அடித்துத் துன்புறுத்திக் கைகளைப் பின்புறம் திருப்பிக் கட்டி அரண்மனை வாயிலில் நிறுத்தி அரசரிடம் தெரிவித்தனர்.*

*''குதிரையைத் திருடியவனைக் கொணர்ந்துள்ளோம். இவன் உயிரைப் பறிக்கவோ, அங்கஹீனப்படுத்தவோ சிறைப்படுத்தவோ உத்தரவுப்படி செயல்படுகிறோம் என்றனர். இதனைக் கேட்டதும் நடந்ததைத்தான் விசாரியாமலே, காவலரைக் கொண்டு விசாரிக்கச் செய்தான். யார் அவன்? எங்கிருந்து வந்துள்ளான்? என்ன சாதி? எவர் இவனை ஏவினர்? உண்மையைக் கூறினால் உயிருடன் விடுவோம் என மிரட்டச் சொன்னான். அவ்வாறு விசாரணைசெய்த நகரக் காவலர்கள் கல்மாஷபாதன் கூறியதை அரசரிடம் தெரிவித்தனர். (49-58)*

पुरपाला ऊचुः–

तत्सर्वं पृष्टमस्माभिस्स्वामिन्कनकशृङ्खल।
विज्ञापयामस्तेनोक्तमवधारय चेतसि ॥ ൫൯

क्षत्रियोऽहमपापो वै कृत्तिवासेश्वरप्रियः।
अकस्मादागतोऽस्मीह केनापि प्रेरितो न च ॥ ൬൦

इत्युक्तं तेन चोरेण सत्यं वाप्यनृतं नु वा ।
न जानीमो महाराज शासनीयः कथं त्वयम् ॥ ६१

कण्व उवाच—

इत्युक्तवत्सु पालेषु नगर्यां हेमशृङ्खलः ।
कामातुरोऽपि कुपितः पुरपान्पुनरब्रवीत् ॥ ६२

हेमशृङ्खल उवाच—

आखण्ड्यतां करो वामश्चरणो दक्षिणस्तथा ।
विसृज्यतां ततो राजा क्षत्रियांशदो ह्यसौ ॥ ६३

कण्व उवाच—

इत्युक्तवति भूपाले पुरपाला नृपाज्ञया ।
अखण्डयन्करं वामं दक्षिणं पदमस्य च ॥ ६४

तदानीं बहुदुःखार्तो हस्तपादावखण्डनात् ।
कृत्तिवासेश्वरं देवं तुष्टाव जगतीपतिः ॥ ६५

*"நான் க்ஷத்திரியன். ஒரு பாபமும் செய்யாதவன். கிருத்தி வாஸப் பெருமானின் பக்தன். தற்செயலாக இங்கு வந்தேன். எவரும் என்னை அனுப்பவில்லை." இவ்வாறு அந்தத் திருடன் கூறினான். அது உண்மையோ, பொய்யோ, அறியோம். எவ்வாறு தண்டிக்கலாம் என்று கேட்டனர். காமவசப்பட்டிருந்த அரசன் தற்போது கோபமடைந்து அவனது இடது கையையும், வலதுகாலையும் துண்டித்து அவனைவிட்டு விடுங்கள் என்றான். அரசரின் ஆணைப்படி நகரக்காவலர் கல்மாஷபாதரின் இடதுகையையும் வலதுகாலையும் துண்டித்துவிட்டனர். கைகால் இழந்தமையால் தாங்கவொண்ணாத வேதனையுற்ற கல்மாஷபாதன் கிருத்திவாஸரைத் துதித்தான். (59-65)*

कल्माषपाद उवाच—

पाहि शशिखण्डविलसन्मणिकिरीट
दुर्गीतितमौघदिनबान्धवसहस्र।
साहसकरप्रमथबृन्दविनुताङ्घ्रे
पाहि गजचर्मवसनामरगुरो माम्।। ६६

यक्षसुरसिद्धवरकिन्नरभुजङ्गैः
पक्ष्यसुरचारणसुकिंपुरुषमुख्यैः ।।
अक्षचरणादिमुनिभिः कृतनुते भो
पाहि गजचर्मवसनामरगुरो माम्।। ६७

ऋक्षगणनाथधरणीकमलखाशु-
शुक्षणिसुयाजकनभोगरविमूर्ते।
पक्षिरथपद्मजभवात्मक महात्मन्
रक्ष गजकृत्तिवसनामरगुरो माम्।। ६८

दक्षवरयज्ञशमन प्रपटुवीरा-
ध्यक्ष यमशासन पुरान्तकगिरीश।
रक्षितजगत्त्रय विधीशहरिमुख्यैः
रक्ष गजकृत्तिवसनामरगुरो माम्।। ६९

अक्षहुतभुक्प्रचुरनिर्गलितकीला-
शिक्षितरतीशकमनीयकशरीर।
दक्षतनयाश्रितमनोहरवपुष्मन्
रक्ष गजचर्मवसनामरगुरो माम्।। ७०

पाहि मदनान्तक विरिञ्चनुत शम्भो
पाहि करुणामृतनिधे प्रमथबन्धो।

पाहि तरुणारुणरुचे स्वजनबन्धो
पाहि गजचर्मवसनामरगुरो माम् ॥ ७१

राहुशिखिसौरिसितसौम्यधरणीजैः
शीतकरजीवदिननाथग्रहमुख्यैः ।
प्राहरितमर्कतनुजेन नितरां भो
पाहि गजचर्मवसनामरगुरो माम् ॥ ७२

अर्कतनुजेन सुनिपीडितमनेकै-
र्वैरकृदनेकरिपुभीकपटभावैः ।
सत्कृतपदाम्बुज दधीचिमुनिवर्यैः
पाहि गजचर्मवसनामरगुरो माम् ॥ ७३

त्राहि त्राहि जगन्नाथ त्राहि त्राहि जगद्गुरो ।
त्राहि त्राहि कृपासिन्धो त्राहि त्राहि महेश्वर ॥ ७४

रक्ष च्युतपुरीनाथ रक्ष चन्द्रशिखामणे ।
रक्ष बालाङ्कुराम्बेश रक्ष शङ्कर शाश्वत ॥ ७५

बालाङ्कुराम्बिकानाथ कृत्तिवासेश्वर प्रभो ।
मामुद्धर महादुःखाद्गजासुरविमर्दन ॥ ७६

*கல்மாஷபாதனின் துதி - சந்திரனின் துண்டு துலங்குகிற ரத்ன கிரீடமணிந்தவரே! கெட்ட நிலை எனும் இருளைப் போக்குகிற கதிரவனே! சாகசச் செயல்புரிகிற பிரமதகணங்களால் வணங்கப்பெற்ற திருவடிகள் கொண்டவரே! யானைத் தோல் போர்த்திய தேவர்தலைவரே என்னைக் காப்பீர் (66)*

*யக்ஷர், தேவர், சித்தர், கின்னரர், நாகர், பறவைகள், அஸுரர், சாரணர், கிம்புருஷர் முதலிய தேவகணங்களாலும் அக்ஷபாதர் முதலிய முனிவராலும் வணங்கப்பெற்றவரே! யானைத்தோல் போர்த்திய தேவரே! என்னைக் காப்பீர். (67)*

*சந்திரன், சூரியன், பூமி, அப்பு, அக்கினி, வாயு, ஆகாசம், வேள்வி புரிபவன் என எட்டு மூர்த்திகளுள்ளவரே! மும்மூர்த்திகளின் வடிவில் தோன்றுபவரே! பெருமானே! யானைத்தோலாடையுள்ள தேவதேவனே! காப்பீர்! (68)*

*தக்ஷனின் சிறந்த வேள்வியைக் குலைத்தவரே! சிறந்தவீரர்களின் தலைவரே! யமனை அடக்கியவரே! திரிபுரமழித்தவரே! மலையரசரே! மும்மூர்த்திகளைக் கொண்டு மூவுலகைக் காப்பவரே! யானைத்தோலாடை புனைந்த தேவகுருவே! காப்பீர். (69)*

*மன்மதனை அழித்தவரே! பிரம்மனால் துதிக்கப் பெற்றவரே! மங்களத்தின் தோற்றுவாயே! கருணையெனும் அமுதத்தின் கடலே! பிரமதகணத்தின் உறவினரே! இளம் சூரியனின் ஒளிகொண்டவரே! தன்னை அண்டிய மக்களுடன் உறவாடுபவரே! யானைத் தோல் போர்த்திய தேவகுருவே! காப்பீர். (71)*

*ராகு, கேது, சனி, சுக்ரன், புதன், குஜன், சந்திரன், குரு, சூரியன் என்ற கிரஹத்தலைவர்களால் தாக்கப் பெற்றவனும் சனியால் பெரிதும் தாக்கப்பட்டவனுமான என்னை யானைத்தோல் போர்த்திய தேவகுருவே! காப்பீர். (72)*

*சனியாலும் பல விரோதிகள் - வஞ்சகர்களாலும் தாக்கப்பெற்ற என்னை. ததீசி முதலிய முனிவர்களால் வழிபடப்பட்ட கிருத்திவாஸப் பெருமானே! காப்பீர். (73)*

*உலகின் நாதரே! உலகின் வழிகாட்டியே! கருணைக் கடலே, மகேசரே காப்பீர். வழுவூர் நாதரே! சந்திரனை முடியில் கொண்டவரே! பாலாங்குராம்பிகை நாதரே! நிலைத்தவரே! கிருத்திவாஸரே! கஜாஸுரனை மாய்த்தவரே, என்னைப் பெருந்துயரிலிருந்து காப்பீர். (74-76)*

कण्व उवाच—

इति स्तुत्वा महीपालः कृत्तिवासेशसन्निधौ ।
मूर्च्छया निपपाताधो बाहुपादावखण्डनात् ।। ௭௭

स्मरन्देवं महादेवं साम्बं चन्द्रकलाधरम्।
बालाङ्कुराबिम्बकानाथं श्रीमच्च्युतपुरेश्वरम्॥ ७८

ततः करुणयाविष्टः श्रीमच्च्युतपुरेश्वरः।
मूर्च्छागतं महीपालमब्रवीत्करुणानिधिः॥ ७९

पार्श्वस्थं सेवकं सौरिं भर्त्सयन्नम्बिकापतिः।
शिव उवाच–
मद्भक्तमीदृशं कर्तुं नार्हसि त्वं यमानुज॥ ८०

न भेतव्यं न भेतव्यं कल्माषचरणार्भक।
उत्पद्येतेऽङ्घ्रिहस्तौ ते कृपया मम शीघ्रतः॥ ८१

प्राणपीडा न भवतु तवाद्यानुग्रहान्मम।
स्वस्थो भव प्राप्स्यसे त्वं सिंहासनमनन्तरम्॥ ८२

*இவ்வாறு வேண்டி நின்ற கல்மாஷபாதன் காலும் கையும் துண்டாகியதாலுண்டான வலி தாங்காமல் மயங்கித் தரையில் வீழ்ந்தான். உள்ளத்தினுள் அம்பிகையுடன் சந்திரனைச் சூடிய பாலாங்குராம்பிகை நாதனும் வழுவூரீசனுமான மஹேசனை நினைத்திருந்தான். மயங்கி விழுந்த அரசனைக் கண்டு பரிவுமிக்க வழுவூராண்டவன் தன் அருகில் பணியாளனாக நின்ற சனியை ''என் பக்தனை இவ்வாறு செய்தது தவறு'' எனக் கண்டித்தவராக அரசனை எழுப்பினார்.*

*''குழந்தாய் கல்மாஷபாதா? பயப்படாதே! துண்டிக்கப் பெற்ற காலும் கையும் என் கருணையால் விரைவில் தோன்றும். என் அருளால் உயிர்ப்பயம் இல்லை. தன் நிலை பெறுவாய். விரைவில் உன் சிங்காதனத்தை மீண்டும் பெறுவாய்'' என்றருளினார். (77-82)*

कण्व उवाच–
एवमुक्तो महेशेन कल्माषचरणो नृपः।
स्वस्थोऽभवच्च विप्रेन्द्र मुक्तपीडः शिवं स्मरन्॥ ८३

ततः कुमारौ शोणाक्षसुशोणाक्षौ महीपतेः ।
कावेर्युभयतीरे तौ दुरन्तौ संस्थितौ शिशू ।। ८४

अद्राक्षीद्ब्राह्मणी काचित्सुगन्धवनवासिनी ।
नाम्ना सोमवती सर्वलक्षणाढ्या पतिव्रता ।। ८५

पुत्रहीना कृपायुक्ता धनाढ्या तु सुवासिनी ।
तयोर्विदितवृत्तान्ता निन्ये तौ स्वगृहं सती ।। ८६

ततस्सा स्वपतिं धीरं शिवभक्तं दयान्वितम् ।
नाम्ना सुयज्ञशर्माणं नत्वा वचनमब्रवीत् ।। ८७

सोमवत्युवाच–
इमौ कुमारौ विप्रेन्द्र कल्माषचरणात्मजौ ।
एतयोर्जनको दैवयोगेन प्रोषितो वने ।। ८८

नाम्ना सुशोणशोणाक्षौ सर्वलक्षणलक्षितौ ।
इमौ कुमारौ हे कान्त ध्यायेतां पुत्रभावतः ।। ८९

विद्यन्ते त्वयि या विद्याः वेदाद्या ब्राह्मणोत्तम ।
एतयोरुपदिश्यन्तां ता विद्या राजपुत्रयोः ।। ९०

*உடன் கல்மாஷபாதன் தெளிந்தெழுந்தான். அவனது புதல்வர் இருவரும் இருகரைகளில் காப்பாரின்றி நின்றனர். ஓர் அந்தணப்பெண்மணி ஸோமவதீ என்ற பதிவிரதை, மக்கள் பேறற்றவள், கருணைமிக்கவள், செல்வம் நிறைந்தவள், இவர்களின் நிலையுணர்ந்து தன் வீட்டிற்கு அழைத்து வந்தாள். தன் கணவர் ஸுயஜ்ஞசர்மா என்ற சிவபக்தரிடம் ஒப்படைத்து வணங்கி வேண்டினாள். ''இவர்களிருவரும் கல்மாஷபாதன் என்ற சோழ அரசரின் புதல்வர்கள். ஸுசோணன், சோணாக்ஷன் என்று பெயர். நீர் இவர்களைப் புத்திரர்கள் என்ற எண்ணத்துடன் ஏற்பீர். உம்மிடமுள்ள வித்யைகளை - வேதம் முதலியவற்றை இவர்களுக்குப் புகட்டுவீர்'' என்றாள். (83-90)*

कण्व उवाच—

इत्युक्तः स तया साध्व्या विलोक्य ज्ञानचक्षुषा।
सुयज्ञशर्मा विप्रेन्द्र चाङ्गीचक्रे सुताविमौ ॥ ९१

तयोरेकादशाब्दे च नवाब्दे च द्विजोत्तमः।
वेदानां मातरं देवीं गायत्रीमुपदिश्य च ॥ ९२

द्विजेन्द्रो रौरवीं मेध्यां धारयित्वा विचक्षणः।
वेदान्साङ्गान्शास्त्रषट्कं धनुर्वेदादिकाः कलाः ॥ ९३

उपादिशन्महात्मासौ तयो राजकुमारयोः।
सकृदुच्चारमात्रेण विद्यानां राजनन्दनौ ॥ ९४

गृहीतवन्तौ विप्रेन्द्राच्चतुष्षष्टिकलाश्च तौ।
एवं सुगन्धकान्तारेऽप्यूषतुर्नृपनन्दनौ ॥ ९५

द्विजं सुयज्ञशर्माणं पूजयन्तौ च तां सतीम्।

ஸுயஜ்ஞரும் தன் ஜ்ஞானக்கண்ணால் நிகழ்ந்ததனைத்தையும் கண்டார். இவர்களைப் புதல்வர்களாக ஏற்றார். மூத்தவன் பதினொரு வயதினன். இளையவன் ஒன்பது வயதினன். இருவருக்கும் வேதமாதாவான காயத்ரியை உபதேசித்து மான்தோல் மேலாடை உடுத்தச் செய்து அங்கங்களுடன் வேதத்தை ஓதச் செய்தார். ஒருதடவை கேட்டதாலேயே உபதேசித்ததை உள்ளத்தில் பதித்துக் கொண்ட சிறுவர்கள் சில நாட்களிலேயே 64 கலைகளிலும் தேர்ந்தவராயினர். ஸுயஜ்ஞரையும் ஸோமவதியையும் பெற்றோராகவே மதித்து வழிபட்டனர். *(91-95)*

ततश्च्युतपुरे प्रातर्देवस्य पुरतः स्थितम् ॥ ९६

विच्छिन्नबाहुचरणं कल्माषचरणं नृपम्।
दुःखान्म्लानमुखाम्भोजं रक्तक्लिन्नकलेबरम् ॥ ९७

विलोक्य भृत्यास्सम्भ्रान्ता हाहाकारसमन्विताः ।
राज्ञि विज्ञापयामासुरेनं कनकशृङ्खले ॥ ९८

हेमशृङ्खल उवाच–
अविचार्य कृतं रात्रौ मया पापमयेन वै ।
किञ्चिन्न जाने कल्माषपाद इत्यपि शङ्कर ॥ ९९

सहसा कर्म कुर्वीत पुण्यमिच्छन्न भूमिपः ।
यदि कुर्वीत दुःखी स्यादविचार्य हिताहिते ॥ १००

कण्व उवाच–
इति दुर्मानसो राजा कल्माषचरणान्तिकम् ।
आययौ प्राप्तहृत्तापपरिम्लानमुखाम्बुजः ॥ १०१

राजानं प्राणपीडार्तं क्षतजार्द्रितविग्रहम् ।
विलोक्य चाब्रवीद्राजा स जाम्बूनदशृङ्खलः ॥ १०२

हेमशृङ्खल उवाच–
न भेतव्यं महाराज त्वया शास्त्रविशालिना ।
पूर्वजन्मकृतं कर्म मन्ये नो चेद्भवेदिति ॥ १०३

जन्मान्तरकृतं कर्म भोक्तव्यञ्च शुभाशुभम् ।
अन्यदा यच्छति फलं पात्रन्यस्तमिवौदनम् ॥ १०४

कण्व उवाच–
इत्युक्तवति भूपाले ब्रह्मन् कनकशृङ्खले ।
कल्माषपाद चोलोऽसावब्रवीद्धेमशृङ्खलम् ॥ १०५

कल्माषपाद उवाच–
हेमशृङ्खल भूपाल कृत्तिवासेश्वरे शिवे ।
बालाङ्कुराम्बिकायां त्वमपि भक्तो महामतिः ॥ १०६

शिवपूजारतो नित्यं भूतिरुद्राक्षभूषणः ।
शक्तिमान् राजकृत्येषु नैवं कर्तुमिहार्हसि ॥ १०७

यो राजा कृतकृत्योऽपि धर्मवानपि पार्थिव ।
कर्माविचार्य तनुते सोऽचिरान्नश्यति ध्रुवम् ॥ १०८

निरपराधिनं शान्तं शिवभक्तमकल्मषम् ।
अपराङ्मुखमाजौ मां कुरुषे कथमीदृशम् ॥ १०९

चतुरङ्गबले युद्धे महावीरं पराङ्मुखम् ।
आत्महस्तगतं वाऽपि युध्यमानं परैस्सह ॥ ११०

मत्तं प्रसुप्तं स्त्रीसक्तमघ्नन्तश्च कदाचन ।
निरस्तशस्त्रं निर्वीर्यं मद्यपानविमोहितम् ॥ १११

एतादृशश्च पुरुषं न निहन्यात्कदाचन ।
ईदृशं मां विरूपं त्वं कृतवानसि पार्थिव ॥ ११२

को लोकस्तव देवेन निर्मितो गजहारिणा ।
महापातकिनं त्वाद्य वीक्षितुं लावकं नृप ॥ ११३

न शक्नोमि स पापीयान्यो निरीक्षेत तं यतः ।
कण्व उवाच—
इत्युक्त्वा राजशार्दूलो मुखमाच्छाद्य वाससा ॥ ११४

तूष्णीं बभूव विप्रेन्द्र कृत्तिवासेश्वरं स्मरन् ।

*வடுவூரில் ஈசனின் முன் கைகால் இழந்து நின்ற கல்மாஷபாதர் ரத்தம் தோய்ந்த உடலுடன், வேதனையால் வாடிய முகத்துடன் நிற்பதைப் பணியாளர் கண்டு ஹா ஹா எனப்பரபரப்புடன் அரசன் ஹேமசிருங்கலனிடம் தெரிவித்தனர். உடன் அங்கு வந்த அரசன் ''ஆராயாமல் பாபியான நான் இரவில் தவற்றைச் செய்துள்ளேன். எதனையும்*

*நான் அறியேன். புண்யம் செய்ய விரும்புபவன் முன்பின் ஆராயாமல் செயல்படக்கூடாது. நல்லது கெட்டதைப் பற்றிச் சிந்தியாமல் செயல்படுபவன் துயரடைவான்'' என்று மனத்தில் நொந்து கொண்டே கல்மாஷபாதனிருக்குமிடம் வந்தான். இரத்தம் சொட்டத் துடிதுடித்து நிற்கிற கல்மாஷபாதனைக் கண்ட ஹேமசிருங்கலன் ஆறுதலளிக்கப் பேசினான் - ''கல்மாஷபாத அரசரே! பயப்படாதீர். முன்வினைப் பயனாக இது நேர்ந்துள்ளது. முன்வினையின் பயனாக சுகமோ துக்கமோ எது நேரினும் அனுபவித்துத் தீர வேண்டும்'' என்றான். கல்மாஷபாதன் கூறினான். ''ஹேமசிருங்கலரே! கிருத்திவாஸரிடமும் பாலாங்குசையிடமும் நீர் பக்தி கொண்ட பேரறிஞரே. தினமும் சிவபூஜை செய்பவர். விபூதி-ருத்ராக்ஷமணிபவர். அரசாள்வதில் திறமை பெற்றவர். நீர் இவ்வாறு செய்யத்தகாது. ஆராயாமல் செய்த செயல் விரைவில் செய்தவனை அழித்துவிடும். ஒரு தவறும் செய்யாதவன் நான். அடக்கமுள்ளவன். சிவபக்தன். மாசற்றவன். போரில் பின் வாங்காதவன். என்னை இவ்வாறு துன்புறுத்தியுள்ளீர். போரில்கூட, வேறொருவருடன் போரிடுபவர். தெளிவற்றவர், தூங்குபவர், பெண்ணுறவு கொண்டிருப்பவர், தன்னை எதிர்க்காதவர், ஆயுதத்தைக் கைவிட்டவர், மதுவருந்தி தன் நிலை இழந்தவர். இவர் தன் கைகளில் அகப்பட்டிருந்தாலும் துன்புறுத்துவதோ கொல்வதோ தகாதென அரசநெறி கூறும். ஆனால் என்னை இவ்வாறு ஒரு தவறுமில்லாதபோது அங்கஹீனனாக்கியுள்ளீர். கஜஸம்ஹாரியான பெருமான் உமக்காக எந்த உலகைப் படைத்துள்ளாரோ! உம்மைக் கணப்பொழுதுகூடக் காண என்னால் முடியவில்லை. பாவியைக் காண்பதும் பாவமே: என்று கூறிய கல்மாஷபாதன் துணியால் கண்களை மறைத்துக் கொண்டான். கிருத்திவாஸரை நினைத்துக் கொண்டு பேசாதிருந்தான். (91-114)*

स हेमशृङ्खलो राजा श्रुत्वा वाक्यं महीपतेः ॥ ११५

इदं कृतमकृत्यं यदिति निश्चित्य दुःखितः ।

कल्माषपादचोलं तं लूनैकाङ्घ्रिकराम्बुजम् ॥ ११६

प्रसादयामास वरैर्वाक्यैः कनकशृङ्खलः ।
हेमशृङ्खल उवाच—
प्रसीद कल्माषपादचोल शङ्करवल्लभ ॥ ११७

अज्ञात्वा च कृतं राजंस्तत्क्षमस्वेह मा शप ।
ममात्मजां प्रदास्यामि नाम्ना चन्द्रकलावतीम् ॥ ११८

सम्पूर्णदेहलावण्यतिरस्कृततिलोत्तमाम् ।
कण्व उवाच—
इत्युक्त्वा स्वगृहं नीत्वा तद्व्रणं परिहार्य च ॥ ११९

कन्यां प्रदत्वा नृपतेस्तत्कोपविनिवृत्तये ।
निर्माय मन्दिरं तस्मै महेन्द्रसदनोपमम् ॥ १२०

दापयमास राजर्षेरुपेन्द्रस्येव वृत्रहा ।
तस्याश्चन्द्रकलावत्याश्शुश्रूषातुष्टमानसः ॥ १२१

सम्पूज्य कृत्तिवासेशं त्रिकालमवसन्नृपः ।

*கல்மாஷபாதன் கூறியதைக் கேட்ட ஹேமசிருங்கலன் தான் செய்தது தவறென உணர்ந்து துயருற்று கல்மாஷபாதரை சமாதானப்படுத்தினான். ''சிவநேசரே! கல்மாஷபாதரே! பொறுத்தருள்வீர். அறியாமல் செய்த பிழை இது. சபிக்காதீர். என் பெண் சந்திரகலாவதியை உமக்குத் தருகிறேன். அழகால் திலோத்தமையை வெட்கமடையச் செய்தவள்'' என்றான். தன் மாளிகைக்கு அழைத்துச் சென்று தன் மகளை மணம் செய்வித்து கல்மாஷபாதரின் கோபத்தைத் தணித்தான். இந்திரன் மாளிகை போன்ற மாளிகையை அமைத்து அதில் வாழச் செய்தான். சந்திரகலாவதியின் பணிவிடையால் மகிழ்ந்த கல்மாஷபாதன் மூன்று வேளைகளிலும் கிருத்திவாஸரை வணங்கி வந்தான். (115-121)*

कदाचिदथ सायाह्ने पूजान्ते पार्वतीपतेः ॥ १२२

आविर्बभूव मार्ताण्डिः गौरीनाथेन चोदितः ।
शनिं साक्षात्कृतं भूपो महादेवप्रचोदितम् ॥ १२३

पूजयित्वाऽर्घ्यपाद्याद्यैस्तुष्टावेष्टप्रदायकम् ।

*ஒருநாள் மாலை சிவபூஜை முடிவில் சிவபெருமானது ஆணையால் சனிதேவன் கல்மாஷபாதன் முன் தோன்றினான். நேரில் வந்த சனியை கல்மாஷபாதன் வழிபட்டுத் துதித்தான். (122-123)*

कल्माषपाद उवाच–

शतमखशमनाम्बुराजयक्ष्मप्रमुखसुदैवतसन्नुताङ्घ्रिपद्मम् ।
नतजनसकलेष्टदानदक्षं च्युतपुरवासरतं नतोऽस्मि सौरिम् ।

रविशशिकुजसौम्यदेवमन्त्रीभृगुसुतषड्ग्रहनायकाग्रगण्यम् ।
शतमखमणिभासवच्छरीरं च्युतपुरवासरतं नतोऽस्मि सौरिम् ॥

अतिभयदसितेतराविनम्रभ्रुकटियुगं पृथुवृत्तपिङ्गलाक्षम् ।
विलसितहरिराजवक्त्रवक्त्रं च्युतपुरवासरतं नतोऽस्मि सौरिम् ॥

**கல்மாஷபாதன் செய்த சனிஸ்துதி-** *இந்திரன், யமன், வருணன் முதலான தேவர்களால் திருவடிகளில் வணங்கப் பெற்றவரும் வணங்கியவர் விரும்பியதை அளிப்பவரும் வழுவூரில் வசிப்பதில் ஆர்வமுள்ளவருமான ஸூர்ய குமாரரை வணங்குகிறேன். (124)*

*ஸூர்யன், சந்திரன், குஜன், புதன், குரு, சுக்ரன் என்ற ஆறு கிரகநாயகர்களின் முன் நிற்பவரும், நீல ரத்ன மேனிவண்ணம் கொண்டவருமான வழுவூர் சனிதேவனை வணங்குகிறேன். (125)*

*மிகவும் பயம் தருகிற கருத்த தாழ்ந்த புருவமுள்ளவர். பெரிய உருண்ட சிவந்த கண்களுள்ளவர், சிங்கமுகத்தை*

*விடப் பயங்கரமான முகமுள்ளவர். வழுவூர்வாசி சனிதேவனை வணங்குகிறேன். (126)*

कृतनिजपदपूजकानतीनां विषमभगोचर जन्मभाष्टवर्गे।
दृढतरमुषितोऽपि भाग्यदं तं च्युतपुरवासरतं नतोऽस्मि सौरिम्॥

शिवपदकमलानुषक्तचित्तं हरयजनाभिरतोरुहस्तपद्मम्।
सितभसितलसत्त्रिपुण्ड्रफालं च्युतपुरवासरतं नतोऽस्मि सौरिम्॥

करकमलधृतेषुचापवर्याभयवरदं पृथुवायसोपरिस्थम्।
प्रविकचदसितोपलांशुदेहं च्युतपुरवासरतं नतोऽस्मि सौरिम्॥ १२९

*கெடுதல் தருகிற நக்ஷத்திரத்திலும், ஜன்ம நக்ஷத்ரத்திலும் அஷ்டவர்க்கத்திலும் வலிவுடன் வீற்றிருந்தாலும் தன் திருவடிகளை வழிபடுபவருக்குப் பாக்கியமளிக்கிற வழுவூர் சனிதேவனை வணங்குகிறேன். (127)*

*சிவனது திருவடித்தாமரைகளில் மனம் பதிந்தவர், சிவனை வழிபடுவதில் ஈடுபட்ட தாமரை போன்ற கைகளுள்ளவர். வெண்ணிற விபூதியை நெற்றியில் இட்டுக் கொண்டவர். இந்த வழுவூர் சனிதேவரை வணங்குகிறேன். (128)*

*தாமரை போன்ற கைகளில் வில்லும் அம்பும் அபயமும் வரதமுத்ரையும் ஏந்தியவர், பெரிய காக்கை மீதமர்ந்தவர், ஒளிமிக்க நீலரத்னம் போன்ற ஒளிமிக்க உடலுள்ளவர் இந்த வழுவூர் சனிதேவனை வணங்குகிறேன். (129)*

कण्व उवाच—
एवं स्तुतो महीपेन शनिस्सन्तुष्टमानसः।
राजानं लूनहस्ताङ्घ्रिमिदं वचनमब्रवीत्॥ १३०

शनिरुवाच—
शिवभक्त्या महाराज मत्स्तवेन शिवार्चनात्।
सन्तुष्टोऽहं महादेवकृपया च वरं वृणु॥ १३१

कल्माषपाद उवाच–

य इदं मत्कृतं स्तोत्रं तव सौरे शनैश्चर।
त्रिसन्ध्यं शृणुयात्तद्वत्पठेच्च नियतात्मवान्॥ १३२

दशास्वन्तर्दशास्वस्य चान्तरन्तर्दशास्वपि।
सुसूक्ष्मप्राणदशयोः स्थितोऽपि त्वं शनैश्चर॥ १३३

गोचरे वाष्टवर्गे वा विषमर्क्षे स्थितोऽपि वा।
न कर्तव्या त्वया पीडा सुप्रसन्नो मुदान्वितः॥ १३४

सर्वसिद्धिं प्रयच्छाशु तव स्तोत्रप्रभावतः।
अनुग्रहात्ते भक्तस्य शङ्करस्य महौजसः॥ १३५

शिवभक्तिस्सदा भूयान्निश्चला मम शाश्वती।

*இவ்வாறு துதித்ததால் மகிழ்ந்த சனிதேவன் கைகாலிழந்த அரசனைக் கண்டு ''உனது சிவபக்தியாலும் சிவனை வழிபட்டதாலும் என்னைத் துதித்ததாலும் சிவபெருமானின் கருணைக்குப் பாத்திரமானதாலும் நீ விரும்பிய வரத்தைத் தருகிறேன்.'' என்றார். கல்மாஷபாதன் சனிதேவனிடம் வேண்டினான். ''மூன்று வேளைகளிலும் உமது எதிரில் இந்தத் துதியைப் படிப்பவனும் கேட்பவனும் உமது தசையிலோ புக்தியிலோ ஸூக்ஷ்மகாலவரையிலோ, கோசாரப்படி, அஷ்டவர்க்கப்படி பொருந்தாத நட்சத்திரத்தில் நீர் கேடுவிளைவிப்பராக இருந்தாலும், துன்புறக் கூடாது. நீர் மனநிறைவுடன் அருள்புரிவீர். இந்த துதியின் வாயிலாக எல்லா ஸித்திகளையும் அளிப்பீர். எனது சிவபக்தி நிலைத்திருக்கட்டும் என வேண்டிக் கொண்டான். (127-136)*

कण्व उवाच–

इत्युक्त्वा देवदेवस्य कृत्तिवासेश्वरस्य सः॥ १३६
सन्निधौ राजशार्दूलो दण्डवत्प्रणनाम च।
अग्रे नमस्कृतं शम्भोः कल्माषाङ्घ्रिं नृपोत्तमम्॥ १३७

उत्थाप्य कृपया सौरिः समालिङ्ग्येदमब्रवीत्।
शनिरुवाच–
मा खिदस्त्वं महाराज त्वया यच्चिन्तितं हृदि ॥ १३८

तत्तथैव भवेत्तुभ्यं दास्यामि वरमुत्तमम्।
शिवप्रसादादचिराद्भार्या हेमलता तव ॥ १३९

पुत्रौ सुशोणशोणाक्षौ सङ्गमेष्यन्ति तेऽनघ।
शीघ्रं सिंहासनं भूमिं सशैलवनकाननाम्॥ १४०

चतुस्समुद्रवसनां सप्तद्वीपसमन्विताम्।
एष्यसि त्वञ्च राजेन्द्रानुग्रहान्मम भास्करेः ॥ १४१

कण्व उवाच–
इत्युक्त्वा राजसिंहस्य लूनहस्ताङ्घ्रिपङ्कजम्।
पस्पर्श स्वकराम्भोजैस्स्मरन् शिवपदाम्बुजम्॥ १४२

देवेन शनिना स्पृष्टे नृपाङ्घ्रिकरपङ्कजे।
उत्पेदाते जवेनास्य जितकोकनदप्रभे ॥ १४३

पपात पुष्पवृष्टिश्च विद्याधरकरच्युता।
देवदुन्दुभयो नेदुस्तस्मिन् हस्ताङ्घ्रिसुंयते ॥ १४४

ततः शनैश्चरो देवो राजानमनुगृह्य च।
पुनः शिवसमीपस्थो हरपादार्चकोऽभवत्॥ १४५

नृपतिरपि महात्मा कृत्तिवासेशलिङ्गं
दृढतरवरभक्त्याभ्यर्च्य कल्माषपादः।
त्रिषवणमपि पुष्पैर्दिव्यभोगैश्च नित्यं
च्युतपुरवरवासे तुष्टचेता बभूव ॥ १४६

इति अष्टमोऽध्यायः ॥

*

*கிருத்திவாஸப்பெருமானின் முன் தன்னை வணங்கி எழுந்த கல்மாஷபாதனை எழுப்பி இறுகத் தழுவிய சனிதேவன் அருள் புரிந்தார். ''அரசே! வருந்தாதீர். நீர் விரும்பியதனைத்தையும் வழங்குகிறேன். சிவபெருமானது அருளால் உமது மனைவி ஹேமலதையும் உமது புதல்வர்கள் ஸுசோணனும் சோணாக்ஷனும் உன்னுடன் கூடுவர். கடல் சூழ்ந்த இந்த பூமி உன் ஆளுகைக்கு உட்படும்'' என்று கூறி சிவனது திருவடிகளில் மனம் செலுத்தியவராய் சனிதேவன் அரசனது ஊனமான கால்கைப் பகுதிகளை வருடினார். உடன் அந்தப் பகுதிகள் முழுமை பெற்றன. வானிலிருந்து பூ மழை பெய்தது. தேவதுந்துபிகள் முழங்கின. அரசனின் ஊனம் நீங்கியதும் அரசனை வாழ்த்திவிட்டு சனிதேவன் மீண்டும் சிவபெருமானது அருகில் சென்று அவரது திருவடிகளை வழிபட்டார்.*

*சிவபெருமானது வழிபாட்டில் ஆர்வத்துடன் லிங்கத்தை மூன்று வேளைகளிலும் பூக்களாலும் திவ்ய நைவேத்யங்களாலும் உபசரித்து வழுவூரில் வசிப்பதில் அரசன் நிறைவுபெற்றான். (137-146)*

—*—

## ।। अथ नवमोऽध्यायः ।।

### कल्माषपादस्य महिषीपुत्रसंयोगः

कण्व उवाच—

अथ कल्माषचरणचोलोऽसौ नृपसत्तमः ।
उत्पन्नहस्तपादोऽभूत्सर्वाश्चर्यकरस्तदा ।। १

हेमशृङ्खलराजासौ सन्तोषोत्फुल्ललोचनः ।
निर्गत्य वेश्मनस्स्वस्माच्छ्रुत्वा वृत्तान्तमस्य च ।। २

जामातरं स कल्माषचरणं साङ्घ्रिहस्तकम् ।
दृष्ट्वाऽऽनन्दभरस्तोषादालिलिङ्गे नृपोत्तमम् ।। ३

अद्यैव खलु पूजा या कृत्तिवासेश्वरस्य सा ।
कृता मया च फलितेत्युक्त्वा कनकशृङ्खलः ॥ ४

अपि सन्तोषसम्पन्नो जामातरि नृपोत्तमे ।
न तत्याज च रागेण देवीं हेमलतां नृपः ॥ ५

सोऽपि कल्माषचरणश्श्वशुरं हेमशृङ्खलम् ।
नापृच्छन्महिषीवृत्तं राजानं हेमशृङ्खलम् ॥ ६

एवं तु वर्तमानेऽस्मिन्कल्माषचरणे नृप ।
मासद्वयमगात्तस्य कृत्तिवासेशपूजितुः ॥ ७

ततो ममार राजासौ हेमशृङ्खलभूपतिः ।
अतिसारेण राजानं कृत्वा जामातरं पुरे ॥ ८

ततः कल्माषचरणो भद्रासनमनुत्तमम् ।
श्वाशुरं प्राप्य नृपतिर्मुमुदे सह भार्यया ॥ ९

एवं च्युतपुरे तस्मिन्स राजा चोलभूपतिः ।
शशास चोलदेशं तु धर्मेण नरपुङ्गवः ॥ १०

*அத்தியாயம் 9*

*கல்மாஷபாதன் மனைவி - புதல்வர்களுடன் இணைதல்*

*கண்வர் காத்யாயனரிடம் கூறுகிறார் - அரசர்களுள் சிறந்த கல்மாஷபாதன் தன் கையையும் காலையும் மீண்டும் பெற்றான். ஹேம சிருங்கலனும் இதனைக் கேட்டு மனம் பூரித்தவனாக மாளிகையிலிருந்து வெளியேறி தன் மருமகன் கல்மாஷபாதனை உளமாரத் தழுவினான். இன்றே நான் இதுவரை செய்த ஈசனின் பூஜையின் பலனைப் பெற்றேன் என மகிழ்ந்தான். இந்நிலையிலும் ஹேமலதையிடம் கொண்ட ஆசையை விடவில்லை. கல்மாஷபாதனும் ஹேமலதை பற்றி அவனிடம் வினவவில்லை. இரண்டு மாதங்கள் கழிந்தன.*

*ஹேமசிருங்கலன் அதிஸாரத்தால் மாண்டான். முன்னதாக கல்மாஷபாதனைத் தன் பதவியில் அமர்த்தினான். சோழ அரசைக் கல்மாஷபாதன் ஆண்டான். (1-10)*

एवं कल्माषचरणे चोलराज्यं प्रशासति।
सब्रह्मक्षत्रविट्छूद्रं धर्मेण नृपपुङ्गवे॥ ११

तदा सुयज्ञशर्माणं सुगन्धवनवासिनम्।
शोणनेत्रसुशोणाक्षावूचतुर्विप्रपुङ्गवम्॥ १२

सभार्यञ्च नमस्कृत्य सुविनीतौ विचक्षणौ।
सर्वलक्षणसम्पन्नौ दस्राविव च सुन्दरौ॥ १३

कुमारावूचतुः॥

स्वामिंस्तात गुरो ब्रह्मन् विज्ञापनमनिन्दितम्।
चित्ते निधेहि विप्रेन्द्र बालयोरावयोर्दृढम्॥ १४

कल्माषपादराजाऽसौ हेमशृङ्खलजापतिः।
इतश्च्युतपुरे स्थित्वा श्वाशुरं प्राप्य चासनम्॥ १५

धर्मेण राज्यं सब्रह्मक्षत्रविट्छूद्रसङ्कुलम्।
शासत्ययं स्वधर्मे च निष्ठितः शिवभक्तिमान्॥ १६

आवां गत्वाऽऽशु निपुणं कुमारौ तव शासनात्।
तत्समीपस्थितौ विद्याबलं राज्ञे प्रदर्श्य च॥ १७

नित्यवेतनमेतावद्यदि कर्ताऽऽवयोरपि।
सेविष्ये नृपतिश्रेष्ठं युवयोः पालनाय वै॥ १८

आवां त्वदन्नं सम्भोज्य वर्धितौ च भवाव भो।
एतावत्कालमनिशं सदधिक्षीरगोघृतैः॥ १९

इदानीं कुशलौ विद्याजाले वामतिवेगिनौ ।
भवतोः पालनार्थाय चावयोरपि कीर्तये ।। २०

गच्छावस्तत्पुरं ब्रह्मन्नुभौ त्वत्कीर्तिदीप्तये ।
कण्व उवाच–
इत्युक्त्या नृपपुत्रौ द्वौ तं दान्तं शिवयोगिनम् ।। २१

नत्वा सुयज्ञशर्माणं तस्य सोमवतीं प्रियाम् ।
प्रतस्थाते कुमारौ द्वौ तदनुज्ञापितौ सुतौ ।। २२

तदाशीर्धनसम्पन्नौ श्रीमच्च्युतपुरं प्रति ।

*கல்மாஷபாதனின் ஆட்சியில் ஸுசோணனும் சோணாக்ஷனும் ஸுயஜ்ஞ சர்மாவையும் அவரது மனைவியையும் வணங்கினர். அச்வினீ தேவர்கள் போன்று அழகிய அவர்கள் கோரினர். - ''குருவே! எங்களிருவரது வேண்டுகோளையும் உள்ளத்தில் கொள்வீர். கல்மாஷபாத அரசன் ஹேமவதியின் கணவர். வழுவூரில் தன் மாமனாரது அரசைப் பெற்று நேர்மையுடன் ஆள்கிறார். நாங்களிருவரும் குமாரர்கள். உம் ஆணையுடன் அவரிடம் சென்று எங்கள் கல்வித் திறமையைக் காட்டி அவரது பணியாளராகி ஊதியம் பெற்று உங்களைக் காப்போம். உமது நெய், பால், தயிர் வகைகளை உண்டு உங்களால் வளர்க்கப் பெற்றோம். கல்வித் துறையில் உம் ஆசியால் பெரிதும் ஆற்றல் பெற்றோம். இனி உங்களையும் எங்களையும் காக்க எமது புகழைப் பரப்ப, தலைநகரை நோக்கிச் செல்கிறோம்'' என்று கூறி ஸுயஜ்ஞசர்மாவையும் ஸோமவதியையும் வணங்கி ஆசி பெற்று அவர்களது ஆசி என்ற செல்வத்துடன் வழுதூர் நோக்கிச் சென்றனர். (11-22)*

कल्माषचरणं चोलं प्राप्य राजकुमारकौ ।। २३

सभागतं ससचिवमिदं वचनमूचतुः ।
कुमारावूचतुः ।।
राजन्नावामुभौ विद्धि सर्वविद्याविशारदौ ।। २४

सुयज्ञशर्मणः शिष्यौ वीर्यवन्तौ तपस्विनौ।
तव सेवां विधातुञ्चागतौ कीर्तिपरायणौ ॥ २५

नित्यवेतनमिच्छन्तौ स्वामिकार्यपरायणौ।
यदशक्यं परैः कर्तुं साधितुं बलवत्तरैः ॥ २६

तदावाभ्यामनायासात्साधितुं शक्यते नृप।
कण्व उवाच–
एवमुक्तवतोर्ब्रह्मन् तयो राजकुमारयोः ॥ २७

कल्माषचरणः प्रीत्या कुमाराविदमब्रवीत्।
कल्माषपाद उवाच–
हे कुमारौ युवां कस्य वंशजातावनिन्दितौ ॥ २८

युवयोः कतिमात्रं तु नित्यवेतनमास्तिकौ।
अस्माभिश्च प्रदेयं यन्मानसे च प्रतिष्ठितम् ॥ २९

उभौ विचार्य सम्यक्तन्निस्संशयतरन्तराम्।
वदतं बालकौ धीरौ मह्यं तापसचोदितौ ॥ ३०

कण्व उवाच–
इत्युक्तवति राजेन्द्रे कल्माषचरणे मुने।
एतौ सुशोणशोणाक्षौ पुनः प्रत्यब्रवीन्नृपम् ॥ ३१

कुमारावूचतुः–
राजन्सूर्यान्वयोद्भूतौ क्षत्रियाणां कुलोद्भवौ।
सुयज्ञशर्मणश्शिष्यौ सुगन्धवनवासिनः ॥ ३२

सेवार्थमागतौ तेऽद्य वीर्यधैर्यसमन्वितौ।
नित्यं सहस्रनिष्कं नौ वेतनत्वे विधीयताम् ॥ ३३

तवेप्सितां राजवर्य सेवां कुर्वावहे मुदा ।
आवां परमधर्मज्ञौ विनयेन महोत्सुकौ ।। ३४

*அரசவையில் அமர்ந்திருந்த கல்மாஷபாதரை அணுகி அவரது அமைச்சர் மூலமாக இவ்வாறு தெரிவித்தனர். ''அரசே! நாங்கள் இருவரும் ஸுயஜ்ஞ சர்மாவின் சீடர்கள். எல்லாக் கல்வித்துறைகளிலும் தேர்ந்தவர்கள். தவத்தை வாழ்க்கை முறையாகக் கொண்டவர்கள். புகழ்பெறும் நோக்கத்துடன் உமக்கு சேவை புரிய வந்துள்ளோம். தினசரி ஊதியம் பெற்று எஜமானரின் பணிகளில் ஈடுபடுவோம். வலிவுமிக்கவர்களாலும் சாதிக்க இயலாததை தளர்வின்றி நிறைவுறச் செய்வோம்.'' என்றனர். ''நீங்கள் எந்த வம்சத்தில் பிறந்தீர்? உமக்கு எத்தனை ஊதியம் தேவை? நீங்கள் கோருவதும் நாம் நிர்ணயம் செய்வதும் பற்றி ஆராய்ந்து முடிவிற்கு வருவோம். உம் ஆசிரியர் சொல்லியனுப்பியபடி நீங்கள் விரும்புகிற ஊதியத்தைக் கூறுவீர்'' என அரசன் கேட்டான். இரு குமாரர்களும் கூறினர் ''ஸூர்யவம்சத்தில் க்ஷத்திரிய குலத்தில் பிறந்த நாங்கள். ஸுகந்தவனத்தில் வசிக்கிற ஸுயஜ்ஞசர்மாவின் சீடர்கள். ஆற்றலும் உறுதியும் கூடியவர். தினமும் ஆயிரம் காசு எமக்கு ஊதியமாகத் தரப்படட்டும். நீர் விரும்புகிற பணியைச் செய்வோம். நாங்கள் அறவழி அறிந்தவர்கள். பணிவும் உற்சாகமும் கொண்டவர்கள்'' என்றனர். (23-34)*

कण्व उवाच—

एवमुक्तस्तु ताभ्यां स कल्माषचरणो नृपः ।
तयोस्तथैव कृतवान् वेतनं राजपुत्रयोः ।। ३५

एवं कृते वेतने च कल्माषचरणेन वै ।
शोणनेत्रसुशोणाक्षनाम्नो राजकुमारयोः ।। ३६

धर्मसन्धिर्मन्त्रिवरो राज्ञः प्रियतरो महान् ।
अनुरक्तश्च नृपतौ राजानं प्रत्यभाषत ।। ३७

धर्मसन्धिरुवाच—

राजेन्द्र राजधर्मज्ञस्सत्यवादी जितेन्द्रियः ।
त्वं सर्वं वेत्सि निपुणस्तथाप्याचक्ष्यते नृप ।। ३८

सर्वं परीक्ष्य कर्तव्यं राजकार्यं विचक्षणैः ।
अन्यथा चेद्भविष्यन्ति कर्माणि वितथानि च ।। ३९

एतौ कुमारौ चार्वङ्गौ वाचा पटुतरावुभौ ।
शक्तिविक्रमशौर्याणि बालत्वाद्ज्ञायते कथम् ।। ४०

विसृज्यतामिदानीं तौ श्वः काले क्रियतामिति ।
विदधातु विचार्यैव तयोर्वेतनमीप्सितम् ।। ४१

कण्व उवाच—

इत्युक्तो मन्त्रिणा तेन तौ विसृज्य नृपात्मजौ ।
राजाप्यालोचयामास का परीक्षेति मन्त्रिणा ।। ४२

*கல்மாஷபாதன் உடன் அந்த ஊதிய விகிதத்தை ஏற்றுப் பணியில் அமரப் பணித்தான். அரசனது இந்த நடைமுறையைக் கண்ட மந்திரிகளில் சிறந்த தர்மஸந்தி அரசரிடம் பற்றுமிக்கவரானதால் அரசரிடம் குறுக்கிட்டுப் பேசினார். ''அரசநெறிமுறையையறிந்து உண்மை பேசுகிற நீர் புலனடக்கமிக்கவர். நீர் செயலாற்றலில் வல்லுனர். எனினும் இந்த ஆலோசனை கூறுகிறேன். பரீட்சை செய்தபின் முடிவு செய்வது நல்லது. இல்லாவிடில் செயல்கள் வீணாகும். இந்த யுவர்கள் அழகுள்ளவர்கள். பேச்சில் நிபுணர். ஆற்றல் செயல்முறை செயல் நேர்த்தி என்பதை பாலப்பருவத் தோற்றம் காரணமாக நிர்ணயிக்க இயலாது. இதனை இவர்களை அனுப்பிவிட்டு நாளை நன்கு சோதித்தபின் இவர்கள் விரும்புகிற ஊதியத்தை நிர்ணயிக்கலாம் என்றார். அரசனும் இதனை ஏற்று எவ்வாறு சோதிப்பதென அவருடன் ஆராய்ந்தான். (35-42)*

मन्त्र्युवाच–

एतौ कुमारौ राजेन्द्रादृष्टयुद्धौ महीतले।
अपि सर्वास्त्रकुशलावनुमेयौ च धैर्यतः ॥ ४३

अस्मदाज्ञापितौ रात्रौ स्थाप्येतां नृपनन्दनौ।
निमित्तीकृत्य किमिपि स्थीयेतामनुशासय ॥ ४४

इत्युक्तौ तौ निशायाञ्च स्थितौ चेद्धैर्यमानसौ।
तथैव क्रियतां राजन्नभीष्टं तत्कुमारयोः ॥ ४५

कण्व उवाच–

एवमालोच्य सचिवराजानौ वेदवित्तम।
परेद्युरागतौ भूपकुमारावूचतुश्च तौ ॥ ४६

मन्त्रिभूपावूचतुः।

हे कुमारौ राजगृहे ममार नृपवल्लभा।
काचिन्निशायां नीत्वा तां श्मशानेऽद्य नृपात्मजौ ॥ ४७

उषित्वा श्वः प्रभाते तद्दहनं कुरुतामुभौ।
अतिष्ठेतां रात्रिमात्रं प्रेतसंरक्षकौ युवाम् ॥ ४८

युवां द्वौ राजतनयौ राजमानाभिरक्षकौ।
दास्यावहे वेतनञ्च युवयोर्मनसेप्सितम् ॥ ४९

कण्व उवाच–

इत्युक्तौ राजमन्त्रिभ्यां तथैव कृतनिश्चयौ।
प्रेर्यतां शिबिकान्तस्थः प्रेतस्स्वं मुद्रितस्तराम् ॥ ५०

इत्युक्तवन्तौ बलिनौ सुकुमारौ गुहोपमौ।
अतिष्ठतां नृपद्वारि सन्नद्धौ राजनन्दनौ ॥ ५१

ततः कल्माषचरणः शिबिकान्तस्थितो नृपः ।
निरगात्तत्परीक्षार्थं पुराद्दश दिशः प्रति ॥ ५२

तौ वाहयित्वा कुणपबुद्ध्या भूपं नृपात्मजौ ।
शिबिकान्तः स्थितं धीरौ स्वतेजोगुप्तविग्रहौ ॥ ५३

निबद्धकवचौ प्रेतभूमिं ययतुरद्भुताम् ।
ददर्शतुः श्मशानं तद्विस्तारघटिकामितम् ॥ ५४

*''அரசே! இவ்விருயுவர்களும் போரைக் காணாதவர்கள். எல்லா அஸ்திரவித்யையிலும் தேர்ந்தவர்களா? இதனை இவர்களது தைர்யத்தைக் கொண்டு நிர்ணயிக்கலாம். இரவு இங்கு தங்கும்படி உத்தரவிடலாம். ஏதேனும் பணியைக் காரணமாகக் காட்டலாம். இவர்களது தைர்யத்தைச் சோதிக்கலாம் என்றார். மறுநாள் காலையில் அரசவைக்கு வந்த இருவரிடமும் மந்திரியும் அரசனும் இவ்வாறு கூறினர். ''யுவர்களே! அரசரது மாளிகையில் ஒரு ராணி இறந்து விட்டாள். அவளை இன்று இரவு மயானத்திற்கு இட்டுச் சென்று (பிணத்தை) வைத்திருந்து நாளைக் காலையில் தீயிலிட வேண்டும். இன்றிரவு பிணத்தைக் காப்பீர்கள். அரசனது மானத்தைக் காப்பீர். நீங்கள் விரும்பிய ஊதியத்தைப் பெறுவீர்.'' என்றனர். உடன் அதனை ஏற்று பிணத்தைப் பல்லக்கில் வைத்து மூடி, அனுப்பப்படட்டும் என்று கூறி சிறுவர்கள் அரண்மனைவாயிலில் ஆயத்த நிலையில் நின்றனர். கல்மாஷபாதன் தன்னையே பிணமாகக் காட்டிப் பல்லக்கில் படுத்தான். சிறுவர்களைச் சோதித்தான். அவர்களிருவரும் அரசனைப் பிணமென நினைத்து பல்லக்கிலுள்ளவனைச் சுமக்கச் செய்து தம் வலிமையால் தம்மைப் பாதுகாப்பவராகக் கவசம் பூண்டு மயானம் சென்றனர். பெரும் மயானத்தைக் கண்டனர். (43-54)*

दह्यमानशवोद्भूतधूमाकुलितदिङ्मुखम् ।
क्वचित्कुणपसङ्घातं लोलगोमायुनादितम् ॥ ५५

कचिच्छूलाग्रसंप्रोतगुदमानुषभीषणम्।
च्चिबुकप्रोतबडिशलम्बमाननरं कचित्॥ ५६

कचिद्बद्धाङ्घ्रियुगललम्बितप्रेतसङ्कुलम्।
कचित्कबन्धसंप्रोतशूलमालाभयङ्करम्॥ ५७

कचिद्भूषणमुण्डालि व्याप्त सर्वमहीतलम्।
शङ्खपाण्डरकङ्कालधवलीकृतभूः कचित्॥ ५८

शूलप्रोतशरीरार्तिक्रोशमाननरं कचित्।
कचित्कपालनिचयं कचावलिभयङ्करम्॥ ५९

कचिच्छवाशनस्पर्धिसारमेयरवाकुलम्।
तत्र तौ शिबिकान्तस्थकपटप्रेतभूमिपम्॥ ६०

स्थापयित्वा धैर्यवन्तौ तस्थतू रक्षणे रतौ।
मध्यबद्धसुकच्छान्तच्छुरितक्षुरिकासिकौ॥ ६१

सज्जीकृतधनुष्पाणिधृतेषुकरपल्लवौ।
पश्चान्निबद्धसम्पूर्णबाणतूणीरयुग्मकौ॥ ६२

बालसूर्यप्रतीकाशौ रक्षन्तौ शिबिकां निशि।
भूतप्रेतपिशाचैश्च नृत्यमानैरनेकशः॥ ६३

डाकिनीग्रहगानैश्च शाकिनीग्रहसेवनैः।
ब्रह्मराक्षसनृत्तैश्च योगिनीग्रहसेवनैः॥ ६४

*எரிகின்ற சவப்புகையால் சூழ்ந்த பரப்பு, அலைகிற நரிகளின் கூவல், ஒருபுறம் பிணங்களின் குவியல், ஓரிடத்தில் சூலத்தின் நுனியில் செருகப்பட்ட பிணத்தின் பயங்கரத் தோற்றம், தூண்டிலால் கன்னத்தில் குத்தப்பட்டுத் தொங்குகிற பிணம் ஒன்று. கால்களிரண்டும் கயிற்றால் பிணைக்கப் பெற்று கயிற்றில் தொங்குகிறது. கழுத்து*

*சீவப்பட்டு தலை சூலத்தில் குத்தி வைத்தது ஒன்று. ஆங்காங்கு தலை மட்டும் சீவப்பட்டு உருண்டு கிடப்பது. எரிந்த சங்குபேல் வெளுத்த எலும்புக் கூடுகள். சூலத்தில் குத்தப்பட்டு வலியால் கதறுகிற உயிருள்ள உடல், கபாலக் குவியல், தலைமயிர்க் குவியல், சவத்தை உண்பதற்கலைகிற நாய்கள் என்ற பயங்கரக் காட்சியினிடையே பிரேத வேஷத்தில் அரசரைச் சுமக்கிற பல்லக்கை வைத்து தைர்யத்துடன் இருவரும் பாதுகாத்தனர். இடுப்பில் கச்சத்தில் செருகப்பட்ட கூர் வாளும், கத்தியும், கைகளில் நாண் பூட்டிய வில்லும் அம்பும், முதுகில் தொங்குகிற அம்புகள் நிறைந்த அம்புருத் தூணி. பல்லக்கை இளம் சூரியனுக்கொப்பான மேனியொளியுள்ள சிறுவர்கள் காக்கின்றனர். பூத-பிரேத-பிசாசுகள் ஆங்காங்கு நடனமாடுகின்றன. (55-64)*

यत्तौ तत्रोषतुस्तौ हि धैर्यवन्तौ बलोत्कटौ ।
एवं तस्मिन्प्रेतवने स्मरणाद्रोमहर्षणे ।। ६५

भ्रातुस्सुशोणनेत्रस्य जाग्रतस्तस्य धीमतः ।
निद्रा समागता किञ्चिच्चित्तमोहप्रमादिनी ।। ६६

तदानीमग्रजं ब्रह्मन्शोणनेत्रं महाबलम् ।
विनयेनोपसङ्गम्य दीप्ततेजसमब्रवीत् ।। ६७

सुशोणाक्ष उवाच—
आर्याग्रज महाबाहो निद्राऽऽयाति ममाचिरात् ।
काञ्चित्कथाञ्च निपुणां निद्राशान्तिकरीं वद ।। ६८

शोणाक्ष उवाच—
आवयोर्जन्मचरितं पितुर्माहात्म्यमद्भुतम् ।
वक्ष्ये समाहितमनास्तात शृणु महामते ।। ६९

सूर्यवंशसमुद्भूतो राजा सर्वमहीपतिः ।
सर्वलक्षणसंपन्नस्सद्गुणाढ्यो दयान्वितः ।। ७०

1

शिवपूजारतो नित्यं सत्यसन्धः सदा शुचिः ।
अस्ति कल्माषचरणचोलनामा हि भूतले ॥ ७१

असावस्मत्पिता तात युद्धे सत्यपराक्रमः ।
सात्विकः क्रोधरहितः सत्कर्मनिरतस्सदा ॥ ७२

तस्याग्रमहिषी नाम्ना पुण्या हेमलता सती ।
तस्यां कुक्षिसमुद्भूतावावां तात नृपात्मजौ ॥ ७३

स च राजा दैवयोगादाधिकापुरमाश्रितः ।
सभार्यतनयोऽरण्यं प्राप्तवान्विधिचोदितः ॥ ७४

अरण्यं संपरित्यज्य पुण्डरीकपुरं गतः ।
सभार्योऽपि महाराजः काञ्चिद्वेश्यां जगाम ह ॥ ७५

सा च मासद्वयादूर्ध्वं सर्वस्वमपहृत्य च ।
सौन्दर्यौषधमन्त्राद्यैस्तत्याज नृपतिं शुभम् ॥ ७६

अस्मत्पिता तया त्यक्तो राजा कल्माषपात्तदा ।
सभार्यतनयो रम्यमेतच्च्युतपुरं गतः ॥ ७७

तत्रागत्य च मार्ताण्डसूनुना पीडितो भृशम् ।
पूजयामास देवेशं शिवं भक्त्या दृढव्रतः ॥ ७८

हेमशृङ्खल इत्यत्र नाम्ना राजा शिवार्चकः ।
कामी दयावान्भूपालो बभूव नृपनन्दन ॥ ७९

अस्मत्पिता तमाश्रित्यातिष्ठत्संपूज्य शङ्करम् ।
हेमशृङ्खलराजेन माता हेमलताऽऽवयोः ॥ ८०

पूजार्थं वनिता देव्या राजानं पितरं प्रति ।
तथेति प्रेरिता सा चा माता नौ हैमशृङ्खलम् ॥ ८१

निकेतनं शुक्रवारे पूजार्थं प्राप सा सती ।
निरुध्य तां हेमलतां स राजा हेमशृङ्खलः ॥ ८२

स्थापयामास शुद्धान्ते तस्यामुत्कण्ठमानसः ।
ततो दुःखान्वितस्तातो निर्जगाम पुराद्बहिः ॥ ८३

अप्रत्यागमनं तस्या विलोक्य धरणीपतिः ।
उभावावां गृहीत्वाऽसौ हस्ते नृपतिनन्दन ॥ ८४

उत्तराभिमुखो भूत्वा कावेरीकूलमाश्रितः ।
आवाभ्यां सहितस्तर्तुं सह्यजामुद्यतः पिता ॥ ८५

सम्यग्विचार्य राजेन्द्रो मानसे शनिचोदितः ।
एकमुत्तरकूले संस्थाप्यान्यं नेतुमात्मजम् ॥ ८६

समागतश्च नौ तातः पीडितो रविसूनुना ।
तदानीमर्धरात्रित्वान्नृपं जगृहिरे भटाः ॥ ८७

पुरपालाश्चोरबुद्ध्या बबन्धुः पितरं च नौ ।
पश्चात्किं कृतवन्तस्ते न जाने वसुधाधिपम् ॥ ८८

कारागृहे वा निक्षिप्तो मारितो वा भवेत्पिता ।
तततस्सोमवती विप्रा दृष्ट्वाऽऽवां पितृहीनकौ ॥ ८९

दयावती पुत्रहीना स्वगृहं सा निनाय ह ।
आवां तत्पतिवर्येण पुत्रत्वेन नियोजितौ ॥ ९०

सुयज्ञशर्मणस्तस्माद्विद्यास्सर्वास्सुशिक्षिताः ।
सेवार्थमागतावत्र तज्जामातरि राजनि ॥ ९१

स्थाप्यावहेऽत्र भूपेन प्रेरितौ प्रेतकानने ।
अस्मच्चरित्रमेतत्ते कथितं तात विस्तरात् ॥ ९२

न निद्रां प्राप्नुया वत्स प्रातः कालस्समागतः ।

இருயுவர்களும் ஆயத்தமாக தைர்யத்துடன் தன் தன் வலிவை நம்பி நிமிர்ந்து பாதுகாத்தனர். இதுகாறும் விழித்திருந்த இளையவன் ஸுசோணனுக்குத் தளர்ச்சியும் அழற்சியும் மிகுந்து தூக்கம் வந்தது. அண்ணன் சோணாக்ஷனிடம் பணிவுடன் தன் நிலைபற்றித் தெரிவித்தான். ''அண்ணா! எனக்கு தூக்கம் வந்து கொண்டிருக்கிறது. தூக்கத்தைப் போக்கத்தக்க கதை ஒன்றைச் சொல்வீர்'' என்றான். சோணாக்ஷன் சொன்னான். ''அறிவாளனே! நம் தந்தையின் பெருமையே ஒரு கதைதான். கூறுகிறேன். கேட்பாய். ஸூர்ய வம்சத்திலுதித்த அரசர், எல்லா சிறந்த குணங்களும் நிறைந்தவர். பரிவுள்ளவர். சிவபூஜையில் எப்போதும் ஈடுபட்டவர், மெய் பேசுவதை வழக்கமாகக் கொண்டவர், தூயவர். கல்மாஷபாதரெனப் பெயர் கொண்டவர், போரில் தீரர், ஸத்வ குணமுள்ளவர், சினமற்றவர், நற்பணிகளில் ஈடுபடுபவர். அவரது மூத்த மனைவி ஹேமலதை. அவள் நம்மிருவரையும் பெற்றவள். ஆதிபுரத்தை (அதிகையை) ஆண்ட அரசர் விதியால் மனைவிமக்களுடன் காட்டின் வழியே புண்டரீகபுரம் வந்தார். அங்கொரு வேசி இரு மாதங்களுக்குள் தன் அழகைக் காட்டி அரசரை மயக்கி அவரது செல்வத்தைப் பறித்துக் கொண்டு விரட்டிவிட்டாள். மனைவி மக்களுடன் அரசர் வழுவூர் வந்தார். சனியின் பீடையால் வருந்தி சிவனை வழிபட்டார். ஹேமசிருங்கலன் என்ற அரசன் பெருஞ்சிவபக்தன். எனினும் காமுகன். நம் தந்தை அவரிடம் பணியாளராகிச் சிவனை வழிபட்டு வந்தார். நம் தாயை ஸுமங்கலியாக வழிபட ஒரு வெள்ளியன்று அழைத்துச் சென்ற ஹேமசிருங்கலன் அவளை மாளிகையில் அடைத்து வைத்தான். அவளிடம் காமம் கொண்டான். துயருற்ற தந்தை நகரத்தை விட்டு நம்மிருவரையும் அழைத்துக் கொண்டு வடக்கு நோக்கி வந்தவர் காவேரியின் கரையை அடைந்து நம்மிருவருடன் வெள்ளத்தைக் கடக்க முயன்றவர், சனியின் தூண்டுதலால் ஒருவனை அக்கரையில் கொண்டு சேர்த்தபின் மற்றவனை

அழைத்துச் செல்லவந்தார். சனி பிடித்துக் கொண்டதால் நள்ளிரவில் நகரக்காவலர்கள் திருடன் என எண்ணி அவரை கட்டி இழுத்துச் சென்றனர். பின்னர் என்ன செய்தனர் என்பதை அறியேன். சிறையில் வைக்கப்பட்டாரா? கொல்லப்பட்டாரா? என்று தெரியவில்லை. ஸோமவதீ என்ற நங்கை தந்தையை இழந்த நம்மைப் பரிவுடன் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றாள். அவரது கணவர் தனது மகன்கள் என ஏற்று கல்விமுறையனைத்தையும் கற்பித்தார். ஹேமசிருங்கலனின் மாப்பிள்ளையான அரசரிடம் பணிபுரிய வந்த நம்மை அரசன் மயானத்தில் பணிபுரியச் செய்துள்ளார். இனி தூக்கம் வராது. காலைபொழுது விடிந்து விட்டதென்று கதையை முடித்தான். *(65-92)*

कण्व उवाच—

इत्युक्तवति शोणाक्षे स्वानुजं प्रति सत्तम ॥ ९३

श्रुतवान्शिबिकान्तस्थः कल्माषचरणः कथाम् ।
चित्ते विचार्य तत्सर्वं चरित्रं स्वात्मनो नृपः ॥ ९४

मत्वा स्वाङ्गभुवावेतौ व्यथते स्म महीपतिः ।
मत्पुत्रावीदृशीं प्राप्तौ दशामिति च मानसे ॥ ९५

अतिदुर्मानसो भूपो दुःखमाप दुरन्तकम् ।
पुनश्च भूपतिश्चित्ते धैर्यवन्तौ सुतौ मम ॥ ९६

इति सन्तोषमापन्नो बभूव गुणवत्तरः ।
ततः प्रभाते विमले मन्त्री सेनासमन्वितः ॥ ९७

तत्रस्थान्विनिवार्यैत्य राजानमिदमब्रवीत् ।
परीक्षितौ कुमारौ किं त्वया नरवरोत्तम ॥ ९८

दग्ध्वा किंचिन्न कुणपं गच्छाव स्वपुरं प्रति ।
कण्व उवाच—
एवं वदति चामात्ये कल्माषचरणो नृपः ॥ ९९

तथैव कृत्वा स्वपुरीं जगामामोदसंयुतः ।
ततस्सभां समासाद्य समन्त्री राजसत्तमः ॥ १००

आहूय च सुतावेतौ मुमुदे वीर्यवत्तरौ ।
संवीक्ष्य गुणसंपन्नौ विक्रमे च गुहोपमौ ॥ १०१

सर्वान्विसृज्य तत्रस्थान् तावपृच्छद्रहस्सुतौ ।
किमुक्त्वाऽतिष्ठतां रात्रावन्त्ययामे नृपात्मजौ ॥ १०२

भवन्तौ वदतां सत्यं बालकावविचारतः ।
इत्युक्तौ राजतनयौ नासत्योपमविग्रहौ ॥ १०३

चोलं कल्माषचरणं प्राब्रूतां नृपसत्तमम् ।

*இதனை பல்லக்கினுள் படுத்திருந்த கல்மாஷபாதன் உற்றுக் கேட்டான். தன் வரலாற்றை மீண்டும் நினைவுப்படுத்திக் கொண்டான். இவர்களிருவரும் நமது புதல்வர்கள். இவர்களுக்கு இந்த நிலை ஏற்பட்டதே என வருந்தினான். தன் புதல்வர்கள் தைரியசாலிகளே என உணர்ந்து மகிழ்ந்தான். விடியற்காலையில் மந்திரி படையுடன் அங்கு வந்தார். மற்றவர்களை ஒதுங்கச் செய்து தனிமையில் அரசரிடம் ''இந்தயுவர்கள் சோதிக்கப் பட்டனரா? ஏதேனும் ஒரு பிணத்தை எரித்துவிட்டு நகரை நோக்கிச் செல்வோமா?'' என்று கேட்டார். மந்திரி கூறியபடி அரசர் செய்து விட்டு மகிழ்ச்சியுடன் நகரம் வந்து சேர்ந்தார். ஸபையை அடைந்து தன் இரு புதல்வர்களையும் அழைத்து மகிழ்ந்தார். மற்றவர்களை வெளியே செல்லச் செய்து தனிமையில் குணச் சிறப்பும் பேராற்றலும் நிரம்பி குகப்பெருமான் போன்றுள்ள புதல்வர்களிடம் ''நீங்களிருவரும் நள்ளிரவில் என்ன பேசிக் கொண்டீர்கள்? உண்மையைக் கூறுவீர் எனக் கேட்ட அரசரிடம் கூறினர். (93-104)*

कुमारावूचतुः—
हे राजन् पूर्वदिवसे त्वयाज्ञप्तौ नरेश्वर ॥ १०४

आवां पितृवने रात्रौ जागृतौ चावसाव भो ।
तत्र प्रेतं रक्षितारावावां बालौ समन्वगात् ॥ १०५

निद्राऽन्त्ययामे राजेन्द्र महामोहकरी दृशोः ।
निद्रानाशकरीं गाधामस्मद्वंशसमाश्रिताम् ॥ १०६

अवदाव महाराज ह्यावां ज्येष्ठकनिष्ठकौ ।
नान्यत्किमपि च प्रोक्तमावाभ्यां राजशेखर ॥ १०७

राजद्रोहकरं वाक्यं जनश्रवणनिष्ठुरम् ।
राजोवाच—
हे कुमारौ युवां कस्य वंशजौ वां पिता च कः ॥ १०८

कस्याः कुक्षिसमुद्भूतौ युवयोर्नाम किं पुनः ।
वदतं राजपुत्रौ द्वौ स्वस्वनाम्नी सुतेजसौ ॥ १०९

तेजसा क्षत्रवपुषौ न ब्राह्मणसुतौ युवाम् ।

*அரசரே! நேற்று உமது ஆணைப்படி மயானத்தில் நாங்களிருவரும் விழித்திருந்தோம். பிணத்தைக் காப்பவர்களான சிறுவர்களான எங்களை விடியற்காலையில் தூக்கம் அணுகியது. கண்கள் சொக்கின. தூக்கம் கலைய எங்கள் வம்சத்தைப் பற்றிய கதையை, அண்ணனும் தம்பியும் சொல்லிக் கொண்டிருந்தோம். வேறு விதமாக ராஜதுரோஹம் செய்வதாகவோ மக்கள் கேட்கத் தகாததையோ பேசவில்லை. என்றனர். அரசன் உடன் கேட்டார்- ''நீங்கள் எந்த வம்சத்தில் பிறந்தவர்கள்? தந்தை யார்? எவள் வயிற்றில் பிறந்தீர்? உம் பெயரென்ன? நீங்கள் அரசகுமாரர்களா? அந்தணர் புதல்வர்கள் அல்ல என்று கேட்டான். (105-109)*

कण्व उवाच—

एवमुक्तवति ब्रह्मन् चोले कल्माषपान्नृपे ॥ ११०

कृताञ्जलिरुवाचैनं राजानं शोणलोचनः ।

शोणाक्ष उवाच—

राजन् शृणुष्व वृत्तान्तं बालयोरावयोरपि ॥ १११

वक्ष्यामि नृपशार्दूल यथातत्वञ्च साम्प्रतम् ।

आवां राजन्यमकुटनमत्पादाम्बुजन्मनः ॥ ११२

सूर्यान्वियसमुद्भूतचोलराजस्य भूपतेः ।

कल्माषचरणस्यास्य सुतौ प्राक्चक्रवर्तिनः ॥ ११३

तत्पत्नी पट्टमहिषी नाम्ना हेमलतेत्यभूत् ।

लोके पतिव्रतानां या गणनीया पुरो नृप ॥ ११४

तस्याः कुक्षिसमुद्भूतौ महादेव्या महीपते ।

नाम्ना सुशोणशोणाक्षाविति लोका वदन्ति नौ ॥ ११५

आधिपुर्यां वर्तमानश्चोलः कल्माषपान्नृपः ।

दैवयोगादिमं प्राप श्रीमच्चुतपुराह्वयम् ॥ ११६

विधिना मत्प्रसू राज्ञा श्वशुरेण तवाहृता ।

मरुद्वृधातटे तातस्त्यक्त्वाऽऽवां दैवयोगतः ॥ ११७

कुत्र वा गतवान्राजा न जानीवो नरेश्वर ।

एषैव गाधा संप्रोक्ता नान्याऽऽवाभ्यां च काचन ॥ ११८

*கல்மாஷபாதன் இவ்வாறு கேட்டதும் சோணாக்ஷன் கைகூப்பி கூறினன். "அரசே! எங்களிருவரின் வரலாற்றை கேட்பீர். சிற்றரசர்களால் தம் கிரீடம் படும்படி வணங்கப் பெற்ற ஸூர்ய வம்சத்திலுதித்த பேரரசர் கல்மாஷபாத*

*சக்ரவர்த்தியின் புதல்வர்கள் நாங்கள். அவரது பட்டத்து ராணி ஹேமலதை சிறந்த பதிவிரதை. அவளது வயிற்றில் தோன்றியவர்கள். ஸுசோணன் சோணாக்ஷன் என எங்களை உலகம் அழைக்கும். ஆதிபுரியை ஆண்ட கல்மாஷபாத அரசர் விதிவசத்தால் இங்கு வந்து சேர்ந்தார். அரசரான தங்களது மாமனாரால் என் தாய் கடத்தப்பட்டாள். விதிவசத்தால் எம் தந்தை காவிரியின் கரையில் எம்மை விட்டுவிட்டு எங்கோ சென்று விட்டார். எங்கு சென்றார் என்பதை அறியோம். இந்த கதையைத் தான் நாங்கள் பேசி கொண்டிருந்தோம் என்றனர். (109-118)*

कण्व उवाच—

एवं वदति शोणाक्षे श्रुत्वा तद्वचनं नृपः ।
मत्सुताविति मन्वानो ह्यानन्दाश्रुकणेक्षणः ॥ ११९

उत्थायैव कुमारौ द्वौ चन्द्रार्कसमतेजसौ ।
समालिलिङ्गे नृपतिः पुलकाङ्कितविग्रहः ॥ १२०

आत्मजावङ्कमारोप्यालिङ्गितोन्मीलितेक्षणः ।
मुहूर्तमभवद्राजा स्नेहजानन्दनिर्भरः ॥ १२१

सुतयोर्बालयोर्वीरतरयोरतिरम्ययोः ।
वाचं निशम्य भूपालो बभूव प्रीतमानसः ॥ १२२

ततस्स भूपः प्रोत्थाय ज्ञातात्मा स्वात्मजावुभौ ।
हस्ते गृहीत्वा राजेन्द्रस्तत्र चोलमहीपतिः ॥ १२३

ससारान्तःपुरं यत्र स्थिता हेमलता सती ।
पूजयन्त्यनिशं पत्रैश्शम्याः सौरिं दिवानिशम् ॥ १२४

स ददर्श प्रियां तन्वीमुपवासव्रतैः कृशाम् ।
सितपक्षप्रतिपदः सुधाभानोः कलामिव ॥ १२५

सापि दृष्ट्वा समायान्तं मत्तमातङ्गगामिनम्।
सौन्दर्याधिकृतानङ्गं राजानं ससुतं सती ।। १२६

उत्थाय चासनान्मोदपुलकाङ्कितविग्रहा ।
आनन्दाश्रुकणा व्रीडानमदास्या स्थिताऽभवत्।। १२७

*இதனைக் கேட்டதும் இவர்கள் என் புதல்வர்களே என்று உணர்ந்த அரசன் கண்ணீர் மல்க, எழுந்து ஸூர்ய சந்திரர்களைப் போன்றிருந்த புத்திரர்களைக் கட்டி அணைத்து உடல் புல்லரிக்க அவர்களை மடியில் அமர்த்திச் சிறிது நேரம் பேரானந்தத்தில் மூழ்கியிருந்தான். பேரழகர்களும் பெரும் வீரர்களுமான தன் புதல்வர்களின் பேச்சைக் கேட்டு மகிழ்ந்தான். மறுபடி எழுந்து அவ்விருவரையும் அழைத்துக் கொண்டு ஹேமலதை தங்கியுள்ள அந்தப்புரப்பகுதியை அடைந்தான். வன்னி இலைகளால் தினமும் சனிதேவனை வழிபட்டு வருகிற இளைத்திருந்த சுக்ல பக்ஷத்துப் பிரதமையிலுள்ள சந்திர கலைபோல் மெலிந்த ஹேமலதையைக் கண்டான். யானை நடைபோட்டுப் புதல்வர்களுடன் வருகிற மன்மதனைப் பழிக்கின்ற அழகரான தன் பதியைக் கண்டதும் ஆஸனத்திலிருந்து எழுந்து உடல் சிலிர்ப்புடன், ஆனந்தக் கண்ணீருடன் வெட்கத்தால் தலைகுனிந்தவளாக அவள் நெருங்கி வந்தாள். (118-127)*

चोलोऽपि तत्समीपस्थः पुरस्कुर्वंस्तनूभुवौ ।
देवीं हेमलतां तन्वीं भार्यामेवमुवाच ह ।। १२८

विक्रमचोल उवाच–
अयि हेमलते तन्वि मां जानीहि हि ते पतिम्।
इमौ कुमारौ त्वत्कुक्षिसम्भवौ नृपवल्लभे ।। १२९

शनैश्चरमहापीडामनुभुक्त्वा समागतौ ।
त्वां द्रष्टुं मत्प्रियामद्य महादेवप्रसादतः ।। १३०

कण्व उवाच—

इति प्रोक्तवति ब्रह्मन्कल्माषचरणे नृपे।
एषा हेमतला योषा ववन्दे नृपतिं प्रियम्॥ १३१

स्वपादप्रणतां तन्वीं समुत्थाप्य महीपतिः।
समालिलिङ्गे सुदृढं सानन्दाश्रुविलोचनः॥ १३२

पुष्पवृष्टिः पपाताशु राज्ञ्या राज्ञश्च मूर्धनि।
देवदुन्दुभयो नेदुर्ननृतुश्चाप्सरोगणाः॥ १३३

देवश्च कृत्तिवासेशो मार्ताण्ड्यादिग्रहैस्सह।
सुप्रसन्नोऽभवत्तत्र सह बालाङ्कुराम्बया॥ १३४

ब्रह्मविष्णुदिशानाथैः सर्वैरसुरनिर्जरैः।
शिवो गम्भीरया वाचा सभार्यातनयं नृपम्॥ १३५

प्रोवाच प्राञ्जलिं भक्तं कृपयाऽऽदृतमानसः।

*சோழனும் அவளை நெருங்கி, புதல்வர்களை முன்னிட்டுக் கொண்டு மனைவி ஹேமலதா தேவியிடம் சொன்னான். ''ஹேமலதே! நான் உன் கணவன். இவ்விருவரும் நீ பெற்றெடுத்த புதல்வர்கள். சனியின் துன்புறுத்தலை நன்று அனுபவித்து வந்து மஹாதேவனின் அருளால் உன்னைக் காண வந்துள்ளனர் என்றான். ஹேமலதை கணவரை வணங்கினாள். தன் சரணங்களில் பணிந்த மனைவியை எழுப்பி ஆனந்தக் கண்ணீருடன் அரசன் கட்டி அணைத்தான். வானிலிருந்து அவ்விருவர் மீதும் பூமாரி விழுந்தது. தேவதுந்துபிகள் ஒலித்தன. கிருத்திவாஸப் பெருமானும் பாலாங்குராம்பிகையுடன் சனிதேவன் முதலானவருடன் அங்கு தோன்றினார். தன்னை வணங்கி நின்ற அரசதம்பதிகளைப் பரிவுடன் பார்த்தார். மனைவி மக்களுடன் கை கூப்பி நிற்கிற அரசரைப் பார்த்துக் கூறினார். (128-135)*

शिव उवाच—

राजन्मय्यतिभक्त्या च पूजया च विशेषतः॥ १३६

प्रसन्नोऽस्मि वरार्होऽसि त्वमतीव नरेश्वर।
वरान्वरय भद्रन्ते चिन्तितान् राजनन्दन ॥ १३७

कण्व उवाच—
एवं वदति गौरीशे राजा प्राञ्जलिरब्रवीत् ॥ १३८

नमस्कृत्य महादेवं कृत्तिवासेश्वरं प्रभुम्।
राजोवाच—
शम्भो ते चरणाम्भोजे सततं भक्तिरस्तु मे ॥ १३९

इदमेव परं श्रेय इदमेव परं धनम्।
इदमेवं परं लक्ष्मीरिदमेव परायणम् ॥ १४०

इतः परतरं नास्ति प्रार्थनीयं महेश्वर।
कण्व उवाच—
इत्येवं भूपतिश्रेष्ठे वदति ब्राह्मणोत्तम ॥ १४१

प्रोवाच वचनं चारु शिवो गम्भीरया गिरा।
सुखी सिंहासनस्थस्त्वं सभार्यस्ससुतो बली ॥ १४२

चिरं पालय राज्यश्चेत्युक्त्वा देवस्तिरोदधे।
तिरोहिते महादेवे कृत्तिवासेश्वरे प्रभौ ॥ १४३

कल्माषचरणश्चोलो महिष्या मुमुदे सह।
ततः कल्माषपादोऽसौ ज्येष्ठपुत्रं महामतिम् ॥ १४४

शोणनेत्रं च्युतपुरे राजानमभिषिक्तवान्।
अकारयत्सोमवतीं विप्रां मातरमस्य ताम् ॥ १४५

एतं सुयज्ञशर्माणमाचार्यं पितरं तथा।
ततस्स राजा ससुतभार्यो गत्वाऽऽधिकां पुरीम् ॥ १४६

तालजङ्घं निहत्याशु प्राप्य सिंहासनं शुभम्।
शशास पृथिवीं राजा धर्मेण कृपयेशितुः ॥ १४७

समहिषीतनयः श्रियमासवांश्च्युतपुरेशकृपाबलतो नृपः ।
अधिपुरीं समवाप्य यशस्करीमनुशशास महीं शिवपूजकः ॥

इति तव मुनिवर्य श्रीशमीकाननस्य
श्रवणमधुरमीशो भक्तिदं श्रीप्रभावम् ।
सकलमुनिभिरीड्यं वर्णितं कृत्तिवास-
प्रभुवरकरुणायाश्चित्रमाख्यानमेतत् ॥ १४९

इति नवमोऽध्यायः ।

*அரசே! என்னிடமுள்ள உன் பக்தியாலும் உன் வழிபாட்டாலும் நான் திருப்தி அடைந்தேன். விரும்பியதைப் பெறத் தகுதியுள்ள நீ விரும்பியவற்றைக் கேட்பாய் என்றார். அரசன் ஈசனை வணங்கிக் கை கூப்பி நின்று வேண்டினன். ''பெருமானே! உம் திருவடிகளில் எப்போதும் எனக்கு பக்தி நிலைத்திருக்கட்டும். இதுவே பெறத் தக்கபெரும் மேனிலை, பெருஞ்செல்வம். பெருஞ்சீர், இது மேலான நிலை. இதைவிட வேண்டத்தக்கது எதுவுமில்லை'' என்றான். இதனைக்கேட்ட சிவபெருமான் கம்பீரமான குரலில் சொன்னார். ''நீண்ட நாட்கள் சிங்காதனத்திலமர்ந்து மனைவி-புதல்வர்களுடன் அரசை ஆள்வாய்'' என வாழ்த்தி மறைந்தார். மகாதேவன் கிருத்திவாஸப் பெருமான் மறைந்ததும் கல்மாஷபாதன் தன் மனைவியுடன் இனிது வாழ்ந்தான். தன் மூத்த புதல்வனை சோணாக்ஷனை வழுவூரின் அரசனாக்கினன். அந்தணத்தம்பதியான ஸோமவதியையும் ஸுயஜ்ஞசர்மாவையும் பெற்றோராக பாதுகாப்பாளராக அமர்த்தி, தான் இளையவனுடனும் மனைவியுடனும் ஆதிபுரியை அடைந்து தாளஜங்கனை அழித்து சிங்காதனத்தில் அமர்ந்து அரசை ஆண்டான். சிவனை வழிபடுபவனாக புகழ் தருகிற ஆதிபுரியை ஆண்டு பெருமை பெற்றான். காத்யாயனரே! சமீவனத்தில் நிகழ்ந்ததும் பக்தியை வளர்ப்பதும் முனிவர்களால் போற்றப் பெறுவதுமான கிருத்திவாஸப் பெருமானின் கருணை பெருக்கான சரித்திரம் இது. (136-149)*

## अथ दशमोऽध्यायः

### ।। बदरीवनमाहात्म्यम् ।।

कण्व उवाच—

श्रीमच्युतपुरप्रान्तबदरीकाननस्य च ।
माहात्म्यं शृणु वक्ष्यामि नानापुण्यकथाश्रुतम् ।। १

कात्यायन उवाच—

श्रीमच्युतपुरे स्वामिंश्चत्वारि गहनानि भो ।
किं प्रावृतानि परितो ह्याहोस्विद्दिग्गतानि किं ।। २

पिप्पलादिवनानि स्युः स्थितान्यस्मिन्पृथक्पृक् ।
कस्मिन्युगे प्रशस्तानि तानि पुण्यानि सद्गुरो ।। ३

विस्तार्य कृपया ब्रह्मन् भक्तस्य मम तानि ते ।
कति विस्तारमेतेषां वनानाञ्च वद प्रभो ।। ४

कण्व उवाच—

सम्यक्पृष्टं त्वया वत्स वासिनाञ्च हितावहम् ।
श्रोतॄणां सर्वपापघ्नं तच्छृणुष्व महामते ।। ५

श्रीमच्युतपुराद्वत्स प्रत्यग्दक्षिणतो मुने ।
अश्वत्थकाननं रम्यं परितो घटिकाद्वयम् ।। ६

कृते युगे प्रशस्तं स्यादस्माच्युतपुराद्बहिः ।
नानावापीयुतं रम्यं तटाकैरभिशोभितम् ।। ७

प्रत्युगुत्तरतोऽस्माच्च शमीवनमनुत्तमम् ।
नानातटाकसंयुक्तं समन्ताद्घटिकात्रयम् ।। ८

नानाऋषिगणैर्जुष्टं शस्तं त्रेतायुगे मुने ।
अस्माच्युतपुरात्प्रान्ते राजते वासिनां प्रियम् ।। ९

अस्मात्प्रागुत्तरे देशे काननं मुनिसेवितम्।
बदरीणाञ्च पुण्यानां सदा फलवतामपि ॥ १०

विस्तारायामतः पुण्यं घटिकात्रयशोभितम्।
द्वापरे तत्प्रशंसन्ति वासिनां मुनयो मुने ॥ ११

रम्यपर्वमहावंशराजिराजितभूतलम्।
श्रीमच्च्युतपुरात्प्रान्ते नानावापीसमन्वितम्॥ १२

अस्य प्राग्दक्षिणे भागे देवदारुवनं शुभम्।
विस्तारायामतो ब्रह्मन् क्रोशद्वयमनुत्तमम्॥ १३

नानामुनिगणैः सेव्यमगण्यमृगसेवितम्।
कृपावती प्रशस्ता स्याच्चतुर्ष्वपि मुनीश्वर ॥ १४

ये वै च्युतपुरान्तस्थबदरीवनवासिनः।
अर्चन्ति कृत्तिवासेशं श्रीमद्बालाङ्कुराम्बिकाम्॥ १५

पुनः कृपावतीनाम्नीं सर्वजीवदयापराम्।
ते वै कुबेरसदृशाश्श्रीमन्तो लोकपूजिताः ॥ १६

येऽर्चन्ति सोमवारे वा शुक्रवारे कृपावतीम्।
बालाङ्कुराम्बिकाख्यां ते प्राप्नुयुः पुत्रसम्पदः ॥ १७

नारी वा पुरुषो वाऽपि कृत्तिवासेश्वरप्रभुम्।
अनन्यशरणो देवं पूजयेद्यः प्रसन्नधीः ॥ १८

ऐश्वर्यं पुत्रभाग्यञ्च सदा दिव्यान्नमेव च।
प्राप्नुयादचिरादेव दीर्घायुष्यं च सत्तम ॥ १९

एतदर्थे पुरावृत्तमितिहासं पुरातनम्।
शृण्वतां सर्वपापघ्नं श्रोत्रानन्दकरं नृणाम्॥ २०

## அத்தியாயம் - 10

### பதரீ (இலந்தை) வனத்தின் பெருமை

*அரசு, வன்னி, இலந்தை மற்றும் தேவதாருவனங்கள் வழுவூரைச் சுற்றிச் சூழ்ந்துள்ளனவா? தனித்தனியே ஒவ்வொருதிக்கில் உள்ளனவா? யுகம் மாறுபடும்போது அவர்களின் நிலையில் மாற்றமுண்டா? காத்தியாயனரின் ஐயப்பாட்டை நீக்கக் கண்வர் விளக்குகிறார்.*

*வழுவூரின் தெற்கில் அரசங்காடு. கிருதயுகத்தில் புகழ் பெற்றது. பல ஓடைகளும் குளங்களும் உள்ளது. வடக்கில் வன்னி மரக்காடு. திரேதாயுகத்தில் புகழ்பெற்றது. ஓடைகளும் குளங்களும் நிறைந்தது. அதற்கும் வடக்கில் இலந்தைக்காடு. துவாபரத்தில் புகழ் பெற்றது. கிழக்கில் தேவதாருக்காடு. முனிவர்களும் எண்ணற்ற மான்களும் நிரம்பியது. பாலாங்குராம்பிகையே கிருபாவதீ என்ற பெயரிலும் புகழ்பெற்றவள். உயிரினமனைத்திடமும் கருணை கொண்டவள். அவளை வழிபடச் செல்வமும் நன்மக்கட் பேறும் நல்லுணவும் நீண்ட ஆயுளும் கிட்டும். அதைப் பற்றிய வரலாறு இது. கேட்கப் பாபம் விலகும். 1-20)*

यत्र पूर्वं मुनिसुताः कुटीं कृत्वा तपोऽचरन्।
तदाप्रभृति तां भूमिमाहुर्बालतपःकुटीम्॥ २१

तस्मिन्पुरा बालतपःकुटीरे कश्चिद्द्विजो विप्रसुतोऽतिमानी।
विपश्चिदर्चत्युमया समेतं श्रीकृत्तिवासेश्वरमन्तकारिम्॥ २२

श्रीरुद्र इति विख्यातो मातृपत्नीसुतान्वितः।
तस्यां बालतपःकुट्यामुवास दुरहंकृतिः॥ २३

तन्माता शिवभक्ता च भूतिरुद्राक्षधारिणी।
नाम्ना हैमवतीत्येव बभूव शिववत्सला॥ २४

सा च हैमवती नित्यं कृत्तिवाससमीश्वरम्।
बालाङ्कुराम्बिकानाथं संसेव्य नियमे स्थिता॥ २५

उत्सवं कारयेद्ब्रह्मन्सर्वलोकं स पूज्यते ।

*உள்ளத்தில் உறுதிமிக்கவரும் மன்மதனை வென்றவருமான சிவனும் அந்த மோஹினியின் அழகில் தன் வசமிழந்தார். இருவரும் காமவசப்பட்டுக்கூட சாஸ்தா தோன்றினார். அவர் தோன்றிய இடம் வித்யாதீர்த்தம் ஆனது. வெள்ளி, செவ்வாய், சித்திரை மாதம் பௌர்ணமி, அமாவாசை முதலிய நன்னாட்களில் நீராட நாடியதைப் பெறலாம். பங்குனி பௌர்ணமியில் நீராடி ஈசனுக்கு உற்சவம் கொண்டாடி மேனிலை பெறலாம். (69-74)*

सञ्जातमात्मनः शम्भुः सर्वावयवसुन्दरम् ।। ७५

अब्रवीदौरसं पुत्रं सर्वभूताधिपश्शिवः ।

शिव उवाच—

शास्तः पुत्र महातेजः सर्वलोकमनोहर ।। ७६

आवयोस्सम्भवत्वात्त्वां शिवविष्णोस्सदा जनाः।

वदन्तु मोहनाकारं नाम्ना हरिहरात्मजम् ।। ७७

शास्ता त्वं लोकानां भूतानां च यतस्ततः ।

ब्रुवन्तु लोकश्शास्तेति नाम्नाऽमरनृदानवाः ।। ७८

आवयोस्तनुजत्वाच्च ब्रह्मेन्द्रामरपूज्ययोः ।

नाम्ना देवोत्तम इति त्वां वदन्त्वखिला जनाः ।। ७९

कण्व उवाच—

इत्युक्त्वा जगतां नाथो विष्णुना सह शङ्करः ।

देवस्याग्नेयदिग्भागे तन्मध्येषूपनामिते ।। ८०

तस्य वायव्यकोणे च विद्यातीर्थाह्वयस्य वै ।

नानाद्रुमलताकीर्णे नानापक्षिगणैर्वृते ।। ८१

स्थापयामास शास्तारं तिष्ठेत्यत्राब्रवीच्छिवः ।

कलिकाले विशेषेण सर्वकामप्रदो नृणाम् ।। ८२

*வடிவழகுமிக்க சாஸ்தாவைக்கண்ட ஈசன் "எங்களிருவருக்கும் மகனாகப் பிறந்ததால்" ஹரிஹரஸுதன்" "ஐயன்" "பூதசாஸ்தா" (கட்டுப்படுத்தி ஆள்பவன்) என தேவரும் மனிதரும் கொண்டாடுவர். தேவோத்தமன் எனப் புகழ்பெறுவாய்" என்று வாழ்த்தி தன் ஆலயத்தின் தென்கிழக்கில் வித்யா தீர்த்தத்தின் வடமேற்கில் மரங்கள் சூழ்ந்த பகுதியில் பல பறவைகள் சுற்றிவர, அங்கிருக்கும்படி ஸ்தாபித்தார். கலியில் மிகவும் வரமருள்கிற பெருமான் அவர். (75-82)*

शिवेन स्थापितः शास्ता कन्दर्पातिमनोहरः ।
नमस्कृत्य तयोः पादौ प्रोवाचेदं हरीश्वरौ ॥ ८३

शास्तोवाच—
अद्य प्रभृति देवौ ये ब्राह्मणा वेदपारगाः ।
पूजयन्ति महाभक्त्या ते मां यन्तीह शाश्वतम् ॥ ८४

अस्मिन्विद्याह्वये तीर्थे सर्वाभीष्टफलप्रदे ।
स्नात्वा शुक्लाम्बरधरा भूतिरुद्राक्षधारिणः ॥ ८५

विप्राद्याः पुण्यकर्माणो ये भोगेच्छावशान्नराः ।
पूजयन्ति च नैवेद्यैः पायसाद्यैः सुमैरपि ॥ ८६

कल्हारकरवीराब्जनीलोत्पलदलादिभिः ।
चन्दनैः पट्टवस्त्रैश्च धूपदूपैश्च शोभनैः ॥ ८७

ते भुक्त्वेहाखिलान्भोगान्पुत्रपौत्रयुता नराः ।
त्वल्लोकं प्राप्नुवन्त्यन्ते सर्वलोकान्विहृत्य च ॥ ८८

कण्व उवाच—
इत्युक्त्वा लोककर्तारौ सर्वलोकचरोऽपि सन् ।
तस्मिंश्च्युतपुरे वासं कृतवन्योगतत्परः ॥ ८९

*சிவபெருமானால் ஸ்தாபிக்கப் பெற்ற ஐயன் சிவனையும் நாராயணனையும் திருவடிகளில் வணங்கி வேண்டினார் -*

''வேதம் ஓதுகின்ற அந்தணர்கள் என்னை வழிபட்டு நித்யநிலை பெறட்டும். வித்யா தீர்த்தத்தில் நீராடி விரும்பியதைப் பெறட்டும். வெண்ணிற ஆடை உடுத்தி விபூதி ருத்ராக்ஷமணிந்து வாழ்க்கையில் இனியதைப் பெற வேண்டி பாயஸம் முதலியவற்றை நிவேதித்து கழுநீர்ப்பூ, அரளி, தாமரை, அல்லி முதலியவற்றால் அலங்கரித்து பட்டாடை சார்த்தி, தூப - தீபம் முதலியவற்றால் வழிபட மனைவி மக்களுடன் உமது உலகத்தில் வாஸம் பெற்று இனிது வாழட்டும்'' என்று வேண்டினார். பின் யோகத்தில் லயித்தவராக அங்கு கோயில் கொண்டார். *(83-89)*

ये पूजयन्ति विप्रेन्द्र ब्राह्मणाद्याश्च मानवाः ।
पुत्रलक्ष्मीकामनया शास्तारं पश्चिमाननम् ।। ९०

भक्त्या मासत्रयं नार्यो नमस्कारप्रदक्षिणैः ।
प्राप्नुवन्ति श्रियं पुत्रांस्ता वै शास्तुः प्रसादतः ।। ९१

ये कुर्वन्ति प्रभोः शास्तुर्मण्टपं चालयादिकम् ।
प्राकारं गोपुरं वापि ते यान्तीश्वरसाम्यताम् ।। ९२

ये वै महोत्सवं शास्तुः प्रतिवर्षं प्रियेण च ।
ते मर्त्यलोकं विप्रेन्द्र प्राप्नुवन्ति कुबेरताम् ।। ९३

इति प्रतिष्ठाप्य हरीशपुत्रं देवस्य चाग्नेयदिशीश्वरोऽसौ
सम्मोहनार्थं गतवान्मुनीनां स्त्रीणां च तेषां हरिणा सहास्मात् ।। ९४

इति चतुर्दशोऽध्यायः ।

*

மேற்கு நோக்கி அமர்ந்தவரை மக்கட்பேறும் செல்வமும் பெற வணங்கி வலம் வந்து வழிபடுவர். அவரது ஆலயம், மண்டபம், மதில்சுவர் முதலியவற்றைப் புதுப்பிக்க, ஒவ்வொரு ஆண்டும் ஈடுபாட்டுடன் உற்சவம் கொண்டாட பெருஞ்செல்வம் பெறுவர். சாஸ்தாவை ஸ்தாபித்தபின் முனிவரையும் பெண்களையும் மயக்க சிவன் நாராயணனுடன் வனத்தினுட் சென்றார். *(90-94)*

*

## अथ पञ्चदशोऽध्यायः

## भिक्षाटनः मोहिनी च

कण्व उवाच—

ततः कल्याणवेषस्सन् विणुभार्यो वनेऽचरत्।
तया सह मुने क्रीडां कृत्वा दिग्वसनः शिवः ॥ १

वर्णाश्रमसमाचारविनिर्मुक्तस्तया सह।
शिवो भिक्षाटनं तेषां मन्दिरे कृतवान्द्विज ॥ २

वीणावाद्यैः कचिद्गायन्नृषिस्त्रीणाञ्च मोहयन्।
चचार मुनिगेहेषु शिवः केशवभार्यया ॥ ३

पदक्रमजटावाक्यं वदन्मुनिसुतेषु च।
चचार मुनिगेहेषु शिवः केशव भार्यया ॥ ४

जैमिनेः सूत्रवाक्यार्थविचारपटुसूरिषु।
चचार मुनिगेहेषु शिवः केशव भार्यया ॥ ५

श्रौतस्मार्तसमाचारविलोकनपरैर्द्विजैः।
अधिष्ठितेषु वेदोक्तस्वाश्रमोचितकर्मगैः॥ ६

प्रायश्चित्तविधानार्थविचारणपरैः कचित्।
चचार मुनिगेहेषु शिवः केशवभार्यया ॥ ६

कचित्पुराणश्रवणे दत्तश्रवणधर्मिषु।
चचार मुनिगेहेषु शिवः केशवभार्यया ॥ ८

मन्त्रपूतघृताहुत्या वैतानानलभूमिषु।
चचार मुनिगेहेषु शिवः केशवभार्यया ॥ ९

कचिद्योगागमरतः कर्मठैस्सेवितेषु च।
चचार मुनिगेहेषु शिवः केशवभार्यया ॥ १०

அத்தியாயம் - 15

பிக்ஷாடனர், மோஹினீ

கண்வர் விளக்குகிறார் - மங்களமான வேஷமேற்று, விஷ்ணு மனைவியாகப் பின் தொடர, திசைகளே ஆடையாக, வர்ணாசிரம முறைகளிலிருந்து விடுபட்டவராக முனிவர்கள் வீடுகளில் சிவன் பிச்சை எடுத்தார். வீணையை வாசித்துப் பெண்களைக் கலக்கமடையச் செய்தார். வேதத்தின் பதம் கிரமம் ஜடை முதலிய முறைகளில் ஓதுபவராக, ஜைமினியின் மீமாம்ஸா ஸூத்ரங்களில் வாக்கியப் பொருள் பற்றிச் சர்ச்சை செய்பவராக, வேதமும் ஸ்மிருதிகளும் காட்டுகிற நடைமுறைகளை ஆராய்வதில் ஈடுபட்டுள்ள வீடுகளில் நுழைந்தார். வேதம் கூறிய வழியில் தம் தம் ஆசிரம நிலைக்கேற்ற சடங்குகளில் ஈடுபடுபவரும் தவற்றைத் திருத்தவும் தவற்றால் நேர்ந்த பாபத்தைப் போக்கவும் கடைபிடிக்கத் தக்க கழுவாய் முறைகளை ஆராய்பவரும் புராணம் கேட்பவரும், மந்திரத்தால் தூய்மை பெற்ற நெய்யை முறைப்படி அமைந்த குண்டத்தில் ஹோமம் செய்பவரும் எனப்பல தரப்பட்ட சடங்குகளில் ஈடுபட்ட அந்தணர் வீட்டில் கேசவ மோஹினியுடன் பிக்ஷை எடுத்தார். *(1-10)*

ततस्तं भिक्षमाणं तं हरिभार्यासमन्वितम् ।
अनेककोटिकन्दर्पसौन्दर्यापहसत्तनुम् ।। ११

मोहयन्तं द्विजस्त्रीणां सैरन्ध्रीणां महीसुर ।
विलोक्य शङ्करं नार्यो मुमुहुश्च तपस्विनाम् ।। १२

तं दृष्ट्वा मायया काश्चिन्मोहिता मुनिपुङ्गव ।
त्यक्तवस्त्राः शिवस्याग्रे मण्डितभ्रूलताः स्थिताः ।। १३

तथैव काश्चित्पश्यन्त्यः शिवमापादमस्तकम् ।
स्मरावेशान्मन्दहासमुख्यः स्युर्निरपत्रपाः ।। १४

काश्चिद्युवत्यो नार्यश्च स्ववस्त्रमपहाय च ।
भूषणान्यपि देवेशं विलोक्य सुरतोत्सुकाः ।। १५

काश्चिद्विचेलास्तं वीक्ष्य शिवमाशाम्बरं विभुम्।
तल्लिङ्गे पूजयन्त्यः स्युर्नयनोत्पलसत्सुमैः ॥ १६

काश्चिद्विवसना नार्यो मोहनाकारशङ्करम्।
उपकण्ठे समागत्य ताः स्युरालिङ्गनोत्सुकाः ॥ १७

काश्चिन्निरीक्ष्य देवेशमतिसुन्दरविग्रहम्।
निर्लज्जाश्च विवस्त्राश्च त्यक्त्वा च स्वपतीन्मुनीम्॥ १८

भो भो मां भुङ्क्ष्व भुङ्क्ष्वेति प्रोच्य धावन्ति तं प्रति।
वयं भक्ताश्च रक्ताश्च त्वयि कान्तात्मनायक॥ १९

अस्मान्सुनिश्चयं भुङ्क्ष्व प्रवदन्तीति काश्चन।

*ஹரியாகிற மனைவியுடன் கோடி மன்மத அழகனும், வீட்டிலுள்ள அந்தணப் பெண்களையும் பெண் உதவியாளர்களையும் மயக்குகிறவருமான ஆண்டியைக் கண்டு, பெண்கள் மயங்கி ஆடை நழுவ, புருவம் சுழிக்க, சிவனைத் தலையிலிருந்து கால்வரை உற்றுநோக்கி வெட்கமிழந்து புன் சிரிப்புடன் மயங்கி நின்றனர். அவர்களது பார்வை அவருடன் கூடி மகிழ்கிற ஆர்வத்தை வெளிப்படுத்தியது. அவரைக் கட்டியணைக்க முன் வந்தனர். என்னோடு உறவு கொள்வீர் எனச் சிலர் வேண்டினர். (11-19)*

इति ताभिर्मुनीनान्तु महिलाभिर्महेश्वरः ॥ २०

अन्वीयमानोऽनुगृहमटति स्म सदाशिवः।
कचिद्गायन्कचिद्वीणां वादयन्परमेश्वरः ॥ २१

आचकर्ष महर्षीणां पत्नीबृन्दममन्दभः।
ता नीत्वा गहने रम्ये निर्मानुष्ये महेश्वरः ॥ २२

रमयामास निपुणं मारशास्त्रविशारदः।
अनभिज्ञा रतिक्रीडाः कदापि मुनियोषितः ॥ २३

सम्यग्विशिक्षिताश्चन्द्रशेखरेण महीसुर।
प्रतिस्त्रियं महर्षीणां पुरुषः सन्महेश्वरः ॥ २४

रमयामास चाक्रामन्ब्राह्मणीनां पुनः पुनः ।
ता नार्यः पतिशुश्रूषां विहाय मुनिपुङ्गव ।। २५

आत्मानन्दाय देवेशं सेविरे परमेश्वरम् ।
विलीयमाननिखिलेन्द्रियजाला मुनिस्त्रियः ।। २६

देवं बुभुजिरे नित्यं शिवानन्दसुखं द्विज ।

*அந்த மயக்கமுற்ற பெண்கள் பின் தொடர வீடுவீடாகச் சென்று சிவன் பிக்ஷை எடுத்தார். அவரது வீணையின் ஒலியில் தம்மை இழந்தவர்களாகப் பின் தொடர அவர்களைக் காட்டினுள் அழைத்துச் சென்றார். காமகேளிக்கை வகையறியாத அவர்களுக்குக் காமகலையைப் புகட்டினார். ஒவ்வொரு பெண்ணிற்கும் ஒரு ஆடவரானார். பதியின் பணிவிடை பற்றி மறந்து தான் சுகம்பெற அவரோடு இன்பத்தில் ஈடுபட்டனர். (20-26)*

महर्षीणां सुतास्तेषां तद्भार्यामतिशोभनाम् ।। २७

दृष्ट्वा मन्मथविद्धाङ्गा निर्लज्जा विवशा भृशम् ।
त्यक्तचीरास्समालिङ्ग्य बलाद्बुभुजिरे मुने ।। २८

केचिन्नृत्यन्ति मोहेन मण्डितभ्रूविलासिनः ।
केचिच्च स्वकरास्फोटं कुर्वन्ति परिमोहिताः ।। २९

केचित्तद्योनिमालोक्य नमस्कुर्वन्ति मोहिताः ।
तदूरुमूलमालोक्य केचित्सम्भ्रान्तमानसाः ।। ३०

तत्पादकमलद्वन्द्वे प्रणमन्त्यतिमोहिताः ।
केचिदुक्त्वा तु महिलां सम्यक्तामिति मोहिताः ।। ३१

नित्यमेवं मयि कृपां कुरुष्वेति ब्रुवन्ति च ।
हे सुन्दरि महाभागे दासे त्वत्पदपूजके ।। ३२

कृपाकटाक्षं कुरु ते मयि केचिदितीरिताः ।
हे सुभ्रु मम चार्वङ्गी मयि कल्याणदायिनी ।। ३३

भव त्वं तव शिष्येऽस्मिन्निति केचिद्ब्रुवन्ति च।
निपीड्य पादयुगलं हस्ताभ्यां केचिदास्तिके॥ ३४

नमच्छीर्षविमोहेन नः पाहीति ब्रुवन्ति च।
अयि कल्याणि मद्देहं तवाधीनं विधेहि च॥ ३५

इति केचिद्वदन्ति स्म मायया परिमोहिताः।
त्वन्मुखाब्जं दर्शयस्व मन्दस्मेरातिसुन्दरम्॥ ३६

अस्माकं मन्मथार्तानामिति केचिद्ब्रुवन्ति च।
केचिद्ध्यायन्ति मोहेन तत्सम्भोगरता इव॥ ३७

निमील्य नयने विप्रास्तद्ध्यानास्तत्परायणाः।
केचित्तिष्ठन्ति मोहेन पुलकाङ्कितविग्रहाः॥ ३८

एवं मुनीनां पत्नीनां कुलं भ्रान्तमभून्मुने।

*சிவனது மனைவியாக மோஹினியாக வந்த விஷ்ணுவுடன் வாலிபத்திலிருந்த முனிகுமாரர்கள் வெட்கமின்றி தன் நிலை இழந்து சுற்றினர். கைதட்டிக் கலங்கிக் கூத்தாடினர். இன்பம் தந்து மகிழ்விக்கும்படி வணங்கிவேண்டினர். என் உடலை உன் வசப்படுத்துவாய் என்றனர். முகத்தை என்பால் திருப்புவாய் என வேண்டினர். இவ்வாறு முனிவரும் அவர்களது மனைவிகளும் மயங்கி நின்றனர். (27-38)*

तं दृष्ट्वा मुनयस्सर्वे कुपितास्तत्प्रियाश्च तम्॥ ३९

अतीव परुषं वाक्यं प्रोचुस्तं प्रति सुव्रत।
शेपुश्च शापैस्तं ब्रह्मन् तन्मायामोहिता भृशम्॥ ४०

शापे च विफले जाते परधाम्नि कृते द्विजाः।
ततश्चारभिरे यज्ञमाभिचारात्मकं मुने॥ ४१

बृहच्छ्रेणिमहास्थाने सर्वसिद्धिप्रदायके।
त्रिकोणकुण्डमाकल्प्य शत्रुसंहारपाटवम्॥ ४२

आथर्वणविधानेन तत्र चक्रुर्हुतक्रियाम्।
तत्र भूतानि वेतालाः पिशाचा ब्रह्मराक्षसाः ॥ ४३

सम्बभूवुर्महाकायाः शत्रुसंहारकारिणः।
तान्प्रोचुस्ते महाभागा मुनयः कुपिताननाः ॥ ४४

संहरन्तु महाधूर्तं मायिनं कुहतापसम्।
इत्युक्तेषु मुनीन्द्रेषु ते ग्रहाः कृत्रिमोद्भवाः ॥ ४५

प्रेरिताश्च मुनीन्द्रैस्तं परिवव्रुर्महेश्वरम्।
तान्दृष्ट्वा देवदेवेशः कृतवान्नृत्तमुत्तमम्॥ ४६

ईशानाख्यमहादेवस्तेन नृत्तेन वै मुने।
प्रशान्तास्सौम्यकर्माणो बभूवुः परिचारकाः ॥ ४७

विफलेषु च भूतेषु निजकोपोद्भवेषु च।
तेन सञ्जातकोपास्ते पुनश्चक्रुर्महर्षयः ॥ ४८

होममाथर्वणैर्मन्त्रैः क्रूरैर्भीमं महीसुर।
तस्मात्समभवद्वह्निर्बडबाख्यो महामुने॥ ४९

ज्वालामालो महोवेगो युगान्ताग्निसमोऽपि सन्।
किं कर्तव्यं मया विप्रा युष्मत्कोपभवेन वः ॥ ५०

इत्युक्ता मुनयस्सर्वे बडबाख्यकृशानुना।
प्रोचुस्तं कोपसंयुक्तास्त्वाभिचारभवानलम्॥ ५१

कुतापसं सदा स्त्रैणं वर्णाश्रमविवर्जितम्।
दुष्टयोषासहचरं दह वह्ने त्वसज्जनम्॥ ५२

इत्युक्तवत्सु मुनिषु स वह्निरतिवेगतः।
आगत्य दूरादालोक्य शिवमापादमस्तकम्॥ ५३

मत्वा परशिवं नत्वा स्थितः शिवसमीपतः।
प्रफुल्लरुद्रकुसुमच्छायं दाहविवर्जितम्॥ ५४

आगतं वह्निमादाय वामहस्ते दधार ह ।

*இதனைக் கண்ட முதிர்ந்த முனிவர்கள் அவ்விருவரையும் சபித்தனர். சாபம் வீணானதைக் கண்டு கோபம் கொண்டு ஆபிசார ஹோமம் செய்தனர். அதர்வ வேத முறைப்படி எதிரியை அழிக்க ஹோமம் நடந்தது. பூதங்களும், வேதாளங்களும், பிசாசுகளும், பிரும்மராக்ஷஸர்களும் வேள்வித்தீயிலிருந்து வெளிவந்தனர். முனிவர்கள் அவ்விருவரை அழிக்கும்படி ஆணையிட்டனர். இவை சிவனைச் சூழ நெருங்கினர். சிவன் ஈசான சிவனாகி நடனமாடினார். அதில் பூதங்கள் முதலியவை அடங்கிவிட்டன. தம் முயற்சியனைத்தும் வீணானதால் வெகுண்ட முனிவர் மறுபடி அபிசார வேள்வி புரிய வடவைத் தீ எழுந்தது. முனிவர்கள் பிக்ஷாடன வேஷத்தில் ஒரு பெண்ணுடன் வந்தப் போலி ஆண்டியை அழிக்க அதனை ஏவினர். சிவனது அருகில் வந்ததும் உக்கிரம் தணிந்த அதனைச் சிவன் தன் இடது கையில் தாங்கிக் கொண்டார். (39-54)*

अन्योन्यं सम्यगालोक्य सावधानसुमानसाः ।। ५५

पुनर्मुनीन्द्रास्सक्रोधा होमश्चक्रुस्समन्त्रकम् ।

तस्मात्कुण्डात्समुदभून्महाव्याघ्रो भयानकः ।। ५६

ऋषीणामग्निकल्पानां मानसाज्जातमन्युवत् ।

उद्भूतं व्याघ्रमालोक्य तस्मात्क्रूरनखायुधम् ।। ५७

संहर त्वं महादुष्टमिति संप्रेरितो मुने ।

व्याघ्रोऽपि तस्मादागत्य महामन्युसमन्वितः ।। ५८

कल्याणवेषं देवेशं संहर्तुमुपचक्रमे ।

शार्दूलं तादृशं देवः कराभ्यां प्रविदार्य च ।। ५९

तच्चर्म परिधत्तेऽसौ कटिदेशे मनोहरम् ।

ते पुनर्मृगमुत्पाद्य महाकायं महास्वनम् ।। ६०

प्रेरयामासुरीशाने संहर त्वं स्वनैरिति ।

स ननाद समागत्य मृगो होमसमुद्भवः ।। ६१

युगान्तकालजीमूतसमनादः शिवान्तिके।
तेन नादेन विप्रेन्द्र सारङ्गस्य महात्मनः ॥ ६२

प्रकम्प्यते स्म सहसा त्रैलोक्यं सचराचरम्।
महाशब्दं महाकायं प्रेरितं मुनिभिर्मृगम्॥ ६३

वामहस्ते दधाराशु क्रीडासारङ्गपोतवत्।
कार्कोटकनिभान्नागान्वीक्षणादेव मृत्युदान्॥ ६४

प्रेषयामासुरीशाने प्रवमद्गरलोल्बणान्।
तान्सर्पान्समुपादाय मल्लिकादामवच्छिवः ॥ ६५

दधार करपादेषु कृत्तिवासेश्वरः प्रभुः ।

*கோபம் கொண்ட முனிவர்கள் மறுபடி ஹோமம் செய்ய ருஷிகளின் கோபத்தின் உருவகமாக ஒரு பெரும்புலி வெளியானது. ''அந்தப் பெரும் துஷ்டனை அழிப்பாய்'' என அதனை முனிவர் ஏவ, சிவனது அருகில் அவரைத் தாக்க வந்த அதனைக் கிழித்துச் சிவன் அதன் தோலை இடுப்பில் அணிந்தார். மறுபடி பேருடல் கொண்ட கொம்பு மானை யாக குண்டத்திலிருந்து முனிவர்கள் வெளியாக்க, அது பிரளய காலத்து மேகத்தின் இடியோசை போன்று முழங்கிச் சிவனருகே வந்தது. சிவன் அதனை விளையாட்டாகத் தன் இடது கையில் தூக்கிப்பிடித்தார். கார்கோடகம் போன்ற பெரும்பாம்புகளும் இவ்வாறே அனுப்பப்பெற அவற்றை மல்லிமாலைபோல் கைகால்கால்களில் அணிந்தார். (55-65)*

तत्प्रकोपाच्च विप्रेन्द्रा अभिचारविशारदाः ॥ ६६

होमेन ससृजुः कुण्डान्महाकायं गजासुरम्।
सोऽपि नीलाञ्जनप्रख्यो महाकायो गजासुरः ॥ ६७

शुण्डाशूत्काररौद्रात्मा तान्मुनीन्समुवाच ह।
मुनीन्द्रा ब्रह्मसंपन्ना दृढव्रतपरायणाः ॥ ६८

किं कर्तव्यं मया ब्रूत युष्माकं ब्रह्मवादिनाम्।
करिणीत्यूचिषि ब्रह्मन्साटोपं बलदुर्मदे ॥ ६९

मुनीन्द्राः प्रोचुराथर्ववेदोत्पादितहस्तिनम्।
हे हस्तिन्सुदुराचारं शठं कामातुरं नरम् ॥ ७०

संहर त्वं सदा स्त्रैणं स्त्रीणां मोहनकारिणम्।
इत्युक्तवत्सु मुनिषु गजः पर्वतसन्निभः ॥ ७१

आजगाम महादेवं महाबृंहणभीषणः।
आगतं तं महाकायं गजं कालान्तकोपमम् ॥ ७२

विलोक्य सहरिः शम्भुर्हुङ्कारेण निराकरोत्।
निराकृतः करीन्द्रोऽपि शङ्करेणातिबृंहणम् ॥ ७३

मुञ्चन्नतिभयाद्ब्रह्मन्कान्दिशीको बभूव ह।

*கோபம் மிகுந்த முனிவர் மறுபடி அபிசார வேள்வித்தீயில் ஒரு பெரும் யானையை வெளிக்கொணர்ந்தனர். அந்த யானை முனிவர்களிடம் கூறியது - ''முனிவர்களே! பிரும்ம நிலை பெற்ற நீங்கள் திடமான நன்னடைமுறை வழுவாது நடப்பவர். நான் என்ன செய்ய வேண்டும்'' என வேண்டியது.*

*''போக்கிரி, துஷ்டன், காமவசப்பட்டவன், பெண்களின் பின் சுற்றுபவன், இவனை அழிப்பாய்'' எனச சிவனைக் காட்ட, பெருவேகத்துடன் அந்த மலை போன்ற யானை சிவனை நோக்கி வந்தது. ஹரியுடன் கூறிநின்ற சிவன் அதட்டி அதைத் தடுத்தார். சிவனது அதட்டலுக்குப் பயந்த யானை உரக்கப் பிளிறிக் கொண்டே மிரண்டு எங்கு சென்றது எனக் காணமுடியாமல் ஓடி மறைந்தது. (66-73)*

गजेऽपि विफले जाते मुनीन्द्राः क्रोधमूर्छिताः ॥ ७४

ते सम्भूय पुनर्ब्रह्मन् तमुपेत्य तपस्विनम्।
पृष्टवन्तो भवान्कोऽसि किमुद्दिश्य त्वमागतः ॥ ७५

को वाऽऽचारः को नु धर्मः को नु वर्णः क आश्रमः ।
एषा का कामुकी जाता तव सत्यं वदस्व नः ॥ ७६

इतीरितानाञ्च महामुनीनां सम्मोहितानां शिवमायया हि ।
कोपं यथाऽऽयाति परं मनस्सु तथैव शम्भुर्भगवान्व्यवोचत् ॥ ७७

इति पञ्चदशोऽध्यायः ॥

—*—

*தமது முயற்சிகளனைத்தும் வீணானதைக் கண்ட முனிவர்கள் கூடிப்பேசி ஆண்டி வேஷத்திலிருந்த சிவனிடம் அணுகிக் கேட்டனர். ''நீர் யார்? எதற்கு வந்தீர்? உம் நடைமுறை என்ன? எந்த அறவழி? எந்த வர்ணம்? எந்த ஆசிரமம்? இந்த காமுகி யார்? உண்மையைக் கூறுவீர்'' என்றனர். சிவமாயையில் மயங்கிய அவர்களிடம் அவர்களது கோபம் அதிகமாகும் வகையில் சிவன் கூறினார். (74-77)*

## अथ षोडशोऽध्यायः

## अरुन्धत्यनुग्रहः

कण्व उवाच—

इति तेषां वचः श्रुत्वा शङ्करो विष्णुना सह ।
प्रोवाच किञ्चिद्विप्रेन्द्रान्विहस्य परमेश्वरः ॥ १

शिव उवाच—

ईदृशोऽहं महाप्राज्ञाः न वर्णी च न चाश्रमी ।
स्वच्छन्दवर्ती नाचारः पुनर्वक्ष्याम्यसंशयः ॥ २

इदानीं भार्यया सार्धं तपः कर्तुमिहागतः ।
अनया धर्मचारिण्या सदा धर्मस्वरूपया ॥ ३

कण्व उवाच—

इति तद्वचनं श्रुत्वा मुनयो मोहिता भृशम् ।
प्रोचुर्ज्ञानानन्दमयं सविष्णुं परमेश्वरम् ॥ ४

मुनय ऊचुः—
स्त्रैण धिग्धिङ्महामूढ वस्त्रेणाच्छाद्य विग्रहम्।
त्यक्त्वा भार्यामिमां दुष्टां मोहयन्तीं तपश्चर॥ ५

कण्व उवाच—
इति तेषां वचश्श्रुत्वा मन्दहासमुखाम्बुजम्।
उवाचातीव संक्रुद्धान्मुनीनज्ञानमोहितान्॥ ६

शिव उवाच—
हे तापसाश्शृणुध्वं सा मम भार्या पतिव्रता।
न कदाचिदियं दुष्टा न बुद्ध्याप्यन्यमिच्छति॥ ७

मामेवानुचरन्तीयं मत्प्रिया मत्परायणा।
सदा मद्वशगा विप्राः सती च परमार्थतः॥ ८

मत्पादपूजनरता मच्छुश्रूषापरायणा।
मदनन्या मदानन्ददायिनी सत्यमीरितम्॥ ९

*அத்தியாயம் 16*

அருந்ததிக்கு அருள் புரிதல்

*கண்வர் கூறுகிறார் - அவர்களின் சொல்லைக் கேட்ட சிவன் விஷ்ணுவுடன் சிரித்தவாறே "நான் எந்த வர்ண - ஆச்ரமத்தையும் சார்ந்தவனல்ல. சுய விருப்பத்தின்படி நடப்பவன். தனித்த நடைமுறை கொண்டவன். இப்போது தர்மமே வடிவான, நேர்மையுடன் நடக்கிற இந்த மனைவியுடன் தவம் செய்ய இங்கு வந்தேன்" என்றார். இதனைக் கேட்டு மீண்டும் குழப்பமுற்ற அவர்கள் பேரறிவும் பேரானந்தமுமே வடிவான விஷ்ணுவுடன் கூடிய சிவனிடம் "பெண்களின் வசத்தில் மயங்கி நிற்பவனே! அறிவிலியே! முதலில் ஆடைகளால் உடலை மறைத்துக் கொள். இந்த துஷ்ட மனைவியைத் துறந்து பின் தவம் செய்வாய் என்றனர். அறியாமையால் தன்நிலை மறந்த முனிவரிடம் ஈசன் கூறினார் - "தாபஸர்களே! என் மனைவி மிகச் சிறந்த கற்புள்ளவள்.*

*எந்நிலையிலும் கெட்டவளல்ல. எந்த வேற்று மனிதரையும் விரும்புபவளல்ல. என்னிடம் அன்புமிக்கவள். என்னையே கதி ஆகக் கொண்டவள். எப்போதும் என் வசப்பட்டவள். என்னையே பின் தொடர்பவள். என் திருவடிகளையே வழிபடுபவள், எனக்குப் பணிவிடை புரிபவள், என்னைக் காட்டிலும் வேறுபட்டவளல்ல. எனக்கு ஆனந்தமளிப்பவள். இது உண்மை!" (1-9)*

कण्व उवाच—

इत्युक्तवति कामारौ सविष्णौ परमात्मनि ।
ऊचुर्मुने महामूढा मायया परमेशितुः ॥ १०

सम्भूयातीव संरुष्टा वदन्तः परुषं वचः ।
गच्छ गच्छ महामूढा भार्या ते दुष्टचारिणी ॥ ११

त्वं च वर्णाश्रमाचारविहीनो बुद्धिपूर्वकम् ।
नान्यमिच्छति मे भार्येत्यनृतं भवतेरितम् ॥ १२

अस्मद्भार्याकुलं नष्टं भवता विटवर्तिना ।
सुतानामावलिर्नष्टा वृषस्यन्त्या तव स्त्रिया ॥ १३

इत्युक्तवत्सु मुनिषु कोपसंरक्तचक्षुषु ।
शिवोऽपि तद्वचः श्रुत्वा पुनस्तानब्रवीद्वचः ॥ १४

शिव उवाच—

मया वो दूषितं स्त्रैणं न कदापि मुनीश्वराः ।
प्रार्थितो युष्मदीयाभिः शापभीत्याऽहमागतः ॥ १५

हे मुनीन्द्रा मया सत्यमीरितं नैव संशयः ।
मद्दृष्ट्या मम भार्येयं मदभिन्नाऽप्यविक्रिया ॥ १६

रागद्वेषभयक्रोधलोभमोहादिवर्जिता ।
पुण्यपापविनिर्मुक्ता सर्वदा परमार्थतः ॥ १७

अस्या न स्तश्च पितरौ श्वशुरौ चाप्ययोनिजा।
अहमेव गतिस्तस्यास्सैव मे परमा गतिः ॥ १८

तया विनाप्यहं नास्मि नास्ति सापि मया विना।
नावयोर्वस्तुतो भेदश्चन्द्रचन्द्रिकयोरिव ॥ १९

अहञ्च सर्वदा विप्रा वर्णाश्रमविवर्जितः।
न कर्ता न च भोक्ताऽहं न च कारयिता तथा ॥ २०

धर्माधर्मौ न मे विप्राः सर्वदा परमार्थतः।
भवतामात्मविज्ञानमशेषक्लेशनाशनम्॥ २१

नास्ति देहात्मबोधेन कृतं कर्माखिलं सदा।
मांसदृष्ट्या विलोक्यैनां माञ्च वेदविदां वराः ॥ २२

दूषणान्युक्तवन्तस्तु यूयं तन्नास्ति मे द्विज।
यद्ब्रूत यूयं गच्छेति मां प्रति ब्रह्मवित्तमाः ॥ २३

व्रतं समाप्य गच्छावो मासादावामनन्तरम्।
इति तद्वचनं श्रुत्वा मुनयः क्रोधमूर्छिताः ॥ २४

सर्वे विचार्य सम्भूय तमेवं पुनरब्रुवन्।

ஈசனின் மாயையில் அறிவிழந்து முனிவர்கள் ஒன்று கூடிக் கோபத்துடன் கொடூரமாகப் பேசினர். ''முட்டாளே! உன் மனைவி ஒழுக்கம் கெட்டவள். நீ சுய அறிவுடன் வர்ண - ஆசிரம வழிகளை விட்டவன். 'என் மனைவி - என்னைத் தவிர வேறொருவரை நாடமாட்டாள்' என்று கூறியது பொய். உன்னால் எம் மனைவிகள் கெட்டனர். அவளால் எம் புதல்வர்கள் கெட்டனர்'' என்றனர். சிவன் கூறினார். ''உமது பெண்ணினத்தை எப்போதும் கெடுக்கவில்லை. அவர்களின் வேண்டுகோளிற்கிணங்க, அவர்களது சாபத்திற்குப் பயந்து நான் வந்தேன். நான் சொல்வது ஸத்தியம். என் நோக்கில் என் மனைவி என்னைக் காட்டிலும் வேறுபட்டவளல்ல. காமம், கோபம், பயம், பேராசை, குழப்பம்

என எந்தக் கேடுமற்றவள். புண்யமும் பாபமும் தீண்டாதவள். இவளுக்குப் பெற்றோரோ - மாமனார் - மாமியாரோ கிடையாது. நான் ஒருவனே அவளுக்குக் கதி. அவளே எனக்கு மேலான கதி. அவளின்றி நான் இல்லை. நான் இன்றி அவள் இல்லை. சந்திரனுக்கும் நிலவிற்கும் இடையே போல் எங்களிருவரிடையே வேற்றுமையில்லை. நான் எப்போதும் வர்ண - ஆசிரம நிலைகளுக்கு உட்பட்டவனல்ல. நான் செயலாளனுமல்ல, செயலின் விளைவை அனுபவிப்பவனுமல்ல: செய்யத் தூண்டுபவனுமல்ல. எனக்கு நேர்மையோ நேர்மையின்மையோ கிடையாது. நீங்கள் ஆத்மாவை உணர்வதால் துயரமனைத்தும் நீங்கும். உடலை ஆத்மாவென நினைத்தே சடங்கனைத்தும் செய்யப்படுகின்றது. என்னையும் இவளையும் தசைகளாலானவர்களாக நோக்கி இகழ்கிறீர். எனக்குத் தசையாலான உடல் கிடையாது. எங்களை வெளியேறக் கூறினீர்கள். எங்கள் விரதத்தை முடித்து ஒரு மாதத்திற்குள் வெளியேறுவோம்''. இதனைக் கேட்ட முனிவர்கள் கோபத்துடன் கூறினர். (10-24)

मुनय ऊचुः
अहो विरुद्धं भवता प्रोक्तं चोरेण साहसात् ।। २५

न कर्ताऽहं न भोक्ताऽहं पुण्यपापविवर्जितः ।
वर्णाश्रमविनिर्मुक्तस्तपः कर्तुमिहागतः ।। २६

इत्येवं जल्पसि तथा महामूढोऽसि सांप्रतम् ।
कण्व उवाच—

इत्युक्त्वा मुनयः सर्वे तन्मायादीर्घमोहिताः ।। २७

लोष्टैश्च मुष्टिभिर्दण्डैः ताडयांचक्रिरे भृशम् ।
शिवं च भिक्षमाणं च देवं सहचरं हरिम् ।। २८

परिभूतस्तु तैर्ब्रह्मन् शिथिलीकृतविग्रहः ।
विष्णुना सह देवेशो भैक्षचर्यं चचारह ।। २९

दृष्ट्वाप्यरुन्धती तत्र शिथिलीकृतविग्रहम्।
प्रशान्तं भिक्षमाणञ्च भार्यया सह योगिनम्॥ ३०

पतिव्रताशिरोभूषा वसिष्ठमहिला तदा।
प्रणम्य सा महाभक्त्या प्रत्युद्गम्य तपस्विनी॥ ३१

प्रक्षाल्य पादौ तोयेन दत्वा चासनमादरात्।
संप्रोक्ष्य शिथिलं देहमभिघातं द्विजोत्तमैः॥ ३२

सन्धयामास भैषज्यैः शिवस्य परमात्मनः।
ततो देवं सभार्यं सा दत्वा भैक्षं यथाबलम्॥ ३३

पुनः शिवं प्रणम्यैवमब्रवीद्वचनं सती।
अरुन्धत्युवाच—
को भवान्कुत आयातः किमाचारो वदस्व मे॥ ३४

कल्याणगात्र सत्येन वनेऽस्मिन्किं प्रयोजनम्।

*''நீ திருடன். செயலாளனுமல்ல, செயலின் விளைவை அனுபவிப்பவனுமல்ல என்பது பொருந்தாதது. வர்ணமும் ஆசிரமுமற்றவன் தவம் செய்ய வந்ததும் பொருந்தாதல்லவா? என்று கூறி அவர்களை கூழாங்கற்களாலும் முஷ்டியாலும் தடியாலும் அடித்தனர். அதனால் தளர்ந்த இருவரும் மறுபடி பிக்ஷை எடுக்கச் சென்றனர். உடல் தளர்ந்து அமைதியுடன் பிக்ஷை நாடி வந்த இருவரையும் கற்புக்கரசியான அருந்ததி எதிர் நோக்கிச் சென்று வரவேற்றுக் கால்களை அலம்பி ஆஸனமளித்து அடியால் நேர்ந்த புண்களில் மருந்திட்டாள். வணங்கி இருவரையும் ''நீர் யார்? எந்த நடைமுறை கொண்டவர்? இக்காட்டிற்கு வந்தது எதற்காக?'' எனக் கேட்டாள். (25-34)*

कण्व उवाच—
इत्युक्तवत्यां विप्रेन्द्र वसिष्ठवरयोषिति॥ ३५

तामाह कृपया देवः केवलं मधुरं वचः ।

शिव उवाच–

नाहं देवो न गन्धर्वो न यक्षो न च राक्षसः ॥ ३६

न मनुष्यो न सर्पश्च न पशुर्न च पक्षिणः ।
न शब्दो नैव च स्पर्शो न च रूपरसादयः ॥ ३७

नाहं पृथ्वी न सलिलं न कृशानुर्न चानिलः ।
न चाकाशो न च प्राणो न बुद्धिर्नाप्यहङ्कृतिः ॥ ३८

न चक्षुर्न श्रुतिर्घ्राणं न जिह्वा न त्वगिन्द्रियम् ।
न कर्ताहं न भोक्ताहं न च वर्णाश्रमी सदा ॥ ३९

न च ज्ञानं न चाज्ञानं न साध्यो न च साधनम् ।
न साधकोऽहं कल्याणि सिद्धानां प्रवरोऽस्म्यहम् ॥ ४०

न नागोऽहं महाप्राज्ञो व्योमवत्सर्वगस्सदा ।
तथापि मण्डलादस्मात्सौराद्भेदमयादहम् ॥ ४१

आगतो लीलया सार्धमनया धर्मचारिणि ।
स्वच्छन्दवृत्तिराचारो मम चास्याश्च सुन्दरि ॥ ४२

मामेवं विद्धि संपूर्णं मम वाक्यपरिग्रहात् ।
प्रसन्नोऽहं तव परं भर्तृशुश्रूषयानया ॥ ४३

कण्व उवाच–

इत्युक्त्वा तामसौ ब्रह्मन्ननुगृह्य गृहान्तरम् ।
अगमद्भार्यया सार्धं भैक्षार्थं मुनिसत्तम ॥ ४४

*வஸிஷ்டரின் சிறந்த மனைவி இவ்வாறு கேட்டதும் சிவன் கூறினார். "நான் தேவனோ கந்தர்வனோ, யக்ஷனோ, ராக்ஷஸனோ, முனிவனோ, பாம்போ, பறவையோ, பிராணியோ அல்ல. ஒலி, தொடு உணர்ச்சி, உருவம், ருசி மணம், பூமி, நீர், அக்னி, காற்று, வானம், உயிர், அறிவு, அஹங்காரம், கண், காது, மூக்கு, நாக்கு,*

தோல் எதுவுமல்ல. செயலாளனோ, செயலின் விளைவை அனுபவிப்பவனோ அல்ல. எனக்கு வர்ணமோ ஆசிரமமோ இல்லை. ஜ்ஞானம், அஜ்ஞானம், கார்யம், காரணம், கர்த்தா என்ற பாகுபாடு இல்லை. நான் சித்தர்களின் முன் நிற்பவன். ஆகாயம்போல் எங்கும் நிறைந்திருப்பவன். ஆனால் இந்த ஸூர்ய மண்டலத்திலிருந்து லீலையாக வெளிப்பட்டு இவளுடன் சுயவிருப்பப்படி நடப்பவனாக உலாவுகிறேன். என் சொல்லை ஏற்று என்னைப் பூர்ணனாகக் காண்பாய். உன் கணவருக்கு நீ செய்கிற பணிவிடைகளைக் கண்டு மகிழ்கிறேன் என்று கூறி அங்கிருந்து வேறு வீட்டிற்குப் பிக்ஷைக்காகப் புறப்பட்டார். *(35-44)*

गतेऽस्मिन्देवदेवेशे भिक्षार्थं साप्यरुन्धती ।
दध्यौ योगं समास्थाय परब्रह्माभिधं शिवम् ।। ४५

निरञ्जनं निराकारं निर्विकल्पं निरामयम् ।
सच्चिदानन्दसन्दोहं शाश्वतं परमं महत् ।। ४६

आनन्दममलं शुद्धमुपास्यं गुणमूर्तिभिः ।
एवं ध्याते परशिवेऽप्यरुन्धत्या परात्परे ।। ४७

प्रादुरासीत्परं ज्योतिः परमानन्दवारिधिः ।

அவர் பிக்ஷைக்காகச் சென்றதும் அருந்ததி யோக நிலையில் அமர்ந்துத் தியானித்து, வந்தவர் பரம்பொருளான பரமசிவனே என உணர்ந்தாள். அப்பழுக்கற்றவர், உருவமற்றவர், நிலை மாறுதவர், குறையற்றவர், பேரிருக்கை பேரறிவு - பேரானந்தக் குவியல், நிலைத்த பெரும் பரம்பொருள். முக்குண வடிவிலுள்ள மும்மூர்த்திகளால் வழிபடப் பெறுபவர் என்று உணர்ந்தாள். உடன் அவள் எதிரே பேரானந்தக் கடலான பேரொளி துலங்கியது. *(45-47)*

सुप्रसन्नं महेशानं निर्गुणं सगुणात्मकम् ।। ४८

भक्त्या प्रणम्य देवेशं तुष्टाव रचिताञ्जलिः ।

अरुन्धत्युवाच—

न भूमिर्न जलं वायुर्न तेजोऽयं न पुष्करम् ।। ४९

न शब्दस्पर्शरूपादि नौमि केवलमीश्वरम् ।
न चक्षुर्न श्रुतिर्घ्राणं न जिह्वा न त्वगप्यलम् ।। ५०

यदेषां न समूहस्तं नौमि केवलमीश्वरम् ।

*அருந்ததியின் சிவஸ்துதி அந்தப் பரம்பொருள் குணங்களாகிய வேறுபாடுகளற்றது. அதுவே வடிவெடுத்து ஸகுணமாக தனக்குக் காட்சி தருவதை உணர்ந்து கை கூப்பித் துதித்தாள். ''பூமி, ஜலம், நெருப்பு, காற்று, ஆகாயம், ஒலி, தொடு உணர்வு, ஒளி, உருவம் என எதுவுமல்லாதது. கண் காது மூக்கு நாக்கு தோல் என்ற உணர்கிற இந்திரியங்களுமல்ல. இவற்றின் கூட்டுப் பொருளுமல்ல. அந்த ஈசனை வணங்குகிறேன். (49-50)*

न पीतं न च शुक्लञ्च न रक्तं न च कालिम । ५१

न ह्रस्वं नापि दीर्घञ्च नौमि केवलमीश्वरम् ।
न स्थूलं नातिसूक्ष्मञ्च न तिर्यक्स्थूलसूक्ष्मकम् ।। ५२

नासत्सत्सदसच्चापि नौमि केवलमीश्वरम् ।
यन्मूलं न विजानाति विष्णुः कोलाकृतिः प्रभुः ।। ५३

ब्रह्माप्यन्तर्महादेवं नौमि केवलमीश्वरम् ।

*மஞ்சளோ, வெளுப்போ, சிவப்போ, கறுப்போ, குட்டையோ, நெட்டையோ அல்ல. இவற்றிலிருந்து வேறுபட்ட ஈசனை வணங்குகிறேன். பருத்ததோ, நுண்ணியதோ, இருப்பதோ, இல்லாததோ, இருப்பதும் இல்லாததுமோ அல்ல. வராஹ வடிவெடுத்த விஷ்ணு அவரது அடிப்பகுதியையும் பிரும்மா முடிவான தலைப்பகுதியையும் அறிய இயலவில்லை. அந்தத் தனி இயல்பாளரான ஈசனை வணங்குகிறேன். (51-53)*

यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह ।। ५४

आनन्दं ब्रह्मणो वेत्ति नौमि केवलमीश्वरम् ।
भीषास्मात्पवते वायुर्भीषोदेति दिवाकरः ।। ५५

यद्भीषा धावति यमो नौमि केवलमीश्वरम् ।
यद्भीषा धावतीन्द्रश्च अग्निर्धावति यद्भयात् ।। ५६

उमासहायं गिरिशं नौमि केवलमीश्वरम् ।
इति स्तुवन्त्यां भार्यायां वसिष्ठस्य महात्मनः ।। ५७

आकाशादुदभूद्वाणी तां प्रति ध्यानतत्पराम् ।

*வாக்கிற்கும் மனத்திற்கும் அப்பாற்பட்ட ஆனந்தப் பேருணர்வு அவர். அவரிடம் பயந்து காற்று வீசுகிறது; சூர்யன் உதிக்கிருன்; யமன் ஓடுகிருன்; இந்திரனும் அக்னியும் ஓடுகின்றனர்''. அந்த உமையின் துணைவனை வணங்குகிறேன். என வசிஷ்டரின் மனைவி துதிக்கையில் த்யானத்தில் அமர்ந்த அவளை நோக்கி ஆகாசவாணி கூறிற்று. (57)*

आकाशवाण्युवाच–
अरुन्धति महाभागे पतिशुश्रूषणप्रिये ।। ५८

अस्मिंश्च्युतपुरे रम्ये शिवस्थानोत्तमोत्तमे ।
शिवलिङ्गं स्वनाम्नैव प्रतिष्ठाप्य कृतार्थताम् ।। ५९

अवाप्नुहि महासिद्धिं देवैरपि सुदुर्लभाम् ।
कण्व उवाच––
सन्तुष्टायां दिव्यवाचीत्युक्तवत्यामरुन्धती ।। ६०

देवस्य दक्षिणे भागे कृत्तिवासेश्वरस्य च ।
धनुर्ग्रहाणां त्रिशतमिते दूरे महेशितुः ।। ६१

लिङ्गं संस्थापयामास स्वनाम्ना सर्वसिद्धिदम् ।
तस्योत्तरे महातीर्थं विंशच्चापमिते मुने ।। ६२

तीर्थं त्रिवर्गदं नाम त्रिवर्गफलदं शुभम्।

*''கணவரின் பணிவிடையில் ஈடுபட்ட பெரும் பாக்யசாலியான அருந்ததியே! இந்தப் புனித வழுவூரில் உன் பெயரில் லிங்கம் அமைத்து வழிபட்டுப் பயனடைவாய். தேவருக்கும் கிட்டாத பெரு நிலை பெறுவாய்'' என்றது. உடன் அருந்ததி கிருத்திவாஸேசரின் ஆலயத்தின் தென்பகுதியில் முன்னூறு வில்லடிக்கப்பால் லிங்கத்தைத் தன் பெயரிட்டு (அருந்ததீசுவரர்) வழிபட்டாள். அதன் வடக்கில் திரிவர்கதம் என்ற தர்மம் பொருள் இன்பமளிக்கிற தீர்த்தத்தை அமைத்தாள். (58-62)*

यो वा त्रिवर्गदे तीर्थे नरः स्नात्वा सुभक्तितः ॥ ६३

अरुन्धतीश्वरं दृष्ट्वा रुद्रलोके महीयते।
स्त्रियो वा पुरुषो वापि ये वा भक्तिसमन्विताः ॥ ६४

अरुन्धतीश्वरं दृष्ट्वा त्रिः कृत्वा तु प्रदक्षिणम्।
यथाशक्ति धनं दत्वा विदुषे शिवयोगिने। ६५

ते ता वै हृद्गतानिष्टान्प्राप्नुवन्ति शिवाज्ञया।
कन्यागते दिनकरे त्रिवर्गदसरोवरे ॥ ६६

तीर्थे ये स्नान्ति मनुजाः पितरो यान्ति शाश्वतम्।
कन्यामासे भृगोर्वारे त्रिवर्गदसरोवरे ॥ ६७

या नारी भक्तिसम्पन्ना स्नाति पुत्रार्थिनी जले।
पातिव्रत्यार्थिनी वा सा विलोक्यारुन्धतीश्वरम् ॥ ६८

तत्तत्फलमवाप्नोति देवतीर्थप्रभावतः।
यो वै भाद्रपदे मासे चन्द्रयुक्ते दिवाकरे ॥ ६९

अत्र त्रिवर्गदे तीर्थे स्नात्वा सन्तर्प्य वै पितॄन्।
अरुन्धतीश्वरं दृष्ट्वा स्वपितॄनपि तारयेत् ॥ ७०

त्रिवर्गदस्य तीर्थस्य भक्त्या च परितस्तटम्।
इष्टकाभिश्शिलाभिर्वा यः करोति नरो दृढम्॥ ७१

तस्य पुण्यफलं वक्ष्ये शृणु कात्यायनामल।
इह लोके सुखी भूत्वा धनधान्यसुतैर्युतः॥ ७२

प्रेत्य प्राचेतसं लोकं भोगान्प्राप्यानुभूय च।
ब्रह्मलोकमनुप्राप्य विष्णुलोकं ततः परम्॥ ७३

तत्र कल्पत्रयं भुक्त्वा महाभोगानतीन्द्रयान्।
ततः शिवपुरं प्राप्य प्राप्नोति गणनाथताम्॥ ७४

*திரிவர்கத தீர்த்தத்தில் நீராடி அருந்ததீசுவரரைப் பக்தியுடன் வழிபடுபவர் சிவபதம் பெறுவர். மூன்று தடவை வலம் வருவதும், சிவயோகிக்குத் தானம் தருவதும், விரும்பியதைப் பெற்றுத் தரும். சூரியன் கன்னியில் சுற்றி வரும்போது (புரட்டாசியில்) நீராட முன்னோர் கடைத்தேறுவர். பெண்கள் புரட்டாசி வெள்ளியில் நீராடி ஈசனை வழிபட கற்பும் நன்மக்களும் பெறுவர். புரட்டாசியில் அமாவாசையில் பித்ருக்களுக்கு தர்ப்பணம் செய்வது சிறந்தது. நீர் நிலையைச் சுற்றி இறங்கு துறைகள் படிக்கட்டுகளுடன் அமைக்க, இம்மையிலும் மறுமையிலும் இன்புறுவர். தபோலோகம், ஸத்ய லோகம், விஷ்ணுலோகம், சிவலோகம் என மேன்மைபெற்று சிவகணங்களில் ஒருவனாவர். (63-74)*

चैत्रमासे तु चित्रायां पौर्णमास्यां विशेषतः।
अरुन्धतीशं गौरीशं प्रति पूजां समारभेत्॥ ७५

प्रातस्त्रिवर्गदे तीर्थे नरः सङ्कल्प्य वाग्यतः।
स्नात्वा शुद्धाम्बरधरस्त्रिपुण्ड्राङ्कितमस्तकः॥ ७६

रुद्राक्षमालाभरणो यजनद्रव्यसंयुतः।
पूजाञ्च कारयेन्मर्त्यस्सुसङ्कल्पपुरस्सरम्॥ ७७

तैलैश्च गोघृतैश्चैव नालिकेरोदकैरपि ।
गोक्षीरदधिभिः शुद्धैर्जलैः कर्पूरमिश्रितैः ॥ ७८

चन्दनैः रोचनामिश्रैर्विलिप्यारुन्धतीश्वरम् ।
मधुवत्सारवत्स्थूलहरिद्राभाम्रसम्भवैः ॥ ७९

फलैराच्छाद्य देवेशं धूपदीपनिवेदनैः ।
प्रीणयेद्गिरिजानाथं सर्वाभीष्टफलप्रदम् ॥ ८०

एवं यः कुरुते भक्त्या पूजां चारुन्धतीश्वरम् ।
स तु भुक्त्वाखिलान्भोगान्पुत्रपौत्रैः प्रणप्तृभिः ॥ ८१

अन्ते शिवपुरं प्राप्य गाणापत्यमवाप्नुयात् ।
अरुन्धतीशमाहात्म्यं ये शृण्वन्ति नरास्सकृत् ॥ ८२

स्त्रियो वा याः कन्यकाश्च विधवाः सधवा अपि ।
ते वसिष्ठसमानास्स्युस्ताश्चैवारुन्धतीसमाः ॥ ८३

इति षोडशोऽध्यायः ॥

*சித்திரா பௌர்ணமியன்று அருந்ததீசரையும் கிருத்திவாஸரையும் வழிபட, திரிவர்கதத்தில் நீராடி, திருநீறு - ருத்ராக்ஷமணிந்து, பூஜைப் பொருட்களுடன் ஆலயம் சென்று ஸங்கல்பம் செய்து கொண்டு, எண்ணெய், பசுநெய், இளநீர், பசுவின் பால், தயிர், கற்பூரத்தால் மணக்கிற தூய நீர், கோரோசனை கலந்த சந்தனக் குழம்பு முதலியவற்றால் நீராட்டி, நற்சுவைமிக்க மஞ்சள் நிறம் கொண்ட மாம்பழங்களால் மூடி, தூபம், தீபம், நிவேதனம் முதலியவற்றால் வழிபட, பெருவாழ்வு வாழ்ந்து சிவகண நிலை பெறுவர். அருந்ததீசரின் வரலாற்றைப் படிப்பவரும் கேட்பவரும் வசிஷ்டர் அருந்ததிக்கொப்பாவர். (75-83)*

*

## अथ सप्तदशोऽध्यायः

### हृत्तापहरतीर्थतीरे पर्वतेशः, अनसूयेश्वरः

कण्व उवाच—
ततस्तं भिक्षमाणं ते भार्यया सह शङ्करम्।
चरन्तं मुनयो दृष्ट्वा प्रोचुस्संपरिमोहिताः ॥ १

शापैरनभिभूतं तं कोपप्रस्फुरिताधराः ।
क्रोधरक्तान्तसंपृक्तनेत्रकोकनदच्छदाः ॥ २

मुनय ऊचुः—
तिष्ठ तिष्ठ सदा स्त्रैण दुराचार कुतापस।
पुरुषाधम दुर्बुद्धे कुतर्कनिरतानृत ॥ ३

स्त्रीणां सम्मोहनं मूढ सुदीर्घमतिसुन्दरम्।
लिङ्गमेतत्समुत्पाट्य गच्छास्मिन्भार्यया विना ॥ ४

कण्व उवाच—
इत्युक्त्वा मुनयो ब्रह्मन्शङ्करं जगतां गुरुम्।
विष्णुं विलोक्य महिलारूपं शेपुर्जगत्पतिम्॥ ५

मुनय ऊचुः—
मूढेऽङ्गने दुराचारे पतिवञ्चनतत्परे।
सुतानां मोहनं योनिं समुच्छिद्य सराधुना ॥ ६

*அத்தியாயம் - 17*

*பர்வதேசர், அனஸூயேச்வரர் பெருமை.*

*மனைவியுடன் பிக்ஷை எடுக்கிற ஆண்டியைக் கண்ட முனிவர்கள் தம் சாபத்தால் சிறிதும் துயருறாததைக் கண்டு கோபம் மிகுந்து உதட்டைக் கடித்து முகம் சிவக்கக் கூறினர்.*

''பெண்ணாசைமிக்கவனே! கெட்ட நடைமுறை கொண்டவனே! நீசனே! துர்புத்தியே! தர்க்கம் பேசுபவனே! பெண்களை மயக்குகிற நீண்ட உன் குறியைப் பிடுங்கி எறிந்துவிட்டு இந்த மனைவியை விலக்கிவிட்டு வெளியேறுவாய்'' என்றனர். பின் பெண் உருவிலுள்ள விஷ்ணுவை சபித்தனர். ''கெட்ட நடைமுறை கொண்ட பெண்ணே! கணவரை வஞ்சிப்பவளே! எம் புதல்வர்களை மயக்குகிற உனது மறைவிடத்தை வெட்டிப் போட்டு வெளியேறுவாய்'' என்றனர். (1-6)

कण्व उवाच—

एवमुक्तस्तु देवेशो मुनिभिर्ब्रह्मवादिभिः ।
स्मयमानमुखाम्भोजस्तान्मुनीनिदमब्रवीत् ॥ ७

शिव उवाच—

अज्ञानतिमिरान्धात्महृदया ज्ञानवर्जिताः ।
केवलं कर्मनिरता अहङ्कारगुणान्विताः ॥ ८

अमोघान्भवतां शापांस्तीर्णवानितरान्बहून् ।
प्रोक्तमेवं कुरुष्वेति भवद्भिर्यत्करोमि तत् ॥ ९

कण्व उवाच—

आभाष्यैवं मुनीन्सर्वान्स्वमायाकर्ममोहितान् ।
सुदीर्घं सुन्दरं लिङ्गं स्वकीयं चन्द्रशेखरः ॥ १०

उत्पाट्य भूमौ निक्षिप्य मुनीनां सन्निधौ शिवः ।
धर्मार्थकाममोक्षाणामिदं भवतु कारणम् ॥ ११

इत्युक्त्वा लोकरक्षार्थं तत्रैवान्तरधीयत ।
एवमुक्ता मुनवरैर्महिषी कुहनाङ्गना ॥ १२

सापि योनिं समुत्पाट्य तत्रैवान्तर्हिताऽभवत् ।
स्थापितं देवदेवेन स्वकीयं लिङ्गमुत्तमम् ॥ १३

एधते पर्वताकारं सर्वाश्चर्यकरं नृणाम्।
लिङ्गात्मकस्य देवस्य तस्य पर्वतरूपिणः ॥ १४

तद्योनिपीठमभवद्ब्रह्मविष्ण्वात्मकं द्विज।
लिङ्गस्य देवदेवस्य शिवस्य परमात्मनः ॥ १५

तीर्थं विराजते ब्रह्मन्नुत्तरे शीतलोदकम्।
यत्र लिङ्गं समुत्पाट्य स्थापयामास भूतले ॥ १६

तत्र हृत्तापहृन्नाम तीर्थमाविरभूत्पुरा।
तत्र फाल्गुनमासे तु स्नात्वाऽष्टम्यां सितेतरे ॥ १७

सर्वपापविनिर्मुक्तः शिवलोके महीयते।

*சிவன் சிரித்துக் கொண்டே அவர்களிடம் கூறினார் - ''அறியாமை எனும் திரை உம் கண்களை மறைத்துள்ளது. அறிவிலிகளான நீங்கள் அகந்தையுடன் சடங்கு புரிகிறீர்கள். உங்களது பல சாபங்களால் பாதிக்கப் பெறாத நான் நீர் இப்போது கூறியதை நிறைவேற்றுகிறேன்'' எனக் கூறித் தன் ஆண்குறியைப் பிடுங்கித் தரையில் முனிவர்களின் எதிரில் போட்டார். ''அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கையும் இது அளிக்கும்'' எனக் கூறி மறைந்தார். அந்தப் பெண்வேஷமிட்ட சிவபத்தினியும் அவ்வாறே தன்குறியைப் பிடுங்கிப் போட்டு மறைந்தாள். சிவன் பிடுங்கிப்போட்ட அங்கம் எல்லோரும் வியப்புறுமாறு மலைபோல் வளர்ந்தது. அந்த லிங்கத்திற்கு மோஹினி பிடுங்கிப்போட்ட யோனி பீடமானது. அது பிரம்மாவும் விஷ்ணுவும் இணைந்த உருவம். இந்த லிங்கத்தின் எதிரே ஹ்ருதயதாபஹரம் என்ற நீர் நிலை உள்ளது. அதில் பங்குனி கிருஷ்ண அஷ்டமியில் நீராடி லிங்கத்தை வழிபட சிவலோகத்தில் மேன்மை பெறலாம். (7-17)*

शिवं च शिवभार्यां च नापश्यन्मुनयस्ततः ॥ १८

तल्लिङ्गं ववृधे तत्र पर्वताकारमद्भुतम्।
तद्योनिरभवद्ब्रह्मन्विस्तीर्णा लिङ्गमावृता ॥ १९

देवस्याग्नेयदिग्भागे कृत्तिवासेश्वरस्य च ।
अष्टेषुपातमात्रे च राजतेऽद्याप्युमेशितुः ।। २०

लिङ्गं पर्वतसङ्काशं देवर्षिगणपूजितम् ।
तच्चाभवच्छैलसमं महादेवात्मकादपि ।। २१

पर्वतेश इति ख्यातं दर्शनात्सर्वसिद्धिदम् ।
यस्य दर्शनमात्रेण लिङ्गस्य परमात्मनः ।। २२

स्थापितस्य महेशेनाप्यापातालगतस्य च ।
प्राप्नोति सकलां सिद्धिं मनसाप्यभिवाञ्छिताम् ।। २३

लिङ्गस्योत्तरदिग्भागे राजमाने महत्तरे ।
हृत्तापनाशने पुण्यवारिणि श्रीमनोहरे ।। २४

वैशाखपूर्णिमायां तु स्नात्वा भक्तिसमन्वितः ।
अन्नपूजां महेशस्य कुर्यादिष्टार्थसिद्धये ।। २५

सर्वपापविनिर्मुक्तो गाणापत्यमवाप्नुयात् ।
पापाधिको वा पुरुषो हीनो वा पण्डितोऽपि वा ।। २६

पर्वतेशस्य हृत्तापनाशनस्य च वैभवम् ।
केन वा वर्ण्यते ब्रह्मन्विदुषा बुद्धिशालिना ।। २७

*சிவனையும் சிவனது மனைவியையும் முனிவர் காணாமல் திகைத்தனர். அந்த லிங்கம் மலைபோல் வளர்ந்தது. கிருத்திவாஸரின் ஆலயத்தின் தென் கிழக்கில் எட்டு வில்லடி தூரத்தில் இன்றும் அந்த சிவலிங்கம் விளங்குகிறது. மலைபோல் வளர்ந்ததால் பர்வதேசர் என்பர். பாதாளம் வரை ஆழ்ந்துள்ள அந்த லிங்கத்தை வழிபட நாடியதைப் பெறலாம். ஹிருதய தாப நாசன தீர்த்தத்தில் வைகாசி பௌர்ணமியில் நீராடி, பெருமானுக்கு அன்னாபிஷேகம் செய்ய பாபமனைத்தும் விலகும். சிவகணத்தில் ஒருவராகலாம். இவற்றின் பெருமை சொல்லிலடங்காதது. (வழுவூருக்கு அருகே பண்டாரவாடையில் இந்த ஆலயம். (18-27)*

पुरा कश्चिद्द्विजो मूढो धर्मवानिति पापधीः ।
प्रतिग्रहपरो नित्यं चण्डालेष्वपि दुर्मतिः ॥ २८

सर्वस्त्रीरतिलोलश्च सर्वनिन्दापरायणः ।
नास्तिकोऽसत्यनिरतो नानाधान्यादिविक्रयी ॥ २९

निरन्तरदुराचारो धर्मशास्त्रविदूषकः ।
स्वस्त्रीत्यागी पितृत्यागी मातृदूषणतत्परः ॥ ३०

निर्घृणो देहमानी च नित्यकर्मविवर्जितः ।
पाषण्डः पापनिरतः परेषु कलहप्रियः ॥ ३१

स धर्मपुरवासी च कावेर्या दक्षिणे तटे ।
पापीयान्स च दुष्टात्मा विद्वानपि च रागवान् ॥ ३२

*தர்மவான் என்ெறாரு அந்தணன். தானம் வாங்குவதில் ஆர்வமிக்கவன். கீழாேனாரிடம் பெறத் தயங்க மாட்டான். பெண்பித்தன். பிறரைத் தாழ்த்திப் பேசுவான். நாஸ்திகன். பொய் சொல்வான். தானியங்களை விற்பதே அவன் தொழில். தர்ம சாஸ்திரத்தைத் தூற்றுவான். தன் மனைவியையும் பெற்றோரையும் விலக்கியவன். பரிவற்றவன். அன்றாடக் கடமைகளைத் தவிர்ப்பவன். பாபம் செய்யக் கூசாதவன். காவிரியின் தென் கரையிலுள்ள தர்மபுரத்தில் வசித்தான். (28-32)*

मध्याह्ने सह्यजातीरे ददर्शान्त्यजभामिनीम् ।
इन्द्रनीलमणिच्छायामूनषोडशवार्षिकाम् ॥ ३३

तनुमध्यां पृथुश्रोणीं पीनोत्तुङ्गपयोधराम् ।
सूक्ष्मदन्तां स्थूलनेत्रां नीलकुञ्चितमूर्धजाम् ॥ ३४

करिनासोरुयुगलां पूर्णचन्द्रनिभाननाम् ।
कर्णपाशद्वयोद्भासित्रपुकुण्डलमण्डिताम् ॥ ३५

केशोरुकविनिर्भातपेटिकोल्लासिमस्तकाम् ।
उद्वमन्मदिरामोदवासिताधरपल्लवाम् ॥ ३६

मत्तमातङ्गगमनां महनीयकलेबराम्।
दृष्ट्वा मुमोह दुष्टात्मा धर्मवान्पापपञ्जरः ।। ३७

तामुपेत्यातिरागेण प्राञ्जलिः पुरतः स्थितः ।
मन्मथाविष्टहृदयो धर्मवानित्युवाच ह ।। ३८

धर्मवानुवाच–
तर्के त्वां काममहिलां धृतोत्पलकरद्वयाम्।
यदि भामिनि चार्वङ्गी नवजाम्बूनदप्रभाम्।। ३९

ऊहे कमलगर्भाभां महालक्ष्मीमनिन्दिताम्।
यदि पद्मलसद्धस्तसरोजयुगलामिमाम्।। ४०

शङ्के त्वां शक्रमहिषीं नवकुङ्कुमसन्निभाम्।
यदि वज्रधरोद्भासिकरपङ्केरुहद्वयाम्।। ४१

इत्युक्त्वा चपलो ब्रह्मन्मातङ्गकुलकन्यकाम्।
आलिलिङ्गेऽतिरागेण कामबाणनिपीडितः ।। ४२

तस्या मैरेयगन्धाढ्यं चुचुम्बाधरपल्लवम्।
सापि बाला चञ्चलाक्षी चण्डालकुलसम्भवा ।। ४३

अङ्गीकृत्य विशेषेण ब्राह्मणं चारमद्दृढम्।
तया सार्कं विशालाक्ष्या चण्डाल्या द्विजसत्तम ।। ४४

चचार पृथिवीं कृत्स्नां धर्मवान्ब्राह्मणाधमः ।

*ஒருநாள் நடுப்பகலில் காவிரிக் கரையில் ஒரு கீழ்ச் சாதிப் பெண்ணைப் பார்த்தான். அவளது அழகிய நடை, உடை, பாவனைகளால் இவன் மயங்கி அவளை அணுகினான். ரதி, லக்ஷ்மி, இந்திராணி எனப் புகழ்ந்தான். மயங்கி நின்றவளைக் கட்டி அணைத்தான். அவளும் இவனிடம் மயங்கினாள். இருவரும் நாடெங்கும் உலாவி வந்தனர். (33-44)*

एवं बहुदिने जाते द्विजचण्डालयोषितोः ॥ ४५

प्रवृत्ते च दुराचारे महत्प्रारब्धकर्मणा ।
अनेकजन्मसुकृतपुण्यानिलनिवीजितः ॥ ४६

प्राप च्युतपुरं ब्रह्मन् चण्डाल्या सह भूसुरः ।
तत्र तत्राटनं कृत्वा पिप्पलादिवनानि वै ॥ ४७

देवदारुवने चास्मिन् चण्डाली च द्विजाधमः ।
हृत्तापनाशने तीर्थे स्नानात्पापविनाशने ॥ ४८

स्नात्वा च शम्भुं विप्रेन्द्र देवदेवं ददर्श ह ।
दर्शनाद्देवदेवस्य तीर्थस्य स्नानमात्रतः ॥ ४९

निर्धूताखिलपापौघो दिव्यभावमुपेयिवान् ।
सापि चण्डालरमणी दर्शनात्पर्वतेशितुः ॥ ५०

निर्मलज्ञानसंपन्ना तीर्थस्नानस्य वैभवात् ।
शिवज्ञाने समुत्पन्ने चण्डालीभ्रष्टविप्रयोः ॥ ५१

कृपा बभूव विप्रेन्द्र शिवस्य परमात्मनः ।
जातायां करुणायाञ्च तयोः साम्बशिवस्य च ॥ ५२

सरस्वती तयोर्वाचि प्रादुरासीत्कृपाबलात् ।
तुष्टाव हृष्टचित्तः सन्कैलासपतिमादरात् ॥ ५३

*வெகுநாட்களுக்குப் பின் முன் செய்த நல்வினைப் பயனாக வழுவூர் வந்து அரசங்காடு, வன்னிக்காடு மற்றும் இலந்தைக்காட்டில் திரிந்து தேவதாருக் காட்டிற்கு வந்தான். இருவரும் ஹ்ருதய தாப சமனத்தில் நீராடிப் பின் ஈசனைத் தரிசித்தனர். ஈச தர்சனத்தால் அவன் செய்த பாபம் விலகியது. தெய்வ நிலை பெற்றான். அந்த சண்டாளப் பெண்ணும் நீராடி சிவதர்சனம் செய்ததால் தூய அறிவு பெற்றாள். இருவரிடமும் சிவதர்சனம் கிருபை காட்ட ஸரஸ்வதி அவர்களது நாக்கில்*

புகுந்தாள். தர்மவான் ஈசனைத் துதித்தான். (45-53)

धर्मवानुवाच–

शम्भुं चन्द्रकलाधरं त्रिणयनं भर्गं मृडं शाश्वतं
श्रीकण्ठं करुणाकरं पशुपतिं शूलायुधं शङ्करम्।
भक्तप्रार्थितदेववृक्षममलं प्रालेयभानुप्रभं
वन्दे सुन्दरनायकीसहचरं कैलासनाथं विभुम्॥ ५४

தர்மவான் இயற்றிய சிவஸ்துதி - மங்களத்தின் தோற்றுவாய், பிறை சூடி, முக்கண்ணர், பாபத்தை வறுத்தகற்றுபவர், துயருற்றவனை வருடி இன்பமுறச் செய்பவர், என்றும் உள்ளவர், விஷத்தைக் கழுத்தில் தாங்கியவர், பரிவுமிக்கவர், பசுபதி, சூலமேந்தியவர், மங்களம் வழங்குபவர், பக்தனின் விருப்பத்தைக் கற்பகதருவாக அளிப்பவர், தூயவர், காலைச் சூர்யனுக்கு ஒத்த ஒளி கொண்டவர், ஸுந்தர நாயகியுடனுள்ள கைலாஸ நாதரை வணங்குகிறேன். (54)

ईशानं वृषवाहनञ्च गिरिशं शार्दूलचर्माम्बरं
चोग्रं भीममुमापतिं परशिवं खट्वाङ्गिनं चेश्वरम्।
रुद्रं वेदमयं कुमारजनकं दक्षाध्वरध्वंसिनं
वन्दे सुन्दरनायकीसहचरं श्रीपर्वतेन्द्राधिपम्॥ ५५

பேராளுனர், இடபவாகனர், மலையில் அமர்ந்தவர், புலித்தோல் உடுத்தியவர், உக்ரர், பயங்கரத் தோற்றமுள்ளவர், உமையின் துணைவர், பரமசிவன், கட்வாங்கம் ஏந்தியவர், ஈசன், ருத்திரன், வேதவடிவினன், குமரனின் தந்தை, தக்ஷனின் வேள்வியைக் குலைத்தவர், ஸுந்தர நாயகி உடனுறை ஸ்ரீ பர்வதேச்வரரை வணங்குகிறேன். (55)

कामारिं कलुषापहं नतनृणां काम्यप्रदं कामिना-
मीशं विश्वपतिं पुरत्रयहरं फालानलाक्षं प्रभुम्।
स्थाणुं शर्वमिभेन्द्रवक्त्रपितरं गङ्गाधरं कामहं
वन्दे सुन्दरनायकीसहचरं कैलासनाथं प्रभुम्॥ ५६

மன்மதனின் எதிரி, வணங்கியவரின் உள்ளத்தழுக்கை நீக்குபவர், பற்றுள்ளவனின் ஆசையை நிரப்புபவர், உலகின் தலைவர், முப்புரமழித்தவர், நெற்றித் தீக்கண்ணர், மேலாளர், அசைவற்றவர், பாபத்தை நீக்குபவர், யானை முகத்தோனின் தந்தை, கங்கையைத் தாங்குபவர். காமனை எரித்தவர் - ஸுந்தரநாயகி உடனுள்ள கைலாஸநாதரை வணங்குகிறேன். *(56)*

सर्वज्ञं करुणार्णवं प्रमथपं खट्वाङ्गिनं शूलिनं
कल्याणाचलकार्मुकं भवहरं भक्तार्तिभङ्गं शिवम् ।
सर्पाकल्पमुमार्धविग्रहमजं श्रीनाथधात्रर्चितं
वन्दे सुन्दरनायकीसहचरं कैलासनाथं विभुम् ।। ௫௭

எல்லாமறிந்தவர், கருணைக் கடல், பிரமத கணத்தலைவர், கட்வாங்கம் ஏந்தியவர், சூலம் ஏந்தியவர், மேருமலையை வில்லாகக் கொண்டவர், ஸம்ஸாரக் கட்டை நீக்குபவர், அடியாரின் துயர் நீக்குபவர், மங்களமானவர், நாகாபரணர், உமைபாதி வடிவினர், பிறப்பற்றவர், விஷ்ணு மற்றும் பிரும்மனுல் பூஜிக்கப் பெற்றவர். ஸுந்தர நாயகீ ஸமேதரான இந்த கைலாஸநாதப் பெருமானை வணங்குகிறேன். *(57)*

देवं विष्णुकलत्रमन्धकरिपुं पापान्धकारावलि-
च्छेदक्रूरकरोदयं नतजनानन्दप्रदं भास्वरम् ।
मन्नाथं गिरिजापतिं गजरिपुं त्रैलोक्यचूडामणिं
वन्दे सुन्दरनायकीसहचरं कैलासनाथं विभुम् ।। ௫௮

தேவன், விஷ்ணுவை மனைவியாக்கியவர், அந்தகாஸுரனின் எதிரி, பாபமெனும் இருட்டைப் போக்குகிற கதிரவன், தன்னை வணங்குபவருக்கு ஆனந்தமளிப்பவர், ஒளிமிக்கவர், என்னைக் காப்பவர், மலைமகளின் கணவர், கஜாஸுரனின் எதிரி, மூவுலகின் சூடாமணி, ஸுந்தரநாயகி உடனுள்ள இந்த கைலாஸ நாதப் பெருமானை வணங்குகிறேன். *(58)*

कण्व उवाच–

एवं धर्मकृतस्तवं प्रतिदिनं प्रत्यूषसि प्राक्शिवं
यः शुद्धः पठति प्रफुल्लहृदयः प्राप्नोति कामांश्च सः ।
भक्तिश्चैव शिवाङ्घ्रिपङ्कजयुगे तां निश्चलां शाश्वतीं
पुत्रारोग्यधनानि सन्ततमहो लक्ष्मीं सदा निश्चलाम् ॥ ५९

*தர்மவான் செய்த இந்த ஸ்துதியை விடியற்காலையில் தினமும் தூய்மையுடன் உள்ளத்து மலர்ச்சியுடன் படிப்பவர் விரும்பியதைப் பெறுவர். சிவனது திருவடித் தாமரைகளில் சலியாத பக்தியும் மக்கட்பேறும் நோயின்மையும் செல்வமும் பெறுவர். (59)*

इति स्तुतो धर्मवता महापापवता भृशम् ।
स पर्वतेश्वरः शम्भुः प्रादुरासीदुमापतिः ॥ ६०

ततः प्रसन्नो विप्रेन्द्रं चण्डालीसहितं विभुः ।
प्राह गम्भीरया वाचा मधुराक्षरया शिवः ॥ ६१

शिव उवाच–

हे धर्मवन्महाभाग दर्शनान्मम तत्वतः ।
स्तोत्रेण त्वत्कृतेनाद्य तव पापो विनाशितः ॥ ६२

इतः परं महाभाग चण्डालीसहितः स्वयम् ।
मोक्षं गच्छस्व नितरां तस्योपायं वदाम्यहम् ॥ ६३

विंशेषुपातदूरे च देशे भो पश्चिमे मम ।
कृत्तिवासेशदेवस्य नैर्ऋत्यां दिशि सत्तम ॥ ६४

दशेषुपातदूरे च लिङ्गं ज्ञानप्रदं मम ।
अनसूयेश्वरं नाम्ना वर्तते मोक्षदं नृणाम् ॥ ६५

पूर्वमत्र मया सार्धं भिक्षमाणं महीसुर ।
मामाराध्यानसूयाभून्मद्भक्त्या सत्पतिव्रता ॥ ६६

प्रदत्वा च यथाशक्ति भिक्षामत्रिप्रिया वधूः ।
मल्लिङ्गं स्थापयामास रम्ये तालवने शुभे ।। ६७

तेन सा हरिकेशानां जननी च बभूव ह ।
दत्तात्रेयेशहिमरुग्नाम्नामत्रेरपि प्रिया ।। ६८

तालकान्तारवासित्वाद्भवन्ति मुनयो द्विज ।
मामनेकप्रदं शम्भुं नाम्ना लिङ्गात्मकं विभुम् ।। ६९

तालकान्तारनाथं मामनसूयेश्वराभिधम् ।
दृष्ट्वा नत्वा सकृद्विप्रः शिवलोके महीयते ।। ७०

तत्पुरस्तान्महातीर्थं ज्ञानामृतमिति श्रुतम् ।
तत्र स्नात्वा च पीत्वा च ब्रह्मज्ञानमवाप्नुयात् ।। ७१

ज्ञानामृताह्वये तीर्थे ब्रह्मज्ञानप्रदायके ।
आषाढे पूर्णिमायां तु सूर्यवारे च यः पुमान् ।। ७२

सर्वपापहरे शुद्धः स्नात्वा तालवनेश्वरम् ।
सर्वपापविनिर्मुक्तो गाणापत्यमवाप्नुयात् ।। ७३

अगम्यगामी यो विप्रो महापापयुतोऽपि वा ।
स्नात्वाऽत्र तीर्थे दृष्ट्वेशं स च मुक्तो भविष्यति ।। ७४

त्वमपि श्रद्धया युक्तश्चानया सह भूसुर ।
अत्र ज्ञानामृते तीर्थे स्नात्वा नत्वाम्बिकापतिम् ।। ७५

अनसूयेश्वरं तालवननाथं महीसुर ।
प्रदक्षिणत्रयं कृत्वा दत्वा किञ्चिद्द्विजाय वै ।। ७६

जप्त्वा पञ्चाक्षरशतं तत्र मुक्तो भविष्यसि ।
कण्व उवाच—
इत्युक्त्वा पर्वतेशस्तं धर्मवन्तं महीसुरम् ।। ७७

तिरोबभूव विप्रेन्द्र देव्या सह महेश्वरः ।

மஹாபாபியான தர்மவானின் துதியில் மகிழ்ந்த பர்வதேசுவரன் ஸுந்தரநாயகியுடன் அவன்முன் தோன்றினார். அருள் புரிந்து சாண்டாளியுடன் கூடிய அவனிடம் பேசினார் - ''தர்மவானே! உன் பாபமனைத்தும் அகன்றது. நீ முக்தி பெற உபாயம் கூறுகிறேன். கிருத்திவாஸ ஆலயத்தின் தென்மேற்கில் பத்துவில்லடி தூரத்தில் அனஸூயேச்வரர் உள்ளார். முன்பு அனஸூயை என்னை வழிபட்டு தன் சக்திக்கேற்ப பிக்ஷை தந்து தாலவனம் எனும் பனங்காட்டில் லிங்கம் அமைத்து வழிபட்டாள். தத்தாத்ரேயர், சந்திரன் முதலானோரின் தாயாவாள். தாலவனத்தின் (பனங்காட்டின்) ஈசனானதால் தாலவநேசர் என்றும் அனஸூயை வழிபட்டதால் அநஸூயேச்வரர் என்றும் வழங்குவர். அதன் எதிரில் ஜ்ஞானாம்ருத தீர்த்தம் உள்ளது. பிரும்ம ஜ்ஞானமளிக்கவல்லது. இதில் நீராடி ஈசனை வழிபட சிவகணத்தலைவராவர். பாபமனைத்தும் நீங்கும். நீயும் அதில் நீராடி அனஸூயேசனை மூன்று தடவை வலம் வந்து, அந்தணருக்குத் தானமளித்து பஞ்சாக்ஷர மந்திரத்தை நூறு தடவை ஜபித்து முக்தி பெறுவாய்'' என அருளி மறைந்தார். (60-77)

धर्मवानपि देवेशवाक्यं श्रुत्वा तदाज्ञया ॥ ७८

स्नात्वा ज्ञानामृते तीर्थे चण्डाल्या सह भूसुरः ।
अनसूयेश्वरं नत्वा त्रिः कृत्वा तु प्रदक्षिणम् ॥ ७९

नत्वा पुनः पञ्चधाऽसौ परिक्रम्य पुनः पुनः ।
तया सार्धं मुनिश्रेष्ठ गाणापत्यमवाप्तवान् ॥ ८०

इति परमरहस्यं पर्वतेशस्य शम्भोः
सकलकलुषहारिप्राज्यमाहात्म्यमेतत् ।
पठति परमभक्त्या श्रावयेद्ब्राह्मणान्यो
व्रजति शिवपदं सो यश्शृणोत्येकचित्तः ॥ ८१

इति सप्तदशोऽध्यायः

*தர்மவான் அவ்வாறே செய்து முக்தி பெற்றான். இது ரகசியமானது. பக்தியுடன் இவ்வரலாற்றைக் கேட்க படிக்க, அந்தணரைக் கேட்கச் செய்ய, சிவபதம் அடைவான். (78-81)*

## अथ अष्टादशोऽध्यायः

## मुनिभ्यः ब्रह्मणा शिवपारम्यकथनम्

कण्व उवाच—

तिरोभूते महादेवे विष्णुना सह शङ्करे।
तदा तं तस्य भार्यां च नापश्यन्मुनयो मुने॥ १

उत्पातोऽभूत्ततः सर्वलोकानां च भयङ्करः।
न तदा राजते सूर्यो न चन्द्रो न च पावकः॥ २

न भान्ति हरितः सर्वा न नक्षत्राणि न ग्रहाः।
भूकम्पश्च समुद्भूतो मन्त्रास्तेषां न भान्ति च॥ ३

निस्तेजसो निरालम्बा निर्वीर्या नीतिवर्जिताः।
ब्राह्मणा वेदविद्वांसः श्रद्धाहीनाः स्वकर्मसु॥ ४

एवं संक्षोभितेऽरण्ये मुनयः संशितव्रताः।
परस्परं समालोक्य ब्रह्मलोकं समाययुः॥ ५

सनकादिमहायोगिसेवितं चाप्सरोगणैः।
सिद्धगन्धर्वपतगकिन्नरैरभिसेवितम्॥ ६

तस्मिन्ब्रह्मसभामध्ये नारदाद्यैस्समावृते।
ब्रह्मविज्ञानविद्भिश्च योगिभिश्च विराजिते॥ ७

तत्र सिंहासने कोटिसूर्यस्यापि समप्रभम्।
चतुर्मुखैर्विराजन्तं पूर्णचन्द्रनिभैरपि॥ ८

गायत्र्या च सरस्वत्या विराजत्पार्श्वयुग्मकम्।
महाभुजगसङ्काशैश्चतुर्भिः करयष्टिभिः॥ ९

दधानमक्षमालां च कुण्डिकां च वराभयौ।
इन्द्रादिलोकपालैश्च समन्तादुपसेवितम्॥ १०

गङ्गागोदावरीसूर्यतनयानर्मदादिभिः।
युक्ताभिस्सिन्धुभिर्नित्यं सेवितं सागरैरपि॥ ११

ब्रह्माणं मुनयो दृष्ट्वाऽप्यभिवाद्य च तुष्टुवुः।

*அத்தியாயம் - 18*

*சிவனின் பெருமை - கண்வர் விளக்குகிறார். சிவபெருமானும் நாராயணரும் மறைந்ததும் அவர்களைக் காணாத முனிவர்கள் திகைத்தனர். பூமி நடுங்கியது, சூர்யனும் சந்திரனும் அக்னியும் ஒளி இழந்தனர், நக்ஷத்திரம் கிரஹங்கள் புலப்படவில்லை. திசை தெரியவில்லை. முனிவர் தாம் ஓதிய மந்திரங்களை நினைவிற் கொணர இயலாது திகைத்தனர். ஒளியிழந்தவர்களாக சக்தி குன்றி பிடிப்பிழந்தவர்களாயினர். தம் தம் கடமைகளின் ஆர்வம் குன்றிக் குழம்பினர். பிரம்மலோகம் சென்றனர். ஸனகாதி மஹாயோகிகள், ஸித்தர், கந்தர்வர், நாகர், கின்னரர் முதலான தேவகணங்கள், நாரதர் முதலான பிரும்ம ஜ்ஞானிகள் சூழ பூர்ண சந்திரனுக்கொப்பன ஒளி கொண்ட நான்கு முகங்களுடன் காயத்ரியும் ஸரஸ்வதியும் உடனிருக்க, நான்குகைகளில் அக்ஷமாலை, கெண்டி, வர அபய முத்திரைகள் தாங்கி, திக்பதிகள் சூழ அமர்ந்த பிரும்மாவைக் கண்டனர். கங்கை, கோதாவரி, யமுனை, நர்மதை, ஸிந்து, நான்கு கடல்கள், இவர்கள் பணிவிடை செய்து கொண்டிருந்தனர். அவரை வணங்கி முனிவர்கள் துதித்தனர். (1-11)*

## ब्रह्मस्तुतिः

मुनय ऊचुः।
ॐ नमो ब्रह्मणे धात्रे विरिञ्चाय महात्मने॥ १२

चतुर्मुखाय देवाय योगिने परमेष्ठिने।
नमो हिरण्यगर्भाय योगिनां पतये नमः॥ १३

नमो धात्रे विधात्रे च लोकेशाय नमो नमः ।
सुरज्येष्ठाय शान्ताय नमः पङ्कजयोनये ।। १४

द्रुहिणाय विरिञ्चाय स्रष्ट्रे विश्वसृजे नमः ।
प्रजानां पतये तुभ्यं भूतानां पतये नमः ।। १५

ब्रह्मणे विष्णवे तुभ्यं रुद्राय परमात्मने ।
सृष्ट्यर्थं ब्रह्मरूपाय रक्षार्थं विष्णुरूपिणे ।। १६

संहारहेतो रुद्राय नमस्त्रिगुणमूर्तये ।
नमो विज्ञानरूपाय योगिनां योगदायिने ।। १७

नमो वेदान्तवेद्याय नमो वेदस्वरूपिणे ।
नमस्ते कर्मरूपाय कर्मणां फलदायिने ।। १८

कर्मठानां द्विजानान्तु शरण्याय नमो नमः ।
गायत्रीपतये तुभ्यं सत्यलोकनिवासिने ।। १९

नमस्सरस्वतीभर्त्रे सारस्वतप्रदायिने ।
दयामयाय देवाय सर्वभूतदयालवे ।। २०

दयावतां दयाकर्त्रे सर्वकर्त्रे नमोऽस्तु ते ।
सर्वभूतहृदिस्थाय विरिञ्चाय नमो नमः ।। २१

முனிவர்கள் செய்த பிரும்மஸ்துதி -

*எங்கும் நிரம்பியவர், உலகமூலப்பொருளை உருவாக்கியவர், உலகை அமைத்தவர், பலவாக ஆக்கியவர், நான்முகர், ஒளிமிக்கவர், யோகி, மேனிலையில் அமர்ந்தவர், செயலுருக்கு வந்த மூலப்பொருளைக் கருவில் சுமப்பவர், யோகிகளின் தலைவர், தேவர்களில் மூத்தவர், அமைதி கொண்டவர், தாமரையில் தோன்றியவர், உலகைப் படைத்தவர், மக்களின் தலைவர், உயிரினத்தின் தலைவர், மும்மூர்த்தி வடிவினரான பரமாத்மா, படைக்கப்*

பிரும்மாவாகவும் காக்க விஷ்ணுவாகவும், ஒடுக்க ருத்திரனாகவும் முக்குணவடிவம் கொண்டவர். மெய்யறிவு வடிவினர். யோகிகளுக்கு யோகம் கூடச் செய்பவர், உபநிஷத்தால் தெரிவிக்கப்படுபவர், வேதவடிவினர், கர்ம வடிவனர், கர்மங்களுக்குரிய பயனைத் தருபவர், வேள்வி முதலிய சடங்குகளில் ஈடுபட்ட அந்தணருக்குப் புகலிடம், காயத்ரியின் கணவர், ஸத்யலோகத்தில் வசிப்பவர், ஸரஸ்வதியின் கணவர், வாக்குவன்மை வழங்குபவர், தயை வடிவினர், தயைபுரிபவர், அனைத்தையும் உருவாக்குபவர், எல்லோர் உள்ளத்தில் வசிப்பவர். இந்த பிரும்மாவை வணங்குகிறோம். *(12-21)*

कण्व उवाच—

इति स्तुत्वा विधातारं प्रणम्य च पुनः पुनः ।
ज्ञापयाञ्चक्रिरे सर्वं मुनयो मुनिपुङ्गव ॥ २२

मुनय ऊचुः—

ब्रह्मन्विश्वगुरो धातः कमलासन शाश्वत ।
शृणु विज्ञापनं नस्त्वं ब्राह्मणानां कृपाकर ॥ २३

कश्चित्सभार्यः शान्तात्मा नग्नो विधृतवेषधृक् ।
वर्णाश्रमविनिर्मुक्तो देवदारुवनं गतः ॥ २४

मोहयामास सौन्दर्यान्नारीणां कुलमाशु नः ।
तस्य भार्या च सौन्दर्याद्दूषयमास पुत्रकान् ॥ २५

दत्ताः शापाः परंधामन् ते च शापाः पराहताः ।
आभिचारः कृतोऽस्माभिः सोऽपि देवे पराहतः ॥ २६

अस्माभिर्मुष्टिभिर्दण्डैस्ताडितश्च परात्पर ।
स्वकीयं लिङ्गमुत्पाट्य त्यक्त्वा भार्यां मुनीश्वर ॥ २७

तत्रैव भार्यया सार्धं क्षणादन्तर्हितोऽभवत् ।
उत्पाताश्चाभवन्नेव वयं भीताश्च शङ्कर ॥ २८

कोऽयं सभार्यः पुरुषो देवदारुवनं गतः ।
भवन्तमेव शरणं प्रपन्ना वयमीश्वर ॥ २९

कारुण्यतस्तमस्माकं ब्रूहि सर्वज्ञ शाश्वत ।
एवं विज्ञापितो ब्रह्मा ध्यात्वा तं त्रिपुरान्तकम् ॥ ३०

अस्तौषीत्परया भक्त्या देव(राज)चूडामणिं विभुम् ।

*இவ்வாறு துதித்த முனிவர்கள் அவரிடம் விண்ணப்பித்தனர். உலகின் குருவான பிரும்மாவே! மனைவியுடன் ஒருவன் சாந்தருக ஆடையின்றி வேஷமிட்டு தேவதாருவனம் வந்தான். வர்ணாசிரம முறையை விட்டவன். அழகால் பெண்களை மயக்குகிறான். அவனது மனைவி தன் அழகால் எங்கள் குமாரர்களைக் கெடுத்தாள். நாங்களிட்ட சாபம் அவர்களைப் பாதிக்கவில்லை. அபிசார வேள்வியும் பயனற்று விட்டது. கைகளாலும் தடியாலும் அடிக்கப்பட்ட அவர்கள் தங்கள் பிறப்புறுப்பைப் பிடுங்கி எறிந்து மறைந்தனர். உடன் பூமி நடுங்கிக் கொடூரமான நிகழ்ச்சிகள் ஏற்பட்டன. 'இவன் யார்! உம்மிடம் சரணடைந்த எமக்கு விளக்குவீர்!' இதைக் கேட்ட பிரும்மா தியானித்து உண்மை உணர்ந்து சிவபெருமானைத் துதித்தார். (22-30)*

ब्रह्मोवाच——

ॐ नमोऽहं पदार्थाय शिवाय परमात्मने ॥ ३१

नित्याय नित्यशुद्धाय निर्विकल्पाय ते नमः ।
नित्यतृप्ताय शान्ताय नादबोधाय ते नमः ॥ ३२

अलुप्ताय स्वतन्त्राय सर्वज्ञाय परात्मने ।
अनन्ताय नमस्तुभ्यं अप्रमेयाय ते नमः ॥ ३३

पञ्चब्रह्मस्वरूपाय षट्त्रिंशत्तत्वरूपिणे ।
षट्त्रिंशतां च तत्वानामतीताय नमो नमः ॥ ३४

निष्कलायातिसूक्ष्माय निराधाराय ते नमः ।
नमो निराश्रयाय श्रीपञ्चवर्णाश्रयाय च ॥ ३५

सच्चिदानन्दरूपाय सर्वलोकैकसाक्षिणे ।
महादेवाय गुह्याय सर्वान्तर्यामिणे नमः ॥ ३६

वेदाय वेदगम्याय वेदान्तज्ञानदायिने ।
वेदान्तवेदिनां पुंसां स्वात्मज्ञानप्रदायिने ।
निर्गुणाय निरीहाय नित्याय परमेष्ठिने ॥ ३७

उमासहायं परमेश्वरं विभुं त्रिलोचनं नीलकण्ठं प्रशान्तम् ।
देवं महान्तं पुरुषं योगिगम्यं विश्वाधीशं तं प्रपद्ये महेशम् ॥ ३८

பிரும்மா செய்த சிவஸ்துதி. நான் என்ற உணர்வின் பொருள், மங்களமானவர், பரமாத்மா, எப்போதும் உள்ளவர், தூயவர், வேறுபாடு காணஇயலாதவர், எப்போதும் நிறைந்தவர், அமைதி கொண்டவர், பிந்துவில் எழும் நாதப்பொருள், மறையாதவர், தன் விருப்பப்படி இயங்குபவர், எல்லாமறிந்தவர், எல்லை காணமுடியாதவர், அளவிட முடியாதவர், பிரும்மா விஷ்ணு ருத்ரன் ஈசுவரன் ஸதா சிவன் என்ற ஐந்து பிரும்மநிலை கொண்டவர், 36 தத்துவ வடிவினர், அந்த தத்துவங்களுக்கு அப்பாற்பட்டவர், பகுதியாகாதவர், மிக நுண்ணிய பொருள், ஆதாரம் கொள்ளாதவர், நோயற்றவர், பஞ்சாக்ஷர மந்திரத்தில் உள்ளவர், பேரிருக்கை, பேருணர்வு மற்றும் பேரானந்தம் வடிவானவர், உலகமனைத்தின் சாக்ஷி, பெருந்தேவன். மறைபொருள். அனைவரின் அந்தர்யாமி, வேதவடிவினர், வேதத்தால் உணரத்தக்கவர், வேதமுடிவின் அறிவானவர், வேதமுடிவை உணர்ந்தவருக்கு ஆத்மஜ்ஞானம் அருள்பவர், குணச்சிறப்பற்றவர், நாட்டமற்றவர், நித்யர், அனைத்திற்கும் அப்பாற்பட்டவர், உமையின் துணைவர், பரமேசுவரன், எங்கும் நிறைந்தவர், முக்கண்ணர், கருத்த கழுத்தினர், பேரமைதி கொண்டவர், மஹாதேவர், உள்ளத்தினுள் முழுவதும் நிரம்பி நிற்பவர், யோகிகளால் உணரத்தக்கவர், உலகின் மேலாளர், அந்த மஹேசனைச்

*சரணடைகிறேன். (31-38)*

कण्व उवाच–

इति स्तुत्वा परानन्दरूपं देवं महेश्वरम्।
चिरं ध्यात्वा परं धाम मग्न आनन्दवारिधौ ।। ३९

आनन्दाश्रूणि मुञ्चन्स पुलकाङ्कितविग्रहः।
मुहूर्तमभवत्तूष्णीमर्धोन्मीलितलोचनः ।। ४०

ततोऽनुभूय परमानन्दं लोकपितामहः।
उन्मील्याक्षीणि विप्रेन्द्र समाधिं शनकैस्त्यजन् ।। ४१

मुनीश्वरानपि प्राह देवदारुवनाश्रयान्।
ब्रह्मोवाच–
अहो महेश्वरस्साक्षात्सर्वलोकैकनायकः ।। ४२

विष्णुना च भुवं प्राप्तो देवदारुवने बुधाः।
भाग्यहीना भवन्तो हि दृष्ट्वाऽपि परिमोहिताः ।। ४३

भवद्भिः किं कृतं कर्म भवद्भिश्च कृतं वृथा।
जन्मान्तरसहस्रेषु कृतपुण्यफलं द्विजाः ।। ४४

शिवं विसृज्य मां प्राप्ता वृथा भो मोहवैभवात्।
यस्माज्जातं जगत्सर्वं यस्मिन्नेव प्रलीयते ।। ४५

तमागतं शिवं वीक्ष्य कथं मूढैरुपेक्षितम्।
वातादयो भयाद्यस्य स्वकार्ये च निरन्तरम् ।। ४६

प्रवर्तन्ते स ईशानो हा भवद्भिरुपेक्षितः।
यमासाद्य निवर्तन्ते विकल्पा मोहसम्भवाः ।। ४७

तस्याभिचारो मोहेन हा भवद्भिः कृतो द्विजाः।
कामक्रोधमहालोभविषवेगस्य भेषजम् ।। ४८

आगतं वेदकान्ताराद्धा भवद्भिरुपेक्षितम्।
ध्यायन्ति योगिनो नित्यं हृदये यं जितेन्द्रियाः ॥ ४९

तमागतं समासाद्य हा भवद्भिरुपेक्षितम्।
यस्तु सर्वजगत्साक्षी नित्यानन्दो निरञ्जनः ॥ ५०

तमागतं स्वयं मूढैर्हा भवद्भिरुपेक्षितम्।
एष ब्रह्मैष एवेन्द्र एष एव प्रजापतिः ॥ ५१

एष धाता विधाता च सर्वात्मा सर्ववर्जितः ।
शिवो रुद्रो महेशानश्शङ्करो ब्रह्मसंज्ञितः ॥ ५२

अभिधानाभिधेयादिभावहीनो निरास्पदः ।
प्रत्यङ्मात्रस्सदा स्वस्य भासा सर्वस्य भासकः ॥ ५३

सर्ववस्तुतया साक्षात्स्वयमेव विजृम्भितः ।
पञ्चक्लेशविनिर्मुक्तः श्रीमत्पञ्चाक्षराश्रयः ॥ ५४

कृपया केवलं क्षिप्रममूर्तो मूर्तिमाश्रितः ।
देवदारुवनं प्राप्तो विष्णुना विश्वयोनिना ॥ ५५

तमेव मुक्तिदं बुध्वा व्रजध्वं शरणं बुधाः ।
इदं पूर्वं कृतं कर्म भवद्भिरखिलं मुधा ॥ ५६

लिङ्गार्चनं विना तेन मोहिता देवमायया ।
तस्माद्भवद्भिर्यद्दृष्टं लिङ्गं भूमौ निपातितम्॥ ५७

तल्लिङ्गसदृशं लिङ्गं कृत्वा श्रद्धापुरस्सरम्।
योन्यां तस्यां प्रतिष्ठाप्य पूजयध्वं मुनीश्वराः ॥ ५८

पञ्चाक्षरेण मन्त्रेण प्रणवेन सहादरात्।
पूजयध्वं सपत्नीकाः स्वपुत्रैरखिलैः सह॥ ५९

यत्कृतं देवदेवेन विष्णुना सह शम्भुना ।
बुद्ध्वेन्द्रजालवत्सर्वं मायया द्विजसत्तमाः ॥ ६०

श्रीकालहस्तिशैलाख्ये स्थाने सर्वार्थसाधके।
माघमासे मखर्क्षे तु पौर्णमास्यायुते द्विजाः ॥ ६१

सिद्धैश्च योगिभिर्नित्यं सेविते सिद्धिकाङ्क्षिभिः ।
गच्छध्वं भार्यया सार्धं महाभक्तिसमन्विताः ॥ ६२

सुवर्णमुखरी नाम नदी यत्र स्थिता सदा ।
यस्यां गङ्गा मघर्क्षे तु स्नात्वा पूता स्वपापतः ॥ ६३

यस्यां गोदावरी स्नात्वा विमुक्ता पापपञ्जरात् ।
यस्यामन्यानि तीर्थानि स्नात्वा मुक्तानि पाप्मभिः ॥ ६४

तस्यां स्नात्वा जितक्रोधा मुनिश्रेष्ठा जितेन्द्रियाः ।
श्रीकालहस्तिशैलेशं शीघ्रं संसारमोचकम् ॥ ६५

दृष्ट्वा प्रदक्षिणं कृत्वा प्रणम्य भुवि दण्डवत् ।
यथाशक्ति धनं दत्वा श्रद्धया शिवयोगिने ॥ ६६

ब्राह्मणेभ्योऽथवाऽन्येभ्यो दिनमेकमुपोषिताः ।
पुनस्स्वमाश्रमं गत्वा पूजयध्वं महेश्वरम् ॥ ६७

देवदेवो महादेवः साक्षात्सर्वफलप्रदः ।
आगमिष्यति तं पूज्य प्रसादात्तस्य सुव्रताः ॥ ६८

ऐश्वरं परमं ज्ञानं लब्ध्वा वेदान्तवाक्यजम् ।
छित्वा मायां महानन्दं भुङ्ग्ध्वं वै मोक्षसंज्ञितम् ॥ ६९

*பேரானந்த வடிவான மஹேசப் பெருமானை நீண்ட நேரம் தியானித்து உள்ளத்தில் கண்டு ஆனந்தக் கடலில் அமிழ்ந்தவரான பிரும்மா, ஆனந்தக் கண்ணீருடன் உடல் சிலிர்க்கச் சிறிது நேரம்*

கண்களைப் பாதி மூடி மௌனமாயிருந்தார். பின் கண்திறந்து ஸமாதி நிலை விலக, தேவதாரு வனத்து முனிவர்களிடம் கூறினூர் - ''உலகின் தனிநாயகனுன மஹேசனே விஷ்ணுவுடன் தேவதாருவனத்திற்கு வந்துள்ளார். அவரைக் கண்டும் உணராத நீங்கள் பாக்கியமற்றவர். ஆயிரக்கணக்கான பிறவிகளில் பெற்ற பாக்யமான சிவதரிசனம் கிட்டியும், அறியாமையால் என்னிடம் வந்துள்ளீர். உலகத்தின் தோற்றுவாயும் லயமடையுமிடமுமான அவரைக் கண்டும் அறியாமையால் பராமுகமானீர். காற்றும் மற்றதும் அவரிடம் பயந்து தம் பணிகளில் ஈடுபடும். அறியாமையால் ஏற்படுகிற பாகுபாடுகளை அகற்றுகிற அவர்மீது அபிசாரம் செய்துள்ளீர். வேதமெனும் காட்டில் காமம் முதலிய விஷவேகத்தைத் தணிக்கத் தோன்றிய பச்சிலை அவர். யோகிகள் புலன்களை அடக்கி உள்ளத்தில் அவரைக் காணவிழைகின்றனர். உலகின் சாக்ஷி அவர். நித்யானந்த வடிவினர். அப்பழுக்கில்லாதவர். அவரே பிரும்மா, இந்திரன், உயிரினத்தலைவர், படைப்பவர், அதனை அததாக உருவாக்குபவர். படைத்ததனைத்தின் ஆத்மா, சிவன், ருத்திரன், மஹேசுவரன், சங்கரன், பிரும்மம் என்ற பல பெயர்கள் கொண்டவர். பெயர்ச் சொல்லால் குறிப்பிட முடியாதவர். தன் ஒளியால் தாங்குபவர், எல்லாமானவர், அறியாமை, விருப்பு, வெறுப்பு, தான் என்ற அகந்தை, ஆழ்ந்த உள்ளக்கிடக்கை என்ற ஐந்து கிலேசங்களும் அற்றவர், பஞ்சாக்ஷர மந்திரத்தில் காணப்பெறுபவர். வடிவற்றவர், உம்மிடம் கொண்ட பரிவால் வடிவமேற்றவர், உலகின் மூலப்பொருளான விஷ்ணுவுடன் அவர் தேவதாருவனம் வந்துள்ளார். அவர் உங்களால் பலவாறு புறக்கணிக்கப்பட்டுள்ளார். அவரே முக்தி தருகிற பரமர். அவரைச் சரணடைவீர். முன்னர் பல முறை மாயை வசப்பட்டுத் தவறிழைத்துள்ளீர். இதுவரை லிங்கத்தில் ஈசனை வழிபடாதிருந்ததன் பின்விளைவு இது. நீர் அங்கு கண்ட யோனி மீது லிங்கத்தை ஸ்தாபித்து பிரணவத்துடன் பஞ்சாக்ஷர மந்திரத்தைக் கொண்டு மனைவி மக்களுடன் வழிபடுவீர். விஷ்ணுவுடன் அவர் சேர்ந்து மாயையால் பல இந்திர ஜாலங்கள் காட்டியுள்ளார். ஶ்ரீ காளஹஸ்தி மலைக்கு மாசி மகத்தன்று பௌர்ணமியில் மனைவி மக்களுடன் செல்வீர். ஸுவர்ணமுகரீ

நதியில் நீராடுவீர். அன்று அந்த நதியில் கங்கையும் கோதாவரியும் நீராடித் தம் பாவச்சுமையை நீக்கினர். புலனடக்கம் கொண்ட பல முனிவர்கள் ஸம்ஸாரக் கட்டை விலக்கிக் கொண்டனர். காளஹஸ்தீசப் பெருமானை வலம் வந்து தண்டம் போல் வணங்கி முடிந்தவரை தானம் செய்து, ஒருநாள் உபவாஸமிருந்து வழிபடுவீர். திரும்பி அவரவர் ஆசிரமம் செல்வீர். மஹேசனை வழிபடுவீர். தேவதேவரான அவர் விரும்பியதனைத்தையும் வழங்குபவராக அங்கு தோன்றுவார். வேதாந்த உபனிடதம் கூறுகிற ஈசுவரனைப் பற்றிய பேரறிவு பெற்று மாயை நீங்கி பேரானந்தமான முக்தியை அனுபவிப்பீர்'' என்றார். *(39-69)*

इत्युक्ता मुनयो ब्रह्मन्ब्रह्मणा परमेष्ठिना ।
प्रणम्य दण्डवद्भूमौ ब्रह्माणं गद्गदस्वराः ॥ ७०

स्तोत्रैः स्तुत्वा महाभक्त्या प्रणेमुश्च पुनः पुनः ।
प्रस्थापिता विरिञ्चेन भृग्वाद्या वेदवित्तमाः ।
गच्छाम इति चामन्त्र्य ब्रह्माणमतिभक्तितः ॥ ७१

निरगमन् अभितुष्टास्तापसा ब्रह्मलोकात्
शतधृतिवचनं ते मूर्धसु प्राङ्निधाय ।
सकलभुवनशस्तं दक्षकैलासनाम
स्थलममरगणैश्श्रीकालहस्त्याख्यमग्र्यम् ॥ ७२

इति अष्टादशोऽध्यायः ।

இவ்வாறு பிரம்மாவின் அறிவுரையைக் கேட்ட முனிவர்கள் அவரை வணங்கி தழுதழுத்த குரலுடன் துதித்து பிரும்மாவிடம் விடைபெற்று பிரும்ம லோகத்திலிருந்து தக்ஷிண கைலாஸமெனும் காளஹஸ்திக்கு வந்தனர். *(70-72)*

—*—

## अथ एकोनविंशोऽध्यायः

## श्री कालहस्तीश - भिक्षाटनेशानुग्रहः

कण्व उवाच—

ततस्ते मुनयस्सर्वे ब्रह्मणा विश्वकर्मणा ।
प्रस्थापिता महाप्राज्ञास्सन्तोषोत्फुल्लमानसाः ॥ १

श्रीकालहस्तिशैलाख्यं स्थानं सर्वार्थसाधकम् ।
देवकिन्नरसंसेव्यं सिद्धचारणशोभितम् ॥ २

अर्धोन्मीलितनेत्राब्जैस्साक्षात्सूत्रलसच्छ्रुवैः ।
शिवध्यानरतैः शान्तैः सिद्धै रम्यं महात्मभिः ॥ ३

विद्याधरोरगैः सेव्यं किरातैश्च समावृतम् ।
शिलावटवटाश्वत्थामलामलकदाडिमैः ॥ ४

जम्बुजम्बीरनारङ्गैश्चम्पकानन्ततिन्दुकैः ।
बिल्वैश्च चिरिबिल्वैश्च तिलकैरसनैश्शुभैः ॥ ५

नालिकेराम्रपनसैरालिभिः प्लक्षभूरुहैः ।
बदर्यौदुम्बराशोककदर्यकदलीद्रुमैः ॥ ६

रसालतालहिन्तालतमालतिलकार्जुनैः ।
शोभितं बहुवृक्षैश्च कन्दरैरपि शोभितम् ॥ ७

सिंहव्याघ्रमृगद्वीपिभल्लूककिटिसङ्कुलम् ।
वनमार्जारजम्बूकशशसैरभराजितम् ॥ ८

मातङ्गखङ्गगवयकबरीतुदलीशुभम् ।
माणिक्यविलसच्छीर्षं महाभुजगमण्डितम् ॥ ९

आखुमूषिकमार्जारगन्धमार्जाररञ्जितम् ।
बकबर्हिकपोतालिकोकिलोलूकसङ्कुलम् ॥ १०

*அத்தியாயம் 19*

## ஸ்ரீ காளஹஸ்தீசரும் பிக்ஷாடனரும் அருள் புரிதல்

*பிரும்மாவால் அனுப்பப்பெற்ற முனிவர் அனைவரும் ஸ்ரீ காளஹஸ்தி மலைக்கு வந்தனர். அங்கு தேவர், கின்னரர், ஸித்தர், சாரணர், சிவத் தியானத்தில் ஆழ்ந்து அரைக்கண் மூடிய பெரியோர்கள், வித்யாதரர், நாகர் மற்றும் கிராதர்கள் நிறைந்து சிவனை வழிபட்டனர். கல்லால், ஆல், அரசு, நெல்லி, மாதுளை, நாவல், எலுமிச்சை, சம்பகம், பனச்சி, வில்வம், வேங்கை, தென்னை, மா, பலா, இஞ்சி, இலந்தை, அத்தி, அசோகம், வாழை, ரஸாளுமா, கூந்தல்பனை, பச்சிலை, திலகம், மருது முதலிய பலமரங்கள் அடர்ந்திருந்தன. குகைகள் மிகுந்த அந்த மலையில் சிங்கம், புலி, மான், வேங்கைப்புலி, கரடி, காட்டுப்பன்றி, காட்டுப்பூனை, நரி, முயல், எருமை, யானை, கொம்பு மான், கவயம், பாம்பு, எலி, சுண்டெலி, புனுகுப் பூனை, கொக்கு, மயில், புறா, குயில், ஆந்தை முதலிய வனவிலங்குகளும் பறவைகளும் நிரம்பியிருந்தது. (1-10)*

नानाजन्तुसमायुक्तं बभूवुर्मुनयो गताः ।
माघमासे मघर्क्षे तु स्वदारैस्स्वसुतैस्सह ।। ११

सुवर्णमुखरीं प्राप्य स्नानं तस्यां प्रचक्रिरे ।
पूर्वजन्मसु पापानि तैः कृतानि महीसुर ।। १२

यानि तानि विनष्टानि स्नानात्तस्यां महाद्विज ।
पुनर्ब्रह्मन्मुनिश्रेष्ठाःस्थानेऽस्मिन्परमेश्वरम् ।। १३

दृष्ट्वा भूमौ प्रणम्येशं त्रिः कृत्वा तु प्रदक्षिणम् ।
तुष्टुवुर्भक्तिभारेण लौकिकैर्वैदिकैश्शिवम् ।। १४

*மாசி மகத்தன்று ஸுவர்ணமுகரியில் நீராடி முன்பிறவிகளில் குவிந்த பாபச் சுமையைப்போக்கிக் கொண்டனர். அங்கு கோயில் கொண்ட பரமேசுவரனை வழிபட்டு வலம் வந்து வணங்கி வேத - புராணத் துதிகளால் துதித்தனர். (11-14)*

## कालहस्तीश्वरस्तुतिः

मुनय ऊचुः—

नमस्ते देवदेवेश नमस्ते वृषभध्वज।
नमस्ते पार्वतीकान्त नमस्ते चन्द्रशेखर॥ १५

नमस्ते त्रिपुराराते नमस्ते कालनाशन।
नमस्ते कालविध्वंसिन्नमस्तेऽन्धकसूदन॥ १६

नमो दक्षाध्वरध्वंसिन्नमः कामविनाशन।
नमो जलन्धरहर नमो भक्तार्तिभञ्जन॥ १७

नमो दक्षिणकैलासनिवासरसिक प्रभो।
नमः श्रीकालहस्तीश नमः शम्बारिपूजित॥ १८

नमस्ते कमलानाथनेत्राम्बुजलसत्पद।
नमश्चित्पुष्पकलिकाविलसद्वामविग्रह॥ १९

नमः कारुण्यवाराशे कनत्करपयोरुह।
नमस्ते सच्चिदानन्दलक्षणामल शाश्वत॥ २०

नमः कुठारहरिणकनत्करपयोरुह।
नमो वाणीविरिञ्चाभ्यां पूजिताङ्घ्रिसरोरुह॥ २१

காளஹஸ்தீச்வர ஸ்துதி - தேவர்களின் தேவனே, இடபக்கொடி கொண்டவரே! பார்வதியின் மணாளரே, பிறைசூடியவரே! திரிபுரன், யமன், அந்தகாஸுரன், தக்ஷனின் வேள்வி, மன்மதன், ஜலந்தரன் என்றிவர்களை அழித்தவரே! பக்தனின் துயரை அகற்றுபவரே! தக்ஷிண கைலாஸமாகிய காளத்தியில் வசிப்பதை ரசிக்கிற காளஹஸ்தீசரே! இந்திரனால் வழிபடப் பெற்றவரே! விஷ்ணுவின் தாமரைக் கண்களால் அர்ச்சிக்கப் பெற்றவரே! பேரறிவாகிய சித்சக்தி எனும் பூ மொட்டான அம்பிகை (ஞான ப்ரஸூநாம்பிகை) துலங்குகிற

*வலப்புறமுள்ளவரே! கருணைக்கடலே, தங்கம் போன்று துலங்குகிற தாமரை போன்று மென்மையையும் அழகும்மிக்க கைகளுள்ளவரே! ஸச்சிதானந்த வடிவினரே! தூயவரே! அழிவற்றவரே! கோடரியும் மானும் துலங்குகிற கைகள் உள்ளவரே! ஸரஸ்வதியாலும் பிரும்மாவாலும் வழிபடப்பெறுகிற திருவடித் தாமரை உள்ளவரே! வணக்கம்! வணக்கம்! (13-21)*

कण्व उवाच ॥

इति स्तुत्वा महादेवं कालहस्तीश्वरं द्विजाः ।
दिनमेकमुपोष्यास्यां स्नात्वा नद्यां समाहिताः ॥ २२

दत्वा हिरण्यं गां भूमिं द्रव्यं मूलं च भक्तितः ।
श्रीकालहस्तिवासाय विदुषे ब्राह्मणाय च ॥ २३

इहजन्मकृतात्पापान्मुच्यन्ते परमर्षयः ।
कृतवत्सु मुनिष्वेवं भक्तिश्रद्धापुरस्सरम् ॥ २४

ततोवाच मुनींस्तास्तु व्योमवाणी सुनिर्मला ।
अशरीरिण्युवाच ॥
हे तापसाः पुराऽकारि युष्माभिश्च च्युते पुरे ॥ २५
देवदारुवने यद्यत्तत्सर्वं नाशितं त्विह ।
इदानीं ब्रह्मणा प्रोक्तं युष्माकं तापसोत्तमाः ॥ २६

तत्सर्वं क्रियतां सम्यग्युष्माभिः श्रद्धया सह ।
शिवभक्तिः सदा कार्या शिवपूजा मुनीश्वरैः ॥ २७

तान्त्रिकैर्वैदिकैः सम्यक्शिवलिङ्गे महात्मभिः ।
कण्व उवाच ॥
एवमुक्ता महीदेव मुनयो ब्रह्मवादिनः ॥ २८

तथैव तत्र देवेशमानर्चुः श्रद्धया सह ।
स्फाटिकैर्मौक्तिकै रत्नैः पुष्यरागादिभिः कृते ॥ २९

सुवर्णरौप्यताम्रादिधातुभिश्च विनिर्मिते।
मृण्मये सिकताकारे भूत्याकारेऽन्नरूपिणि ॥ ३०

कुसुमात्मनि सद्रव्यनवनीतमये शुभे।
गोमयात्मनि रुद्राक्षे हरिद्राचन्दनादिभिः ॥ ३१

कृते लिङ्गे महादेवं पूजयन्तो जलैश्शुभैः।
जपन्तः शतरुद्रीयं भूतिरुद्राक्षधारिणः ॥ ३२

लौकिकैर्वैदिकैःस्तोत्रैः प्रस्तुवन्तो महेश्वरम्।
सुवर्णमुखरीस्नानं कृतवन्तो दिनेदिने ॥ ३३

चत्वारिंशद्दिनान्यस्मिन्नूषुस्तापसपुङ्गवाः।

*காளஹஸ்தீசனை வழிபட்டு, ஒருநாள் உணவின்றி விரதமிருந்து, மன அமைதியுடன் பொன், பசு, பூமி, பொருள் எனப் பலவற்றை காளஹஸ்தியில் வசிக்கிற அந்தணருக்கு வழங்கி இப்பிறவியில் செய்த பாபமனைத்தும் நீங்கப் பெற்றனர். அப்போது அவர்களை நோக்கி ஆகாசவாணி எழுந்தது - ''தவசிகளே! வழுவூரில் தேவதாருக்காட்டில் நீங்கள் செய்த பாபம் அகன்றது. இனி சிவலிங்கத்தில் சிவனைப் பக்தியுடன் தாந்திரிக - வைதிக முறையில் வழிபடுவீர்'' என்றது. உடன் அவர்கள் ஸ்படிகம், முத்து முதலிய ரத்னங்கள், தங்கம், வெள்ளி, தாம்ரம் முதலிய உலோகங்கள், மண், மணல், விபூதி, அன்னம், பூ, பசுவெண்ணெய், கோமயம், ருத்ராக்ஷம், மஞ்சள், சந்தனம் முதலியவற்ருல் லிங்கம் அமைத்து விபூதி ருத்ராக்ஷமணிந்து துதித்து 40 நாட்கள் வழிபட்டனர். (22-33)*

पुनःस्वाश्रममागत्य देवदारुवने द्विजाः। ३४

शैललिङ्गं समादाय स्वदारैश्च सुतैःसह।
श्रीमत्पञ्चाक्षरेणैव सतारेण समाहिताः ॥ ३५

पूजयामासुरीशानं कृत्वा पाशुपतं व्रतम्।
एवं चिरगते काले तेषां रक्षार्थमादरात् ॥ ३६

प्रादुरासीन्महादेवः कर्पूराचलसन्निभः ।
भस्मोद्धूलितसर्वाङ्गस्त्रिपुण्ड्राङ्कितमस्तकः ॥ ३७

फुल्लबन्धूकसुच्छायाहरत्फालविलोचनः ।
बालचन्द्रलसल्लम्बिजटाजालमनोहरः ॥ ३८

उमया सहितः शक्त्या ब्रह्मविद्यास्वरूपया ।
नग्नो नृत्तप्रियश्चासौ हसन्शम्भुः क्वचित्क्वचित् ॥ ३९

नानावेषधरो देवो विविधानन्दवर्णभाक् ।
स्वच्छन्दवृत्तिर्भिक्षार्थं देवदारुवनं गतः ॥ ४०

भिक्षमाणो द्विजेन्द्राणां गृहेषु परमेश्वरः ।
चचार देवदारूणां महारण्यानि पूर्ववत् ॥ ४१

तं भिक्षमाणं मुनयश्च दृष्ट्वा स्मृत्वाब्जयोनेर्वचनं महेशः ।
अत्रागतोऽयं करुणानिधान इति ब्रुवन्तो ऋषयः प्रणेमुः ॥ ४२

भक्त्या शिवाङ्घ्रिं भवनाशहेतुं समस्तदेवासुरमौलिपुष्पम् ।
प्रगृह्य हस्तैरवशा मुनीन्द्राःसपुत्रदाराःसलिलार्द्रनेत्राः ॥ ४३

क्षमस्व देवेश कृपालयानिशं कृतं तवास्माभिरनिष्टमातुरैः ।
भवार्णवे मग्नजनानरक्षकानतीव कष्टाननुह्य मोहितान् ॥ ४४

इति द्विजेन्द्राःसहबन्धुबान्धवैः सपुत्रदारैश्च मुनीश्वरातुरैः ।
प्रकल्प्य पूजां महतीं प्रचक्रिरे स्वमूर्ध्नि विन्यस्य शिवाङ्घ्रिमादरात् ॥ ४५

इति एकोनविंशोऽध्यायः

—*—

*பின் தேவதாருவனம் வந்து மனைவிமக்களுடன் சிவலிங்கத்தில் பிரணவத்துடன் கூடிய பஞ்சாக்ஷர மந்திரத்தால் வழிபட்டு சிவ விரதமிருந்தனர். அவர்களுக்கு அருள்புரிய சிவன்*

*அவர்கள் முன் தோன்றினர். விபூதி பூசிய உடல், நெற்றியில் விபூதியின் மூன்று பட்டைகள், கர்பூரமலை போன்ற தோற்றம், மலர்ந்த செம்பருத்திப் பூ போன்று சிவந்த நெற்றிக் கண், இளஞ் சந்திரனைச் சூடிய அழகிய சடைமுடி, பிரும்மவித்யை வடிவினளான உமாதேவி துணையுடன், ஆடையற்று பல வேஷங்களில் நடனமாடியவாறு சிவன் தேவதாருவனத்தில் பிக்ஷைக்காக வந்து ஒவ்வொரு அந்தணர் வீட்டிலும் பிக்ஷை எடுத்தார். கருணைக் கடலான ஈசனே நமக்காக இங்கு வந்துள்ளார் என உணர்ந்து ஸம்ஸார பந்தமகற்றுகிற ஈசனின் திருவடிகளில் வணங்கிக் கண்ணீர் மல்க வேண்டினர். கருணையின் இருப்பிடமே! எம் தவறுகளைப் பொறுத்தருள்வீர். ஸம்ஸாரக் கடலில் ஆழ்ந்த வேறுபாதுகாப்பற்ற - எம்மைக் காப்பீர் என வேண்டி மனைவி மக்களுடன் வழிபட்டனர். **(33-45)***

## ।। अथ विंशोऽध्यायः ।।

## देवदारुवने ज्ञानसभायां दक्षिणामूर्तिः

कण्व उवाच ।।

तत: परमकल्याण: कृपया पार्वतीपतिः ।
ब्रह्मज्ञानोपदेशार्थं मुनीनां भावितात्मनाम् ।। १

सभानिर्माणहेतोश्च विश्वकर्माणमस्मरत् ।
सर्वलोकोपकाराय सर्वेषां मुक्तिहेतवे ।। २

स विश्वकर्मा देवेन स्मारितश्चन्द्रमौलिना ।
आगत्य शिवपादाब्जं किं कृत्यं मे व्यजिज्ञपत् ।। ३

इति विज्ञापितो देवस्तेन तं पुनरब्रवीत् ।
विनीतं चारुसर्वाङ्गं प्रफुल्लकमलेक्षणम् ।। ४

शिव उवाच ।।

विश्वकर्मन्सभामद्य कुरुष्व सहसादरात् ।
अशीतिस्तम्भसंयुक्तां नवमाणिक्यवेदिकाम् ।। ५

कण्व उवाच ॥

इत्युक्तः शम्भुना ब्रह्मन्विश्वकर्मा विशारदः ।
सभां च कारयमास देवदेवस्य शूलिनः ॥ ६

कृत्तिवासेश्वरस्येशादिग्भागे च महासभाम्।
शतहस्तमिते दूरे सर्वलक्षणलक्षिताम्॥ ७

अशीतिस्तम्भसंयुक्तां मणिरत्नविभूषिताम्।
रत्नवेदिसमायुक्तां पञ्चसोपानभास्वराम्॥ ८

जाम्बूनदमयस्निग्धगवाक्षयुतभित्तिकाम्।
अनेकमणिसंबद्धकुट्टिमेन विराजिताम्॥ ९

इन्द्रनीलशिलारत्नवलभीभिरलङ्कृताम्।
अत्रासद्दोषचन्द्राश्माच्छादनोपलमण्डिताम्॥ १०

मुक्तोल्लोचसुसम्भिन्नां प्रवालमणिवेदिकाम्।
मध्ये मध्ये महामुक्तामालाभिस्समलङ्कृताम्॥ ११

कदलीपूगसंयुक्तद्वारस्तम्भविराजिताम्।
वृषेन्द्रचित्रितपटपताकाभिरलङ्कृताम्॥ १२

दक्षिणाभिमुखोल्लासिमहाद्वारसमन्विताम्।
तन्मध्ये नवरत्नाढ्यं रत्नसिंहासनं शुभम्॥ १३

अष्टपादसमायुक्तं व्याख्यापीठसमाह्वयम्।
तन्मध्येऽष्टदलद्वन्द्ववसुपत्रमनोहरम्॥ १४

कर्णिकाकेसरोपेतं मेधाचक्रं विनिर्ममे।
एवं निर्माय विधिवद्ज्ञानसंसदमास्तिक॥ १५

नमस्कृत्य महादेवं विश्वकर्मा व्यजिज्ञपत्।

*அத்தியாயம் - 20*

## தேவதாருவனத்தில் ஜ்ஞானஸபையில் குருமூர்த்தி

*கண்வர் கூறுகிறார் - சிவபெருமான் தேவதாருவன வாசிகளுக்கு பிரும்ம ஜ்ஞானம் உபதேசிக்க விரும்பி அதற்கான ஸபாமண்டபமமைப்பதற்கு விசுவகர்மாவை நினைத்தார். உடன் அங்கு தோன்றிய விசுவகர்மா சிவனின் திருவடியை வணங்கி ''என்ன செய்யவேண்டும்?'' என விண்ணப்பித்தான். 80 தூண்களுள்ள ஸபையும் மாணிக்கக் கல்லான மேடையும் அமைக்க உத்தரவிட்டார். உடன் சூலமேந்திய தேவதேவனின் உத்தரவுப்படி விச்வகர்மா ஸபாமண்டபத்தை அமைத்தான். கிருத்திவாஸேசனின் ஆலயத்திற்கு வடகிழக்கில் நூறுமுழதூரத்திற்கு வெளியே 80 தூண்களும் ரத்னத்தாலான மேடையுமுள்ளதும் 5 படிகள் கொண்டதும் தங்கமயமான ஜன்னல்கள் உள்ள சுற்றச் சுவர்களும் இந்திர நீலக்கற்களாலான காப்புப் பிராகாரமும் முத்தாலான கண்ணாடியும் பவழத்தாலான ஆஸனங்களும் முத்துமாலைத் தோரணங்களும் உள்ள மண்டபத்தில் வாழை மரம், பாக்குக்குலை கட்டிய வாசற்படி, விருஷபக்கொடி, தெற்கு நோக்கிய பெருவாயில், நடுவில் நவரத்னங்களாலான 8 கால்களுள்ள பேருரைக்கான ஸிம்ஹாஸனம். நடுவில் இரண்டு எட்டுதளங்களுள்ள தாமரை வடிவிலான மேதாசக்ரமும் அமைத்து ஈசனிடம் காட்டி விண்ணப்பித்தான். (1-15)*

विश्वकर्मोवाच ॥
देवेश कृत्तिवासेश शृणु विज्ञापनं मम ॥ १६

विनिर्मिता ज्ञानसभा सर्वलक्षणलक्षिता ।
व्याख्यापीठे समासीन उपदेशं कुरुष्व ह ॥ १७

तेभ्यः संसारखिन्नेभ्यो मुनिभ्योऽस्मभ्यमेव च ।
कण्व उवाच ॥
इत्युक्त्वा देवदेवेशं विश्वकर्मा महामनाः ॥ १८

स्थितवान्पार्श्वतो भक्त्या कृताञ्जलिपुटो मुने।
ततो देवो महेशानः शङ्करश्चन्द्रशेखरः ॥ १९

व्याख्यापीठे समासीनः क्षीरेन्दुधवलप्रभः।
लसज्जटाकिरीटस्थगङ्गाचन्द्रकलाधरः ॥ २०

फालमध्यस्थहुतभुङ्नेत्रकोकनदच्छदः।
इन्द्रनीलोपलच्छायाहरभ्रूयुगलान्वितः ॥ २१

सभृङ्गपुण्डरीकोरुदलायतविलोचनः।
समुन्नतमहानासापुटद्वयविराजितः ॥ २२

कर्णकुण्डलरत्नाभामञ्जरीपिञ्जराननः।
मन्दस्मेरविनिष्यंदद्दन्तकान्तिशुभाधरः ॥ २३

सम्पूर्णचन्द्रप्रतिममुखमण्डलमण्डितः।
शक्रोपललसन्मध्यशङ्खतुल्यशिरोधरः ॥ २४

सर्पराजोपमस्निग्धमहाभुजचतुष्टयः।
कण्ठोपकण्ठसंशोभितारहारमनोहरः ॥ २५

कटकाङ्गदकेयूरवरोर्मिकसुभूषणः।
व्याघ्रचर्माम्बरधरो ज्ञानमुद्रां च पुस्तकम् ॥ २६

अक्षमालां दधानश्च हैरण्यामृतकुम्भकम्।
शर्वश्च सर्वदेवेशः सर्वाभरणभूषितः ॥ २७

पार्श्वस्थितवृषेन्द्रश्च नीलग्रीवस्त्रिलोचनः।
प्रलम्बितजटाबन्धो भस्मदिग्धतनूरुहः ॥ २८

योगपट्टाभिरामश्च वेदयज्ञोपवीतवान्।
वीरासनसमासीनो विश्वलोकैकनायकः ॥ २९

अपस्मारोपरिन्यस्तपादपङ्कज ईश्वरः ।
सर्वलक्षणसंपन्नो नागाभरणभूषितः ॥ ३०

सनकादिमहायोगिसेवितःसर्वकारणः ।
आगमोपनिषद्वेदजातार्थस्तुतिवैभवः ॥ ३१

अष्टादशपुराणैश्च स्तूयमानपदाम्बजः ।
धर्मशास्त्रैर्योगशास्त्रैःसेवितोभयपार्श्वकः ॥ ३२

प्राणायामासनयमैर्मूर्तिमद्भिरहर्निशम् ।
धारणानियमध्यानाद्यष्टाङ्गैरपि सेवितः ॥ ३३

*''தேவேசனே! எல்லா அங்கங்களும் கொண்ட அழகிய ஜ்ஞானஸபை உருவாகிவிட்டது. வ்யாக்யான பீடத்தில் அமர்ந்து முனிவர்களுக்கும் எமக்கும் தத்துவ உபதேசம் செய்வீராக'' என வேண்டி அருகில் நின்றான். பிறைசூடியான பால் மற்றும் சந்திரன் போன்று வெளுத்த மேனிகொண்ட பரமசிவன் பேருரை மேடையில் அமர்ந்தார். சடைமகுடத்தின் மீது சந்திரகலை, நெற்றியில் அக்னிக் கண்ணில் ஒளி, இந்திர நீலக்கல் வரிசைபோன்ற புருவங்கள், வண்டு சூழ்ந்த தாமரை போன்ற அகன்ற கண்கள், மேல் தூக்கிய நாசி, காதிலுள்ள குண்டல ஒளிச் சிதறல் கொண்ட முகம். புன்சிரிப்பில் வெளிப்படுகிற அழகிய பல் வரிசை ஒளியால் சிவந்த உதடு, சந்திரனையொத்த முகம், நீலரத்ன ஒளிகொண்ட கழுத்து, பாம்பரசன் போன்று நீண்ட நான்கு கைகள், கழுத்திலும், மார்பிலும் தொங்குகிற ரத்ன ஹாரங்கள், காப்பு தோள்வளை கேயூரம் மோதிரம் முதலியவற்றால் அழகிய நான்கு கைகள், புலித்தோலாடை, கைகளில் ஜ்ஞானமுத்திரை, புத்தகம், அக்ஷமாலை, தங்க அமுதக் கலசம், அருகில் விருஷபம், தொங்குசடை, உடல்முழுதும் விபூதிப் பூச்சு, யோக வேஷ்டியாக மேலாடை, வேதமே பூணூல், வீராஸனத்தில் அமர்ந்து அபஸ்மாரத்தின் மீது திருவடி, நாகாபரணங்கள், வேதமும் உபநிஷத்துகளும் 18 புராணங்களும் தர்ம சாஸ்த்ரம், யோக சாஸ்த்ரம் முதலியவையும் சூழ்ந்து நின்று துதித்தல், பிராணாயாமம், ஆஸனம், யமம், தாரணை, நியமம்,*

*தியானம் முதலிய யோக அங்கங்களே வடிவெடுத்து வழிபடுதல் என்ற அழகிய கோலத்தில் குருவடிவில் ஈசன் அமர்ந்திருந்தார். (16-33)*

तान्मुनीन्पुरतः स्थाप्य स्ववामोरुस्थितां शिवाम्।
वीक्षयन्करुणासिन्धुरुपदेशं चकार ह ॥ ३४

ज्ञानोपदेशकालेऽस्मिन्साम्बस्य परमेशितुः ।
प्रवालदण्डसंयुक्तं पूर्णचन्द्रनिभं शुभम् ॥ ३५

दिव्यचन्दनसंलिप्तं स्वर्णमालासुशोभितम्।
छत्रं दधार भगवान्ब्रह्मा भक्तिसमन्वितः ॥ ३६

महाविष्णुर्महातेजाश्शङ्खचक्राभिधान्वितः ।
भक्तसंरक्षणार्थाय स्वात्मज्ञानोपलब्धये ॥ ३७

अतिष्ठत्कृत्तिवासेशविमानेशानकोणके।
पञ्चेषुपातमात्रे च स्थले भक्तिसमन्वितान् ॥ ३८

केशवस्य पुरोभागे राजते तीर्थमद्भुतम्।
इषुपातमिते दूरे दुर्गया च निषेवितम् ॥ ३९

दुर्गायाः पश्चिमे भागे तत्तीर्थमतिशोभनम्।
पापनाशमिति ख्यातं दिव्यतीर्थनिषेवितम् ॥ ४०

यस्मिंस्तीर्थे पुराऽगस्त्यो ध्यात्वा देवं जनार्दनम्।
स्नात्वा महेशभक्तानां मुनीनामग्रणीर्भवत् ॥ ४१

ज्येष्ठमासे सिते पक्षे यस्मिन्स्नात्वा हरेर्दिने।
उपोष्य रात्रौ जागरणं कृत्वा केशवसन्निधौ ॥ ४२

परेद्युःस्नानतो यस्मिन्विष्णुलोके महीयते।
श्रावणे च मुने मासे कृष्णाष्टम्यां प्रयत्नतः ॥ ४३

सरोहिण्यामरोहिण्यां यस्मिन्स्नात्वाऽप्युपोषितः ।
रात्रौ जागरणं कृत्वा परेद्युस्स्नानमाचरेत् ।। ४४

यथाशक्ति धनं दत्वा विदुषे ब्राह्मणाय च ।
सर्वपापविनिर्मुक्तो विष्णुलोके महीयते ।। ४५

तत्पश्चिमतटे विष्णुः शिवज्ञानोपलब्धये ।
बाणपातमिते दूरे शङ्खचक्राभिधान्वितः ।। ४६

अतिष्ठच्छिवसेवायै चित्सभारक्षणाय च ।

*முனிவர்களை எதிரில் அமரச் செய்து, தேவியைத்தன் இடது துடைமீது அமரச் செய்த சிவன் பரிவுக் கடலாகி முனிவருக்கு உபதேசித்தார். அப்போது பிரும்மா பெருமானின் அருகில் பவழத்தடி கொண்டதும் சந்தனம் பூசியதும் தங்கமாலைகளால் அழகுற்றதுமான குடையை ஏந்தி நின்றார். கிருத்திவாஸேச விமானத்தின் வடகிழக்கில் சங்கசக்ர தேவர் என்ற பெயர் கொண்டு விஷ்ணு தானும் உபதேசம் பெறக் கோயில் கொண்டார். அத்திருக்கோயிலின் எதிரில் வில்லடி தூரத்தில் பாபநாசமெனும் தீர்த்தம். முன்னர் இந்த தீர்த்தத்தில் நீராடிய அகஸ்தியர் முனிவருள் சிறந்தவரானார். இதில் நீராடி, ஆனி சுக்லபக்ஷ ஏகாதசியில் உபவாஸமிருந்து இரவு விழித்திருந்து கேசவரின் ஸந்நிதியில் தியானத்தில் அமர்ந்து, மறுநாளும் நீராட வைகுண்ட வாஸம் கிட்டும். ஆவணி கிருஷ்ணாஷ்டமியில் ரோகிணி கூடினாலும் கூடாவிட்டாலும், நீராடி உபவாஸத்துடன் இரவு விழித்திருந்து மறுநாள் நீராடி தக்கதானம் செய்ய வைகுண்டவாஸம் கிட்டும். விஷ்ணு இங்கு சங்க சக்ரதரர் என்ற பெயருடன் சிவஸேவை செய்யவும் ஜ்ஞானஸபையைக் காக்கவும் கோயில் கொண்டுள்ளார். (34-46)*

देवस्य तीर्थरूपस्य केशवस्य महात्मनः ।। ४७

वायव्ये नैर्ऋते भागे तीर्थप्रायमनिन्दितम् ।
शङ्खचक्रमिति ख्यातं सर्वकल्मषनाशनम् ।। ४८

तयोस्स्नात्वा नरो ब्रह्मन्दृष्ट्वा केशवमादरात्।
सर्वपापविनिर्मुक्तो विष्णुसारूप्यमाप्नुयात्॥ ४९

शिवसिंहासनोपान्ते प्रतीच्यां दिशि विघ्नराट्।
पूर्वास्यः करिवक्त्रश्च तस्थौ ज्ञानोपलब्धये॥ ५०

शिवसिंहासनप्राच्यां तरुणारुणसन्निभः।
अतिष्ठत्कार्तिकेयोऽपि बालरूपस्सुकोमलः॥ ५१

देवस्य दक्षिणास्यस्य पुरस्तात्परमेशितुः।
ब्राह्म्याद्या मातरस्सप्त तस्थुर्ज्ञानोपलब्धये॥ ५२

देवस्याग्नेयभागे च शास्ता सर्वजगत्पतिः।
तस्थौ विज्ञानसिद्ध्यर्थं सर्वावयवसुन्दरः॥ ५३

चत्वारिंशत्सहस्राणां मुनीनामुग्रतेजसाम्।
तथैवाष्टसहस्राणां तत्पुत्राणां महात्मनाम्॥ ५४

तेषां मुख्यतमास्तीव्रतपसा दीप्तवर्चसः।
वसिष्ठकुत्सपौलस्त्यागस्त्यकाश्यपनारदाः॥ ५५

वामदेवशुकव्यासगुरुभार्गवशौनकाः।
भरद्वाजात्रिपुलहगौतमा भृगुकङ्कणाः॥ ५६

जाबालियाज्ञवल्क्याम्ब्यमङ्कणामलकप्रियाः।
सुमन्तुदेवलप्रांशुगर्गमाण्डव्यभानवः॥ ५७

पराशरमहाकायमहाग्रीवमहोदराः।
उद्दालकमहासेनमन्त्रविच्छ्वेतबाहवः॥ ५८

कैवल्यशाण्डिलौ कालश्वेताश्वतरपिङ्गलाः।
विष्णुवृद्धविशालाक्षदूतबोधायनादयः॥ ५९

कौशिकाद्या इमे ब्रह्मन्महाव्रतपरायणाः ।
साष्टचत्वारिंशतिकसङ्ख्याका मुनिसत्तमाः ॥ ६०

सहस्राणां मुनीनाञ्च प्रत्येकं नायकाःस्मृताः ।
देवस्य पुरतोऽतिष्ठन्ब्रह्मज्ञानपरायणाः ॥ ६१

*கேசவ தீர்த்தத்தின் தென்மேற்கிலும், வட மேற்கிலும், சங்க சக்ரதீர்த்தமுள்ளது. அதில் நீராடி வழிபட விஷ்ணுவின் அருள் கிட்டும். ஜ்ஞானஸபையில் சிவஸிம்ஹானத்தின் மேற்கில் கணபதி கிழக்குமுகமாக அமர்ந்துள்ளார். கிழக்கில் இளஞ்சூர்யனுக்கொப்பான பால ஸுப்ரமண்யர் அமர்ந்துள்ளார். தக்ஷிணாமூர்த்தியின் எதிரில் பிராம்மீ முதலிய ஏழு மாதாக்களும் உபதேசம் கேட்க அமர்ந்துள்ளனர். ஈசனின் தென்கிழக்கில் சாஸ்தா ஞானம் பெற அமர்ந்துள்ளார். நாற்பதாயிரம் முனிவர்கள், எண்ணாயிரம் முனி குமாரர்கள். இவர்களில் சிறந்த வஸிஷ்டர், குத்ஸர், புலஸ்தியர், அகஸ்தியர், காசியபர், நாரதர், வாமதேவர், சுகர், வியாஸர், பிருஹஸ்பதி, சுக்ரர், பரசுராமர், சௌனகர், பரத்வாஜர், அத்திரி, புலஹர், கௌதமர், பிருகு, கங்கணர், ஜாபாலி, யாஜ்ஞவல்கியர், ஆம்ப்யர், மங்கணர், ஆமலகப்ரியர், ஸுமந்து, தேவலர், ப்ராம்சு, கர்கர், மாண்டவ்யர், பானு, பராசரர், மஹாகாயர், மஹாக்ரீவர், மஹோதரர், உத்தாலகர், மஹாஸேனர், மந்திரவித், ச்வேதபாஹு, கைவல்யர், சாண்டில்யர், காலர், ச்வேதாச்வதரர், பிங்களர், விஷ்ணு வ்ருத்தர், விசாலாக்ஷர், தூதர், போதாயனர், கௌசிகர் முதலான முனிவர் தலைவர்கள் (நாற்பத்தெட்டு) தேவனின் முன் பிரும்ம ஜ்ஞானம் பெறுவதற்கெனவே அமர்ந்திருந்தனர். (47-61)*

तत्पश्चादाश्रिताश्चान्ये ब्रह्मविज्ञानतत्पराः ।
तस्थुरीशानवक्त्राब्जोन्मुखा भक्तिवशं गताः ॥ ६२

अथ मुनिनिवहान्विलोक्य देवः प्रमथगणैर्विबुधासुरैःसमेतान् ।
व्यतनुत शिवबोधमात्मदृष्ट्या सकरुणया ह्युपदेष्टुमारभेत ॥ ६३

चिरदिनमखिलेन्द्रियोपशोषप्रमुदितहृत्कमलान्महानुभावान् ।
अनुदिनमगजेशलिङ्गपूजानिभृतमनःकमलान्विलोक्य देवः ॥ ६४

विधिविधुहरिशक्रभानुमुख्यान्सकलसुरासुरवन्दिताङ्घ्रिपद्मान् ।
स करुणयापि च योगिसिद्धवर्यान्परमशिवो ह्युपदेष्टमारभेत ॥ ६५

## इति विंशोऽध्यायः ॥

*இந்த முனிவர்களும் இவர்களை அண்டியவர்களும் ஈசன் தக்ஷிணாமூர்த்தியின் முகத்தையே உற்றுப் பார்த்து அமர்ந்திருந்தனர். இவர்களைக் கண்ட தக்ஷிணாமூத்தி பரிவுடன் தன் பார்வையாலேயே சிவஜ்ஞானத்தைத் தந்து உபதேசிக்கத் தொடங்கினார். புறம் நோக்குகிற இந்திரியங்களைக் கட்டி உள்ளத்து மலர்ச்சியுடன் தினமும் கிருத்திவாஸேசனை வழிபடுகிற முனிவர்களையும் பிரும்மா, சந்திரன், விஷ்ணு, இந்திரன், ஸூர்யன் முதலியவர்களையும் பார்த்துக் கொண்டே உபதேசிக்கத் தொடங்கினார். (62-65)*

—*—

## ॥ अथ एकविंशोऽध्यायः ॥

## दक्षिणामूर्तिदत्तः उपदेशः

कण्व उवाच ॥

अथो विधायात्मवपुः शिवो मुने त्रियम्बकं सागसुतं जगौतराम् ।
सुनिर्मलज्ञानमनादिमोक्षदं मुनिभ्य आम्नायवचोभिरादरात् ॥ १

अनूच्य शान्तिं प्रथमं महेश्वरः मित्रादिशब्दादपि पावकां मुदा ।
तैर्वाचयित्वा मुनिभिः पुरातनैः उवाच वेदान्तवचोद्भवास्पदम् ॥ २

### *அத்தியாயம் - 21*

### தக்ஷிணாமூர்த்தி அருளிய உபதேசம்

*சிவபெருமான் தன்னை மலைமகளுடன் முக்கண்ணனாக வெளிப்படுத்திக் கொண்டு. தோற்றுவாயில்லாததும் முக்தி*

தருவதுமான தூய ஜ்ஞானத்தை வேதச் சொற்களால் முனிவர்களுக்கு விளக்கினூர். தான் முதலில் சந்நோ மித்ர: எனத் தொடங்குகிற சாந்தி வாக்யங்களைக் கூறி அதனை முனிவர்களைச் சொல்லச் செய்து பின் உபநிடத வாக்யங்களை விளக்கினூர். (1-2)

शन्नो मित्रश्शं वरुणः शन्नो भवतु भास्करः ।
शन्न इन्द्रो बृहस्पतिः शन्नो विष्णुरुरुक्रमः ।। ३

नमो वै ब्रह्मणे तुभ्यं नमो वायोऽस्तु ते सदा ।
त्वमेव प्रत्यक्षं ब्रह्म त्वां वदिष्यामि तत्परः ।। ४

सत्यं वदिष्यामि ऋतं तन्मामवतु साधकम् ।
तद्वक्तारमवतु मां पातु मां पातु वाचकम् ।। ५

शान्तिश्शान्तिश्शान्तिरिति सर्वान्विप्रान्प्रबोध्य च ।
अध्यापयदृषीन्देवो ज्ञानं वेदान्तवाक्यजम् ।। ६

''மித்ரன் நமக்கு மங்களமானவராகட்டும். அவ்வாறே வருணன், ஸூர்யன், இந்திரன், பிருஹஸ்பதி மற்றும் பேரடிகொண்டு உலகளந்த விஷ்ணு நமக்கு மங்களமான வராகட்டும். பரம்பொருளுக்கு வணக்கம். வாயுவே! உமக்கு எப்போது வணக்கம். நீரே புலனுக்குட்படுகிற பிரும்மம். உம்மைப் பற்றி விளக்க இருக்கிறேன். உண்மை பேசுவேன், நேரானதைப் பேசுவேன். அது என்னைக் காக்கட்டும். விளக்குபவனைக் காக்கட்டும். விளக்கம் பெறுபவனைக் காக்கட்டும். சாந்தி சாந்தி சாந்தி எனக் கூறினூர். அந்தணர்களையும் இதனைத் திருப்பிச் சொல்லச் சொன்னூர். பின் சிவன் உபதேசித்தார். (3-6)

शिव उवाच ।।

अणोरणीयानहमेव सन्ततं महानहं विश्वमिदं मुनीश्वराः ।
पुरातनोऽहं पुरुषोऽहमीशिता हिरण्मयोऽहं शिव एव केवलः ।। ७

''நான் தனிப்பெருஞ்சிவன். அணுவிற்குச் சிறிய அணு. அவ்வாறே எப்போதும் மிகப் பெரிதிற்கும் மிகப் பெரியவன்.

*நானே இந்த உலகம். எல்லோருக்கும் முன்னதாக உள்ளவன். நான் ஆட்படுத்துபவன். பேராளுனன். உருகிய தங்கம் போன்றவள். (7)*

अपाणिपादोऽहमचक्षुरादिमान् तथापि पश्यामि शृणोमि सुव्रताः ।
अहं विजानामि समस्तमात्मना न चास्ति वेत्ता मम बोधरूपतः ।। ८

*கால்களோ கைகளோ அற்றவன். கண்ணில்லாதவன். நானே முதல்வன்; காண்பேன்; கேட்பேன், அனைத்தையும் வேறு உதவியின்றி உணர்வேன். நான் உள்ளுணர்வானதால் என்னை அறிபவனில்லை. (8)*

वेदैरनेकैरहमेव वेद्यो वेदान्तकृद्वेदविदेव चाहम् ।
न पुण्यपापे न च जन्मनाशौ न चास्ति देहो न च बुद्धिरस्ति ।। ९

न चास्ति वर्णाश्रमता शरीरता न कर्तृता कर्मफलेषु भोक्तृता ।
न मे सदा कारयितृत्वकल्पना न चास्ति शब्दोऽपि जगन्मये मयि ।। १०

*வேதமனைத்தின் மூலமாக உணரப் பெறுபவன் நான். வேத முடிவைச் செய்தவனும் அதனை அறிந்தவனும் நானே. எனக்கு புண்யம், பாவம், பிறப்பு, மறைவு, உடல், புத்தி என எதுவும் கிடையாது. வர்ணம், ஆசிரமம், உடல், செயலாளர் நிலை, செயலின் பின் விளைவை அனுபவித்தல், பிறரைக் கொண்டு செய்வித்தல் என்பது கிடையாது. உலகமே நான். அதனால் என்னைக் குறிப்பிடுகிற சொல் இல்லை. (9-10)*

न चास्ति माया मम वेदवित्तमाः
स्वयंप्रभःसर्वजगत्प्रकाशकः ।
असङ्गरूपोऽहमतीव निर्मलः
सुखैकविज्ञानघनस्वभाववान् ।। ११

यथैव दण्डादिषु सर्पकल्पना यथैव शुक्तौ रजतादिकल्पना ।
तथैव विद्ध्युत्थितमात्ममायया समस्तदृश्यं जगदागमे रताः ।। १२

மறைக்கிற மாயை என்னிடம் இல்லை. நானே என்னை விளக்கிக் கொள்பவன். உலகனைத்தையும் துலங்கச்செய்பவன். எதிலும் ஒட்டாதவன். அதனால் அப்பழுக்கற்றவன். பேரானந்தம் பேருணர்வு இவற்றின் அடர்த்தியே என் இயல்பு. தடியைக் கண்டு பாம்பு எனத் திகைப்பது, சிப்பியில் வெள்ளி முதலானதைக் கற்பனையால் காண்பது. இவ்வகைத் தோற்றம் மாயையால் ஏற்பட்டது. இவ்வாறு தான் உலகமாக பல காட்சிப் பொருள்களாக காணப் பெறுகிறது. (11-12)

देहात्मबोधेन समस्तजन्तवः कर्माणि कुर्वन्ति फलाभिलाषतः ।
न मे शरीरात्ममतिःस्वभावतः ततो न कर्तव्यमिहास्ति किञ्चन ॥ १३

एकोऽहमासं प्रथमं मुनीन्द्रा वर्तामि पश्चादभिसम्भवामि ।
अतो न मत्तः पृथगस्ति किञ्चिद्विचार्यमाणेप्यविचार्यमाणे ॥ १४

உடலே ஆத்மா எனக் கருதி, அனைத்து உயிரினமும் ஏதோ ஒரு பலனை எதிர்பார்த்துச் செயல்படுகின்றது. எனக்கு உடலே ஆத்மா என்ற நினைப்பு இயல்பாகவே இல்லை. அதனால் எனக்குக் கடமை என எதுவும் கிடையாது. நான் முதலில் தனித்திருந்தேன். அவ்வாறு இப்போதும் உள்ளேன். இனியும் இருப்பேன். நன்கு ஆராயும்போது என்னை விட வேறு எதுவும் தனித்தில்லை. ஆராயாதபோதும் அவ்வாறே. (13-14)

न मेऽस्ति पूर्वं न परं न चान्तरं न बाह्यमस्त्येव सदा मुनीश्वराः ।
यथैव सिन्धूत्थघनो रसात्मकस्तथैव विज्ञानघनोऽहमास्तिकाः ॥ १५

न सन्ति सङ्कल्पविकल्पबुद्धयो न च प्रमाता प्रमितिः प्रमाणम् ।
प्रमेयजातं च सदा विचारतः पृथङ्न मत्तःसुखभूमलक्षणात् ॥ १६

எனக்கு முன்னும் பின்னும் உள்ளிலும் வெளியிலும் எதுவுமில்லை. கடல் நீரின் ஸாரமனைத்தும் அடர்ந்து, சுவை வடிவில் உள்ளது. அவ்வாறே உணர்வுகளனைத்தின் சாரம் நானே. பேரானந்த நிறைவு வடிவினன் நான். செயல் திட்டமோ, திட்டத்தில் மாறுபாடோ எனக்கில்லை. அளவிடுபவன், அளவிடப் பெறுவது, அளவீடு, அதற்கான அளவு என எதுவும்

*என்னைவிட்டுத் தனித்தில்லை. (15-16)*

न चास्ति हेयं परमार्थतःसदा तथैव नाऽऽदेयमपि द्विजोत्तमाः ।
अतो न साध्यं परमार्थतोऽस्ति मे न साधनं चाविदुषामिव द्विजाः ॥ १७

युष्मकमात्माहमतो हि साक्षी मत्तो न यूयं पृथगागमज्ञाः ।
तथाऽपि भेदो जलपात्रभेदाद्दिवाकरस्येव शरीरभेदः ॥ १८

*உண்மையில் தவிர்க்கத்தக்கதோ ஏற்கத்தக்கதோ வழங்க இயலாததோ எதுவுமில்லை. அதனால் அறியாதவன்போல் இனி ஸாதிக்கத் தக்கதது இது; ஸாதிக்க இயலாதது இது என்ற பாகுபாடில்லை. உம் அனைவரின் ஆத்மா நான். உமது நடைமுறையனைத்தின் ஸாக்ஷி நான். நீங்கள் என்னைவிட வேறுபட்டவரில்லை. நீர் நிரம்பிய பாத்திரத்தினளவு அதில் பிரதிபலிக்கிற ஸூர்யனின் உருவம் சிறிதும் பெரிதுமாவது போல் ஆத்மாவில் வேற்றுமை காண்பர்.'' (17-18)*

कण्व उवाच ॥

एवं वदति देवेशो परमात्मनि वस्तनि ।
संशयाविष्टहृदया व्यपृच्छन्परमेश्वरम् ॥ १९

मुनय ऊचुः ॥

देवदेवेश्वर स्वामिन्गुरूणामपि सद्गुरो ।
देहात्मनोः कथं भेदः कथमात्मा शरीरगः ॥ २०

कीदृग्भूतं शरीरं तन्मध्यगोऽपि कथं प्रभो ।
संप्रोच्यतां भगवता देवदेवेश्वरेण नः ॥ २१

इत्युक्तो ब्राह्मणैःसोऽयं परमेशो मुनीश्वरैः ।
कारुण्यातिशयात्तेषु प्रोवाच ज्ञानमुत्तमम् ॥ २२

*இவ்வாறு மஹேசன் விளக்குகையில், பரமாத்மப் பொருள் பற்றிய ஐயம் கொண்ட முனிவர்கள் பரமேசுவரனிடம் கேட்டனர். தேவதேவ! உடையவரே! குருவின் குருவே!*

*உடலுக்கும் ஆத்மாவிற்கும் என்ன வேறுபாடு? உடலினுள் ஆத்மா என்பது எப்படி? உடல் என்பது என்ன? அதில் உறைகிற ஆத்மா என்பது என்ன? என்றிவ்வாறு அந்தணர்களால் விண்ணப்பிக்கப்பட்ட ஈசன் கருணையால் மேலும் விளக்கினூர். (19-22)*

यस्मादिमानि जायन्ते भूतानि भुवनानि च ।
येन जीवन्ति जातानि लीयन्ते यत्र तानि वै ।। २३

तज्जिज्ञासस्व वेदान्ते ब्रह्मेति सततं मुदा ।
तद्ब्रह्मेदं जगत्सृष्ट्वा प्राप्य जीवात्मना जगत् ।। २४

सच्चासच्चाभवच्छक्त्या निरुक्तश्चाभवद्द्विजाः ।
अनिरुक्तश्च विप्रेन्द्रास्तथानिलयनेतरत् ।। २५

विज्ञानश्चाभवत्तद्वदविज्ञानं द्विजोत्तमाः ।
सत्यानृतश्च बहुना किमुक्तेन द्विजोत्तमाः ।। २६

यदिदं दृश्यते दृष्ट्या श्रूयते श्रवणेन च ।
गृह्यते मनसा चान्यैः तत्सर्वं ब्रह्म केवलम् ।। २७

*''எதிலிருந்து இவ்வுலகமனைத்தும் தோன்றுகின்றனவோ, எதனிருக்கையால் வாழ்கின்றனவோ, எதனைச் சென்றடைந்து மறைகின்றனவோ அது பிரும்மம் என வேதாந்தம் கூறும். உலகைப் படைத்து அதனுள் ஜீவனுக ஆட்கொள்வது பிரும்மம். நிலைத்ததும், நிலையாததுமாக, குறிப்பிடத்தக்கதும், குறிப்பிடத்தகாததுமாக, வாழ இடம் பெற்றதும் இடம்பெருததுமாக, பேருணர்வும் பேருணர்வற்றதுமாக, உண்மையும் பொய்யுமாக ஆனது. கண்ணுல் காண்பதும், காதால் கேட்பதும், மனத்தால் எண்ணப்படுவதும் அனைத்துமே பிரும்மம் தான். (23-27)*

कोशमन्नमयं भातमात्मवन्मायवैव तत् ।
स्वप्नदेह इवासत्य इति ज्ञेयो विचक्षणैः ।। २८

प्राणापानादिभेदेन विभिन्नो भाति तोयजः ।
योऽयं प्राणमयः कोशः सोऽयं मायाविजृम्भितः ॥ २९

सङ्कल्पं च विकल्पं च कुरुते सत्यवत्सदा ।
योऽयं मनोमयः कोशस्स नास्तीत्यवबुध्यताम् ॥ ३०

*உணவாலான கோசம் (கூடு) போன்ற உடல் நான் என ஆத்மாவாக மாயையால் உணரப் பெறுகிறது. கனவில் காண்கிற உடல்போல் அது மெய்யல்ல என அறிஞர் கருதுவர். நீராலான பிராணனால் அமைந்த கூடு பிராணன் அபானன் என்றவாறு பல வகைப்பட்ட பொருட்களாலானது. அதுவும் அறியாமையால் உணரப் பெறுவதே. செய்யலாம், வேறு வகையாகச் செய்யலாம் என மாறி மாறித் திட்டமிடுகிற மனத்தாலான கோசமும் பொய்யே! அது இல்லை என்பது நிச்சயம். (28-30)*

भिद्यते हृदयग्रन्थिः छिद्यन्ते सर्वसंशयाः ।
क्षीयन्ते चास्य कर्माणि यस्मिन्दृष्टे परात्मनि ॥ ३१

वाचा नाभ्युदितं यच्च येन वाग्वदति द्विजाः ।
निश्चिनोति सदा योऽर्थान्मुनयः परमार्थतः ॥ ३२

विज्ञानमयकोशोऽयं स नास्तीत्यवबुध्यताम् ।

*எதனை உணர்ந்ததும் உள்ளத்தில் தோன்றுகிற சிக்கல் விடுபடுகிறதோ, அனைத்து ஐயங்களும் விடுபடுகின்றனவோ வினைகள் அழிகின்றனவோ, அதுவே பரமாத்மா, அது சொல்லால் விளக்கப் பெறாதது. அதனிருக்கையால் வாய் பேசுகிறது. (அந்தப்பேச்சு அதனை விளக்காது.) உண்மையாகப் பொருளை அறிந்து நிச்சயம் செய்கிற உள்ளுணர்வான விஜ்ஞானமயகோசமும் ஆத்மாவல்ல. (31-32)*

सत्यं ज्ञानमनन्तं यद्ब्रह्मानन्दं श्रुतौ श्रुतम् ॥ ३३

तद्ज्ञेयं हृदये भातं प्रत्यङ्मात्रमिति द्विजाः ।
तद्ब्रह्मैव सदा ज्ञेयं नेदं वाग्विषयं न वाक् ॥ ३४

मनसा यन्न गृह्येत येनाहुर्मनसो गतिम्।
तद्ब्रह्म वै सदा ज्ञेयं न मनश्च मनो मतम्॥ ३५

यच्चक्षुषा न गृह्येत येन चक्षुश्च गृह्यते।
तद्ब्रह्म वै सदा ज्ञेयं नेदं दृष्ट्याऽभिवीक्षितम्॥ ३६

श्रूयते श्रवसा विप्रा यच्च (न्न) श्रोत्रेन्द्रयेण तु।
तद्ब्रह्म वै सदा ज्ञेयं नेदं श्रोत्रं श्रुतं द्विजाः॥ ३७

यच्च न प्राणिति प्राणो येन प्राणः प्रणीयते।
तद्ब्रह्म वै सदा ज्ञेयं नेदं प्राणविचेष्टितम्॥ ३८

यद्विज्ञातं हृदा विप्रा यन्न विज्ञातमात्मभिः।
ताभ्यामन्यत्परं विप्रा ज्ञेयं वेदान्तवाक्यतः॥ ३९

एको देवस्सर्वभूतेषु गूढःसर्वव्यापी सर्वभूतान्तरात्मा।
कर्माध्यक्षःसर्वभूताधिवासःसाक्षी चेता केवलो निर्गुणश्च॥ ४०

*உண்மை, பேருணர்வு, எல்லையின்மை என்று பிரும்மானந்தத்தைப் பற்றி வேதம் கூறும். உள்நோக்குபவருக்கு உள்ளத்தில் புலப்படுவது அது. அந்த பிரும்மமே அறியத் தகுந்தது. வாக்குக்கு எட்டுவதோ வாக்கோ பிரும்மமல்ல. மனத்தால் எது கொள்ளப்படாததோ, எதனால் மனம் செயல்படுகிறதோ, மனமோ எண்ணமோ அல்லாததோ அது பிரும்மம். கண்ணால் புலனாகாததும் கண்ணைப்புலப்படுத்துவதும் கண்ணால் காணப்படாததும் பிரும்மம். காதோ, காதால் கேட்கப்பட்டதோ பிரும்மமல்ல. அது உயிர்ப்பது அல்ல. பிராணன் எதனால் பிராண சக்தியாக இயங்குகிறதோ அது பிரும்மம். பிராணனின் செயல் பிரும்மமல்ல. உள்ளத்தால் மட்டும் உணரப் பெறுவது அது. அன்னமயம், பிராணமயம் முதலியவற்றால் உணரப்பெறாதது. அது ஒன்றே; (பல அல்ல) தோன்றுகிற பொருளனைத்திலும் உள்மறைந்திருப்பது; எங்கும் நிறைந்துள்ளது. எல்லாவற்றின் அந்த ஆத்மா, செய்கிற*

செயலனைத்தின் ஸாக்ஷி, எல்லாவற்றினுள்ளும் வசிப்பது, ஸாக்ஷீ, செயல்படச் செய்வது, தனிப்பொருள், குணச் சிறப்பு கொள்ளாதது. (33-40)

न भाति सूर्यो न च तारकाःशशी न भाति विद्युन्न च भाति पावकः।
प्रकाशमाने परमात्मवस्तुनि प्रभाति सर्वं परमात्मना सदा।। ४१

शरीरमेवाशनमत्ति सर्वदा न चात्मतत्वं परमात्मदर्शने।
करोति सर्वत्र मुनीश्वरा मरुच्छरीरगो नैव पुमानविक्रियः।। ४२

देहात्मप्रविभागबोधममलं तर्कैस्सदा बृंहितं
संन्यासाश्रमशान्तिदान्तिसहितैर्यज्ञादिदग्धैनसैः।
सम्पाद्य श्रुतिमस्तकेषु महता यत्नेन विद्यां विना
कःसंसारमविद्ययैव विहितं जित्वा विमुक्तो भवेत्।। ४३

அந்த பரமாத்மா என்ற வஸ்து தன் ஒளியால் துலங்கும்போது அதன் எதிரே ஸூர்யனோ, சந்திரனோ, நட்சத்திரங்களோ, தீயோ ஒளிமங்கிவிடும். எப்போதும் அதன் ஒளியாலேயே மற்றவை ஒளிர்கின்றன. எப்போதும் உடலே உணவை ஏற்கிறது. ஆத்ம தத்வம் உணவேற்காது. பிராணன் உடலில் இயங்குகிறது. புருஷனிடம் எத்தகைய மாறுபாடும் நேராது. உடல்வேறு, ஆத்மா வேறு என மாசற்ற அறிவுடன், பல ஆராய்வுகளின் மூலம் அந்த சிந்தனையை வலுப்படுத்தி, துறவு, சாந்தி, புலனடக்கம் முதலியவற்றால் ஈச்வரார்பண உணர்வுடன் வேள்விகள் புரிந்து பாபமகலச் செய்து உபநிஷத்துகளை பெருமுயற்சியுடன் கற்றுத் தேர்ச்சி பெறாமல் இந்த அறியாமையை அகற்றி முக்தி பெற இயலாது. (41-43)

न जायते म्रियते चापि नात्मा नायं भूत्वा भविता चापि भूयः।
अजो नित्यःशाश्वतोऽयं पुराणःस्वभावतो विमलो ब्रह्मभूतः।। ४४

एवं विजानन्ति न मां प्रथग्जनास्तथा परेषामहमात्मरूपतः।
पुरा विजानन्ति विशुद्धबुद्धयःस्वरूपमाम्नायवचोभिरेव माम्।। ४५

मुनीश्वराः कर्म विहाय मोहजं विशुद्धविज्ञानमवाप्य वाक्यजम्।
विहाय वर्णाश्रमकल्पनामिदं शरीरमाभासतया विचिन्त्यताम्॥ ४६

*இந்த ஆத்மா பிறப்பதுமில்லை. சாவதுமில்லை. தோன்றித் தோன்றி மறைவதுமல்ல. பிறப்பற்றது. நித்தியமானது. எப்போதும் புலப்படுவது. மிகப்பழையது. இயல்பாக மாசற்றது. பிரும்மமாகவே இருப்பது. இவ்வாறு என்னை மக்கள் உணர்வதில்லை. தூய அறிவுள்ளவர் உபநிஷத்தின் வாக்யங்களால் என்னை அறிகின்றனர். முனிவரில் சிறந்தவர்களே! அறியாமையால் கருமங்கள் செய்வதைத் தவிர்த்து, உபநிஷத் மஹாவாக்யத்தின் மூலம் தூய அறிவு பெற்று, வர்ணாசிரமக் கல்பனையை விட்டு உடல் தோன்றுமளவில் உண்மை என எண்ணுவீர் (44-46)*

सुखेन वर्तध्वमविद्ययाऽऽगतं मनुष्यभावं च विहाय देहजम्।
विहाय सङ्कल्पविकल्पवासनामनुग्रहेणाहमवोचमास्तिकाः॥ ४७

सुषुप्त्यवस्था सुखबोधवस्तुनि प्रकल्पिता स्वप्नवदात्मनि द्विजाः।
तथैव जाग्रत्स्वकमाययाऽऽगतं ततो विहाय त्रितयं सदाऽनृतम्॥ ४८

तुरीयरूपं त्रितयावभासकं सदा विभातं स्वयमेव मायया।
अनावृतं वेदनिधिं पुरातनं महानुभावैरनुभूयतामिह॥ ४९

*உடலால் மனிதன் என்ற நினைவு அறியாமையால் ஏற்பட்டது. அதனைத் தவிர்த்து இனிது வாழ்வீர். ஆஸ்திகர்களே! திட்டமிடுதல், திட்டத்தில் ஐயப்பாடு, முன் செய்த செயலால் ஏற்பட்ட வாஸனை இவற்றை விடுவீர். உம்மிடம் பரிவால் இதனைக் கூறுகிறேன். விழித்திருக்கையில் நித்யப் பொருளை அறியாமையால் காண இயலவில்லை. கனவில் அனைத்துமே கற்பனை. கற்பனையால் விளைந்ததையே காண்கின்றனர். நல்ல தூக்கத்தில் உணர்வின்மையே ஸுகமாகத் தெரிகிறது. இம்மூன்றுமே உண்மையல்ல. நான்காவது நிலை இந்த உடலாலோ உள்ளத்தாலோ காண்பதல்ல. அந்நிலையடைந்தவன் விழிப்பு. கனவு - தூக்க நிலைகளில் கண்டதின் உண்மை நிலையை*

*உணர்வான். அதில் உடல் - உள்ளச் சார்பில்லை. வேதம் உணர்த்துகிற பரமாத்ம நிலை. அதனைப் பெருநிலை உணர்வு பெற்ற நீங்கள் உணர்வீர். (47-49)*

क्रियमाणानि कर्माणि ज्ञानप्राप्तेरनन्तरम्।
न संस्पृशन्ति विद्वांसं पद्मपत्रं यथा जलम्॥ ५०

कर्तारं कर्म बध्नाति कर्तृत्वं विदुषो न हि।
तथा विभाति कर्तृत्वं विदुषो दग्धवस्त्रवत्॥ ५१

एतावता न सम्बद्धः कर्तृत्वं विदुषो भवेत्।
कर्तृत्वस्य विनष्टत्वान्मुख्यस्याज्ञानभागतः॥ ५२

प्रारब्धकर्मणां भोगात्क्षयो न ज्ञानवह्निना।
विदुषोऽविदुषश्चापि द्विजा एवं श्रुतिःस्मृतिः॥ ५३

*ஆத்ம ஜ்ஞானம் பெற்றபின் (கர்த்தா (செயலாளர்) என்ற நிலை நீங்கி விடுவதால்) செய்யப்படுகிற கருமங்கள், தாமரை இலையில் நீர் ஒட்டாதிருப்பது போல் ஒட்டாது. இதனை நான் செய்கிறேன் என்ற பற்றிருந்தால் அந்தச் செயல் இவனைப் பற்றும். (வினையின் பயன் தொடரும்.) ஆத்மஜ்ஞானிக்கு கர்த்தா என்ற நிலை கேடு தராது. எரிந்த துணிபோல். அஜ்ஞான நிலையில் முக்கியமான ஒட்டுதலின்மையால் அறிஞனுக்குக் கர்மபந்தம் இல்லை. ஆனால் முன் பிறவியில் அல்லது ஞானம் பெறுவதற்கு முன் செய்த வினையின் பயனை அனுபவித்துத்தான் தீர்க்க வேண்டும் என வேதமும் சாஸ்திரமும் கூறும். (50-53)*

अनारब्धानि कर्माणि ज्ञानिनो ज्ञानवह्निना।
प्रदूयेत यथा वह्नौ प्राप्तं तूलं प्रदूयते॥ ५४

अज्ञानाम्बुनिधौ विप्रा निमग्नानां शरीरिणाम्।
वर्णित्वमाश्रमित्वञ्च स्वभावादनुवर्तते॥ ५५

पुनर्नियोज्यः पुरुषःस्वाध्यासस्य भविष्यति।
पुनः करोति कर्माणि विवशः पुरमाश्रितः॥ ५६

तेषां फलोपभोगाय जायते म्रियतेऽपि च ।
एवमेव पुनर्विप्राश्चक्रवद्भ्राम्यते जनः ॥ ५७

कर्मणामुपभोगेन प्रायश्चित्तेन वा क्षयः ।
आनन्त्याच्च तथाऽज्ञानात्पुनर्नास्त्येव कर्मणाम् ॥ ५८

*ஜ்ஞானியானபின் ஜ்ஞானமே பாபத்தைப் பொசுக்கும்; நெருப்பிலிட்ட வைக்கோல் போல் பலன் தர முற்படாத பாபம் அழியும். அஜ்ஞானக் கடலில் ஆழ்ந்தவனிடம் இயல்பாக வர்ணமும் ஆசிரமும் ஒட்டும். தன் இயல்பிற்கு அவன் அடிமை. தன் வசமிழந்து அவன் திரும்பத் திரும்பக் கருமங்களைச் செய்து கொண்டிருப்பான். அதன் பலனை அனுபவிக்கத் திரும்பத் திரும்பப் பிறந்து சாவான். சக்ரச்சுழல் போன்றது இது. கர்மபலனை அனுபவித்தும் பிராயச்சித்தம் செய்தும் எண்ணற்ற கருமங்களில் சில மட்டும் தீர்ந்திருக்கும். அதனால் கர்மாவால் கரும வினையைத் தீர்க்க முடியாது. இனி எந்தக் கர்ம வினை பாக்கியுள்ளதென்பதை எவராலும் கூற முடியாது. அதனால் வினை தீர்ந்ததென்று என்றும் கொள்ளமுடியாது. (54-58)*

अवश्यमनुभोक्तव्यं कृतं कर्म शुभाशुभम् ।
नाभुक्तं क्षीयते कर्म कल्पकोटिशतैरपि ॥ ५९

तस्मान्न कर्मणा मुक्तिः विना ज्ञानेन सुव्रताः ।
ज्ञानादज्ञानविच्छित्तिर्लोके सिद्धा श्रुतावपि ॥ ६०

भवन्तः केवलं कर्म समाश्रित्य विमुक्तये ।
विहाय साङ्ख्यं वेदोक्तं विचारादेव मुक्तिदम् ॥ ६१

अज्ञानाच्च तथा ज्ञानादकुर्वत परिश्रमम् ।
तस्मादहं मुनिश्रेष्ठाः कृपयैवानया सह ॥ ६२

आगतो भवतां देशं भिक्षमाणश्छलेन तम् ।
सर्ववेदान्तसर्वस्वं समादाय मुनीश्वराः ॥ ६३

செய்தவினை நல்லதோ கெட்டதோ அதன் பலனை அனுபவிக்க வேண்டும். கோடிக்கணக்கான கல்பங்கள் ஆனாலும் அனுபவிக்கப்பெறாமல் வினை தீராது. அதனால் கருமம் செய்யச்செய்ய முக்தி கிட்டும் என்பது தவறு. ஜ்ஞானத்தால் மட்டுமே வினை தீரும். அஜ்ஞானம் விலகும். வேதத்தில் கூறிய தத்துவ ஆராய்வு முறையைக் கைவிட்டு அறியாமையால் கருமமே முக்திக்கு ஸாதனம் என எண்ணி சிரமப்படுகிறீர்கள். அதனால் உம்மிடமுள்ள கருணையால் நான் நீங்களிருக்குமிடம் வந்தேன். எல்லா உபநிஷதங்களின் ஸாரத்தையும் இப்போது பரிவுடன் உமக்குத் தந்துள்ளேன். (59-63)

युष्मभ्यं कृपया दत्तं मया ज्ञानं विमुक्तिदम्।
जन्मान्तरसहस्रेषु यज्ञदानादिभिर्द्विजाः ॥ ६४

नराणां क्षीणपापानां श्रद्धयैव प्रजायते।
यज्ञास्तपांसि दानानि तीर्थयात्रा जपो व्रतम् ॥ ६५

सर्वं लिङ्गार्चनाहीनं न फलाय भवेद्विजाः।
सर्वेषामेव धर्माणां मल्लिङ्गाराधनं परम् ॥ ६६

भवद्भिर्नार्चितो लिङ्गे चिरकालमहं द्विजाः।
तस्मान्मोहो महान् जातो युष्माकं मुनयः पुरा ॥ ६७

ब्रह्मणो वचनाल्लिङ्गे भवद्भिरहमर्चितः।
तेन पापानि दग्धानि युष्माकं सकलानि वै। ६८

ज्ञानं च वाक्यजं लब्धं भवद्भिः करबिल्ववत्।

வேள்வி தானம் முதலியவற்றை ஆயிரக் கணக்கான ஆண்டுகள் செய்த பின் பாபம் குறையும். வேள்வி தவம் தானம், தீர்த்த யாத்திரை, ஜபம், விரதம் என இவை அனைத்தும் லிங்கத்தில் சிவனை வழிபடாவிடில் பலன் தராது. எல்லா புனிதச் சடங்குகளைவிட என் லிங்கவழிபாடு சிறந்தது. லிங்கத்தில் நீங்கள் என்னை வழிபட்டதில்லை. அதனால் தான் இந்த கலக்கம். பிரும்மா கூறியபடி என்னை சிவலிங்கத்தில் வழிபட்டீர்கள். அதனால் உம்

*பாபங்கள் எரிந்து சாம்பலாயின. உபநிஷத் வாக்யத்தைக் கேட்டதும் கையில் வில்வக் கனிபோல் ஞானம் உண்டானது. (64-68)*

नास्तिकानां मनुष्याणामज्ञानान्धीकृतात्मनाम् ।। ६९

ज्ञानं न रोचते किञ्चित्प्रद्वेषश्च प्रजायते ।
तस्माद्भवद्भिर्मुनिभिः परीक्ष्य भुवि मानवान् ।। ७०

दातव्यं ब्रह्मविज्ञानमिदं वेदान्तवाक्यजम् ।
आम्नायवाक्यजं ज्ञानं ज्ञानमित्युच्यते बुधैः ।। ७१

अज्ञानमितरद्विप्राः फलतो मुक्तिसिद्धये ।
स्थापयध्वमिमं मार्गं वैदिकं मुनिपुङ्गवाः ।। ७२

अन्यथा नोपकाराय भवेद्ज्ञानं ममाज्ञया ।
अवैदिकानि शास्त्राणि मयैव विहितानि तु ।। ७३

मुक्त्यन्तरे महीं गत्वा मोहनाय द्विजोत्तमाः ।
महापापवतां नृणां तेषु वांछा प्रजायते ।। ७४

नास्ति तेषां गतिर्विप्राः कल्पकोटिशतैरपि ।
ततः समस्तैर्युष्माभिर्मार्गोऽयं वैदिकः परः ।
स्थापनीयस्सदा भक्त्या हिताय जगतां द्विजाः ।। ७५

*அறியாமையால் குருடான நாஸ்திகருக்கு ஜ்ஞானம் சுவை தராது. வெறுப்பும் ஏற்படும். அதனால் இவன் தக்கவன் என உணர்ந்தபின்னரே வேதாந்த வாக்யத்தால் பெறப்படுகிற ஜ்ஞானத்தை வழங்கலாம். வேதாந்த வாக்யத்தால் பெற்ற அறிவே நல்லறிவு. மற்றவை அறியாமையே. முக்தி பெற இந்த வேத வழி ஏற்றது. இதனை நிலைபெறச் செய்வீர். வேதத்துடன் ஒட்டாத சாஸ்திரக் கருத்தை நானே நாஸ்திகரைக் குழப்புவதற்காகப் பரப்பியுள்ளேன். மஹாபாபங்களால் மதிகெட்டவருக்கே அவ்வழியில் ஈடுபாடுவரும். உலகின்*

*முன்னேற்றத்திற்கென இந்த வேதவழியை அனைவரும் பரப்புவீர். (69-75)*

कण्व उवाच ॥

इत्येवमुक्ता मुनयस्स्वमूर्ध्ना भक्त्यातिरेकेण शिवांघ्रियुग्मम् ।
नत्वा विधायाथ समाहितेन चित्तेन तं चात्मतयाऽनुभूय ॥ ७६

विद्याबलेनैव शिवप्रसादाद्भक्त्या च वेदान्तविचारमार्गम् ।
त्यक्ताभिमाना भुवि सुस्थिरं सदा चक्रुर्विधेयाखिलचेतनानाम् ॥ ७७

एवं ब्रह्म मुनिश्रेष्ठैस्स्थापिते हृदयोपरि ।
तस्मिन्श्रीकृत्तिवासाख्यलिङ्गेऽप्यन्तरधाच्छिवः ॥ ७८

इति परमरहस्यं प्रोक्तमेतन्मया ते
श्रुतिशिरसि निषण्णं सादरेणैव विद्वान् ।
मुनिवरनिकुरुम्बानुक्रमेणागतं तत्
परहरशिववाक्यं दुर्लभं दुर्मतीनाम् ॥ ७९

इति एकविंशोऽध्यायः ॥

*இவ்வாறு உபதேசிக்கப் பெற்ற முனிவர்கள் பக்தி மிகுந்து தலையால் சிவபெருமானின் திருவடிகளில் வணங்கி மனத்தை ஒரு நிலைப்படுத்தி, ஆத்மாவாக அவரை அனுபவித்து, சிவனருளால் வேதாந்த ஆராய்வு வழியைக் கண்டு உலகில் தான் தனக்கு எனக் கொண்ட பற்றை விட்டு நிலைபெற்றனர். இவ்வாறு முனிவரின் உள்ளங்களில் பிரும்மம் இடம் பெற்றதும் ஈசன் கிருத்திவாஸேச லிங்கத்தினுள் மறைந்தார். காத்யாயனரே! இது பரம ரகசியம். வேதத்தின் தலையாய உபநிஷத்தில் இடம் பெற்றது. முனிவர்கள் மூலம் உலகிற்குக் கிட்டியது. மதிகெட்டவருக்குப் புரியாதது. பரமேசுவரரின் சொல்வடிவில் வந்தது. (76—79)*

—*—

॥ अथ द्वाविंशोऽध्यायः ॥

गजासुरोपराधः - वेदपादस्तवः

कण्व उवाच ॥

स तिरोधानसमये साम्बस्य परमात्मनः ।
आविर्बभूव विप्रेन्द्रा जातमन्युर्गजासुरः ॥ १

शुण्डाग्रञ्च समुद्धत्य प्रविमुञ्चन्सुबृंहणम् ।
प्रभञ्जन्वनशाखाश्च मुनीनुपजगाम ह ॥ २

नीलनीरदसङ्काशं गजं दैत्यं मुनीश्वराः ।
दृष्ट्वा भीत्या महेशानं तुष्टुवुर्ज्ञानिदायकम् ॥ ३

वेदसारान्समुद्धृत्य वेदपादस्तवं मुने ।
प्रीत्यर्थं शम्भवे लोकगुरवे लोकसाक्षिणे ॥ ४

निर्माय मधुरं चारु मधुराक्षरमद्भुतम् ।
मनोहरं साधुपदं भक्तानामिष्टदायकम् ॥ ५

*அத்தியாயம் - 22*

கஜாஸுரனால் பீடை, வேதபாதஸ்தவம்

*ஸாம்பனாக (அம்பிகையுடன்) பரமேசுவரன் மறைந்ததும் வெறிபிடித்த கஜாஸுரன் தன் துதிக்கையை உயரத் தூக்கி உரக்கப் பிளிறிக் கொண்டு மரங்களை முறித்துச் சாய்த்துக் கொண்டு தேவதாருவனம் வந்தான். கார்மேகம் போன்று கறுத்த அவனைக் கண்டு பயந்த முனிவர்கள் ஞானமளித்த பரமேசனைத் துதித்தனர். வேதத்தின் சாரத்துடன் வேதவாக்கியத்தையே ஒரு பாதமாகக் கொண்டதாக அது அமைந்தது. உலகின் குருவும் ஸாக்ஷியுமான சிவனை அழகிய சொற்கள் அமைந்த இனிய சுலோகங்களால் துதித்தனர். (1-5)*

मुनय ऊचुः ॥

विघ्नेश्वरं वीतविरागसेवितम् विधीन्द्रविष्ण्वादिनुताङ्घ्रिपङ्कजम्।
सभासदामाशु सुखार्थसिद्धिदं गणानान्त्वा गणपतिं हवामहे॥ ६

उमासुत गणेशान रमावाणीप्रदायक।
स्तुमो वयं सुखार्थाय ब्रह्मणां ब्रह्मणस्पते॥ ७

नगेन्द्रतनयारम्यस्तन्यपानरताननम्।
माणिक्यकुण्डलधरं कुमारं पुष्करस्रजम्॥ ८

*முனிவர் இயற்றிய வேதபாதஸ்தவம்- விக்னங்களின் ஆளுனர். பற்றற்ற முனிவர்களால் வணங்கப் பெறுபவர், பிரும்மா இந்திரன் விஷ்ணு முதலானவரால் திருவடிகளில் வணங்கப்பெற்றவர். ஸபையின் வீற்றிருக்கிற அறிஞருக்கு இனியதை வழங்குபவர். அந்தக் கணத்தலைவரை அழைக்கிறோம். லக்ஷ்மியையும் (செல்வத்தையும்) வாணியையும் (வாக்குவன்மையையும்) அருள்கிற உமையின் மைந்தரான கணேசரே! பிரும்ம வடிவனரானவருக்கும் தலைவரே! உம்மை சுகம் பெறத் துதிக்கிறோம். மலைமகளின் அழகிய முலையின் பாலைக் குடிப்பதில் ஆர்வமுள்ள மாணிக்கக்குண்டலம் தரித்த தாமரைமாலை அணிந்த குமரனைத் துதிக்கிறேன். (6-8)*

एतां देवीं यजामोरुप्रफुल्लसरसीरुहैः।
कोमलाङ्गीं चारुमुखीं यत्कुमारी मन्द्रयते॥ ९

सरस्वति नमस्तुभ्यं शिवस्तोत्रपरा वयम्।
पञ्चाशदक्षराकारैस्सुभगे वाजिनीवति॥ १०

कथं स्तुमः शिवं शान्तं मनोवाचामगोचरम्।
यस्य नामानि रूपाणि स्मर्यंते न च दृश्यते॥ ११

तथापि भक्तिभावेन स्तुमः शाश्वतमव्ययम्।
तत्कर्मनिरतान्विप्रान्योन्यस्मान्वीरमूनयत्॥ १२

वेत्ति कस्तव माहात्म्यं महादेवाश्विनौ किल।
अभूतां त्वत्पदध्यानाद्भुवि गम्भीरचेतसौ ॥ १३

*குமரியான தேவி விரும்புகிற பெரிய மலர்ந்த தாமரை மலர்களால் பேரழகுமிக்க வடிவும் அழகிய முகமும் கொண்ட தேவியைத் துதிக்கிறோம். சிவனைத் துதிக்க நாங்கள் முன் வந்துள்ளோம். 50 அக்ஷரவடிவால் அழகிய வன்மைமிக்க ஸரஸ்வதியே! உமக்கு வணக்கம். எவரது உருவம் நினைக்கப்படுகிறதே தவிர காணப்படுவதில்லையோ அந்த மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாத சாந்தனான சிவனை எவ்வாறு துதிப்போம், ஆயினும் எங்கும் காணப்பெறுபவர், நம்மை விட்டகலாதவர், என சிவனை பக்தி உணர்வுடன் துதிக்கிறோம். கருமங்களே கதி என்றிருந்த எங்களை அவர்தான் திருப்பி அழைத்து வந்தார். மஹாதேவரே! உமது பெருமையை எவர் அறிவர்! உம் திருவடித் தியானத்தால் அச்வினீ தேவர்களும் இங்கு ஆழ்ந்த உள்ளம் கொண்டவராயினர். (9-13)*

नमः शिवाय साम्बाय सगणाय ससूनवे।
नमो ज्ञानसभेशाय दिशाश्च पतये नमः ॥ १४

नमो ब्रह्मादिदेवाय विष्णुकान्ताय शम्भवे।
नमो दिग्वाससे तुभ्यं पशूनां पतये नमः ॥ १५

सन्मार्गदाय शिष्टानामाश्रितानां द्विजन्मनाम्।
मोहदात्रेऽप्यभक्तानां पथीनां पतये नमः ॥ १६

ब्रह्मविष्णुमहेशानपूजिताङ्घ्रिद्वयाय ते।
शिष्टानां पतये तुभ्यं अन्नानां पतये नमः ॥ १७

*அம்பிகையுடனும், கணங்களுடனும், புதல்வர்களுடனும் உள்ள ஜ்ஞானஸபைக்கும் திக்குகளுக்கும் தலைவருக்கு நமஸ்காரம். பிரும்மா முதலானவருக்கும் தேவர். விஷ்ணுவை மனைவியாகக் கொண்டவர். மங்களங்களின் தோற்றுவாய். திக்குகளையே ஆடையாகக் கொண்டவர். (மறைப்பில்லாதவர்)*

*பசுக்களான உயிரினத்தின் தலைவர். தன்னையண்டிய கட்டுப்பாட்டில் அடங்கிய அந்தணர்களுக்கு நல்வழிகாட்டுபவர், தன்னிடம் பக்தியற்றவருக்கு கலக்கம் தருபவர். நல்வழித்துணை, மும்மூர்த்திகளாலும் திருவடிகளில் வணங்கப் பெறுபவர், நல்லோருக்கும் உணவு வகைகளுக்கும் தலைவர். அவருக்கு நமஸ்காரம். (14-17)*

इष्टदाय नमस्तुभ्यं हृष्टभक्तिमतां नृणाम्।
पुष्टिदायार्चकानाञ्च पुष्टानां पतये नमः ॥ १८

निर्मलाय विरिञ्चेशरमाकान्ताधिपाय ते।
नमस्त्रिपुरसंहर्त्रे जगतां पतये नमः ॥ १९

भवाय भवभीतानां भवनाशैकहेतवे।
गोत्राणां पतये तुभ्यं क्षेत्राणां पतये नमः ॥ २०

नमो नमो महेशाय कृत्तिवासेश्वराय च।
नमश्श्रीकृष्णपूज्याय वृक्षाणां पतये नमः ॥ २१

नमः स्वीकृतवेदाय महादीपाय ते नमः।
नमः कृतान्तसंहर्त्रे वनानां पतये नमः ॥ २२

भिक्षमाणाय विप्राणां रक्षणार्थं तपस्विनाम्।
अक्षयक्षयवर्येषु कक्षाणां पतये नमः ॥ २३

ओषधीशार्धविलसज्जटामण्डलधारिणे।
सुभूषाय वरिष्ठाय ओषधीनां पतये नमः ॥ २४

*உள்ளம் நிறைந்த பக்தி உடையவருக்கு விரும்பியதைத் தருபவர். வழிபடுபவருக்குப் புஷ்டி தருபவர், புஷ்டியடைந்தவரின் தலைவர். தூயவர். மும்மூர்த்திகளின் தலைவர். திரிபுரம் ஒடுக்கியவர், ஸம்ஸாரபயம் கொண்டவருக்கு ஸம்ஸாரபந்தம் நீங்கக் காரணமானவர், மலைகளுக்கும் க்ஷேத்ரங்களுக்கும் தலைவர், பெரும் ஆள்பவன், யானைத்தோல்*

போர்த்திய ஈசன், ஸ்ரீ கிருஷ்ணனால் வழிபடப் பெற்றவர், மரங்களின் தலைவர், வேதத்தைத் தமதாக ஏற்றவர், பெருவிளக்கு, யமனை ஒடுக்கியவர், காட்டின் தலைவர், தவமியற்றிய அந்தணரைக் காக்கப் பிக்ஷை எடுத்தவர், அழிபவரையும் அழியாதவரையும் கட்டுக்கோப்பாகக் காப்பாற்றுபவர், பாதி சந்திரனைச் சடையில் சூடியவர், நன்கு ஆபரணமணிந்தவர், மிகமிகச் சிறந்தவர், ஓஷதிகளின் தலைவர், அவருக்கு நமஸ்காரம். (18-24)

कनकाचलचापाय शार्ङ्गिमार्गणधारिणे।
नमस्त्रिपुरसंहर्त्रे पत्तीनां पतये नमः ॥ २५

वरेण्याय वरिष्ठानां हिरण्यमयतेजसे।
अरण्यवासिपूज्याय अरण्यानां पतये नमः ॥ २६

येनाम्नायजनासक्तास्तेनानां फलदायिने।
तेषां भक्ततमानाञ्च स्तेनानां पतये नमः ॥ २७

इष्टदाय स्वभक्तानामभक्तानाञ्च वञ्चते।
भक्तकारुण्यनिधये तस्कराणां पतये नमः ॥ २८

कृष्णादिभूमिपालैश्च पूजिताङ्घ्रियुगाय च।
कृष्णपिङ्गलवर्णाय मुष्णतां पतये नमः ॥ २९

नमः कृतान्तरूपाय वायुरूपाय भानवे।
पापराक्षससंहर्त्रे प्रकृन्तानां पतये नमः ॥ ३०

गुञ्जामणिविभूषाय शिखिबर्हावतंसिने।
नमः किरातवेषाय कुलुञ्चानां पतये नमः ॥ ३१

தங்கமலையான மேருவை வில்லாகக் கொண்டவர், விஷ்ணுவை அம்பாகக் கொண்டவர், திரிபுரம் எரித்தவர், காலாட் படையின் தலைவர், மிகமிகச் சிறந்தவருக்கு அருள்புரிபவர், பொன்னொளி கொண்ட மேனியர்,

மலைவாசிகளால் வழிபடப் பெறுபவர், காடுகளின் தலைவர், வேதத்தில் தேர்ந்தவர். மறைந்து திருடுபவர்களுக்குப் பலனளிப்பவர், பக்தர்களான திருடர்களுக்கும் தலைவர், தன் பக்தர் நாடியதைத் தருபவர், பக்தியற்றவரை வஞ்சிப்பவர், பக்தரிடம் பரிவுள்ளவர், வெளிப்படையாகத் திருடுபவர் தலைவர். கிருஷ்ணன் முதலிய பூமியைக் காப்பவர்களால் திருவடியில் வணங்கப் பெறுபவர், கருமையும் கருஞ்சிவப்பும் கொண்ட மேனிகள் கொண்டவர், வயல்களில் தானியம் திருடுபவரின் தலைவர், யமனும் வாயுவுமானவர், பாவியான அரக்கர்களைக் கொல்பவர், கொன்று திருடுபவர்களின் தலைவர், குந்துமணி அணிகொண்டவர், மயில் தோகையைத் தலையில் செருகிக் கொண்டவர், வீடு நிலம் முதலியவற்றைப் பறிப்பவர்களின் தலைவர், இவருக்கு நமஸ்காரம். (25-31)

तेजोनिधिर्वासुकिकङ्कणो यो गिरीन्द्रकन्यालपनाब्जभानुः ।
स पातु शम्भुःसकलायुधैर्नो नाकस्य पृष्ठे महतो महीयान् ।। ३२

यो भाति सर्वेषु च वस्तुषु प्राक् चराचरेषु प्रमथाधिनाथः ।
पायाद्गजेन्द्रासुरभीतितो नः अणोरणीयान्महतो महीयान् ।। ३३

पुण्यैस्सुलभ्या तव पादपूजा निर्वाणसाम्राज्यपते शिवाय ।
भवन्ति धन्यास्त्वदुपासनायाः शुचिजन्मानः शुचयः पावकाः ।। ३४

स शूलभृन्नस्त्रिपुरान्तकोऽस्तु गजेन्द्रहत्यै भगवान्महेशः ।
शम्भुर्गणानां पतिरेक एव प्राणेश्वरः कृत्तिवासाः पिनाकी ।। ३५

பேரொளியின் காப்பிடம், வாஸுகியைக் கைக்காப்பணியாகக் கொண்டவர், மலைமகளின் முகத் தாமரையை மலரச் செய்கிற சூர்யன், வானின் மேல் பெரிதிற்கும் மிகப்பெரிதானவர், அந்த சிவன் எல்லா ஆயுதங்களும் பூண்டு எம்மைக் காக்கட்டும். பிரமதர்களின் தலைவர், அசைவனவும் அசையாதனவும் என பொருளனைத்திலும் துலங்குபவர், அணுவிற்கு அணுவாக, பெரிதிற்கு மிகப்பெரிதாக உள்ளவர், கஜாஸுரனால் ஏற்பட்ட திகிலிலிருந்தும் காக்கட்டும்.

विद्याविनयसंपन्नपुत्रबाडबवह्निदाम्।
अनन्तानन्दसन्दोहसमुद्रामृतदीधितिम्॥ ४१

आधिव्याधिमहादुःखकालकूटविषात्मकाम्।
शिवभक्तिवरारोहाविश्राणनविशारदाम्॥ ४२

मोक्षसाम्राज्यलक्ष्मीस्त्रीहारायितशुभाक्षराम्।
अज्ञानतिमिरध्वंसिचण्डभानुमरीचिकाम्॥ ४३

महामोहपयोराशिपानकुम्भभवात्मिकाम्।
दुःस्वप्नशमनीं नित्यं मनोल्लासप्रदायिनीम्॥ ४४

பரிணோ ருத்ரஸ்ய என்று தொடங்குகிற வேதமந்திரம் *அறம், பொருள், இன்பம், முக்தி என்ற நான்கையும் தரும். விரும்பியதனைத்தையும் வழங்குகிற காமதேனு, நினைக்க இயலாத நலனைத் தருகிற சிந்தாமணி, அருகில் அமர்ந்தவரின் விருப்பத்தை நிறைவுறச் செய்கிற கற்பகமரம். தாபத்தால் வாடியவருக்குக் கார்மேகம். வெள்ளியைக் கொட்டுகிற பெருமழை. விவேகமின்றி ஸம்ஸாரச் சுழலில் சிக்கியவரைக் கைதூக்கி விடுகிற ஆதிவராஹரின் தெற்றிப்பல். பிறவி ஊமையின் அறியாமையிருளை நீக்குகிற ஸௌர்ய ஒளி. ஏழ்மையெனும் கொடிய பாம்பின் விஷம் தீண்டியவருக்கு கருடதரிசனம் செய்விப்பது, மலட்டுத் துயருற்றவருக்கு கல்வியும் பண்பும் மிக்க நற்புதல்வரை அளிப்பது. எல்லையற்ற ஆனந்தக் கடலில் தோன்றிய அமுதம். மனநோய் - உடல்நோய் என்ற துயர் நீக்குவது. சிவபக்தி எனும் அழகியை மணமேடையில் தானம் செய்வது, மோக்ஷலக்ஷ்மீ என்ற முத்தாரமாக விளங்குவது, அறியாமை இருளகற்றுகிற சூர்ய ஒளி, மதிமயக்கம் என்ற கடலைப் பருகுகிற அகத்தியர். கெட்ட கனவைப் போக்குவது, மனத்தெளிவைத் தருவது. (35-44)*

समस्तमुनिसंसेव्यां सनकादिभिरादृताम्।
सेव्यमानां शतानन्दहरीशैर्गुणमूर्तिभिः॥ ४५

समस्तोपनिषद्घोषिच्चूडाश्रीरुद्रशेखराम्।
पुराणागमबृन्दैश्च स्तूयमानात्मवैभवाम्॥ ४६
श्रीरुद्रोपनिषद्देवीलसत्सीमन्तमौक्तिकम्।
महासौभाग्यजननीं भजमानहरीशकाम्॥ ४७
उपासकानां भक्तानामुपमाहीनभाग्यदाम्।
चत्वारिंशत्सहस्राणामृषीणामुग्रतेजसाम्॥ ४८
तथैवाष्टसहस्राणां ज्ञानदां मोक्षदायिनीम्।
शिवप्रीतिकरां हृद्यां शिवानन्दैकलक्षणाम्।
संसारविषवृक्षस्य मूलच्छेदकुठारिकाम्। ४९
शृणु वरपरमात्माबोधनामृग्वरेण्यां
सकलमुनियतीन्द्रैः प्रार्थनीयां प्रशस्ताम्।
निभृतहृदयपद्मैश्चित्सभेशाङ्घ्रिपद्मे
दृढतरवरभक्तश्रेयसे संपदे वः॥ ५०
अलमलमियमेव क्ष्मासुराणां नराणां
परमशिवसपर्याप्रक्रमे सज्जनानाम्।
परिण इति ऋगेषा पाठमात्रेण नित्यं
गमयति शिवपादं स्वाश्रितांस्तान्मनुष्यान्॥ ५१
मुनिवर ऋचमित्थं कृत्तिवासेशनृत्त
प्रकटनपटुलिप्यां मोक्षसौभाग्यदां ताम्।
परिचय चिरकालं भावयन्वीरनृत्तं
च्युतपुरनिवसन्स्याः कृत्तिवासेश्वरस्य॥ ५२

इति सप्तविंशोऽध्यायः॥

*முனிவர் அனைவர்களாலும் போற்றப் பெறுவது, ஸநகாதி முனிவருக்கு ஏற்புடையது. முக்குணமுள்ள மும்மூர்த்திகளால் தினமும் ஜபிக்கப் பெறுவது. எல்லா உபநிஷத்துகளாகிற*

பெண்ணின் தலையில் துலங்குகிற சூடாமணியான ஸ்ரீ ருத்ராத்யாயத்தின் தலையணி. புராணம் மற்றும் ஆகமங்களால் போற்றப்பெறுவது. ஸ்ரீருத்ரம் என்ற தேவியின் நெற்றியில் துலங்குகிற சூடாமணி. பெரும் ஸௌபாக்யமளிப்பது. ஹரியும் ஈசனும் ஜபிப்பது. உபாஸகர்களான பக்தர்களுக்கு உவமையற்ற பாக்கியம் அளிப்பது. 48,000 முனிவர்களுக்கு ஜ்ஞானமளித்து முக்தி தருவது. சிவனுக்கு பிரியமளிப்பது, சிவானந்தத்தையே குறிக்கோளாகக் கொண்டது, ஸம்ஸாரமெனும் விஷமரத்தை வெட்டுகிற கோடரி. பரமாத்மாவை விளக்குகிற சிறந்த மந்திரம். ஞானஸபேசனின் திருவடித்தாமரைகளில் நன்கு பதிந்த உள்ளம் கொண்டவரின் மேன்மைக்கும் நன்மைக்கும் உதவுவது, இதனைக் கேட்பாய். இந்த மந்திரம் படிப்பதாலேயே சிவபதம் அடையச் செய்யும். கிருத்திவாஸரின் இந்த வழூவூரில் தங்கி ஞான ஸபாநாதனின் நடனத்தை நீண்டநாள் கண்டுகளித்து நடனத்தின் அழகை அறிவிக்கிற பரிணோ மந்திரத்தை நன்கு ஜபித்துப் பழகுவாய். (45-52)

(பரிணோ என்று தொடங்குகிற மந்திரத்தின் பொருள் - परि नः रुद्रस्य हेतिः वृणक्तु - ருத்திரனின் ஆயுதம் நம்மீது படாமல் ஒதுங்கி நிற்கட்டும். परि त्वेषस्य दुर्मतिः अघायोः பாப வாழ்க்கை முறை கொண்ட நம்மிடம் ருத்ரனின் கொடூர எண்ணம் மழுங்கட்டும். अव स्थिरा मघवद्भ्यः तनुष्व - ஆயுதமும் தாக்குவதற்கான எண்ணமும் துதி நமஸ்காரம் என்று மகிழ்விக்கிற எம் விஷயத்தில் கடுமை குறைந்ததாகட்டும். मीढ्वः ! तोकाय तनयाय मृडय - விரும்பியதை அள்ளித் தருபவரே! இந்தச் சிசுவும் உம் புதல்வனுமான என்னைப் பரிவுடன் அணைப்பீர் என. நான் சிசு. விவேகமற்றவன்; உலகின் தந்தையாகிய உமது புதல்வர்களில் ஒருவன். பெருந்தவறிழைத்த என்னிடம் கோபம் கொள்வதும் என்னைச் சிதைக்க உம் ஆயுதத்தை எய்வதும் இயல்பானதே. ஆனால் தவறு உணர்ந்தோ, உணராமலோ இந்த ருத்ரப்ரச்னம் கூறி உம்மைத் துதிக்க வணங்க வழிபட முற்பட்டுள்ளேன். என் மீது எய்த ஆயுதம் குறி தவறி ஒதுங்கட்டும். ஆயுதம் எய்தத் தூண்டிய உமது கோபமும் மழுங்கட்டும். பெற்றவன் தவறு செய்த மகனைத் தண்டிக்காமல்

அதைப் பொறுத்துக் கொள்வதும் பொருட்படுத்தாதிருப்பதும் இயல்புதானே. நீரோ எளிதில் திருப்தி அடைந்து பக்தன் விரும்பியதைத் தருபவர். அதனால் இவ்விதம் செய்வதில் உமக்குப் பெருமை தானே!'' என ருத்திரனைத் துதிக்கிற மந்திரமிது. இப்பொருள் அபிநவ சங்கர பாஷ்யத்திலுள்ளது).

## ।। अथ अष्टाविंशोऽध्यायः ।।

### ज्ञानसभेशमन्त्रोद्धारः

कण्व उवाच ।।

इमां ज्ञानसभेशीयां विद्यां वक्ष्येऽतिगोपिताम् ।
आगमेषु पुराणेषु शृणुष्व मुनिसत्तम ।। १

सैषा कुमारस्य पुरा दर्शितेह शिवेन च ।
सनत्कुमारस्य तथा कुमारेण प्रदर्शिता ।। २

सनत्कुमारो भगवान्व्यासस्य समुपादिशत् ।
वेदव्यासो मुनिश्रेष्ठः पैल्वस्योपदिदेश ह ।। ३

पैल्वस्तु भगवान्योगी मद्गुरुश्चित्सभापतेः ।
विद्यामेतां मिथो नीत्वा मामेवं समुपादिशत् ।। ४

विद्योपदेशसमये मद्गुरुः पैल्वयोगिराट् ।
न वक्तव्याप्यभक्ताय नाशिष्याय कदाचन ।। ५

यदि ब्रूयादिमां विद्यामभक्ताय महीसुर ।
भवेदल्पायुराचार्य इति मामवदद्गुरुः ।। ६

अत एव महाभक्तश्शिवे च परमात्मनि ।
त्वमेव प्रोच्यते ब्रह्मन्नद्य विद्यां सभापतेः ।। ७

அத்தியாயம் 28.

ஞானஸபாநாதமந்திர அமைப்பு

கண்வர் கூறுகிறார் - ''ஆகமங்களிலும் புராணங்களிலும் மிகவும் ரஹஸ்யமாகக் காப்பாற்றப்பட்டுள்ள ஜ்ஞானஸபேச

*மந்திரத்தை விளக்குகிறேன். முன்னர் சிவபெருமான் ஸ்கந்தருக்கும் ஸ்கந்தர் ஸனத் குமாரருக்கும் ஸனத்குமாரர் வியாஸருக்கும் வியாஸர் பைல்வருக்கும் உபதேசித்தனர். பைல்வர் என் குரு. என்னைத்தனியே அழைத்துச் சென்று இதனை இவ்வாறு உபதேசித்தார். உபதேசித்த போது, இதனைப் பக்தனல்லாதவனுக்கும், உன் கட்டுப்பாட்டிற்கடங்கிய சிஷ்யனல்லாதவனுக்கும், உபதேசிக்கக் கூடாதென்றும், அவ்வாறு உபதேசிக்கிற ஆசாரியன் அற்பாயுளாவான் என்றும் அதனால் சிவபரமாத்மனிடம் சிறந்த பக்தியுடைய உனக்கு இன்று உபதேசிக்கிறேன் என்றும் கூறினார். (1-7)*

व्योमबिन्दुयुतं पूर्वं संसर्गं भृगुमुद्धरेत्।
सतालुं श्वेतमुद्धृत्य लकुलीशं सबिन्दुकम्॥ ८

उद्धृतेद्धरशब्दश्च प्रवीप्स्य मनुवित्तमः।
पञ्चाक्षरं समुद्धृत्य नवमीमृचमुद्धरेत्॥ ९

द्राप इत्यनुवाकस्य पञ्चार्णं प्रतिलोमतः।
ततो हरहरपदं हंसस्सोहं पदं वदेत्॥ १०

द्विसप्तत्यक्षरी ज्ञेया सतारा सर्वसिद्धिदा।
एषा ज्ञानसभेशीया विद्या वेदैश्च गोपिता॥ ११

दुर्लभा मनुजैः क्षुद्रैर्देवगन्धर्वयोगिभिः।
ऋषिर्ब्रह्मास्य मन्त्रस्य ककुप्छन्दश्च देवता॥ १२

गजेन्द्रभेदी भगवान्परमात्मा पिनाकधृक्।
वसुभिश्चाष्टभिष्षड्भिर्वासिष्ठमुनिभिः क्रमात्॥ १३

ऋग्भवैरक्षरैर्जातियुक्तहंसयुतैः क्रमात्।
मन्त्री कुर्याद्विशेषेण कराङ्गन्यासषट्ककम्॥ १४

*(மந்திரம் ஸங்கேத மொழியில் தரப்பட்டுள்ளது. மந்த்ர பீஜகோச விளக்கப்படி மந்திரத்தின் முழுவடிவம்–*

ओं हंसः सोहं हर हर नमः शिवाय।
परि णो रुद्रस्य हेतिर्वृणक्तु परि त्वेषस्य दुर्मतिरघायोः।
अव स्थिरा मघवद्भ्यस्तनुष्व मीढ्वस्तोकाय तनयाय मृडय।
यवाशिमन (शिवाय नमः) हर हर हंसः सोहं ओं

*என்பது ஜ்ஞானஸபேச மந்திரம். வழூவூர் ஸம்பிரதாயமறிந்த குருமுகமாகப் பெற வேண்டியது–*

*தேவர் கந்தர்வர் முதலானவருக்கே எளிதில் கிட்டாதது. அற்ப மனிதருக்குக் கிட்டாதது. இதற்கு பிரும்மா ருஷி. ககுப் சந்தஸ், கஜேந்திர ஸம்ஹார மூர்த்தியான பிநாகம் ஏந்திய பகவான் ருஷி. பரிணோ மந்திரத்தின் பகுதிகளைக் கொண்டு கரநியாஸமும் அங்கநியாஸமும்*

(१. परि णो रुद्रस्य हेतिः २. वृणक्तु परि त्वेषस्य. ३. दुर्मतिरघायोः
४. अवस्थिरा मघवद्भ्यः ५. तनुष्व मीढ्वस्तोकाय ६. तनयाय मृडय।

*ஒவ்வொன்றின் முடிவிலும்* जय *சேர்க்கவும். இவை கரஅங்க ந்யாஸ மந்திரங்கள் என ஸங்கேத மொழியில் கூறப்பட்டுள்ளது). (8-14)*

ध्यानम्॥

ध्यायेज्जी(वन्दे जी) मूतबृन्दोल्लसिततनुरुचिं चारुहासं सुदंष्ट्रं
शूलासीडिण्डिमोद्यद्भुजफणिफलकं खेटकं श्रीकपालम्।
षड्भिर्दोर्भिर्दधानं करकमलयुगप्रावृतं हस्तिचर्म
प्राकुञ्चद्वामपादं मदकरिशिरसी नृत्तदक्षाङ्घ्रिपद्मम्॥ १५

अथ वा (ध्यायाम्य) मररुट्पत्रपद्ममध्येऽञ्जनप्रभम्।
अष्टबाहुं त्रिणेत्रं च चारुहासमुखाम्बुजम्॥ १६

शूलासिडमरूदञ्चन्नागखेटकपालकैः।
विलसत्षड्भुजयुतं कटकाङ्गदमण्डितम्॥ १७

गजचर्मावृतरतभुजयुग्मभुजङ्गमम्।
हस्तिमस्तकसन्नृत्यद्दक्षिणाङ्घ्रिसरोरुहम्॥ १८
अनेकमणिसंक्रुसघण्टामालाविराजितम्।
सम्यक्कुञ्चितवामाङ्घ्रिकमलं चारुकुण्डलम्॥ १९
रक्तभुग्गणनाथाभ्यामुन्मुखाभ्यां च शङ्करे।
लसच्चतुर्भुजाभ्यां च युताभ्यां कर्णकुण्डलैः॥ २०
सेव्यमानमहोरात्रं श्रीमद्बालाङ्कुराम्बया।
मुहुर्मुहुर्वीक्षयन्तं पङ्कजायतचक्षुषा॥ २१

*தியானவடிவம் - (1) கார்மேகக் கூட்டம் போன்ற மேனி வண்ணம் கொண்டவர், அழகாகச் சிரிப்பவர், அழகிய தெற்றிப் பற்கள் உள்ளவர், சூலம், கத்தி, உடுக்கை, படம் காட்டுகிற நாகம், கேடயம், கபாலம் இவற்றை ஆறு கைளில் ஏந்தியவர், இரண்டு கைகளால் யானைத்தோலைப் போர்த்திப் பிடித்துக் கொண்டிருப்பவர், இடது காலை மடித்திருப்பவர், மதம் பிடித்தயானையின் தலையில் வலது காலால் நடனமாடுபவர் இந்த ஈசனைத் தியானிக்கிறேன்.'' (வணங்குகிறேன்)*

*(2) தேவதாரு மரஇலை தாமரை மீது அமர்ந்திருப்பவர், கண்மையொத்த மேனி வண்ணத்தினர், எட்டுகைகள் கொண்டவர், முக்கண்ணர், அழகுடன் சிரிக்கிற முகத்தாமரை கொண்டவர், சூலம், கத்தி, உடுக்கை, படம் தூக்கிய நாகம், கேடயம், கபாலம் இவை ஏந்திய ஆறுகைகளுள்ளவர், யானையின் மத்தகத்தின் மீது வலது காலால் நடனமாடுபவர், எண்ணற்ற மணிகள் ஒலிக்கின்ற மணிமாலை கொண்டவர், இடதுகாலை நன்கு மடக்கியவர், அழகிய குண்டலமுள்ளவர், சங்கரரை நோக்கிக் குண்டலமாடுகிற முகம் தூக்கிய நான்கு கைகளுள்ள ரக்தக்குடியர் (பைரவர்) கணநாதர் இருவரால் இரவும் பகலும் ஸேவிக்கப் பெறுபவர், தாமரை போன்ற விரிந்த கண்களுள்ள பாலாங்குராம்பிகையால் அடிக்கடி காணப் பெறுபவர். என்றிவ்வாறு ஈசனைத் தியானிக்க வேண்டும். (15-21)*

एवं ध्यात्वा महादेवं सद्गुरोर्मुखपङ्कजात् ।
लब्ध्वा(ब्धां) विद्यामिमां मन्त्री लक्षमेकमनन्यधीः ॥ २२

दशांशं तर्पणं कुर्याद्दशांशं होमयेत्ततः ।
नवीनगोघृतेनापि करवीरसुमैरपि ॥ २३

ब्राह्मणाराधनं कुर्यात्पश्चाद्दशशतांशकम् ।
मन्त्रसिद्धिर्भवत्येव सर्वाभीष्टप्रदायिनी ॥ २४

*மந்திரம் ஸித்திக்க- இவ்வாறு தியானித்து நல்ல குருவிடமிருந்து பெற்ற மந்திரத்தை ஒரு லக்ஷம் தடவை ஜபிக்கவேண்டும். அதில் பத்தில் ஒரு பங்கு தர்பணம். அதில் பத்தில் ஒருபங்கு நெய்யாலும், அரளிப்பூவாலும் ஹோமம், அதில் பத்தில் ஒருபங்கு அந்தணர்க்கு உணவிடல் என இவற்றைச் செய்ய மந்திரம் ஸித்திக்கும். (22-24)*

मन्त्रजपविधिः

पुण्डरीकाजिनासीनस्त्रिपुण्ड्राङ्कितमस्तकः ।
षट्शतं प्रजपेन्मूलमन्त्रं प्रतिदिनं द्विजः ॥ २५

तदर्धं द्विशतं वापि शतमष्टोत्तरं तु वा ।
अङ्गुलीभिश्चैकमेकं पर्वभिश्च दशाधिकम् ॥ २६

शतञ्च शङ्खमणिभिः सहस्रं पद्मबीजकैः ।
मणिभिर्दशसाहस्रं रुद्राक्षेणान्तवर्जितः ।
मातृकाक्षरसङ्ख्यस्ततोऽधिक इति स्मृतः ॥ २७

उच्चैर्जपोऽधमः प्रोक्त उपांशुर्मध्यमो जपः ।
उत्तमो मानसजपो गद्यन्ते मुनिभिस्त्रिधा ॥ २८

अतिह्रस्वो व्याधिपीडाप्यतिशीघ्रं धनक्षयः ।
अक्षराक्षरसंयुक्तं जपेन्मौक्तिकहारवत् ॥ २९

आलस्यं जृम्भणं निद्रां क्षुधं निष्ठीवनं भयम् ।
विकारं देहवायुञ्च जपकाले विवर्जयेत् ॥ ३०

மந்திர ஜபமுறை - புலித்தோல் மீதமர்ந்து விபூதிபூசிய நெற்றியுடன், தினமும் 600 தடவை மூலமந்திரத்தை ஜபிக்கவும். 300 அல்லது 200 அல்லது 108 தடவை ஜபிக்கலாம். விரல்களால் அல்லது விரல் மடிப்புக் கோடுகளில் கட்டை விரல்தொட்டு 110 தடவை சங்கு மணி மாலை கொண்டு 100 தடவை தாமரை மணிகளால் ஆயிரம் தடவை, ரத்தின மணிமாலையால் 10,000 தடவை, ருத்திராக்ஷத்தால் எண்ணற்ற தடவை, மாத்ருகாக்ஷரங்கள் 50 சேர்த்து 50 தடவை என ஜப எண்ணிக்கை சிறந்தது. உரக்கச் சொல்வது தாழ்ந்தது. பிறர் காதுபடாமல் வாயால் உச்சரிப்பது நடுத்தரமானது. மனத்தினுள் உதடசையாமல் ஜபிப்பது உத்தமம். எழுத்துக்களைக் குறுக்கி உச்சரிக்க நோய் வரும். வேகமாக ஜபிக்க செல்வம் குறையும். ஒவ்வாரு அக்ஷரமும் தனித்தொலிக்க முத்தாரம் போல் ஜபிப்பது சிறந்தது. சோம்பல், கொட்டாவி, தூக்கம், பசி, காறித்துப்புதல், உடலை முறித்தல், கீழ் வாயுவிடுதல் இவற்றை ஜபகாலத்தில் தவிர்க்கவும். (25-30)

मातृकार्णं जपेन्मन्त्री भूतशुद्धिसमन्वितः ।
क्रमः क्रमात्पञ्चशतैर्मासात्सिद्धो भवेन्मनुः ॥ ३१

अस्य देवस्य मन्त्रस्य नैव मित्रारिशोधनम् ।
तथाप्यवश्यं कर्तव्यं मासशोधनमादरात् ॥ ३२

असिद्धिश्चैत्रमासे च भूलाभो मासि माधवे ।
मरणं ज्येष्ठमासे स्यादाषाढे बन्धुनाशनम् ॥ ३३

इष्टप्राप्तिः श्रावणे स्यान्नभस्ये स्थाननाशनम् ।
संपत्तिराश्विजे मासि कार्तिक्यां रत्नसम्पदः ॥ ३४

आयुर्वृद्धिर्मार्गशीर्षे पुष्ये तु धननाशनम् ।
अमोघार्था माघमासे फाल्गुने तु वशीकृतिः ॥ ३५

सोमङ्गगुरुकाव्यानां वारेषु द्विजपुङ्गव ।
मैत्रे परममैत्रे च साधके क्षेमसंपदोः ॥ ३६

दशमी पर्वषष्ठीषु मन्त्रदीक्षां समाचरेत्।

மந்திரஸித்திகான நேரம் - காலவரை- மாத்ருகாவர்ண ஜபம் செய்து பூத சுத்தி செய்துபின் மந்திர ஜபம் 500 தடவை செய்ய ஒரு மாஸத்தில் மந்திரம் வசப்படும். இதன் ஜபம் எடுக்க மித்ர - சத்ரு சோதனை செய்வதவசியமில்லை. (பொதுவாக எடுத்துக் கொள்ளவிருக்கிற மந்திரம் அனுகூலமானதா பிரதிகூலமானதா என்பதை மித்ராரி சோதனம் செய்வர் இது. இம்மந்திரத்திற்கு அவசியமில்லாதது. எல்லோருக்கும் இது அனுகூலமானது). ஆனால் மந்த்ர ஜபம் தொடங்க சில மாதங்கள் ஏற்றவை. சித்திரை - சித்தியாகாது, வைகாசியில் பூமிலாபம். ஆனியில் மரணபயம், ஆடியில் உறவினருக்குத் தீங்கு, ஆவணியில் விரும்பியது கிட்டும். புரட்டாசியில் வசிக்குமிடத்திற்கு கெடுதி, ஐப்பசியில் செல்வவளர்ச்சி, கார்த்திகையில ரத்னலாபம், மார்கழியில் நீண்ட ஆயுள், தையில் செல்வ அழிவு, மாசியில் வீணாகாத எல்லையற்ற நலம், பங்குனியில் வசீகரணம். அதனால் மாஸத்தேர்வு அவசியம்.

திங்கள் புதன் வியாழன் வெள்ளி என்ற கிழமைகள், அவரவரது மைத்ரம், பரமமைத்ரம், ஸாதகம், க்ஷேமம், ஸம்பத் என்ற நக்ஷத்திரங்கள், தசமி பௌர்ணமி ஷஷ்டி திதிகள் இவை மந்திர தீக்ஷைக்கு ஏற்றவை. (31-36)

आदौ पञ्चब्रह्मचक्रं लिखित्वा देवमर्चयेत्॥ ३७

अपूपपायसादीनि महादिक्षु निवेदयेत्।
कर्पूरयुक्तताम्बलनालिकेरैर्गणेश्वरम्॥ ३८

द्वारपालं च गन्धाद्यैर्नालिकेरफलैस्तथा।
संपूज्य देवपूजान्ते शिष्यमाहूय सद्गुरुः॥ ३९

स्वर्णपुष्पैरर्चयित्वा देवं तत्र प्रणामयेत्।
शङ्खतोयेन संप्रोक्ष्य पुरतःस्थापयेच्च तम्॥ ४०

स्वयं परशिवो भूत्वा निस्सन्दिग्धमना गुरुः।
निजहस्तेन शिष्यस्य शिरो मन्त्रं स्पृशेज्जपन्॥ ४१

मन्त्रदीक्षेति विज्ञेया मलत्रयविमोचनी।
इत्थं विशुद्धशिष्यस्य दक्षिणे श्रोत्रमूलतः ।। ४२
प्रणवादिमिमां मूलविद्यामुपदिशेद्गुरुः।
अस्ति चेत्पूर्णकरुणा तस्मिंश्चक्रं प्रदर्शयेत्।। ४३
ताण्डवस्य स्थितिं तस्य भावनामपि सूचयेत्।
स्त्रीशूद्राणामिमां विद्यां नो वदेद्द्विजसत्तमः ।। ४४
तेषामनधिकारत्वाच्छ्रुतौ वेदविदां वर।
तेषां मुक्तिर्न सन्देहश्चक्रराजस्य दर्शनात्।। ४५

*மந்திர உபதேசமுறை - பஞ்சபிரம்ஹ சக்ரம் எழுதி அதில் ஈசனை வழிபட்டு நான்கு திக்குகளிலும் அப்பம் பாயஸம் வைத்து நிவேதனம் செய்யவும். பச்சைகர்பூரம் கலந்த தாம்பூலம், தேங்காய் இவற்றை கணேசருக்கும் சந்தனம் முதலிய நறுமணப் பூச்சு, தேங்காய் இவற்றை துவாரபாலகருக்கும் நிவேதனம் செய்து அனுமதி பெற்று பெருமானை வழிபட்டபின் சிஷ்யனை ஸ்வர்ணபுஷ்பத்தால் ஈசனை வழிபடச் செய்து வணங்கச் சொல்லவும். சங்கநீர் தெளித்து தம் முன் உட்காரச் சொல்லவும். தானே பரமசிவனுன பாவனையுடன் ஐயமின்றி, தன் கையால் சீடனின் தலையில் கை வைத்து மந்திரம் ஜபிக்கவும். இது மந்திர தீக்ஷை. ஆணவம், கர்மஜம், மாயை என்ற மும்மலம் நீங்கும். இதனுல் தூய்மை பெற்ற சிஷ்யனது வலது காதில் ஓங்காரத்துடன் மூலமந்திரத்தை உபதேசிக்க வேண்டும். பரிவு நிறைந்திருந்தால் ஜ்ஞான சக்கிரத்தையும் ஈசனின் தாண்டவ நிலையையும் அதனுல் உணரவேண்டியதையும் காட்ட வேண்டும். ஸ்திரீகளுக்கும் சூத்திரர்களுக்கும் வேதத்தில் அதிகாரமில்லாததால் இதனை உபதேசம் செய்வதில்லை. சக்ரராஜரைத் தரிசித்தாலேயே அவர்களுக்கு முக்தி கிட்டும். (37-45)*

इत्थं प्रोक्तोपदेशस्तु पूजयेद्द्रविणैर्गुरुम्।
सन्तोष्य भूषणैर्वस्त्रैः शक्त्या गुरुमवञ्चयेत्।। ४६

अनुज्ञातस्तु गुरुणा प्रयोगानपि साधयेत्।
सर्वसौख्यमिह प्राप्य जीवन्मुक्तः शिवो भवेत् ।। ४७
विद्वेषिणोऽस्य नितरां नश्यन्ति च शिवाज्ञया।
प्रतिमासं चक्रराजं पूजयेद्भक्तिसंयुतः ।। ४८
ततः प्रयोगान्कुर्वीत सिद्ध्यन्ते भक्तसत्तम।
कृष्णाष्टमीं समारभ्य यावत्कृष्णचतुर्दशी ।। ४९
घृतापामार्गदुर्धूरपलाशाचतुरङ्गुलैः।
सिन्धुवारतिलैःसाज्यं प्रत्येकञ्च सहस्रकम् ।। ५०
क्रमेण जुहुयान्मन्त्री संस्कृते हव्यवाहने।
पिशाचभूतवेतालब्रह्मराक्षससम्भवान् ।। ५१
उपद्रवान्प्रशमयेन्मन्त्रदेवप्रसादतः।
अनेनैव तु होमेन सहजान्कुलजानपि ।। ५२
कृत्योद्भवान्पिशाचांश्च प्रेरकांश्चोपदेशकान्।
डाकिनीशाकिनीप्रेतरौद्रवैनायकग्रहान् ।। ५३
कूष्माण्डवैष्णवक्रूरभैरवग्रहनायकान्।
अपस्मारमहाभूतगारुडोरगदैविकान् ।। ५४
नाशयेत्तन्त्रविन्मन्त्री चित्सभेशप्रसादतः।

*சிஷ்யனின் மந்திர ஸாதனை முறை - உபதேசம் பெற்ற சிஷ்யன். குருவைத் தனம் அணி ஆடை இவற்றால் சக்திக்கேற்ப உபசரிக்க வேண்டும். குருவின் அனுமதி பெற்று பிரயோகமுறைகளையும் பயில வேண்டும். இம்மையில் ஸுகமனைத்தையும் பெற்று ஜீவன் முக்தனாகி சிவபதம் அடைகிறான். சிவனின் ஆணையால் இவனது எதிரிகள் அழிவர். ஒவ்வொரு மாதமும் சக்ரராஜ பூஜை செய்ய வேண்டும். மந்திரம் ஸித்தி பெற்றதும் பிரயோக முறைகளைச் செய்யலாம். கிருஷ்ணபக்ஷத்து அஷ்டமீ முதல், சதுர்தசி வரை, நெய்,*

நாயுருவி, ஊமத்தை, புரசு, கொன்னை, நொச்சி, எள்ளு இவற்றால் ஒவ்வொன்றாலும் ஆயிரம் தடவை முறைப்படி அமைந்த அக்னியில் ஹோமம் செய்ய, பிசாசம் பூதம் முதலியவற்றின் பாதிப்பு நீங்கும். வினைப்பயனாக, குலக்கிரமமாக, செய்வினையால் ஏற்படுகிற பாதிப்புகள் நீங்கும். யோகினீ, பிரேதம், ருத்ர - விநாயகக் கிரஹங்கள் - வைஷ்ணவ - பைரவ - தோஷங்கள், அபஸ்மாரம், கருட - நாக தைவ தோஷங்கள், இவற்றின் பாதிப்பு, ஞானஸபா நாதனின் அருளால் நீங்கும். *(46-55)*

वन्ध्यापुत्राभिलषितः प्रयोगमपि साधयेत्।। ५५

तदृतुस्नानसमये कृतकृत्यः कृतः शुचिः ।
गोचर्ममात्रभूभागे गोमयेनोपलेपिते ।। ५६

द्रोणं तदर्धं तस्यार्धं तिलतण्डुलव्रीहिभिः ।
निर्मिते मण्डले चारुदलाष्टसरसीरुहे ।। ५७

अव्रणं कलशं रम्यं तन्तुभिः परिवेष्टितम् ।
स्थाप्य वस्त्रयुगेनाम्रदलैश्चारुमुखं द्विजः ।। ५८

सकूर्चनालिकेरं च सरत्नमभिपूज्य च ।
आवाह्य तत्र देवेशं श्रीमद्बोधसभानटम् ।। ५९

षोडशैरुपचारैस्तं समभ्यर्च्य विधानतः ।
जपेद्द्वादशसाहस्रमनया विद्यया द्विजः ।। ६०

अभिमृश्य च कुम्भं तु विद्यार्थगतमानसः ।
ऋतुस्नानस्य दिवसे वन्ध्यां पुत्रार्थिनीं बुधः ।। ६१

अभिषिंचेद्घटेनैनां मन्त्री मन्त्रं जपन्मृदु ।
सा वन्ध्या शीघ्रतः पुत्रं ज्ञानिनं वेदपारगम् ।। ६२

दीर्घायुषं रूपवन्तं तेजोवन्तं धनैर्युतम् ।
प्राप्नुयादचिरादेव सर्वलक्षणलक्षितम् ।। ६३

*மலடி குழந்தைபெற, அவள் ருதுகாலம் முடிந்து நீராடிய பின், அவளுக்காக, பசுவின் தோல் விரியுமளவிற்குள்ள இடத்தில், கோமயத்தால் மெழுகி, நெல் **100**, அரிசி **50**, எள் **25** என்ற அளவில் தானியம் பரப்பி எட்டிதழ் தாமரை வரைந்து அடிபட்டு நசுங்காத கலசத்திற்கு நூல் சுற்றி இரு ஆடைகள் சுற்றி மாவிலை, தேங்காய், தர்ப்பையாலான கூர்ச்சம் வைத்து நீரில் ரத்தினம் போட்டு, கலச பூஜை செய்து அதில் ஞானஸபாநாதனை ஆவாஹனம் செய்து பதினாறு உபசாரங்களும் செய்து கும்பத்தைத் தொட்டுக் கொண்டு **12,000** தடவை மந்திர ஜபம் செய்யவும். அந்த நீரால் ருதுஸ்நானம் செய்த புத்ரலாபம் விரும்பிய பெண்ணின் மீது ஜபத்துடன் அபிஷேகம் செய்ய, சீக்கிரத்தில் நீண்ட ஆயுளுள்ள அழகிய மேனி ஒளியுடனுள்ள சிசுவைப் பெறுவாள். அந்த புத்திரன் வேதம் கற்றுத் தேர்வான். **(56-63)***

वश्यकामो जपेन्मन्त्रं श्रीमद्बोधसभापतेः ।
सम्यक्च साधयित्वा च लक्षवारं द्विजोत्तमः ॥ ६४

लक्षमात्रं जपन्भूयो ब्राह्मणान्वशमानयेत् ।
द्विलक्षजपमात्रेण देवेशं वशमानयेत् ॥ ६५

त्रिलक्षं विधिवज्जप्त्वा वह्निं स्ववशमानयेत् ।
चतुर्लक्षजपेनैव धर्मेशं वशमानयेत् ॥ ६६

पञ्चलक्षजपान्मन्त्री निर्ऋतिं वशमानयेत् ।
षल्लक्षं प्रजपन्मन्त्री वरुणं वशमानयेत् ॥ ६७

सप्तलक्षजपाद्वायुं धनेशं वशमानयेत् ।
वसुलक्षजपेनैव चेशानं वशमानयेत् ॥ ६८

रसलक्षं प्रजप्त्वा तु देवेन्द्रं वशमानयेत् ।
दशलक्षं जपन्मन्त्री वागीशं वशमानयेत् ॥ ६९

रुद्रलक्षजपाच्छीघ्रं वशयेच्च प्रजापतीन् ।
मार्ताण्डलक्षं प्रजपन्ब्रह्माणं वशमानयेत् ॥ ७०

लक्षत्रयोदशजपाद्वाणीं स्ववशमानयेत्।
मनुलक्षं जपित्वा तु केशवं वशयेद्बुधः ॥ ७१

लक्षपञ्चदशाद्ब्रह्मन्नन्दिनं वशमानयेत्।
जपात्षोडशलक्षस्य कालरुद्रं वशं नयेत् ॥ ७२

लक्षाणां दशसप्तानां रुद्राणीं वशमानयेत्।
अष्टादशानां लक्षाणां जपादीश्वरमीश्वरीम् ॥ ७३

एकोनविंशल्लक्षाणां जपेन च वशं नयेत्।
विंशल्लक्षजपान्मन्त्री वशयेच्च सदाशिवम् ॥ ७४

एकविंशेन लक्षाणां महाशक्तिं वशं नयेत्।
द्वाविंशलक्षप्रजपाद्विघ्नेशं वशमानयेत् ॥ ७५

त्रयोविंशतिलक्षेण सेनानीं वशमानयेत्।
चतुर्विंशेन देवेशीमखण्डज्ञानरूपिणीम् ॥ ७६

अम्बां त्रैलोक्यजननीं वशयेत्साधकोत्तमः।
पञ्चविंशेन लक्षेण सालोक्यं भवति ध्रुवम् ॥ ७७

सप्तविंशेन सामीप्यं शिवस्य परमात्मनः।
त्रिंशल्लक्षेण सारूप्यं प्राप्नुयान्मन्त्रवित्तमः।
चत्वारिंशच्च लक्षं तु जपित्वा मुक्तिमाप्नुयात् ॥ ७८

*ஜனவசியம் செய்ய விரும்புபவன் லக்ஷம் தடவை ஜபிக்க வேண்டும். இரண்டு லக்ஷம் ஜபம் செய்ய இந்திரன் வசமாவான். மூன்று லக்ஷ ஜபத்தால் அக்னியும், நான்கு லக்ஷ ஜபத்தால் யமனும், ஐந்து லக்ஷ ஜபத்தால் நிர்ருதியும், ஆறு லக்ஷ ஜபத்தால் வருணனும், ஏழு லக்ஷ ஜபத்தால் குபேரனும், எட்டு லக்ஷ ஜபத்தால் ஈசானனும், ஒன்பது லக்ஷ ஜபத்தால் தேவேந்திரனும், பத்து லக்ஷ ஜபத்தால் பிருஹஸ்பதியும், பதினொறு லக்ஷத்தால் பிரஜாபதிகளும், பன்னிரண்டு லக்ஷத்தால் பிரும்மாவும், 13 லக்ஷத்தால் ஸரஸ்வதியும், 14 லக்ஷத்தால் விஷ்ணுவும் 15 லக்ஷத்தால் நந்தியும், 16 லக்ஷத்தால் காலருத்திரரும், 17*

*லக்ஷத்தால் ருத்ரபத்தினியும், 18 லக்ஷத்தால் ஈச்வரனும், 19 லக்ஷத்தால் ஈச்வரியும், 20 லக்ஷத்தால் ஸதாசிவனும், 21 லக்ஷத்தால் மஹாசக்தியும், 22 லக்ஷத்தால் கணபதியும், 23 லக்ஷத்தால் குகனும், 24 லக்ஷத்தால் மூவுலகின் நாயகியும் ஞானரூபிணியுமான அம்பிகையும் வசப்படுவர், 25 லக்ஷத்தால் ஸாலோக்கியமும், 27 லக்ஷத்தால் சிவஸாமீப்யமும், 30 லக்ஷத்தால் சிவஸாரூப்யமும் பெறுவர். நாற்பது லக்ஷத்தால் முக்தி கிட்டும். (64-78)*

चत्वारिंशल्लक्षमेनं जपित्वा सर्वान्कामान्प्राप्य योगेन विद्वान्।
जीवन्मुक्तो देवरूपीह लोके सत्यं सत्यं सञ्चरत्येव नित्यम्॥ ७९

विद्यामिमां बोधसभापतेर्यो जपेच्च नित्यं प्रयतो यतात्मा।
वाणी सदा नृत्यति वाचि तस्य महीभुजो दाससमा भवन्ति॥८०

अनुदिनमिभकुम्भे नृत्यमानाङ्घ्रिपद्मं
हरिहरविधिसेव्यं चित्सभायां वरेण्यम्।
कुसुमसलिलवस्त्रैर्धूपदीपैर्निवेद्यैः
हृदयसरसिजे सम्पूज्य मुक्तः शिवस्सयात्॥ ८१

इति अष्टाविंशोऽध्यायः॥

—*—

*நாற்பது லக்ஷ ஜபத்தால் விரும்பியதனைத்தையும் இம்மையில் பெற்று ஜீவன் முக்தனாகி தேவனாக உலகவலம் வருவான். ஜ்ஞான ஸபாநாத மந்திர ஜபம் செய்பவரின் நாக்கில் ஸரஸ்வதி நடனமாடுவாள். அரசர் அடிமையாகிப் பணிவிடை புரிவர். தினமும் யானை மத்தகத்தின் மீது நடனமாடுகிற மும்மூர்த்திகளால் வணங்கப்பெறுகிற - ஞானஸபாநாதரை புஷ்பம், ஆடை, நீராட்டல், தூபம், தீபம், நிவேதனம் இவற்றால் இதயத்தினுள் வழிபட்டுச் சிவனாவார். (79-81)*

—*—

## ।। अथ नवविंशोऽध्यायः ।।

## श्रीचित्सभेशसभाचक्रराजमहिमा

कण्व उवाच ।।

चित्सभेशसभाचक्रप्रस्तारक्रममुच्यते ।
रहस्यानां रहस्यञ्च गोप्यानां गोप्यमेव च ।। १

चक्रराजमिदं श्रेष्ठं चक्राणामुत्तमोत्तमम् ।
सर्वपापप्रशमनं सर्वशान्तिकरं शुभम् ।। २

सर्वचक्रार्चाफलदं सर्वचक्रोत्तमोत्तमम् ।
सनकादिनुतं दिव्यं सर्वकामफलप्रदम् ।। ३

दर्शनान्मुक्तिदं नृणां जीवन्मुक्तिप्रदं तथा ।
सुगोप्यमपि तद्वक्ष्ये शृणु स्नेहात्तवानघ ।। ४

चक्रं च द्विविधं ज्ञेयं श्रीमद्बोधसभापतेः ।
प्रथमं तु सभाचक्रं पञ्चब्रह्माभिधं परम् ।। ५

श्रीमद्ज्ञानसभाचक्रं पूर्वं वक्ष्यामि तत्वतः ।
पञ्चब्रह्माभिधं पश्चाद्वक्ष्यमाणमतः शृणु ।। ६

*அத்தியாயம் 29*

ஞானஸபாநாத சக்கிரராஜம்

*கண்வர் கூறுகிறார் - ஞானஸபா நாதரின் ஸபையில் உள்ள சக்ரராஜம் வரைகிற முறை சொல்லப்படுகிறது. இது ரகசியத்திலும் ரகசியம். மறை பொருளாகக் காப்பாற்றத் தக்கது. மற்ற சக்கிரங்களின் ராஜா என இதைக் கருதுவர். இதனைக் காண்பது எல்லா பாபங்களையும் போக்கவல்லது. தோஷங்களைச் சாந்தி செய்வதில் சிறந்தது. மற்ற சக்கிரங்களனைத்தையும் வழிபடுவதன் பலனைத் தரவல்லது. ஸநகர் முதலான மஹரிஷிகள் பூஜித்தது. விரும்பியதனைத்தையும் தரும். தரிசனம் செய்தாலே முக்தி தருவது. ஜீவன் முக்தி தருவது. இது ரகசியமானதெனினும்*

உன்னிடமுள்ள பரிவால் கூறுகிறேன். ஞானஸபாசக்கிரம் பஞ்சப்பிரம்மசக்ரம் என இருவகைப்படும். முதலில் ஞானஸபா சக்ரம் பற்றிக் கூறுகிறேன். (1-6)

इष्टकाभिश्शिलाभिर्वा कुड्ये सम्यग्विनिर्मिते ।
आदिपद्मप्रोल्लसिते समन्ताच्चतुरश्रके ॥ ७

भागं सुशर्कराचूर्णं तत्समं स्थूलसैकतम् ।
ऐक्षवं च तयोस्तुल्यं कारयेच्छास्त्रवित्तमः ॥ ८

चूर्णं च सैकतं पिष्ट्वा सुसूक्ष्मं नवनीतवत् ।
गुडसारेण संयोज्य भित्तिं तां लेपयेद्दृढम् ॥ ९

श्लक्ष्णं कृत्वा च विधिवत्पुनश्शुभ्रेण लेपयेत् ।
पञ्चाब्जान्यत्र संलिख्य पृथङ्माघदलानि वै ॥ १०

दक्षिणाभिमुखद्वारसदसि ज्ञानसंज्ञिके ।
विश्वकर्मसुसामर्थ्यकोशायितवरान्तरे ॥ ११

द्वित्रिवेदाशुगरसाङ्गुलदैर्घ्याणि वै पृथक् ।
वृत्तान्तरावकाशं तु कारयेन्मतिमत्तमः ॥ १२

चत्वारिंशत्पञ्चदलान्याताम्राणि पृथक्पृथक् ।
षण्णवत्यङ्गुलाकारं चक्रमध्यमुदाहृतम् ॥ १३

செங்கற்களாலோ கருங்கற்களாலோ நன்கு அமைக்கப்பட்ட சுவற்றில் சதுரமாக அமைந்த பரப்பு, நல்ல சுண்ணாம்பு ஒரு பங்கு, மணல் ஒரு பங்கு, அவ்விரண்டிற்கும் சமம் வெல்லம், மணலையும் சுண்ணாம்பையும் கலந்து வெண்ணெய்போல் அரைத்து, பின் வெல்லத் தூள் சேர்த்துக் குழப்பிய சாந்தை சுவற்றின் மீது பூசவும். அதன் மீது ஒன்றைச் சுற்றி மற்றொன்றாக 45 தலங்கள் கொண்ட 5 தாமரைகள். தெற்கு நோக்கிய வாசலுள்ள ஞானஸபை விசுவகர்மாவால் தன் முழுத்திறமை கொண்டு அமைந்த ஸபை. முறையே உள்ளிருந்து வெளியே முறையே 2 - 3 - 4 - 5 - 6 அங்குலப் பரப்புள்ள தளங்கள்.

*சக்கிரத்தின் விட்டம் 96 அங்குல அளவு, ஒவ்வொரு தளமும் செந்நிறம் கொண்டது. (7-13)*

एवं विलिखिते चक्रे श्रीमद्विद्यावता नृणा।
भवन्ति पञ्चपद्मानां शोभनानि दलानि च ॥ १४

विद्याक्षराणि विलिखेत्पूर्वपद्मदलेषु वै।
द्वितीयाब्जदलेष्वेषु विलिखेदजपामनुम्॥ १५

पञ्चमाम्बुजपत्रेषु मातृकार्णं यथाक्रमम्।
विलिख्य चक्रराजस्य विदिक्ष्वादिसभापतेः॥ १६

अनुलोमविलोमेन विलिखेत्पञ्चमस्वरम्।
तदन्तर्विलिखेन्मन्त्रे शषसान्हाक्षरं पृथक्॥ १७

अधः प्रदेशे चक्रस्य ळाक्षरं विलिखेद्बुधः।
चक्रराजस्योपरिष्टात्क्षकारं त्वालिखेद्व्रती॥ १८

षण्णवत्यङ्गुलाकारे चक्रमध्ये गुरूत्तमः।
भूतबिम्बानि विलिखेत्संहारक्रमतो वशी॥ १९

भूबिम्बं चतुरश्रं स्याज्जलं बालशशाङ्कवत्।
त्रिकोणं वह्निबिम्बञ्च षडश्रं वायुण्डलम्॥ २०

आकाशमण्डलं वृत्तं विलिखेच्च यथाक्रमम्।
भूम्यादिपञ्चबिम्बानामायामेन जटाङ्गुलम्॥ २१

*ஸ்ரீவித்யை உபதேசம் பெற்றவன் இந்த யந்திரத்தை எழுத வேண்டும். வெளிமுதல் தளத்தில் அ முதல் க்ஷ வரை, இரண்டாவதிலிருந்து ஹம்ஸ: ஸோஹம், ஹரஹர, சிவபஞ்சாக்ஷரம். பாிணோ என்ற மந்திரம் என எழுத வேண்டும். நடுவில் श ष स ह, சக்கிரத்தின் அடியில் ळ, மேல் பக்கத்தில் क्ष, 96 அங்குல அளவில் நடுவே ஐந்து பூதங்களின் பிம்பங்கள். அதில் பூமியின் பிம்பம் சதுரம், ஜலத்தின் பிம்பம், இளஞ் சந்திரனின் கீற்றுள்ள வட்டம், அக்னியின் பிம்பம் முக்கோணம், வாயுவின்*

*பிம்பம் அறுகோணம், ஆகாசத்தின் பிம்பம் வட்டம். இவற்றின் அளவு 18 அங்குலம். பூமியிலிருந்து ஆகாசம் வரை என்ற ஸம்ஹாரமுறையில் இதனை எழுத வேண்டும். (14-21)*

विद्याक्षराणि देवस्य विधाय नवधा वशी।
तदाद्यर्णं च विलिखेद्भूतबिम्बेषु मध्यतः॥ २२

पञ्चाक्षराणि विलिखेद्भूम्यादिषु यथाक्रमम्।
भूतबिम्बानि निर्भिद्य पञ्चमस्वरमालिखेत्॥ २३

तदूर्ध्वे तु यकारञ्च लिखित्वा मन्त्रवित्तमः।
देवार्णप्रणवाभ्याञ्च वेष्टयेद्भूतबिम्बकम्॥ २४

*ஜ்ஞானஸபேச மந்திரத்தை ஒன்பதாக (8 அக்ஷரங்கள் கொண்டதாக) பிரித்து அதில் முதல் எழுத்தை பூதபிம்பங்களில் நடுவில் எழுதவும். அதனை ஒட்டி ஐந்தக்ஷரங்களை எழுத வேண்டும். பூதபிம்பங்களைப் பிளந்து நடுவில் ஐந்தாவது எழுத்தை எழுதவேண்டும். அதன் மேல் ய எழுதி பூதபிம்பத்தைச் சுற்றி பிரணவத்துடன் கூடிய மூலமந்திரத்தை எழுத வேண்டும். (22-24)*

गमुचन्द्रप्रतरतप्रकारेण करौ लिखेत्।
अनुलोमविलोमेन चाक्षरेण विचक्षणः॥ २५

अनुलोमविलोमेन शिकारेण शिवस्य तु।
डमरूरगसंलग्नभुजयुग्मं समालिखेत्॥ २६

विश्वरूपकरारूढविदूकारासिखेटकौ।
तदाकारकरोल्लासियवशूलकपालकौ॥ २७

दक्षकक्षात्मदृष्टिञ्च गरलद्वयकर्णकम्।
गरळेन लिखेन्मन्त्री प्रकुञ्चितपदाम्बुजम्॥ २८

*கஜஸம்ஹாரமூர்த்தியைக் கைகளில் உடுக்கை, பாம்பு தரித்த இருகைகள், கத்தி கேடயம் தரித்த இருகைகள், சூலம் கபாலம் ஏந்திய இருகைகள், தாமரை போன்ற காலை உயர்த்தி*

மடித்த நிலே. ஒவ்வொரு அங்கத்தின் மீதும் மந்திர எழுத்துக்கள் எழுதி அந்த அக்ஷர வடிவில் ஆயுதம் - அங்கம் அமைந்துள்ளதாகத் தியானிக்க வேண்டும். (25-28)

नृत्यमानपदाम्भोजममरेश्वरमालिखेत्।
तदधस्तात्परेशस्य भूम्यादौ मन्त्रवित्तमः ।। २९

अनुलोमविलोमौ च भारभूती समालिखेत्।
तदधः करमध्यञ्च विलिखेद्भक्तिमान्नरः ।। ३०

नेत्रत्रयमनन्तैश्च नासिकां दक्षनासया।
देवार्णतारद्वन्द्वोर्ध्वे पञ्चान्तकमथालिखेत्।। ३१

தாண்டவமாடுகின்ற ஈசனது திருவடி. அதன் கீழ் பூமி முதலியவற்றின் பிம்பங்கள். அதன்கீழ் ऋ ॠ ॠ ऋ என்றவாறு அக்ஷரவடிவிலேயே மூன்று கண்கள் மூக்கு இருகைகள், என்று ஒவ்வொன்றையும் அமைத்து அக்ஷரவடிவினராகத் தியானிக்க வேண்டும். (29-31)

करपार्श्वद्वये मन्त्री कर्णवर्णद्वयं लिखेत्।
मन्त्रात्मकस्य देवस्य लिखेद्वामे महेश्वरीम्।। ३२

बालाङ्कुराम्बिकां देवीं चतुष्षष्टिकलात्मिकाम्।
सप्तकोटिमहामन्त्ररूपिणीं विलिखेद्बुधः ।। ३३

ह्रीङ्कारान्तरितं वह्निकोणं प्रथमतो लिखेत्।
वेष्ट्य तं मायया भूयोऽप्यनुलोमविलोमया ।। ३४

तदूर्ध्वे लाङ्गलीं लिख्यात्तस्याधो टान्तमालिखेत्।
अथो टान्तप्रदेशे तु कर्णयुग्मक्रमोत्क्रमम्।। ३५

प्रलम्बितकरं देव्या विलिखेदमरेश्वरात्।
नीलोत्पलधरं लिख्याद्दक्षहस्तं तु वलीगतम्।। ३६

कर्णपाशयुतं कर्णगरलाभ्यां समालिखेत्।
अनन्ताभ्यां तु दृष्टिस्स्यात्संवर्तेन किरीटकम्॥ ३७

अनुलोमविलोमाभ्यां ह्रीङ्काराभ्यां लिखेत् प्रभाम्।
भूकोणं जलबिम्बं च देव्याः पीठं प्रकल्पयेत्॥ ३८

*இவ்வாறு மந்திரவடிவினரான கஜஸம்ஹாரமூர்த்தியின் இடது புறத்தில் 64 கலை வடிவினளாக, ஏழு கோடி மஹாமந்திர வடிவினளாக பாலாங்குராம்பிகையை எழுதவேண்டும். முக்கோணத்தின் நடுவே ஹ்ரீங்காரம். அதனை - ஹ்ரீங்காரத்தைப் பிரித்து அநுலோமவிலோமமாகச் சுற்றி அதன் மேல் ॡ அதன் கீழ், ठ, முன்னும் பின்னும் उ ऊ ऊ उ என. இவ்வாறு தேவியையும் அக்ஷரவடிவினளாக அமைத்து தொங்கிய வலதுகை, நீலோத்பலம் ஏந்தியது. சிறிது உட்பக்கம் வளைந்தது. காது கண் கிரீடம். அதன்மீது பிரபை. ஹ்ரீமின் பகுதியை அனுலோமவிலோமமாகக் கொண்டது. பூமி பிம்பமும் ஜலபிம்பமும் தேவியின் பீடம். (32-38)*

लिखित्वा देवदेवस्य शक्तिं प्रोक्तप्रकारतः।
देवस्य पार्श्वयोर्मन्त्री गणपौ लिपिरूपिणौ॥ ३९

ऊर्ध्वादौ विलिखेन्मन्त्री पूर्वं लाङ्गलयुग्मकम्।
आकाशबिम्बं विलिखेन्मुखार्थं गणनाथयोः। ४०

तस्योपरि टकारोर्ध्वं तदूर्ध्वं बिन्दुमालिखेत्।
द्विकर्णवेदहस्ताश्च गरलैश्चरणद्वयम्॥ ४१

द्विचन्द्रगरलाकारढकातालकरान्वितौ।
करिरक्तलिडाटोपकरपङ्केरुहद्वयौ॥ ४२

तुन्दिलौ नीलजीमूतसङ्काशौ जगदीश्वरौ।
रक्तपाय्याह्वयौ सम्यग्गणनाथौ लिखेत्सुधीः॥ ४३

श्यामवर्णं लिखेद्देवं रक्तवर्णं महेश्वरीम् ।
नीलाञ्जनाद्रिसङ्काशौ विलिखेच्च गणेश्वरौ ॥ ४४

அதே அக்ஷரவடிவினராக இரு சிவகணநாதர்கள். அவர்களின் முகம் ஆகாச பிம்பம். அதன் கீழ்ட், இரண்டு காதுகள். நான்கு கைகள் இருகால்கள் அக்ஷரங்கள் கொண்டவை. உடுக்கையும் தாளமும் ஏந்திய இரு கைகள். யானையின் ரத்தம் சிந்தச் சிந்த அதை ஏந்துகிற இருகைகள், தொந்தி, கார்மேக வண்ணத்துமேனி, ரக்தபாயீ என்ற பெயருள்ள இருவர். ஈசனை மேகநிறத்தவராகவும் தேவியைச் செந்நிறமேனியளாகவும், இரு ரக்தபாயிகளும் கருமை நிறம் கொண்டவர்களாகவும் எழுத வேண்டும். (39-44)

ततः प्रपूजयेद्देवं वक्ष्यमाणेन वर्त्मना ।
श्रुत्वा गुरुमुखात्सर्वं भूसुरो वीरताण्डवम् ॥ ४५

मुने तेऽहं प्रवक्ष्यामि चक्रपूजाविधिक्रमम् ।
सर्वसिद्धिकरं चैव सदा विजयवर्धनम् ॥ ४६

चक्राधिराजार्चनया श्रीमदादिसभापतेः ।
पुत्रकामी लभेत्पुत्रं धनकामी धनं लभेत् ॥ ४७

विद्याकामी लभेद्विद्यां वश्यार्थी वश्यमाप्नुयात् ।
ज्ञानार्थी ज्ञानमाप्नोति मोक्षार्थी मोक्षमृच्छति ॥ ४८

नित्यनैमित्तिकं कुर्वन्भस्मपाण्डरविग्रहः ।
त्रिपुण्ड्रावलिभिर्दीप्तललाटोरुभुजद्वयः ॥ ४९

शिरः कर्णगलोरोरुरुद्राक्षसरशोभितः ।
पद्मासनस्थःसौम्यास्यः पूजयेच्चक्रनायकम् ॥ ५०

प्रथमं चात्मशुद्धिःस्याद्द्वितीयं भूमिशोधनम् ।
तृतीयं द्रव्यशुद्धिस्तु चतुर्थं मन्त्रशोधनम् ॥ ५१

पञ्चमी बिम्बशुद्धिश्च कथ्यन्ते पञ्चशुद्धयः ।
मूलमन्त्रजपेनैव प्राणायामं च कारयेत् ।। ५२

तलौ पृष्ठौ च करयोरस्त्रमन्त्रेण शोधयेत् ।
अङ्गुष्ठादिकनिष्ठान्तमीशानादि प्रविन्यसेत् ।। ५३

*வீரதாண்டவர் பற்றிக் குருவின் வாயிலாக அனைத்தையும் அறிந்து ஈசனை வழிபட வேண்டும். நலனனைத்தையும் நிறைவுறச் செய்து வெற்றி தருகிற பூஜைமுறை இது. ஸபாபதிசக்ர வழிபாட்டால் விரும்பியபடி புத்திரப்பேறு, செல்வம், கல்வி, வசியம், பேரறிவு, முக்தி என எல்லாம் கிட்டும். நித்திய - நைமித்திகச் சடங்குகளை முடித்தபின் நெற்றி, கை முதலியவற்றில் விபூதியணிந்து தலை, காது, கழுத்து, மார்பு முதலிய இடங்களில் ருத்திராக்ஷமணிந்து, பத்மாஸனத்தில் அமர்ந்து முகத் தெளிவுடன் பூஜை செய்ய வேண்டும். ஆத்ம சுத்தி, பூமிசுத்தி, பூஜைப் பொருள் சுத்தி, மந்திரசுத்தி, பிம்பசுத்தி என ஐந்து சுத்திகள் செய்யவும். மூல மந்திரத்துடன் பிராணாயாமம் செய்து, கைகளின் உட்புறத்தையும் வெளிப்புறத்தையும் அஸ்திர மந்திரத்தால் (பட்) சுத்தி செய்யவும். கைக்கட்டை விரலிலிருந்து சுண்டுவிரல்வரை ஈசானர் முதலிய ஐவரை நியாஸம் செய்ய வேண்டும். (45-53)*

षडङ्गादि कनिष्ठादि विन्यसेत्तु विचक्षणः ।
आत्मानं योजयेत्पश्चात्स्वशिरोम्बुजसंस्थया ।। ५४

पश्चाद्देवं समावाह्य हृदये मूलविद्यया ।
ईशानं मूर्ध्नि विन्यस्य मुखे तत्पुरुषं न्यसेत् ।। ५५

अघोरं हृदि विन्यस्य वामदेवं तु गुह्यके ।
सद्योजातं पदे न्यस्य पश्चादङ्गानि विन्यसेत् ।। ५६

हृदये हृदयं न्यस्य शिरः शिरसि विन्यसेत् ।
गन्धपुष्पैर्धूपदीपैः पाद्यार्घ्यैश्च प्रपूजयेत् ।। ५७

च्चिरं ध्यात्वा परेशानं मनसा पूजयेत्प्रभुम्।
भूतशुद्धिर्भवेदेवं भूमिशुद्धिमतः शृणु॥ ५८

दूर्वादलनिभश्यामां पद्मपत्रनिभेक्षणाम्।
महीमावाहयेद्देवीमेवं श्रीभूमिविद्यया॥ ५९

मार्जनप्रोक्षणाभ्यां च तथैवाचमनं हृदा।
अयंकुमारमन्त्रेण प्रोक्षयेद्धरणीसुर॥ ६०

पद्ममुद्रा प्रदातव्या चेशानेन तु मन्त्रतः।
भूमिशुद्धिस्तु संप्रोक्ता द्रव्यशुद्धिमतश्शृणु॥ ६१

*சுண்டுவிரல் தொடங்கி ஷடங்கநியாஸம் செய்து தன் சிரமாகிய தாமரையில் அமர்ந்த தேவியோடு ஆத்மாவை இணைக்க வேண்டும். பின் இதயத்தில் மூலமந்திரத்தால் தேவனை ஆவாஹனம் செய்து, ஈசானரைத் தலையிலும், தத்புருஷரை முகத்திலும், அகோரரை இதயத்திலும் வாமதேவரை பிறப்புறுப்பிலும், ஸத்யோஜாதரை கால்களிலும் நியாஸம் செய்து ஹிருதயாதி அங்கநியாஸம் செய்யவும். சந்தனம், புஷ்பம், தூபம், தீபம் பாத்யம், அர்க்கியம் முதலிய மானஸிக உபசாரங்களால் ஈசனை வழிபடவும். இது பூதசுத்தியாகும். பூமியை அருகம்புல் நிறத்தவளாக, தாமரைஇதழ் போன்ற கண்களுள்ளவளாக, பூமி மந்திரத்தால் பூமியை ஆவாஹனம் செய்து துடைத்தல், தெளித்தல் முறையால் சுத்தப்படுத்தி நம: என ஆசமனம் தந்து அயம் குமார என்ற மந்திரத்தால் நீரைப் பூமி மீது தெளிக்கவேண்டும். ஈசானமந்திரத்தால் பத்மமுத்ரை காட்டப் பூமி சுத்தியாகும். (54-60)*

पाद्यमाचमनीयार्घ्यै गन्धपुष्पादिलेपने।
दीपं चैव निवेद्यं च ताम्बूलं छत्रचामरे॥ ६२

हृदयेनैव मन्त्रेण प्रोक्षयेन्मन्त्रवित्तमः।
द्रव्यशुद्धिर्भवेदेवं मन्त्रशुद्धिमतश्शृणु॥ ६३

अङ्गुष्ठादिकनिष्ठान्तं करस्य तलपृष्ठयोः ।
विद्याक्षरैर्देहशुद्धिं हंसमन्त्रैश्च विन्यसेत् ॥ ६४

अङ्गन्यासं ततः कृत्वा पूर्वोक्तैरक्षरैः क्रमात् ।
ध्यात्वा देवं चित्सभेशं विधिविष्ण्वीशसन्नुतम् ॥ ६५

अष्टोत्तरशतं जप्त्वा तद्विद्यां प्रणवादिकाम् ।
मन्त्रशुद्धिर्भवेद्ब्रह्मन् बिम्बशुद्धिमतश्शृणु ॥ ६६

*பூஜைப் பொருட்களின் மீது நீர்த்தெளித்து நம: எனக் கூறி, பாத்யம், ஆசமனம், அர்க்க்யம், சந்தனம், புஷ்பம், தீபம், நைவேத்யம், தாம்பூலம், குடை, சாமரம் என்ற மானஸிக உபசாரங்களை நீர் தெளித்தல் வாயிலாகச் செய்ய வேண்டும். இது திரவ்ய சுத்தியாகும். மந்திர சுத்திமுறை பின்வருமாறு- கட்டைவிரல் முதல் சுண்டுவிரல் வரை, கைத்தலத்தின் முன்புறமும் பின்புறமுமென மந்திராக்ஷரங்கள் சொல்லித் தடவ தேகம் சுத்தி ஆகும். ஹம்ஸ மந்திரநியாஸம் செய்து, பின் முன் சொன்னவாறு அங்கநியாஸம் செய்யவும். பின் மும்மூர்த்திகளால் வணங்கப் பெற்ற ஞானஸபேசனைத் தியானித்து மூலமந்திரத்தைப் பரணவம் சேர்த்து 108 தடவை ஜபிக்கவும். இது மந்திர சுத்தியாகும். (61-66)*

अङ्गुष्ठादिकनिष्ठान्तं करस्य तलपृष्ठयोः ।
निर्माल्यं च हृदा त्यक्त्वा सुमित्राय च दापयेत् ॥ ६७

अनेन मूलमन्त्रेण प्रोक्षयेद्धृदयेन च ।
चन्दनं शिरसा चैव पानीयं च प्रकल्पयेत् ॥ ६८

त(त्रु)टिमात्रं च कर्पूरफलत्रयसुसंयुतम् ।
प्रोक्तमाचमनीयं तत्पुरुषेण तु मन्त्रतः ॥ ६९

पयोदूर्वासुकुसुमसितैश्च यवतण्डुलैः ।
तिलैस्सिद्धार्थकैश्चैवमर्घ्यमष्टाङ्गमुच्यते ॥ ७०

आसनं कल्पयेद्विद्वान्शक्तिबीजाङ्कुरादिभिः ।
आग्नेय्यां धर्मविन्यासं नैर्ऋत्यां ज्ञानमेव च ॥ ७१

वैराग्यं वायुदिग्भागे चैश्वर्यं हीशकोणके ।
अधर्माज्ञानावैराग्यान्यनैश्वर्यं तथैव च ॥ ७२

*பிம்பசுத்தி பின்வருமாறு - கட்டைவிரல் முதல் சுண்டுவிரல் வரை, கைத்தலத்தின் முன்னும் பின்னும் தூய்மைப்படுத்தி ஹிருதய மந்திரத்தால் (நம:) நிர்மால்யம் அகற்றி மூலமந்திரத்தை ஹிருதய மந்திரத்துடன் கூறி சந்தன நீர் தெளித்து, சிரோமந்திரம் (ஸ்வாஹா) கூறி நீர் அளித்து, முப்பழநீரில் கற்பூரம் கலந்து சிறிதளவு ஆசமனம் தத்புருஷ மந்திரத்தால் தரவும். அர்க்கியத்திற்காக பால், அருகம்புல், புஷ்பம், சர்க்கரை, யவை, அரிசி, எள்ளு, கடுகு என எட்டும் கலந்த அர்க்ய நீர் தயாரித்து ஈசனுக்கு அர்ப்பணம் செய்யவும். சக்தி பீஜம் (ஹ்ரீம்) கூறி, தென்கிழக்கில் தர்மம், தென்மேற்கில் ஜ்ஞானம், வடமேற்கில் வைராக்யம், வடகிழக்கில் ஐச்வர்யம், கிழக்கு முதலிய நான்கு திக்குகளில் அதர்மம், அஜ்ஞானம் அவைராக்யம், அநைச்வர்யம் என்ற நான்கும் ஈசனின் ஆஸனமாவதாக எண்ணி மூலமந்திரத்தால் ஆஸனம் ஸமர்ப்பிக்க வேண்டும். (67-72)*

आवाहयेन्महेशानं मूलमन्त्रेण मन्त्रवित् ।
पाद्यं पादे प्रदातव्यमास्ये चाचमनं तथा ॥ ७३

अर्घ्यं शिरसि विन्यस्य मूलमन्त्रेण भूसुरः ।
अभिषेकं ततश्शम्भोः कुशाकूर्चेन मन्त्रवित् ॥ ७४

श्रीरुद्रेण जपेन्मन्त्री कुर्यात्तं मूलविद्यया ।
बिम्बशुद्धिर्भवेदेवं श्रीमदादिसभापतेः ॥ ७५

वस्त्रं च पट्टिकं चैव कटिसूत्रं हृदा न्यसेत् ।
गन्धं तत्पुरुषेणैव चोपवीतं हृदा न्यसेत् ॥ ७६

मकुटं कुण्डलं चैव हारं केयूरमेव च ।
रत्नकृप्ताङ्गुलीयं च ह्यघोरेणैव दापयेत् ।। ७७

पुष्पमीशानमन्त्रेण धूपं तत्पुरुषेण वै ।
अहमस्मीति मन्त्रेण नैवेद्यादि प्रदापयेत् ।। ७८

*மூலமந்திரத்தால் ஈசனை ஆவாஹனம் செய்து பாத்தியத்தைத் திருவடிகளிலும், வாயில் ஆசமனமும், சிரஸில் அர்க்கியமும் செய்யவும். தர்ப்பைக் கூர்ச்சத்தால், ஸ்ரீருத்ரம் கூறி அபிஷேகம், இவற்ருல் பிம்பம் சுத்தியாகும். வஸ்திரம், பட்டி, அரைஞாண், இவற்றை ஹிருதய மந்திரத்தால் செய்தபின், தத்புருஷ மந்திரத்தால் சந்தனமளித்து ஹிருதய மந்திரத்தால் உபவீதமணிவிக்க வேண்டும். அகோர மந்திரத்தால் கிரீடம், குண்டலம், ஹாரம், கேயூரம், ரத்தின மோதிரம் இவற்றை அளித்து, ஈசான மந்திரத்தால் புஷ்பமும் தத்புருஷமந்திரத்தால் தூபமும், அஹமஸ்மி என்ற மந்திரத்தால் நைவேத்யம் முதலியவையும் செய்ய வேண்டும். (73-78)*

शिरसा चन्दनं दत्वा वामाद्याः परितो यजेत् ।
श्रीमद्बालाङ्कुराम्बां तां चतुष्षष्टिकलामयीम् ।। ७९

वामे सुभागे देवस्य पूजयेच्च विचक्षणः ।
सर्वोपचारैः सम्पूज्य साम्बमादिसभापतिम् ।। ८०

प्रोक्षयेदीशमन्त्रेण परिवारान्यजेत्तथा ।
पलिनी रिपुहन्त्री च नादिनी रुतहारिणी ।। ८१

द्रवती स्यन्दनी हेला तिरस्कारी वृकोदरी ।
निर्मला तुन्दिला पक्षरिङ्खणी त्वरिता तथा ।। ८२

षण्मुखी सालिनी दुर्गा मारी तीर्थस्वरूपिणी ।
रतिश्च घर्मदा योषाऽप्यचला वाग्विलासिनी ।। ८३

स्थितिज्ञा राजिनी मन्दा घण्टानादा वरप्रदा।
भ्यस्ता तारानुताप्येशमीमांसाढ्यार्णरूपिणी॥ ८४

स्तोष्या कात्यायनी याज्ञी तरला नयनप्रदा।
याज्ञवल्क्या यमीशानी मृदुला डाकिनी हरा॥ ८५

यजुर्वेदशिखा चैवं प्रथमावरणे यजेत्।

*முதல் ஆவரணத்தில் 64 கலை வடிவினளான பாலாங்குராம்பிகையை வழிபட, ஸ்வாஹா எனச்சந்தனம் தந்து, சுற்றி வாமா முதலிய சக்திகள் சூழ்ந்திருப்பதாக எண்ணி ஈசனின் இடப்புறத்தில் அவளை வழிபட வேண்டும். அவளுக்கும் முன்போல் அனைத்து உபசாரங்களையும் செய்த பின் ஆதிஸபாபதியை மூல மந்திரத்தால் புரோக்ஷித்து, பரிவார தேவதைகளை வழிபட வேண்டும். பலிநீ, ரிபுஹந்த்ரீ, நாதினீ, ருதஹாரிணீ, த்ரவதீ, ஸ்யந்தனீ, ஹேலா, திரஸ்காரீ, வ்ருகோதரீ, நிர்மலா, துந்திலா, பக்ஷிரிங்க்கிணீ, த்வரிதா, ஷண்முகீ, ஸாலிநீ, துர்க்கா, மாரீ, தீர்த்தஸ்வரூபிணீ, ரதி, கர்மதா, யோஷா, அசலா, வாக்விலாஸினீ, ஸ்திதிஜ்ஞா, ராஜிநீ, மந்தா, கண்டா, நாதா, வரப்ரதா, ப்யஸ்தா, தாரா, அனுதாப்யா, ஈசமீமாம்ஸா, மீட்ட்யா, அர்ணரூபிணீ, ஸ்தோஷ்யா, காத்யாயனீ, யாஜ்ஞீ, தரளா, நயனப்ரதா, யாஜ்ஞவல்க்யா, யமீசானீ, ம்ருதுளா, டாகினீ, ஹரா, யஜுர்வேதசிகா என இவர்களை முதல் ஆவரணத்தில் பூஜிக்கவும். (79-85)*

खड्गखेटाङ्कुशाकशालसद्बाहुचतुष्टयाः॥ ८६

तप्तहाटकसङ्काशा रक्तक्षौमाम्बरावृताः।
पलिन्याद्या यजुर्वेदशिखान्ताः शक्तयोऽमलाः॥ ८७

सर्वाभरणसंयुक्ताश्शिवाभिमुखपङ्कजाः।

*இவர்கள் அனைவரும் கத்தி, கேடயம், துரட்டி, சாட்டை இவற்றை நான்கு கைகளில் ஏந்தியவர்கள். உருக்கியதங்க நிறம் கொண்டவர்கள், சிவப்புப் பட்டாடை உடுத்தியவர், தூய*

*சக்திகள். ஆபரணமனைத்தும் பூண்டவர்கள். சிவனை நோக்கிய முகத்தாமரை கொண்டவர்கள். (86-87)*

हंसको भद्रकोऽनन्तो तन्दिकोलाहलो चुरिः ॥ ८८

ज्ञानदो मानदो मृत्युञ्जयो लोकविभूषणः ।
असिताङ्गः क्रमादेवं पूर्वदिक्पत्रतो यजेत् ॥ ८९

सात्त्विकःसगुणासीचःसकलःसज्जनोऽन्तकः ।
नीलो विनीलो विमलो विलोलो विकलेक्षणः ॥ ९०

निवश्च यमदिक्पत्रे यजेद्देवस्य च क्रमात् ।
हासितो हाटको बभ्रुकर्बुरो नीललोहितः ॥ ९१

उन्मत्तो मदहारी च कङ्कणो लोकभावनः ।
चण्डः कपाली देवस्य यजेद्वरुणदिग्दले ॥ ९२

कोपनस्तापनो भीमो भीषणो भीमविक्रमः ।
शिवंकरोऽतिरौद्रश्च कालकण्ठः कपालधृक् ॥ ९३

अतिवेगश्च संहारः क्रमाद्देवस्य चोत्तरे ।
कपालशूलडमरुनागहस्ताश्चतुर्भुजाः ॥ ९४

ऊर्ध्वकेशास्सुदंष्ट्रास्ते नागाभरणभूषिताः ।
विशुद्धकौपीनधरा विमलेन्दुकलाधराः ॥ ९५

शिवाज्ञापालनपरा भैरवा भयनाशकाः ।
द्वितीयावरणे पूज्याः श्रीमदादिसभापतेः ॥ ९६

*இரண்டாவது ஆவரணத்தில் ஹம்ஸகர், பத்ரகர், அனந்தர், தந்தி, கோலாஹலர், சுரி, ஜ்ஞானதர், மானதர், ம்ருத்யுஞ்ஜயர், லோக விபூஷணர், அஸிதாங்கர் என இவர்கள் கிழக்கு நோக்கிய தளத்தில் வழிபடத் தக்கவர். ஸாத்விகர், ஸகுணாஸீசர், ஸகலர், ஸஜ்ஜனர், அந்தகர், நீலர், விநீலர், விமலர், விலோலர்,*

விகலேக்ஷணர், நிவர் என தெற்கு நோக்கிய தளத்தில் வழிபட வேண்டியவர். ஹாஸிதர், ஹாடகர், பப்ரு, கர்புரர், நீலலோஹிதர், உந்மத்தர், மதஹாரீ, கங்கணர், லோகபாவனர், சண்டர், கபாலீ என்பவர் மேற்கு நோக்கிய தளத்தில் வழிபடத் தக்கவர். கோபனர், தாபனர், பீமர், பீஷணர், பீம விக்ரமர், சிவங்கரர், அதிரௌத்ரர், காலகண்டர், கபாலத்ருக், அதிவேகர், ஸம்ஹாரர் என்பவர் வடக்கு தளத்தில வழிபட வேண்டியவர்.

இவர்கள் அனைவரும் கபாலம் சூலம், உடுக்கை, நாகம் கொண்ட நான்கு கைகள் உள்ளவர், கேசம் சிலிர்த்து மேனோக்க, அழகிய தெற்றிப் பற்களுடன், நாகாபரணம் பூண்டவர்களாக, தூய கௌபீன ஆடையுடன், பிறைசூடிகளாக, சிவனது ஆணையைப் பாலனம் செய்கிற பைரவர்கள். ஆதி ஸபாபதியின் யந்திரத்தில் இரண்டாவது ஆவரணத்தில் வழிபடத்தக்கவர். *(88-96)*

केशवश्च महेशानो नारायणपिनाकिनौ ।
माधवो वामदेवश्च गोविन्दः फाललोचनः ॥ ९७

विष्णुः कपर्दी मधुभित्तथा यो नीललोहितः ।
त्रिविक्रमः कपाली च वामनश्शाङ्करस्तथा ॥ ९८

श्रीधरश्शूलपाणिश्च हृषीकेशोऽम्बिकापतिः ।
पद्मनाभश्च पुरभिद्दामोदरमहेश्वरौ ॥ ९९

हली च शिपिविष्टश्च मुसली कालकंधरः ।
शार्ङ्गी भवो वराहश्च भीमो नरकजिद्धरः ॥ १००

हरिश्शर्वो बलिध्वंसी क्रतुध्वंसी जनार्दनः ।
गङ्गाधरो नारसिंहो रुद्रः कृष्णो यमान्तकः ॥ १०१

कृष्णपिङ्गल इत्येते सर्वाभरणभूषिताः ।
शङ्खचक्रगदापद्मकुठारैणवराभयाः ॥ १०२

तृतीयावरणे पूज्यौ शिवनारायणावुभौ ।

மூன்றாவது ஆவரணத்தில் கேசவர், மஹேசானர், நாராயணர், பிநாகீ, மாதவர், வாமதேவர், கோவிந்தர், பாலலோசனர், விஷ்ணு, கபர்தீ, மதுபித், நீலலோஹிதர், திரிவிக்ரமர், கபாலீ, வாமனர், சங்கரர், ஸ்ரீதரர், சூலபாணி, ஹ்ருஷீகேசர், அம்பிகாபதி. பத்மநாபர், புரபித், தாமோதரர், மஹேச்வரர், ஹலீ, சிபிவிஷ்டர், முஸலீ, தாலகந்தரர், சார்ங்கீ, பவர், வராஹர், பீமர், நரகஜித், ஹரர், ஹரி, சர்வர், பலித்வம்ஸீ, க்ரதுத்வம்ஸீ, ஜநார்தனர், கங்காதரர், நாரஸிம்ஹர், ருத்ரர், கிருஷ்ணர், யமாந்தகர், கிருஷ்ண பிங்கலர் என இவர்கள் எல்லா ஆபரணங்களும் பூண்டவர்களாக, சங்கு சக்கிரம், கதா பத்மம் (என விஷ்ணுமூர்த்திகளும்) கோடரி, மான், வரமுத்திரை, அபய முத்திரை (என சிவமூர்த்திகளும்.) தாங்கியவர்களாக மூன்றாவது ஆவரணத்தில் சிவனும் நாராயணனும் மாற்றி மாற்றி வழிபடத் தக்கவர்கள். *(97-102)*

श्रीकण्ठोऽनन्तसूक्ष्मौ च त्रिमूर्तिरमरेश्वरः ॥ १०३

अधीशो भारभूतिश्च तिथीशस्ताण्डको हरः ।
चण्डीशो भौतिकस्सद्योजातश्चानुग्रहेश्वरः ॥ १०४

अक्रूरश्च महासेनः क्रोधीशस्स्तब्ध एव च ।
चण्डीशश्चाप्यथ पुनः पञ्चान्तकशिवोत्तमौ ॥ १०५

एकरुद्रश्च कूर्मैकनेत्रौ च चतुराननः ।
अजेशःसर्वसामेशेश्वरौ लाङ्गलिदारुकौ ॥ १०६

अर्धनारीश्वरश्चोमाकान्तश्चाषाढदण्डिनौ ।
त्रिममीनश्च मेषश्च लोहितश्च शिखी तथा ॥ १०७

छगलण्डद्विरण्डौ च सुमहात्विलबालिनौ ।
भुक्तेशश्च पिनाकी च खड्गीशश्च बकस्तथा ॥ १०८

श्वेतो भृगुर्लगूलीशश्शिवस्संवर्तकस्तथा।
श्रीकण्ठाद्या महारुद्रास्संवर्तान्तरविप्रभाः॥ १०९

धृताक्षमालाखट्वाङ्गकपालत्रिशिखायुधाः।
चतुर्थावरणे पूज्यास्त्रिणेत्रेन्दुकलाधराः॥ ११०

நான்காவது ஆவரணத்தில் - ஸ்ரீகண்டர், அனந்தர், ஸௌக்ஷ்மர், திரிமூர்த்தி, அமரேச்வரர், அதீசர், பாரபூதி, திதீசர், தாண்டகர், ஹரர், சண்டீகர், பௌதிகர், ஸத்யோஜாதர், அனுக்ரஹேச்வரர், அக்ரூரர், மஹாஸேனர், க்ரோதீசர், ஸ்தபதர், சண்டீசர், பஞ்சாந்தகர், சிவோத்தமர், ஏகருத்ரர், கூர்மர், ஏகநேத்ரர், சதுரானனர், அஜேசர், ஸர்வஸாமேசர், ஈச்வரர், லாங்கலி, தாருகர், அர்த்த நாரீசர், உமா காந்தர், ஆஷாடர், தண்டீ த்ரிமமீனர், மேஷர், லோஹிதர், சிகீ, சகலண்டர், த்விரண்டர், ஸௌமஹாது இலபாலி, புக்தேசர், பிநாகி, கட்கீசர், பகர், ச்வேதர், பிருகு, லகுலீசர், சிவர், ஸம்வர்தகர் என இவர்கள் மஹாருத்ரர்கள், பிரளயகாலத்து ஸௌர்ய ஒளி கொண்டவர். அக்ஷமாலை, கட்வாங்கம், கபாலம், சூலம் என ஆயுதம் ஏந்தியவர், முக்கண்ணர், பிறை சூடியவர் இவர்கள் நாலாவது ஆவரணத்தில் வழிபடத்தக்கவர். (103-110)

आदिपत्रत्रयेष्वेवमन्त्यपत्रत्रयेष्वपि।
देवस्य पुरतो विद्वान्द्वंद्वशः पूजयेच्च षट्॥ १११

पूर्णोदरी च विरजा तृतीया शाल्मली तथा।
लोलाक्षी वर्तुलाक्षी च दीर्घघोणाभिधा पुनः॥ ११२

सुदीर्घमुखिगोमुख्यौ नवमी दीर्घजीविका।
कुण्डोदर्यूर्ध्वकेश्यौ च मुखे विकृतवार्षिका॥ ११३

सुज्वालोत्का श्रीमुखी च विद्या विद्यामुखी तथा।
महाकालीसरस्वत्यौ सर्वसिद्धिसमन्विते॥ ११४

गौरी त्रैलोक्यविद्या च तथा मन्त्रात्मशक्तिके।
लम्बोदरी भूतमाता द्राविणी नगरेश्वरी ॥ ११५

खेचरी मञ्जरी चैव रूपिणी च विरूपिणी।
कोदरी पूतना भद्रकाली योगिन्य इत्यपि ॥ ११६

शङ्खिनी गजिनी कालरात्री कुद्दाल्य एव च।
कपर्दिनी तथा विज्ञा जया च सुमुखेश्वरी ॥ ११७

रेवती माधवी चैव वारुणी वायवी तथा।
रक्षोपधारणी चान्या तथैव सगजाह्वया ॥ ११८

लक्ष्मीश्च व्यापिनी मायेत्याख्याता रुद्रशक्तयः।
पाशाङ्कुशोत्पलवरोल्लसद्बाहुचतुष्टयाः ॥ ११९

श्रीमन्मरकतश्यामाः पीनोत्तुङ्गपयोधराः।
क्षौमवस्त्रपरीधानाः प्रपूज्याः पञ्चमावृतौ ॥ १२०

आद्यान्तयोस्त्रिपक्षेषु माघपद्मदलेषु च।
द्वन्द्वशः पूजयेच्छक्तीष्षट्संख्याश्शिवसन्निधौ ॥ १२१

ஐந்தாவது ஆவரணத்தில் - இந்த ருத்ரர்களின் சக்திகள் - முதல் மூன்று தளங்களிலும் கடைசி மூன்று தளங்களிலும் ஈசனின் முன் ஆறு இரட்டையராக பூஜிக்க வேண்டும். பூர்ணோதரீ, விரஜா, சால்மலீ, லோலாக்ஷீ, வர்துலாக்ஷீ, தீர்க்ககோணா, ஸுதீர்க்கமுகீ, கோமுகீ, தீர்க்கஜீவிகா, குண்டோதரீ, ஊர்த்வகேசீ, முகவிக்ருதவார்ஷிகா, ஸுஜ்வாலோத்கா, ஸ்ரீமுகீ, வித்யா, வித்யாமுகீ, ஸர்வஸித்தியுடன் கூடிய மஹாகாளியும் ஸர்வஸித்தியும், கௌரீ, த்ரைலோக்யவித்யா, மந்திர சக்தி, ஆத்ம சக்தி, லம்போதரீ, பூதமாதா, த்ராவிணீ, நகரேச்வரீ, கேசரீ, மஞ்ஜரீ, ரூபிணீ, விரூபிணீ, கோதரீ, பூதநா, பத்ரகாளீ, (யோகினீ) சங்கினீ, கஜினீ, காலராத்ரீ, குத்தாலீ, கபர்தினீ, விஜ்ஞா, ஜயா,

ஸு॰முகேச்வரீ, ரேவதீ, மாதவீ, வாருணீ, வாயவீ, ரக்ஷோபதாரிணீ, கஜாஹ்வயா, லக்ஷ்மீ, வியாபினீ, மாயா என இவர்கள் ருத்ரர்களின் சக்திகள்; பாசம், அங்குசம், அல்லி, வரமுத்ரை இவற்றைக் கைகளில் ஏந்தியவர்கள். மரகதப்பச்சை மேனியர், பருத்த மேடிட்ட மார்பகம் கொண்டவர், பட்டாடை தரித்தவர், இவர்கள் ஐந்தாவது ஆவரணத்தில் வழிபடத் தக்கவர். முதலிலும் கடைசியிலும் சிவனது எதிரிலுள்ள மூன்று தளங்களிலும் தள அமைப்பிலும் இவர்களை இரட்டையராக வழிபட வேண்டும். *(111-121)*

सौन्दर्यभैरवं देवमुन्मत्तं नाम भैरवम्।
अनादिभैरवं देवं संहाराख्यञ्च भैरवम्॥ १२२

श्मशानभैरवञ्चैव पूजयेन्मतिमत्तमः।
इन्द्राग्निरक्षोवायव्यरुद्रदिक्षु यथाक्रमात्॥ १२३

देवस्य वामभागे तु श्रीमद्बालाङ्कुराम्बिकाम्।
समस्तदेवसंसेव्यं शिवं श्रीवीरताण्डवम्॥ १२४

संपूजयेन्महाभक्त्या हंसहंसेति मन्त्रतः।
देवस्य पूर्वदिग्भागे स्कन्दं शास्तारमानले॥ १२५

दक्षिणे सप्तमातॄश्च निर्ऋतौ च चतुर्भुजम्।

पश्चिमे तु गणाधीशं वायव्यां शरभं शिवम्।
उत्तरे भद्रकालीं च रौद्रे क्षेत्रेशमर्चयेत्॥ १२६

ஸௌந்தர்ய பைரவர், உன்மத்த பைரவர், அநாதி பைரவர், ஸம்ஹார பைரவர், ச்மசான பைரவர் என ஐவரை கிழக்கு, தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்கு என திக்குகளில் வழிபட வேண்டும். ஈசனின் இடது பாகத்தில் பாலாங்குராம்பிகையை வழிபட வேண்டும். வீரதாண்டவமாடுகிற சிவன் எல்லா தேவர்களாலும் வழிபடப் பெறுபவர். அவரை மிகவும் பக்தியுடன் ஹம்ஸ ஹம்ஸ என்ற

மந்திரத்தால் பூஜிக்கவும். ஈசனது கிழக்கில் ஸ்கந்தரையும், தென்கிழக்கில் சாஸ்தாவையும், தெற்கில் ஏழு மாதாக்களையும், தென்மேற்கில் விஷ்ணுவையும், மேற்கில் கணபதியையும், வடமேற்கில் சரபரையும், வடக்கில் பத்திரகாளியையும், வடகிழக்கில் க்ஷேத்திரபாலரையும் பூஜிக்க வேண்டும். *(122-127)*

एवं चक्रस्य निर्माणं पूजाविधिरतः परम्।
प्रोक्तं मया यथाशास्त्रं महादेवप्रसादतः॥ १२७

आसनाद्युपचारैर्यो महादेवं यथाविधि।
चित्सभेशं समभ्यर्च्य श्रीमद्बालाङ्कुराम्बिकाम्॥ १२८

अपि चाभीष्टफलदां भुक्तिं मुक्तिञ्च विन्दति।
इत्थं ज्ञानसभाचक्रं प्रोक्तं गोप्यं महीसुर॥ १२९

न वक्तव्यं न वक्तव्यं यस्य कस्यचिदास्तिक।

சக்கிர அமைப்பும், பூஜைமுறையும் முறைப்படி விளக்கினேன். இது மகாதேவனின் அருளின் பயனாகும். ஆஸனம் முதலிய உபசாரங்களால் சித்ஸபேசனையும் பாலாங்குராம்பிகையையும் வழிபட இம்மையில் ஸுகமும் முக்தியும் கிட்டும். ஜ்ஞானஸபாசக்ரம் மிகமிக ரஹஸ்யமானது. *(128-130)*

पञ्चब्रह्माह्वयं चक्रं भक्तानामिष्टदायकम्॥ १३०

वक्ष्यामि शृणु विप्रेन्द्र दर्शनाद्भुक्तिमुक्तिदम्।
गृहेऽरण्ये च विजने वितानाद्यैरलङ्कृते॥ १३१

कदलीस्तम्भसंयुक्ते धूपितेऽगरुचन्दनैः।
संलिप्य भूतलं शुद्धं गोमयेन जलेन च॥ १३२

सद्यः कृत्तपटेनात्र विस्तार्य चतुरश्रकम्।
विस्तारायामतो भूयो हस्तमात्रे विनिर्मलम्॥ १३३

नवप्रस्थान्वितं भस्म दिव्यगन्धसमन्वितम्।
पूतं वस्त्रेण शुभ्रञ्च तेजसा शङ्खपाण्डरम्॥ १३४

उत्तराभिमुखो भूत्वा विनिक्षिप्यात्र भस्म तत्।

பஞ்சபிரும்ஹ சக்ரம் - தரினத்தால் இம்மையில் சுகமும் பின் முக்தியும் தரவல்லது. பக்தர் விரும்பியதைத் தரவல்லது. வீட்டிலோ, காட்டிலோ, தனிமையில் நல்ல மண்டப அலங்காரம் செய்து வாழைமரம் கட்டி, அகரும் சந்தனமும் பொடித்து தூபமிட்ட இடத்தை, தரையை நீர் தெளித்து, கோமயத்தால் மெழுகித் தூயதாக்க வேண்டும். அப்போதே தரியிலிருந்து வெட்டிய புத்தாடையை சதுரமாக விரிக்க வேண்டும். நீளத்திலும் பரப்பிலும் ஒரு முழ அளவு, அதில் 9 பிரஸ்த அளவு விபூதியை சந்தனம் தெளித்து, தூய வெண்ணிற ஆடையில் வடிகட்டி சங்கம் போல் வெளுத்த அதை, வடக்குநோக்கி அமர்ந்து துணிமீது பரப்ப வேண்டும். (131-135)

चतुरश्रं विसार्याथ गुरुं ध्यात्वात्मनस्सुधीः॥ १३५

रौप्यसूच्या लिखेन्मन्त्रैर्माघकोष्ठार्थमादरात्।
दश चोर्ध्वगता रेखास्तिर्यग्रेखास्तथा लिखेत्॥ १३६

वह्निनैर्ऋतवाय्वीशषट्त्रिंशत्कोष्ठमुत्सृजेत्।
मध्येन्द्रयमवारीशसोमदेशेषु च क्रमात्॥ १३७

माघकोष्ठानि तत्र स्युः क्रम एष शिवोदितः।
प्रत्येकं नवकोष्ठानि भवन्ति मुनिसत्तम॥ १३८

कोष्ठान्तरावकाशं द्व्यङ्गुलं परिकीर्तितम्।
ऋगक्षराणि विलिखेन्माघसङ्ख्यानि मन्त्रवित्॥ १३९

मध्यादारभ्य चतुर्षु दिक्षु चैन्द्रादिषु क्रमात्।
ईशानमन्त्रवर्णानि कोष्ठे वै मध्यखण्डतः॥ १४०

मध्यकोष्ठं समारभ्य वेदशो विलिखेद्बुधः ।

*சதுரமாக அதனைப் பரப்பி, தன் குருவைத் தியானித்து மேல் நோக்கிப் பத்து கோடுகளும் அதன் குறுக்கே பத்துகோடுகளும் வெள்ளி ஊசியால் வரைய 81 சதுரக் கட்டங்கள் அமையும். அதில் தென்கிழக்கிலும், தென்மேற்கிலும், வடமேற்கிலும், வடகிழக்கிலும் உள்ள (9-9 கட்டங்களை) மொத்தம் 36 கட்டங்களை விட்டுவிட, நடுவிலும் கிழக்கிலும், தெற்கிலும், மேற்கிலும், வடக்கிலுமாக 9 கட்டங்கள் கொண்ட ஐந்து சதுரங்கள் அமையும். ஒவ்வொரு கட்டத்தின் உள்பரப்பு 2×2 அங்குலம் இருக்கும். இந்த சக்கரத்தின் கிழக்கு முதல் நான்கு திக்குகளிலும்* परिणो *என்ற மந்திரத்தின் 11-11 அக்ஷரங்களை வரிசையாக எழுதவும். நடு 9 கட்டத்தில்* ईशानः सर्वविद्यानां *என்ற மந்திரத்தை நடுக்கட்டம், கிழக்கு முதல் வடகிழக்கு வரை 8 கட்டங்கள் இவற்றில் நான்கு நான்கு அக்ஷரங்களாக எழுதவும்.* (ईशानःस - र्वविद्यानां - ईश्वरःस - र्वभूतानां - ब्रह्माधिप - तिर्ब्रह्मणो - धिपतिर्ब्र - ह्माशिवो मे - अस्तु सदा शिवोम्।) *(கடைசிக் கட்டத்தில் நான்கு மேற்பட்ட அக்ஷரங்களும் அடக்கம்.) (136-141)*

गुणशो विलिखेन्मन्त्री मध्यकोष्ठे च तारकम् ।
याम्यखण्डप्रदेशे चाघोरब्रह्माक्षराणि वै ॥ १४२

मध्यकोष्ठं समारभ्य वेदसङ्ख्यानि वै लिखेत् ।
अन्त्ये च शिष्टाक्षराणि स्वनाथोक्तप्रकारतः ॥ १४३

वारुणीखण्डदेशे च सद्योजाताक्षरान्लिखेत् ।
मध्यादारभ्य निगमसङ्ख्यान्वै मन्त्रवित्तमः ॥ १४४

अन्त्यकोष्ठेच शिष्टार्णमालिखेद्गुरुभक्तिमान् ।
सौम्यदिक्खण्डदेशे तु वामदेवाक्षरान्लिखेत् ॥ १४५

मध्यात्प्रभृति दिक्सङ्ख्यानुत्तरान्तं यथाक्रमम् ।
एवं विलिख्य विधिवत्पूजयेच्चित्सभापतिम् ॥ १४६

கிழக்குப் பகுதியிலுள்ள 9 கட்டங்களில் நடுவில் பிரணவமும் கிழக்குக் கட்டத்திலிருந்து 8 கட்டங்களில் வரிசையாக 3-3 எழுத்துகள் என்ற அமைப்பில் तत्पुरुषाय மந்திரத்தை எழுதவும். तत्पुरु - षायवि - झहेम - हादेवा - यधीम - हितन्नो - रुद्रः प्रचोदयात् ।)

தெற்குப் பகுதியிலுள்ள 9 கட்டங்களில் முன்போல் நடுவில் பிரணவத்துடன் अघोरेभ्यः என்ற மந்திரத்தை 4-4 எழுத்துகளாக வரைய வேண்டும்.

(अघोरेभ्यो - थघोरेभ्यो - घोरघोर - तरेभ्यः स - र्वेभ्यः सर्व - शर्वेभ्यो न - मस्तेअस्तु - रुद्ररूपेभ्यः ।)

மேற்குப் பகுதியிலுள்ள 9 கட்டங்களில் முன்போல் सद्योजातं என்ற மந்திரத்தை 4-4 எழுத்தாக வரையவும்.

(सद्योजातं - प्रपद्यामि - सद्योजाता - यवै नमो - नमः भवे - भवेनाति - भवेभव - स्वमां भवो - द्भवाय नमः!)

வடக்குப் பகுதியில் உள்ள 9 கட்டங்களில் वामदेवाय என்ற மந்திரத்தை 8-8 அக்ஷரங்களாக எழுதவும். वामदेवाय नमोज्ये - ष्ठायनमः श्रेष्ठायन - मोरुद्राय नमः काला - य नमः कलविकर - णायनमोबलविक - रणायनमो बलाय - नमो बलप्रमथना - यनमो मनोन्मनाय नमः ।) இவ்வாறெழுதி முறைப்படி பூஜை செய்யவும். (ஐந்து பிரும்ம மந்திரங்கள் வரையப்பட்டதால், பஞ்சபிரும்ம சக்ரம்) (142-147)

रक्तभुक्प्रमथौ पूर्वं संपूज्य शिवभक्तिमान् ।
षडङ्गान्यथ सर्वज्ञशक्त्यादीनि सुपूजयेत् ।। १४७

वह्नीशानासुरमरुत्पृष्ठाग्रेषु सभापतेः ।
आनन्दाव्यग्ररौद्रौ च सुन्दरार्यविरिन्दमौ ।। १४८

सौम्यं श्मशाननिलयं भैरवानेवमर्चयेत् ।
इन्द्रादिलोकपालांश्च पूजयेन्मन्त्रवित्पुनः ।। १४९

शुद्धान्नपायसादीनि नैवेद्यानि समर्पयेत्।
धूपदीपौ च ताम्बूलं छत्रं चामरवीजने॥ १५०

नीराजनं दर्पणं च दापयेच्चित्सभापतेः।
वेदश्रौतपुराणादिदीपनैर्मानुषैः स्तवैः॥ १५१

वैदिकैरार्षकैः स्तोत्रैस्तालनृत्तैश्च गायनैः।
वाद्यैर्नानाविधैश्चैव तोषयेद्वीरताण्डवम्॥ १५२

*ரக்தபுக் பிரமதர் என்ற இருபைரவர்களை வணங்கி, ஸர்வஜ்ஞர், நித்யத்ருப்தர், அநாதிபோதர், ஸர்வஸ்வதந்திரர், நித்யமலுப்தர், அனந்தர் என்ற ஆறு சக்தி வடிவினர்களையும் தென்கிழக்கில் ஆனந்தர், வடகிழக்கில் அவ்யக்ரர், தென்மேற்கில் ஸுந்தரர், வடமேற்கில் ஆர்யர், முன்புறம் ஸௌம்யர், பின்புறம் ச்மசான பைரவர் என்ற பைரவர்களையும் இந்திரன் முதலான திக்பாலர்களையும் வழிபட்டு சுத்த அன்னம், பாயஸம் முதலியவற்றை நிவேதனம் செய்து தூபம், தீபம், தாம்பூலம், குடை, சாமரம், நீராஜனம், கண்ணாடி முதலிய உபசாரங்கள் செய்து, வேதம், புராணம் முதலியவற்றிலுள்ள ஸ்துதிகளால் துதித்து தாளத்துடன் வாத்யம் வாசித்தல், நடனம் முதலிய உபசாரங்களால் இந்த வீரதாண்டவரை மகிழ்விக்க வேண்டும். (148-153)*

एवं यः कुरुते मर्त्यो भक्तिभारतनुः प्रभोः।
त्रिसन्ध्यं चित्सभेशस्य स रुद्रो नात्र संशयः॥ १५३

एवं चक्रस्य निर्माणं प्रोक्तमादिसभापतेः।
अखिलागमसारञ्च वेदसारतरं विभोः॥ १५४

यस्मै कस्मै न वक्तव्यं पुरुषायाप्यधर्मिणे।
असत्यवादशीलाय हेतुवादविचारिणे॥ १५५

पुराणभक्तिहीनाय नास्तिकायातिपापिने।
मतान्तरप्रविष्टाय मतदूषणशालिने॥ १५६

अविश्वासाय शूद्राय डांभिकायादयालवे।
कुतर्कनिरतायातिविहीनाय दुरात्मने ॥ १५७

अदेवगुरुभक्ताय निर्गुणाय कुशीलिने।
न वक्तव्यं न वक्तव्यं विशेषेण कलौ युगे ॥ १५८

गोप्यमेतन्महाचक्रनिर्माणं सर्वमुत्तमम्।
गोपनात्सर्वसिद्धिः स्यात्प्रकटाच्च दरिद्रता ॥ १५९

बोद्धव्यं गुरुवक्त्राब्जात्प्रसादाद्वा महेशितुः।
शिल्पिना बेरनिर्माणचतुरेण महीयसा ॥ १६०

शिल्पिशास्त्रविदा सम्यक्कारयेच्चक्रनिर्मितिम्।
नो चेद्देवस्य सान्निध्यं न भविष्यत्यसंशयम् ॥ १६१

अज्ञानिना कृते चक्रराजेऽशास्त्रविनिर्मिते।
अभिरूपाच्च बिम्बस्य पूजायाश्च विशेषतः ॥ १६२

अर्चकस्य तपोयोगात्तत्र सन्निहितः शिवः।

अत एव शिवे भक्तः शिल्पशास्त्रविशारदैः।
कारयेच्चक्रनिर्माणमतिभक्त्या महामतिः ॥ १६३

इति परमरहस्यं चक्रनिर्माणमेतत्
निगदितमतिभक्ते चित्सभेशप्रवीणे।
त्वयि दृढकरुणायास्तच्च गोप्यं पुरारेः
दृढतरकरुणायाः पारमेष्यस्यवश्यम् ॥ १६४

इति एकोनत्रिंशोऽध्यायः ॥

—*—

*பக்தியால் பணிந்து இவ்வாறு ஈசனை வழிபடுபவன் சிவனாகவே ஆவான். இந்த சக்கிர அமைப்பு முறை மிக*

ரகசியமாகப் பாதுகாக்க வேண்டியது. தகுதியற்றவனுக்கு விளக்கக் கூடாது. குருவின் முகமாகப் பணிவுடன் ஏற்கத்தக்கது. விக்ரக யந்திர அமைப்புகள் சில்ப சாஸ்திரமறிந்த நிபுணனால் செய்யத்தக்கவை. அறியாமல் செய்ய ஈசனின் ஸான்னித்யம் கிட்டாது. பிம்பத்தின் அழகிய அமைப்பு, சிறந்த வழிபாடு, வழிபடுபவரின் தவயோகம் இவற்றால் மட்டும் சிவன் அங்கு தோன்றி அருள்புரிகிறார். அதனால் சிற்பியும் சிறந்த சிவபக்தனாக சில்ப கலையில் நிபுணனாக இருப்பது அவசியம். சித்ஸபேசனின் சிறந்த பக்தரான உமக்கு இந்த ரஹஸ்யத்தைத் தெரிவித்தேன். சிவனின் திடமான கருணையால் நீ கரையேறுவாய் என்றார் கண்வர். *(154-165)*

____*____

॥ अथ त्रिंशोऽध्यायः ॥

च्युतपुरीमाहात्म्यम्

कात्यायन उवाच ॥

भगवन्योगिनां श्रेष्ठ सर्वज्ञ गुरुसत्तम ।
सम्यगुक्तं भगवता रहस्यं चित्सभापतेः ॥ १

साङ्गं सऋषिकं छन्दो दैवतं चानुवर्णितम् ।
सध्यानं चक्रनिर्माणं मन्त्रं मेऽस्य कृपाबलात् ॥ २

एषा च्युतपुरी पञ्चब्रह्मतीर्थविराजिता ।
कैलासप्रमुखक्षेत्रसमा वा किमुताधिका ॥ ३

आहोस्विद्ब्रह्मरन्ध्रं तच्छ्रीमच्युतपुरी विभोः ।
प्रवरेतीह चेत्तेभ्यः कथं भूलोकमाश्रिता ॥ ४

आश्रिताऽपि भुवं ब्रह्मन्नेषा च्युतपुरी कथम् ।
आधिक्यं प्राप विश्वेशकृपया शाश्वतं पदम् ॥ ५

आम्नायतुल्ये त्वद्वाक्ये नास्ति मे संशयो गुरो।
तथापि विज्ञापयामि तन्निधायात्ममस्तके॥ ६

एषा मुक्तिप्रदैवाशु कथं सत्स्वपि भूतले।
कैवल्यदेषु क्षेत्रेषु श्रीमता भवतेरिता॥ ७

*அத்தியாயம் 30.*

வழுவூரின் பெருமை

*காத்யாயனர் கண்வரிடம் விண்ணப்பித்தார் - யோகிகளில் சிறந்தவரே! நல்லகுருவே! ஞானஸபாநாத மந்திரத்தைப் பற்றி நன்கு விளக்கினீர். அங்க நியாஸம், ருஷி, சந்தஸ், தேவதை, தியானம், சக்கிர அமைப்பு, மந்திரம் என அனைத்தையும் உம் அருளால் தெரிந்து கொண்டேன். இந்த ச்யுதபுரீ எனும் வழுவூர், பஞ்சபிரும்ம தீர்த்தத்துடன் கூடியது. கைலாஸம் முதலிய சிறந்த க்ஷேத்ரங்களுக்கு ஸமமா? அவற்றை விட அதிகப் பெருமை வாய்ந்ததா? ஈசனின் பிரும்மரந்திரமான இவ்வூர் அவைகளைவிடச் சிறந்ததெனில் பூலோகத்தில் இடம் பெறுவானேன்? உலகின் ஈசனின் கருணையால் சிறப்புற்றது என உமது வேதம் போன்ற வாக்கில் ஐயம் சிறிதும் இல்லை. அவற்றைச் சிரஸால் ஏற்று மறுபடி விண்ணப்பிக்கிறேன். முக்தி தருகிற பல க்ஷேத்திரங்கள் பூலோகத்தில் உள்ளபோது இது சிறந்தது என்பது எப்படி? (1-7)*

अयोध्या मधुरा माया काशी काञ्चीत्यवन्तिका।
पुरी द्वारवती चैव सप्तैता मुक्तिदायकाः॥ ८

श्रीशैलशिखरं दृष्ट्वा पुनर्जन्म न विद्यते।
पिनाकिनीपयस्स्नानादपिनाकी कथं भवेत्॥ ९

इत्यादिवचनैस्स्वामिन्पौराणीयैस्समीरिता।
गतिस्तासां कथं का वा वद कारुण्यवारिधे॥ १०

भक्तस्य पुत्रतुल्यस्य शिष्यस्य तव सद्गुरो।
छिन्धि संशयमेतन्मे हृद्गतं करुणालय॥ ११

*அயோத்தி மதுரை மாயா புரீ காசீ காஞ்சீ அவந்தி துவாரகை என ஏழும் முக்தி தருகிற க்ஷேத்திரங்கள். ஸ்ரீசைலத்தின் சிகரத்தைக் கண்டவனுக்கு மறுபிறவி கிடையாது. பிநாகினீ நதியில் நீராடியவன் சிவனாகாமல் எப்படி ஆவான்? என்ற புராண வசனங்களின் நிலை என்ன? கருணைக் கடலே! உமது புதல்வனுக்கு ஈடான - உம் சிஷ்யனான எனக்கு உள்ளத்து ஐயத்தை நீக்குவீர் என்றார். (8-11)*

कण्व उवाच ॥

सम्यक्पृष्टं त्वया वत्स गुह्यमेतत्परात्मनः ।
गोप्यं चादिसभेशस्य दुर्लभञ्च मुनीश्वरैः ॥ १२

आध्यात्मिकं चाधिदैवमिति द्वयमुदाहृतम् ।
आध्यात्मिकं शरीरं स्यादाधिदैवमिदं जगत् ॥ १३

यथाऽऽधारादि भेदाः स्युर्देहे वाय्वादिषु क्रमात् ।
तथा विराण्मयेऽप्यण्डे स्थानभेदाः स्युरात्मनः ॥ १४

अण्डे नष्टे स्थाननाशः शिवस्यास्मिन्विराण्मये ।
अण्डाद्बहिरिदं स्थानं नित्यं च्युतपुराभिधम् ॥ १५

अण्डाद्बहिष्ठं स्थानं तत्तेजोरूपमनामयम् ।
आपातालगतं विद्धि सलिङ्गं ससरोजलम् ॥ १६

विराजा पूजितं लिङ्गं ब्रह्मरन्ध्राद्बहिस्स्थितम् ।
व्याप्तपातालमूलञ्च सक्षेत्रं ससरोजलम् ॥ १७

एषा च्युतपुरी तस्माद्बलितत्वात्सरोजलात् ।
तेजोरूपाच्छिवस्नेहास्पदत्वात्प्रवरा मुने ॥ १८

अप्रमेयगुणाधारा शिवज्ञानप्रदायिनी ।
नित्यमादिसभानाथनृत्तार्हा पूरियं पुरा ॥ १९

बालाङ्कुराम्बिकाभक्तनित्यवासगृहा मुने।
सर्वक्षेत्राधिका नित्या वासिनां मुक्तिदायिनी ॥ २०

*கண்வர் கூறுகிறார் - ''பரமாத்மா பற்றிய ரகசியம் இது. முனீச்வரர்களும் அறியாதது. ஆத்யாத்மிகம் ஆதிதைவிகம் என இருநிலைகள் உண்டு. ஆத்யாத்மிகமென்பது இந்த உடல், ஆதிதைவிகம் என்பது உலகம். நம் உடலில் மூலாதாரம் முதலிய வேறுபாடுகளும் பிராணன் அபானன் என்று வாயுவில் வேறுபாடும் இருப்பதுபோல் விராட் புருஷனாகிய பிரும்ஹாண்டத்திலும் ஆறு ஸ்தானங்கள் உண்டு. விராட் புருஷனாகிய பிரும்ஹாண்டம் மறைந்ததும் அதனுள் சிவனது ஸ்தானம் மறையும். பிரும்மாண்டத்தின் வெளியே உள்ள ச்யுதபுரம் ஒளிமயமானது. குறையேதும் இல்லாதது. இந்த லிங்கம் பாதாளம் வரை தன் பஞ்சபிரும்மஸரஸுடன் சென்றுள்ளது. விராட்புருஷனே இதனை வழிபடுகிறார். பிரும்மாண்டத்தின் மேற்பகுதியான பிரும்மரந்திரத்தையும் கீழ்ப்பகுதியான பாதாளத்தையும் தாண்டி, பிரும்மாண்ட காரண ஜலநீர் மட்டத்தின் வெளியிலுமுள்ளதால் இது வழுவூர் - ச்யுதபுரீ. ஒளி வடிவில் உள்ளதாலும் சிவனது அன்புக்குரியது என்பதாலும் இது உயர்ந்தது. அளவற்ற சிறப்புள்ளது. சிவஜ்ஞானம் அளிப்பது. ஆதிஸபாநாதனின் நடனத்திற்கு அரங்கமான புரம் இது. பாலாங்குராம்பிகையின் பக்தர்கள் எப்போதும் வசிக்குமிடமானதாலும் க்ஷேத்திரங்களனைத்திற்கும் அதிகமான பெருமை கொண்டது. இங்கு வசிப்பதாலேயே முக்தி தருவது. (12-20)*

काश्यादि सप्त स्थानानि मुक्तिदानीरितानि यत्।
सत्यं तन्मुक्तिदान्येव त्वदुक्तानि द्विजोत्तम ॥ २१

मृतानां खलु जन्तूनां मुक्तिक्षेत्रनिवासिनाम्।
शिवप्रसादाद्ब्रह्मर्षे शिवलोकः परायणम् ॥ २२

ब्रह्मविष्ण्वादिलोकानां त्रयाणामुपरि स्थितः।
शिवलोको महान् ज्ञेयः सर्वेषामुत्तमोत्तमः ॥ २३

अनन्तः परिपूर्णश्च परकैलाससंज्ञितः ।
शिवलोकाभिधानश्च राजधानी शिवस्य च ॥ २४

ब्रह्माण्डाद्बहिरुद्दिष्टा तथा च्युतपुरी मुने ।
च्युतपूः परकैलासः शिवलोकः पुरीशितुः ॥ २५

चतुष्टयानि नामानि पुर्याः पर्यायवाचकाः ।
अण्डाद्बहिरिदं क्षेत्रं ब्रह्मन्च्युतपुराभिधम् ॥ २६

ब्रह्मविष्ण्वादिभिर्देवैरुपास्यं सततं प्रियात् ।
विराड्योगी महाभक्त्या प्राप्यैतां मुक्तिसिद्धये ॥ २७

तत्र स्थितं महाशम्भुमानर्चाम्बिकया सह ।

*காசி முதலிய ஏழு ஸ்தலங்களும் முக்தி தருபவையே. எனினும் மரணத்திற்குப் பின் முக்தி தருபவை அவை. சிவனது அருளால் மட்டுமே சிவலோகம் அடையத்தக்கது. மும்மூர்த்திகளின் உலகங்களுக்கு அப்பாற்பட்டது சிவலோகம். எல்லா லோகங்களையும் விடச் சிறந்தது. எல்லையற்றுப் பூர்ணமாக விளங்குவது. அந்த பரகைலாஸம். சிவனது ராஜதானி என்பர். பிரும்மாண்டத்திற்கு வெளியில் அமைந்துள்ள பர கைலாஸமே ச்யுதபுரீ. இதற்கு நான்கு பெயர்கள் உண்டு. ச்யுதபுரீ, பரகைலாஸம், சிவலோகம், ஈசபுரீ என. பிரும்மாண்டத்திற்கு அப்பாலுள்ள இதனை பிரும்மா விஷ்ணு முதலான தேவர்கள் எப்போதும் அன்புடன் உபாஸிப்பர். விராட்புருஷன் என்ற யோகியும் முக்திபெற மிகுந்த பக்தியுடன் அங்குள்ள பர அம்பிகையுடன் உள்ள பர சிவனை வழிபடுகிறார். (21-27)*

ज्ञानिनो ब्रह्मविद्वांसो वीतरागाः शिवाश्रिताः ॥ २८

मुक्तिक्षेत्रे मुक्तदेहाः शिवलोकं व्रजन्ति ते ।
शिवलोकाभिधा सैषा मुने च्युतपुरी किल ॥ २९

अण्डाद्बहिष्ठा सर्वत्र व्याप्य तिष्ठति सन्ततम् ।
सदाशिवपुरी ज्ञेयाऽप्यण्डाद्बहिरियं मुने ॥ ३०

ततश्च्युतपुरी भूमौ सा बभूव मुनीश्वर।
ततः पाताललोके सा ज्ञानधात्री निरञ्जना ॥ ३१

एवं व्याप्य पुरी ब्रह्मन्च्युताह्वा पुरविद्विषः।
सर्वासामपि मुक्तीनां षभूव परमा गतिः ॥ ३२

तस्मात्सर्वात्मना विप्र बाह्यत्वादण्डतः पुरी।
महाप्रलयकालेऽपि च्युतत्वाच्च च्युताह्वया ॥ ३३

*பிரும்மஜ்ஞானிகள் பற்றற்று சிவனை அண்டி நிற்பர். முக்தி க்ஷேத்திரங்களில் வசித்து உடலை நீத்து, சிவலோகம் அடைவர். அந்த சிவலோகமே ச்யுதபுரீ. அண்டத்தின் வெளியிலும் உள்ளும் எப்போதும் பரவி இருப்பது. அண்டத்திற்கு வெளியில் சிவலோகம் எனப் புகழ்பெற்றதே பூமியில் ச்யுதபுரீ என்ற வழுவூரானது. பாதாளத்திலும் ஜ்ஞானம் அருள்கிற ச்யுதபுரியாக உள்ளது. பிரும்மாண்டலயத்திற்குப் பின்னரும் லயமடையாத - அழிகிற உலகினுட்படாத - புரமானதால் ச்யுதபுரீ. (28-33)*

वेदारण्याद्रामसेतोर्हालास्यनगरादपि।
गजारण्यात्पञ्चनदादेषा च्युतपुरी वरा ॥ ३४

मध्यार्जुनात्कुम्भघोणाच्छ्रीवाञ्छ्यात्तेजिनीवनात्।
एतस्माद्दक्षिणावर्तादेषा च्युतपुरी वरा ॥ ३५

छायावनाच्छ्वेतवनान्मायूराद्रत्नपर्वतात्।
श्रीमल्लोहितकान्तारादेषा च्युतपुरी वरा ॥ ३६

पुण्डरीकपुराद्ब्रह्मपुराद्गोपर्वतादपि।
वृद्धाचलाच्च श्रीमुष्णादेषा च्युतपुरी वरा ॥ ३७

शोणाचलादधिपुराच्छ्रुतिशैलत्रयीपुरात्।
काञ्चीपुरमहीक्षेत्रादेषा च्युतपुरी वरा ॥ ३८

कालहस्तिमहाशैलाच्छ्रीशैलाच्च त्रियम्बकात्।
ॐ कारात्सूकरक्षेत्रादेषा च्युतपुरी वरा ॥ ३९

महालयकुरुक्षेत्राद्बदरीकाननादपि।
केदारनैमिशारण्यादेषा च्युतपुरी वरा ॥ ४०

*வேதாரண்யம், ராமஸேது, ஹாலாஸ்யம், (மதுரை) கஜாரண்யம் (திருவானைக்கா) பஞ்சநதம், (திருவையாறு) திருவிடைமருதூர் கும்பகோணம், ஸ்ரீவாஞ்சியம், திருவீழிமிழலை என்ற தென்தேசத்து க்ஷேத்திரங்களை விடச் சிறந்தது. சாயாவனம் (சாயக்காடு) ச்வேதவனம் (திருவெண்காடு) மாயூரம், ரத்னமலை, லோஹிதகாந்தாரம் (திருச்செங்காடு) புண்டரீகபுரம் (சிதம்பரம்) பிரும்மபுரம், சீர்காழி) கோபர்வதம் (பசுமலை) விருத்தாசலம், ஸ்ரீமுஷ்ணம், அருணாசலம், அதிபுரம் (அதிகை) வேதாசலம், த்ரயீபுரம் (வேதாரண்யம்) காஞ்சீபுரம், காளஹஸ்தி, ஸ்ரீசைலம், திரியம்பகம், ஓங்காரம், ஸௌகரக்ஷேத்திரம், மஹாலயம், குருக்ஷேத்ரம், பதரிகாசிரமம், கேதாரம், நைமிசம் என்ற க்ஷேத்திரங்களை விடச் சிறந்தது. (34-40)*

गयाक्षेत्रात्प्रयागाच्च मधुरानगरादपि।
अवन्तीपुण्यनगरादेषा च्युतपुरी वरा ॥ ४१

पुष्कराच्छम्बरक्षेत्रान्नीलकण्ठाच्च मानसात्।
कालाञ्जनाद्गुह्यकेशादेषा च्युतपुरी वरा ॥ ४२

द्वारकायाश्च मायाया अनरण्यात्प्रभासतः।
श्रीगोकर्णाद्व्रातपुरादेषा च्युतपुरी वराः ॥ ४३

अयोध्यानगराद्गङ्गातीर्थं मुञ्चयतोऽनिशम्।
हिमवत्पर्वतश्रेष्ठादेषा च्युतपुरी वरा ॥ ४४

आम्रारण्यादश्वकाच्च सालग्राममहीधरात्।
मन्दराद्देविकक्षेत्रादेषा च्युतपुरी वरा ॥ ४५

ब्रह्मन् रैवतकाद्रामशैलेन्द्रात्कौशिकेश्वरात् ।
कमलालयाच्छ्रीक्षेत्रादेषा च्युतपुरी वरा ॥ ४६

काशीक्षेत्राच्च कैलासान्महामेरोश्च पर्वतात् ।
श्रीमद्धरिहरक्षेत्रादेषा च्युतपुरी वरा ॥ ४७

सह्यजायास्तटे यानि शिवक्षेत्राणि वै मुने ।
सिद्धिदानि विशिष्टानि श्रीमत्काशीसमानि च ॥ ४८

तेभ्यो वरा महापुण्यप्रदा च्युतपुरी किल ।
ताम्रपर्णीतटे यानि क्षेत्राणि हरिशर्वयोः ॥ ४९

मुक्तिदानि वरेण्यानि दर्शनाद्भजनादपि ।
तेभ्योऽधिका शिवज्ञानप्रदा च्युतपुरी किल ॥ ५०

वेण्णातटद्वये यानि क्षेत्राणि हरिरुद्रयोः ।
तेभ्योऽधिका शिवा रम्या श्रीमच्च्युतपुरी किल ॥ ५१

पिनाकिनीतटे यानि स्थानानि हरिभर्गयोः ।
तेभ्योऽधिका प्रिया शम्भोश्श्रीमच्च्युतपुरी किल ॥ ५२

तुङ्गभद्रातटद्वंद्वे यानि स्थानानि देवयोः ।
हरकेशवयोस्तेभ्यश्श्रीमच्च्युतपुरी वरा ॥ ५३

कृष्णवेणीसरित्तीरे यानि स्थानानि सन्ति वै ।
शिवमाधवयोस्तेभ्यश्श्रीमच्च्युतपुरी वरा ॥ ५४

भीमरथ्यापगातीरे सन्ति क्षेत्राणि यानि वै ।
पुण्यानि कृष्णशिवयोस्तेभ्यश्च्युतपुरी वरा ॥ ५५

गोदावरीसरित्तीरे यानि देवालयानि वै ।
तेभ्योऽधिका प्रशस्ता च श्रीमच्च्युतपुरी किल ॥ ५६

नर्मदाया महापुण्यसरितो द्वन्द्वतीरयोः ।
यानि स्थानानि शैवानि तेभ्यश्च्युतपुरी वरा ॥ ५७

यमुनायास्तटयुगे सन्ति क्षेत्राणि यानि वै ।
शिवकेशवयोस्तेभ्यश्श्रेष्ठा च्युतपुरी किल ॥ ५८

गङ्गातटद्वये रम्ये यानि क्षेत्राणि सन्ति वै ।
तेभ्यः पुण्यप्रदा ज्ञानप्रदा च्युतपुरी शिवा ॥ ५९

कालत्रयेऽपि त्रैलोक्ये यत्र क्वापि द्विजोत्तम ।
पुरी च्युतपुरीतुल्या न भूता न भविष्यति ॥ ६०

काश्यादिशम्भुस्थानानि बहून्यन्यानि यानि वै ।
मया ज्ञातानि गुह्यानि सिद्धयोग्याश्रमाणि च ॥ ६१

यानि यात्रागृहाणि स्युः शिवस्य परमात्मनः ।
वरा तेभ्यश्च्युतपुरी शिवकल्याणदायिनी ॥ ६२

*கயை, பிரயாகை, மதுரா, அவந்தீ (உஜ்ஜயினீ) புண்யநகரம் (புஞ) புஷ்கரம், சம்பரம், நீலகண்டம், மானஸஸரோவரம், காலஞ்ஜரம், குஹ்யகேசம், துவாரகை, மாயாபுரீ, அனரண்யம், பிரபாஸம், கோகர்ணம், வாதபுரம் (குருவாயூர்) அயோத்தியை, கங்கை நீரை வெளியிடுகிற இமயமலை, ஆம்ராரண்யம் (மாங்காடு) அச்வகம், ஸாலக் ராமம், மந்தரமலை, தேவிகம், ரைவதகம் ராமசைலம், கௌசிகேச்வரம், கமலாலயம் (திருவாரூர்) ஸ்ரீ க்ஷேத்திரம். காசி, கைலாஸம், மஹாமேரு, ஹரிஹர க்ஷேத்திரம், காவேரிக் கரையில் அமைந்துள்ள சிவக்ஷேத்திரங்கள், காசிக்கு ஈடெனப் புகழ்பெற்ற மற்ற சிவக்ஷேத்திரங்கள் தாமிரபர்ணி, பெண்ணை, பிநாகினீ, துங்கபத்ரை, கிருஷ்ணவேணீ, பீமரதீ, கோதாவரீ, நர்மதா, யமுனை, கங்கை முதலிய புனித நதிகளின் இருகரைகளில் அமைந்த சிவ - விஷ்ணு க்ஷேத்திரங்கள். இவை அனைத்தைவிடச் சிறந்தது ச்யுதபுரியாகும். (41-62)*

कालत्रयविनिर्मुक्ता मुक्तिदा भक्तिशालिनाम्।
शिवस्य नित्यवासा हि साम्बस्य परमात्मनः ॥ ६३

इयं च्युतपुरी नित्यवल्लभाऽतीव साऽभवत्।
दर्शनाद्धेमसदसि जननात्कमलालये ॥ ६४

काश्यान्तु मरणान्मुक्तिस्स्मरणादरुणाचले।
दर्शनात्स्मरणादत्र जननान्मरणादपि ॥ ६५

श्रीमच्च्युतपुरे ब्रह्मन्चतुर्धापि च मुक्तिभाक्।
बहुना च किमुक्तेन शृणु कात्यायनानघ ॥ ६६

विराजो द्वादशान्तान्तादधिका पूरियं मुने।
सत्यं सत्यं पुनःसत्यमुद्धृत्य भुजमुच्यते ॥ ६७

वेदशास्त्राण्यनेकानि समालोच्य पुनः पुनः।
एषा च्युतपुरी श्रेष्ठा सर्वेषां मुक्तिदायिनी ॥ ६८

धर्मार्थकाममोक्षार्थं नृणां साम्बेन निर्मिता।
सत्यं वच्मि पुनःसत्यं स्पृष्ट्वा शिवपदाम्बुजम् ॥ ६९

सर्वाधिका च्युतपुरी पतेन्मूर्धा न चेन्मम।
अस्ति चेद्दैवतं शम्भोस्तुल्यं मेरोस्समो गिरिः ॥ ७०

पञ्चाक्षरसमो मन्त्रश्च्युतपुर्यास्समा पुरी।
यद्यस्ति वेदवाक्यस्य समं वाक्यं रवेर्महः ॥ ७१

गुरोस्समानं तत्त्वञ्च च्युतपुर्यास्समा पुरी।
कल्पवृक्षसमो वृक्षः कालमेघसमो घनः ॥ ७२

शेषतुल्योऽस्ति चेन्नागश्चिन्तारत्नसमो मणिः।
कामधेनुसमा धेनुश्च्युतपुर्यास्समा पुरी ॥ ७३

यद्यस्ति रामतुल्यो राट्च्युतपुर्यास्समा पुरी।

முக்காலத்துக் கட்டுப்பாட்டிலிருந்தும் விடுபட்டபுரம் இது. பக்தியுள்ளவருக்கு முக்தி தருவது. சிவபரமாத்மா அம்பிகையுடன் நித்யவாஸம் செய்யுமிடம். சிதம்பரத்துத் தங்கஸபையின் தர்சனமும். கமலாலயமான திருவாரூரில் பிறப்பும் காசியில் மரணமும் அருணாசலத்தில் ஸ்மரணமும் முக்தி தரும் என்பர். இங்கு தர்சனம், ஸ்மரணம், ஜனனம், மரணம் என்ற நான்குமே முக்தி தரும். விராட் புருஷனின் துவாதசாந்த ஸ்தலத்தைவிட அதிகச் சிறப்பு கொண்ட புரமிது. வேதம் சாஸ்திரம் முதலியதை ஆராய்ந்து கைகளை உயர தூக்கி இது ஸத்யம், ஸத்யம் என கோஷிக்க பெறுகிறது. சிவனின் திருவடி பற்றிய சபதமிது. இதில் பிழை இருந்தால் என்தலை வெடித்துவிடும். சிவனுக்கு நிகரான தெய்வமோ, மேருக்கு நிகரான மலையோ, பஞ்சாக்ஷரத்திற்கு ஈடான மந்திரமோ ச்யுதபுரிக்கு ஈடான புரமோ இல்லை. கல்பகமரத்திற்கு ஈடான மரம், கருமேகத்திற்கீடான மேகம், ஆதிசேஷனைப் போன்ற நாகம், சிந்தாமணி போன்ற ரத்னம், காமதேனு போன்ற பசு, ராமனைப் போன்ற அரசன் என்று கூற முடியுமானால் ச்யுதபுரீ போன்ற புரம் உள்ளதெனலாம். *(63-73)*

मृगाणां तु यथा सिंहो भास्करस्तेजसो महान्॥ ७४

तथा च्युतपुरी ब्रह्मन्पुरीणां महती वरा।
पृथिव्यादिमहाभूता नश्यन्ति प्रलयेषु वै॥ ७५

एषा च्युतत्वात्सर्वेभ्यो भूतेभ्यो द्विजसत्तम।
क्षेत्राणामेव सर्वेषां हरकेशवयोरपि॥ ७६

मुक्तिदानां वरिष्ठानां श्रेष्ठा च्युतपुरी शिवा।
महात्मनो विराजोऽस्य विग्रहत्वादिदं जगत्॥ ७७

तस्याधारादिदेशेषु वर्तमानानि यानि च।
काञ्च्यादिसप्तस्थानानि मुक्तिदानीतराणि च॥ ७८

तानि सर्वाणि विप्रर्षे दधुरप्याशयेप्सितान् ।
विग्रहे तस्य नष्टे तु विराजः पुरुषस्य वै ।। ७९

तानि सर्वाणि नश्यन्ति तत्कालपरिपाकतः ।
ब्रह्मरन्ध्रात्परत्वाच्च नित्यत्वाच्च महात्मनः ।। ८०

सर्वातिशायिनी ब्रह्मन्नेषा च्युतपुरी वरा ।
सर्वसङ्क्रमकालेषु सर्ववारेषु सर्वदा ।। ८१

सर्वऋक्षेषु तिथिषु स्नात्वा नत्वाऽत्र दृश्य च ।
पापाधिको वा पुरुषो मूर्खो वा तु नराधम ः ।। ८२

मुक्तो भवतु विप्रर्षे नान्यथा सत्यमीरितम् ।

*மிருகங்களில் சிங்கம்போல் ஒளிமண்டலங்களில் ஸூர்யன் போல் புரங்களில் ச்யுதபுரீ சிறந்தது. பிரளயத்தில் பூமி முதலிய ஐந்து பூதங்களும் உருவிழக்கின்றன. அதனுல் அவை மறைகின்றன. இந்த புரம் பஞ்சபூத நிலேக்கு அப்பாற்பட்டதானதால் மறைவதில்லே, முக்தி தருகிற சிவ விஷ்ணு க்ஷேத்திரங்களே விட இது சிறந்தது. விராட் புருஷனின் உருவமைப்பே உலகம். விராட்புருஷ சரீரத்தில் மூலாதாரம் முதலிய இடங்களில் அந்தந்த ஆதாரசக்தி பெற்ற காஞ்சி முதலிய ஏழிடங்கள் முக்தி தருகின்றன. மற்றவையனைத்தும் விரும்பியதைத் தருபவை. விராட்புருஷனின் உருவமைப்பு பிரளயத்தில் மறையும் போது, காலத்தால் ஏற்பட்ட அழிவிற்கு இவையும் உட்படுகின்றன. ச்யுதபுரியோ விராட்புருஷனின் பிரும்மரந்திரத்திற்கும் அப்பாற்பட்டது. அதனுல் பிரளயத்திலும் அழியாத நித்ய ஸ்தானமாகும். இங்கு எல்லா ஸங்கிரமணங்களிலும் வாரம் - நக்ஷத்திரம். திதி அனேத்திலும் நீராடி வழிபட்டு வணங்கி தரிசிக்கலாம். பெரும்பாவியும் மனிதருள் அதமனும் முக்தனுவான். (74-82)*

सालोक्यदा पुरी शैवी काचित्सामीप्यदायिनी ।। ८३

एषा च्युतपुरी ब्रह्मन्सर्वकामप्रदायिनी।
तत्रस्थाःस्थावरा गुल्मास्तृणानि पशुपक्षिणः ॥ ८४

जीवन्मुक्ता न सन्देहःसत्यं सत्यं न संशयः।
ये वा क्षेत्रं प्रविश्येदं गत्वाऽन्यत्र तु जन्तवः ॥ ८५

कालान्तरे मृता यत्र क्वापि मुक्ताश्च ते मुने।
यत्र क्वापि स्थितो यो वै वदंश्च्युतपुरीति सः ॥ ८६

मुक्तो भवति सन्देहो न मुने सत्यमीरितम्।
ब्राह्मणा क्षत्रिया वैश्याः शूद्राश्चान्ये च जन्तवः ॥ ८७

स्थित्वा क्षणं क्षणार्धं वा जीवन्मुक्ताश्च्युते पुरे।

ஸாலோக்யம் ஸாமீப்யம் ஸாரூப்யம் ஸாயுஜ்யம் என்ற *முக்தி நிலைகளில் ஏதேனும் ஒன்றை மட்டுமே தரவல்ல மற்ற புனித க்ஷேத்திரங்களை விட எல்லாவற்றையும் தரவல்ல இது சிறந்தது. இங்குள்ள தாவரமும் செடியும் புல்லும் கால்நடையும் பறவையும் ஜீவன் முக்தி பெறலாம். இந்த க்ஷேத்திரத்தில் வசித்துப் பின் வேறிடத்திற்குச் சென்றாலும் அங்கும் முக்தி பெறலாம். ச்யுதபுரீ என்ற பெயரைக் கூறினாலும், அனைத்து வர்ணத்தினரும் ஒரு கணம் இங்கு தங்கினாலும் ஜீவன் முக்தராகலாம். (82-87)*

कात्यायन उवाच ॥

भगवन्सर्वतत्वज्ञ गुरो विज्ञापनं शृणु ॥ ८८

शिष्यस्य मम भक्तस्य शम्भावमिततेजसि।
प्रोक्तं भगवता यद्यन्मह्यं कारुण्यचेतसा ॥ ८९

च्युतपुर्याश्च विषये सत्यमेतन्न संशयः।
सच्चिदानन्दरूपस्य परिपूर्णस्य सर्वतः ॥ ९०

व्याप्य स्थितस्य देवस्य शिवस्य परमात्मनः ।
कैलासो मन्दरः काशी श्रीशैलो व्याघ्रपूरपि ।। ९१

कालहस्तिपुरी शोणाचलो वल्मीकपूर्वरा ।
इत्यादीनि शिवक्षेत्राण्यधिष्ठानमिति प्रभो ।। ९२

अनुगृहीतं भवता घटते तत्कथं गुरो ।
परिच्छिन्नस्य देवस्य कथं स्याच्चित्प्रकाश्यता ।। ९३

व्यापकत्वं महेशस्य कथं वा घटतेऽत्र तु ।
चराचरस्य जगतो व्याप्यत्वञ्च कथं भवेत् ।। ९४

हृद्गतं संशयं छिन्धि ममैतत्पृच्छकस्य भो ।

*காத்யாயனர் கேட்கிறார் - ''நீங்கள் கூறியதனைத்தும் உண்மை என ஏற்கிறேன். பேரிருக்கையும் பேருணர்வும் பேரானந்தமுமே வடிவான ஈசன் எங்கும் நிறைந்தவர். அவ்வாறெனில் கைலாஸம், மந்தரமலை, காசி, ஸ்ரீசைலம், சிதம்பரம், காளஹஸ்தி, அருணாசலம், திருவாரூர் என்ற சிவக்ஷேத்திரங்களில் கோயில் கொண்டுள்ளார் என்பது எவ்வாறு பொருந்தும்? அந்தந்த ஊரில் வசிப்பவர் என்றால் உள்ளத்துப் பேருணர்வால் மட்டும் உணரப் பெறுபவர் என்பதோ எங்கும் நிறைந்திருப்பதோ எங்ஙனம் பொருந்தும்? பேருணர்வும் பேரானந்தமும் நிறைவிருந்தால் கிட்டும். அவருக்குள் இந்த சர - அசர உலகம் அடங்கும் என்பது எப்படி? (88-94)*

कण्व उवाच ।।
त्वया सम्यक्कृतो वत्स प्रश्नः सर्वनिरुत्तरः ।। ९५

वक्ष्यामि तव सन्देहोन्मूलनक्षममुत्तरम् ।
यथार्ककिरणो लोके पाषाणादौ प्रसर्पति ।। ९६

सर्ववस्तुनि चोष्णत्वं कुर्वन्नन्तरतः पुनः ।
अर्ककान्ताश्मनि यथा प्रसर्पन्किरणो रवेः ।। ९७

अग्निमुत्पाद्य वर्तेत कांस्ये च प्रतिदीप्तिमान्।
तथा सर्वगतो देवः परिपूर्णःसदाशिवः ॥ ९८

महास्थानेषु सर्वेषु प्रकामं संप्रकाशते।
स्थापितेषु च लिङ्गेषु देवसिद्धादिभिस्तराम्॥ ९९

प्रकाशते स्वयंभूतलिङ्गेषु सुतरां मुने।
तत्रापि पञ्चभूतेषु लिङ्गेषु मुनिसत्तम॥ १००

काञ्चीभवनशोणाद्रिकालहस्त्यादिकेष्वपि।
शिवः प्रकाशतेऽत्यर्थं जन्तूनामिष्टसिद्धये॥ १०१

श्रीकाशीच्युतपुर्योश्च राजमानपरात्मनः।
लिङ्गभूतस्य देवस्य प्रकाशोऽतीव वर्तते॥ १०२

एतयोरुभयोर्विद्धन्वरिष्ठा च्युतपूरियम्।

*கண்வர் கூறுகிருர் - ''உன் கேள்வி சிறந்ததே. அதற்குரிய விளக்கம் தருகிறேன். சூரியனின் கிரணம் கல் முதலானதின் மீதுபட்டு சூடு வழியே உள்ளே பரவுகிறது. அதே வகையில் எல்லாப் பொருட்களிலும் உட்சூடாகப் பரவுகிறது. ஸௌர்யகாந்தக் கல்லின் மீதுபட்டு நெருப்பைக் கக்குகிறது. வெண்கலத்தின் மீது பட்டு ஒளி பிரதிபலிக்கிறது. இப்படி ஸௌர்யனின் கிரணம் பரவி விதவிதமாகச் செயல்படுகிறது. அதேபோன்று எங்கும் பரவி நிற்கிற ஈசன் எல்லா க்ஷேத்ரங்களிலும் பலவகையில் சிறப்பை வெளியிடுகிருர். தேவரும் ஸித்தரும் ஸ்தாபித்த இடங்களிலும் தானே தோன்றிய (ஸ்வயம்பூ) க்ஷேத்திரங்களிலும் நன்கு சிறப்பை வெளிப்படுத்துகிருர். பஞ்சபூதலிங்கங்களான காஞ்சீ, அருணாசலம், காளஹஸ்தி முதலான இடங்களில் மக்களின் விருப்பம் நிறைவுறும் வகையில் அருள் புரிகிருர். காசியிலும் ச்யுதபுரியிலும் கோயில் கொண்ட ஈசனின் ஆற்றல் மிகச்சிறந்தது. அதுலும் ச்யுதபுரியில் மிகமிகச் சிறந்தது. (95-102)*

काशी परं शिवेन स्यादविमुक्तं कदाचन । १०३

एतया च्युतपुर्या च न विमुक्तौ कदाप्युभौ ।
तस्मादियं पुरी ब्रह्मंश्च्युतत्वात्प्रलयेष्वपि ।। १०४

सर्वक्षेत्राधिका नित्यमुक्तिदा ज्ञानदायिनी ।
कृत्तिवासेशलिङ्गस्य सर्वश्रुत्युपबृंहिता ।
दर्शनात्स्मरणादेव भुक्तिमुक्तिप्रदास्तिकाः ।। १०५

यो वै ब्रह्मा ब्रह्मण उज्जभार
प्राणेश्वरः कृत्तिवासाः पिनाकी ।
सर्वान्वेदान्केशवस्यापि दद्यात्
तं बुद्ध्वा त्वं प्राप्नुया मोक्षलक्ष्मीम् ।। १०६

सत्यज्ञानानन्दरूपा द्विजेन्द्र
श्रीविद्या या सा हि बालाङ्कुराम्बा ।
ज्ञात्वा देवीमादिशक्तिं परस्य
ब्रह्मश्रीशेशादिवन्द्यां भजस्व(त्रिनेत्राम्)।।१०७

*காசி சிவனைவிட்டுப் பிரியாதது. ச்யுதபுரியும் சிவனையும் அம்பிகையையும் விட்டுப் பிரியாதது. (அவிமுக்தம்) பிரளயத்திலும் தப்பி நிற்பதே இதன் தனிச்சிறப்பு. இதனை எல்லா வேதங்களும் ஒப்புக் கொள்ளும். வேதம் கூறும் - ''தானே பரம்பொருளான கிருத்திவாஸர், எல்லா உயிர்களுக்கும் ஈசர், பிநாகம் ஏந்தியவர், பிரும்மாவை ஸ்ருஷ்டித் தொழிலில் தாங்கியவர். வேதமனைத்தையும் விஷ்ணுவிற்கும் அளித்தவர். அவரை உணர்ந்தவன் மோக்ஷலக்ஷ்மியை அடைகிறான்'' ''ஸத்ய - ஜ்ஞான - ஆனந்த வடிவினளான ஸ்ரீவித்யையே பாலாங்குராம்பிகை. பரமனின் ஆதிசக்தியான தேவியை உணர்ந்து மும்மூர்த்திகளாலும் வணங்கப்பெறும் நிலையைப் பெறுவாய்'' இது வேதத்தின் அறிவுரை. (103-107)*

कैलासादधिका त्वियं च्युतपुरी ब्रह्माण्डबाह्यस्थिता
वेधोविष्णुपुरोगमैस्सुरगणैस्संसेव्यमाना मुने।
तस्या नास्ति जगत्त्रये च नगरी तुल्या शिवाङ्घ्रिद्वयं
स्पृष्ट्वा वच्मि पुनः पुनर्यदि मृषा मूर्धा पतेन्मे त्रिधा ॥१०८

तस्मादत्र वसामि मोदहृदयस्सम्पूज्य संवित्सभा-
मध्ये मत्तकरीन्द्रमस्तकशिखानृत्यत्पदाम्भोरुहम्।
शम्भुं चिन्मयदेविकासहचरं श्रीवीरनृत्तं शिवं
पश्चात्प्राप्नुहि तन्मयत्वममलं शुद्धं परं शाश्वतम्॥ १०९

सूत उवाच ॥

इति गुरुगदितं निशम्य कात्यायनमुनिरभिवाद्य तस्य पादौ।
च्युतपुरि कृतवासजातहर्षो यजनपरोऽभवदीश्वरस्य नित्यम्॥

*இந்த ச்யுதபுரீ கைலாஸத்தை விடச் சிறந்தது. பிரும்மாண்டத்தின் வெளியிலும் பரவி நிற்பது. பிரும்மா விஷ்ணு முதலிய தேவர்களால் வழிபடப் பெறுவது. அதற்கு ஈடானது மூவுலகத்திலுமில்லை. சிவனது திருவடி தொட்டுச் சபதம் செய்கிறேன். இது பொய்யானால் என் தலை வெடிக்கும். அதனால் தான் ஆனந்தம் நிறைந்த உள்ளத்துடன் இங்கு உள்ளேன். ஞானஸபையின் நடுவே மதம்பிடித்த யானை மத்தகத்தின் மீது நடனமாடுகிற திருவடிகளைக் கொண்டவரும் ஞானாம்பிகை உடனுள்ளவரும் வீரநர்த்தனம் புரிபவருமான சிவனை வழிபட்டு தூய பரநிலையான அவரது ஸாயுஜ்யத்தைப் பெறுவாய் எனக் கண்வர் கூறி முடித்தார். குரு இவ்வாறு கூறியதைக் கேட்ட காத்யாயனர் அவரது திருவடிகளின் வணங்கி ச்யுதபுரி எனும் வழூவூரில் தங்கித் தினமும் ஆனந்தத்துடன் ஈசனை வழிபட்டு வந்தார். (108-110)*

एतद्वो वचनं विप्राः पवित्रं पापनाशनम्।
च्युतपुर्याश्च माहात्म्यं श्रवणान्मङ्गलप्रदम्॥ १११

गजासुरवधं तत्र शिवभिक्षाटनं परम्।
ऋषीणां ज्ञानदानञ्च कृतञ्च परमात्मना ।। ११२

पिप्पलादिवनानाञ्च माहात्म्यञ्च विशेषतः ।
इदं च्युतपुरस्यास्य माहात्म्यं परमाद्भुतम्।। ११३

सर्वपापहरं नॄणां श्रोतॄणां पातकापहम्।
चित्तशुद्धिकरं पुंसां सदा मुक्तिप्रदं शिवम्।। ११४

शिवप्रसादजनकं शिवज्ञानप्रदर्शकम्।
यः शृणोति प्रतिदिनं च्युतपुर्याश्च वैभवम्।। ११५

दिव्यज्ञानमवाप्याशु जीवन्मुक्तो भवेदिह।
अदृश्यः सर्वभूतानां कृत्तिवासस्य सन्निधौ ।। ११७

शिवसारूप्यमापन्न इहैव वसति ध्रुवम्।
य इदं परमाख्यानमर्थवादमिति ब्रुवन्।। ११७

स सप्तकोटिनरकान्यायाद्विंशतिकानपि।
च्युतपुर्याश्च माहात्म्यं धर्मकामार्थमोक्षदम्।। ११८

लिखित्वा पूजयेद्योऽसौ सर्वसिद्धिमवाप्नुयात्।
य इदं परमाख्यानं मृषावादमितीरयेत्।। ११९

सोऽष्टाविंशतिकोटीनां नरकाणां निवासभाक्।
अस्य माहात्म्यसन्देहं मनसा चिन्तयन्ति ये।
ते वै मानुषलोकेऽस्मिन्भवन्ति ब्रह्मराक्षसाः ।। १२०

अलमलमियमेवाज्ञानिनां मानुषाणां
च्युतपुरि वसतिस्तद्वैभवस्य श्रुतिश्च।
सकलमदनवैरिक्षेत्रवासप्रदात्र्यौ
निखिलनिगमचूडासारसच्छ्रावणार्थे।। १२१

इति वरतपसां वः प्रोक्तमेतद्वरेण्यं
शिवचरितमशेषज्ञानदातृ द्विजानाम्।

श्रवणमधुरमाद्यं व्यासवक्त्राम्बुजाद्यत्
श्रुतमपि विदितं मे शम्भुमाहात्म्यमेतत् ।। १२२

इतः परं किं धरणीसुरोत्तमा मयापि वक्तव्यमुमापतेः प्रभोः ।
श्रोतुं चरित्रं पुनरिच्छया प्रियाद्वदध्वमानन्दभरस्य निर्मलम् ।। १२३

इति शैवे महापुराणे ईशानसंहितायां च्युतपुरमाहात्म्ये
त्रिंशोऽध्यायः ।।

च्युतपुरमाहात्म्यं संपूर्णम् ।

—*—

ச்யுதபுரீமாஹாத்ம்ய முடிவுரை - ஸூதர் கூறுகிறார். *"ச்யுதபுரியின் பெருமை இத்தகையது. கஜாஸுர வதம், பிக்ஷாடனம், ருஷிகளுக்கு ஞான உபதேசம், அரசு வன்னி முதலிய காடுகளின் பெருமை என்றனைத்தும் பாபம் நீக்கி உள்ளத் தூய்மை தரவல்லது. சிவனருள் சிவஜ்ஞானம் பெற்றுத் தருவது, இதனை சிரத்தையுடன் சொல்பவனும் கேட்பவனும் ஜீவன் முக்தி பெற்று பிறர் பார்வையில் படாமல், சிவனது வடிவேற்று இங்கேயே வாழ்வான். இதனை வெறும் கட்டுக் கதை எனக் கூறுபவன் நரகமடைவான். இதனை எழுதி நூலாக வழிபடுபவன் மேன்மை பெறுவான். இங்கு வசிப்பதும் சிவனை வழிபடுவதும் மற்ற சிவக்ஷேத்திரங்களில் வசிக்கிற புண்யத்தைத் தரும். வேதம் உபநிஷதம் முதலியவற்றின் ஞானத்தை வழங்கும். வியாஸரின் திருவாக்கால் வெளிப்படுத்தப்பட்ட சிவமாஹாத்ம்ய நூல் இது. இதற்கு மேலும் சிவமஹிமை கேட்க விரும்பினால் தெரிவிப்பீர்" என்றார். (111-123)*

வேதவியாஸரியற்றிய சிவபுராணத்தில் ஈசானஸம்ஹிதையில்
ச்யுதபுரமாஹாத்ம்யமாகிற
30 அத்தியாயங்கள் முற்றுப்பெற்றன.

—*—

स्कान्दे महापुराणे कोटिरुद्रसंहितायां

१५६ - १६६ अध्यायात्मकम्

# च्युतपुरमाहात्म्यम्

## प्रथमोऽध्यायः

मुनय ऊचुः ॥

सूत सर्वपुराणज्ञ लोकानुग्रहतत्पर ।
अस्माभिः सर्वदा दृष्ट्वा बहुभूमीर्मुहुर्मुहुः ॥ १

कर्मभूमिस्तपोभूमिर्भक्तिभूमिर्महीतले ।
ज्ञानभूमिर्न कुत्रापि दृष्टा तां वर्णयाधुना ॥ २

एवं पृष्टः शौनकाद्यैः सूतो वक्तुं प्रचक्रमे ।
सूत उवाच ॥
साधु साधु महाप्राज्ञ न स्वार्थं प्रश्न ईरितः ॥ ३

कृतो युष्माभिरधुना लोकानुग्रहकाम्यया ।
त्रिविधा भूमिरुद्दिष्टा सात्विकी तामसीति च ॥ ४

राजसीति च संप्रोक्ता उत्तमाधममध्यमा ।
उत्तमा सात्विकी प्रोक्ता राजसी मध्यमेति च ॥ ५

अधमा तामसी प्रोक्ता भूमिरेवमुदाहृता ।
उत्तमा ज्ञानभूमिः स्यान्मध्यमा भक्तिभूः स्मृता ॥ ६

अधमा कर्मभूमिः स्यात्सर्वशास्त्रसुसंमता ।
ज्ञानभूमिः क्वचिद्देशे वर्तते सरहस्यकम् ॥ ७

भूलोके भारते वर्षे कावेर्या दक्षिणे तटे ।
गौरीमायूरनैर्ऋत्यां कैलासो दक्षिणाह्वयः ॥ ८

स्मरणात्सर्वपापघ्नो महापापहरः शुभः ।

*ஸ்காந்த புராணத்தில் (கோடி ருத்ர ஸம்ஹிதையில் 156-166 அத்யாயங்கள்)*

## ச்யுதபுரமாஹாத்மியம்

### அத்தியாயம் - 1

*ஸூதரிடம் சௌனகாதி முனிவர் கேட்கின்றனர். ''உலகிற்கு உதவுவதில் ஆர்வமிக்கவரே! எல்லாப்புராணங்களும் அறிந்தவரே! நாங்கள் பல இடங்களுக்குச் சென்றிருக்கிறோம். கர்மபூமி, தபோ பூமி, பக்தி பூமி எனப் பூமியில் பல உண்டு. ஆனால் ஜ்ஞான பூமி எனக் கண்டதில்லை. அதனை விளக்கக் கோருகிறோம்'' என்றனர். ஸூதர் விளக்கினார். ''தன் நலமின்றி உலகிற்கு உதவுகிற நோக்குடன் கேட்கிறீர். ஸாத்விகீ, ராஜஸீ, தாமஸீ என மூன்று வகை இடங்கள் உண்டு. ஸாத்விகீ சிறந்தது. ராஜஸீ நடுத்தரமானது. தாமஸீ கீழ்த்தரமானது. ஜ்ஞானபூமி சிறந்தது. பக்தி பூமி நடுத்தரமானது. கர்மபூமி இவற்றில் கீழ்நிலையிலுள்ளது. பூவுலகில் பாரத வர்ஷத்தில் காவிரியின் தென்கரையில் கௌரீமாயூரத்தின் தென்மேற்கில், தென் கைலாஸம் எனப் புகழ்பெற்ற, க்ஷேத்திரம் உள்ளது. நினைத்தாலே பாபத்தை நீக்குவது. பெரும்பாபத்தையும் நீக்கவல்ல சுபக்ஷேத்திரம். (1-8)*

देवदारुवनं तत्र कृत्तिवासेश्वराख्यया ॥ ९

निरन्तरं स सान्निध्यं करोति भगवान्मृडः ।
गजस्थोऽभिनयन्नृत्तमद्यापि परिदृश्यते ॥ १०

आनन्दनटनं चक्रे केनचित्कारणेन सः ।
पञ्चास्यब्रह्मतीर्थश्च वर्तते लिङ्गसन्निधौ ॥ ११

हस्तितीर्थाख्य संज्ञाऽपि तस्यैवासीद्द्विजोत्तमाः ।
भिक्षाटनं स कृतवान्स्थले तस्मिन्महेश्वरः ॥ १२

सर्वासां मुनिपत्नीनां तदा मोहस्समुत्थितः ।
आग्नेये वर्तते शास्ताऽरुन्धतीशस्तु दक्षिणे ॥ १३

लिङ्गस्याग्नेयभागस्थः कैलासेश्वर इत्यपि ।
त्यक्त्वा बालतपाग्रामं तस्मिन्लिङ्गे पुराऽयजत् ।। १४

ऋषीणां कारणाद्भक्त्या तदा कैलासशृङ्गगः ।
आवीरासीत्तदा शम्भुरद्यापि परिदृश्यते ।। १५

लिङ्गस्याग्नेयभागे तु ज्वालाश्रेणीति वर्तते ।
कङ्कालेश्वरसंज्ञोऽपि मोहकस्तत्र वर्तते ।। १६

भिक्षुरूपेण सर्वासां मुनिस्त्रीणां स नग्नकः ।
आग्नेये ज्वलनश्रेण्या वागीशो वाण्युपासितः ।। १७

प्राग्भागे किञ्चिदीशाने कृत्तिवासेश्वरस्य च ।
वर्तते तत्र लिङ्गस्य द्वयमद्यापि दृश्यते ।। १८

*தேவதாருக்காட்டில் கிருத்திவாஸேசுவரன் என்ற திருநாமத்துடன் சிவபெருமான் அங்கு எப்போதும் காட்சி தருகிறார். யானை மீது நின்று ஆனந்த நடனமாடுகிறார். அதற்கொரு காரணம் உண்டு. அந்த லிங்கத்தின் எதிரில் பஞ்சமுகபிரும்ம தீர்த்தம் உள்ளது. அதற்கு ஹஸ்தி (யானை) தீர்த்தம் என்ற பெயரும் உண்டு. அங்கு ஈசன் பிக்ஷாடனம் செய்ய முனிவர்களின் பத்னிகள் அவரிடம் மயங்கினர். தென்கிழக்கில் சாஸ்தாவும் தெற்கில் அருந்ததீசரும் (கைலாஸேச்வரர்) கோயில் கொண்டுள்ளனர். பால தபஸ் என்பவர் தன் கிராமத்தை விட்டு இங்கு வந்து இந்த லிங்கத்தை வழிபட்டார். கைலாஸத்தில் வசிக்கிற சிவன் ருஷிகளின் பக்திக்கு வசப்பட்டு இங்கு தோன்றியவர் இன்றும் காட்சி தருகிறார். லிங்கத்தின் தென் கிழக்கில் உள்ள ஜ்வாலா ச்ரேணீ (கொள்ளிக் காடு)யில் ருஷிபத்னீமோஹம் செய்த ஈசன் கங்காளேச்வரனாக உள்ளார். ஆடையின்றி திரிந்து ருஷிபத்னிகளை மயக்கியவர். ஜ்வாலாச்ரேணியின் தென்கிழக்கில் ஸரஸ்வதி வழிபட்ட வாகீசர் உள்ளார். கிருத்திவாஸரின் வடகிழக்கில் இந்த இரண்டு லிங்கங்களும் உள்ளன. (9-18)*

कैलासनाथो लिङ्गस्य ह्युदग्बालतपः पुरे।
स पूर्वं गौतमेनैव शाश्वतस्तत्र पूजितः ॥ १९

सा देवी पूजिता पश्चात्पुनर्लिङ्गस्य चोत्तरे।
तिरोधानग्रामवर्ती ह्यगस्त्येश्वरसंज्ञकः ॥ २०

कृत्तिवासेशवायव्ये नाम्ना स्वर्णगिरीश्वरः।
लिङ्गस्य पश्चिमे भागे पुरं श्रीरथमग्रकम् ॥ २१

अध्यापगे(के)श्वरो नाम्ना स्वयम्भूस्तत्र तिष्ठति।
कृत्तिवासेशलिङ्गस्य चैशान्यां वर्तते द्विजाः ॥ २२

गौरीमायूरसंज्ञं तत्सर्वपापहरं स्थलम्।
कावेरीदक्षिणे तीरे ह्यण्डभ्रंशस्थलं शुभम् ॥ २३

श्रीमद्दक्षिणकैलासं सर्वस्थानोत्तमोत्तमम्।
ज्ञानभूमिरिति प्रोक्ता तत्र यूयं तु गच्छत ॥ २४

इति प्रथमोऽध्यायः

*

*கிருத்திவாஸரின் வடக்கில் பாலதவப்புரத்தில் கைலாஸேசுவரர். அவர் முன்பு கௌதமரால் வழிபடப் பெற்றவர். லிங்கத்தின் வடக்கில் தேவி வழிபடப் பெற்றுள்ளாள். திரோதான கிராமத்தில் (மறையூர்) அகஸ்தியேசுவரர். கிருத்திவாஸரின் வடமேற்கில் ஸ்வர்ணகிரீசுவரர். லிங்கத்தின் பின்புறத்தில் ஸ்ரீரத மக்னகம் (தேரழுந்தூர்). அத்யாபகேச்வரர் என்ற ஸ்வயம்பூ லிங்கம் அங்கு உள்ளது. கிருத்திவாஸரின் வடகிழக்கில் கௌரீமாயூரம். பாபங்களனைத்தையும் நீக்குகிற தலம். காவேரியின் தென்கரையில் அண்டப்ரம்ச ஸ்தலம் (வழுவூர்) உள்ளது. தக்ஷிண கைலாஸம் இது. இந்தப் பகுதியை ஜ்ஞான பூமி என்பர். நீங்கள் இங்கு சென்று வாருங்கள் என்றார் ஸூதர். (19-24)*

*

## ।। अथ द्वितीयोऽध्यायः ।।

मुनय ऊचुः -

सूत सर्वपुराणार्थतत्वविद्याविशारद ।
अण्डभ्रंशाह्व एतस्य स्थलस्य कथमागतः ।। १

श्रीमद्दक्षिणकैलाससंज्ञा चाप्यागता कथम् ।
देवदारुवनं नाम स्थलस्यास्य किमर्थतः ।। २

ईशस्य कृत्तिवस्त्राख्या किमर्थं सूत नो वद ।
वीरट्टनाथसंज्ञाऽपि किमर्थं भगवन्मुने ।। ३

गजस्थनृत्ताभिनयः किमर्थं शम्भुना कृतः ।
आनन्दनटनं चक्रे स्थलेऽस्मिन्केन शङ्करः ।। ४

चतुर्मुखब्रह्मणश्च कथं पञ्चमुखानि वै ।
पञ्चास्यब्रह्मतीर्थञ्च किमर्थं ब्रह्मनिर्मितम् ।। ५

हस्तितीर्थाभिधानञ्च तस्यैवासीत्कथं मुने ।
भिक्षाटनञ्च कृतवान्किमर्थं तत्स्थले शिवः ।। ६

सर्वासां मुनिपत्नीनां किमर्थं मोहकृत्पुरा ।
किमर्थं शास्तुरुत्पत्तिररुन्धत्येश्वरः कथम् ।। ७

कैलासेश्वरनामा च कथमासीत्स्थले तदा ।
ज्वालाश्रेणीति संज्ञा च कस्मात्कारणतो वद ।। ८

कङ्कालेश्वरनाम्ना च मोहयामास ताः कथम् ।
वाणी किमर्थं सर्वेशमुपास्त वद सूतज ।। ९

उत्तरे कृत्तिवस्त्रस्य द्वयं लिङ्गस्य तत्कथम् ।
उत्तरे बालिशातपःपुरनाम्नि महेश्वरः ।। १०

किमर्थं गौतममुनिसंपूजित इतीरितः ।
तिरोधानकरेशानः कुम्भजेनार्चितः कथम् ।। ११

कृत्तिवस्त्रस्थलाभ्याशे कथं स्वर्णगिरीश्वरः ।
अध्यापगेशनामा च कथमासीन्महेश्वरः ।। १२

मत्कृतानां त्रयोविंशत्प्रश्नानां तु यथाक्रमम् ।
समर्थो ह्युत्तरं वक्तुं सूतास्मासु दयां कुरु ।। १३

அத்தியாயம் 2

*முனிவர்கள் ஸூதரிடம் கேட்டனர் - ''இந்த ஊருக்கு அண்டப்ரம்சம் (பிரும்மாண்டத்திலிருந்து நழுவியது) என்றும் தென் கைலாயம் என்றும் தேவதாருவனம் என்றும் பெயர் எதனுல் ஏற்பட்டது? இங்குள்ள ஈசனுக்கு கிருத்திவாஸேசர். வீரட்டநாதர் என்ற பெயர் வரக் காரணம் என்ன? இங்கு யானைமீது நடனத்தை ஈசன் ஏன் அபிநயித்தார்? பிரும்மா நான்முகர்; அவர் ஐந்து முகம் கொண்டது ஏன்? பிரும்மாவால் அமைக்கப்பட்ட தீர்த்தம் பஞ்சபிரும்மதீர்த்தம் என்றும் ஹஸ்தி தீர்த்தம் என்றும் பெயர் எதனுல்? ஏன் ஈசன் பிக்ஷை எடுத்தார்? ஏன் ருஷிபத்தினிகளை மயங்கச் செய்தார்? சாஸ்தா எவ்வாறு தோன்றினுர்? அருந்ததீச்வரர், கைலாஸேச்வரர், ஜ்வாலாச்ரேணீ என்று பெயர் வரக் காரணமென்ன? கங்காளேச்வரராகி ருஷிபத்னிகளை மயக்கியது ஏன்? ஸரஸ்வதி ஈசனை ஏன் வழிபட்டாள்? கிருத்திவாஸருக்கு வடக்கே இரண்டு லிங்கங்கள் ஏன்? பாலதவப்புரத்தில் கௌதமர் வழிபட்டது ஏன்? அகஸ்தியர் திரோதானகரேச்வரரை வழிபட்டது ஏன்? கிருத்திவாஸருக்கு அருகே ஸ்வர்ணகிரீசர் அத்தியாபகேசர் என ஈசன் ஏன் தோன்றினுர்? என்று 23 கேள்விகளுக்கும் பதில் கூறுவீர் என வேண்டினர். (1-13)*

ऋषीणां तद्वचश्श्रुत्वा सूतः प्रत्युत्तरं ददौ ।
कल्पान्ते च पुरा स्रष्टा सृष्ट्वाऽण्डभुवनान्यथ ।। १४

शिवस्थानानि तत्पश्चात्सृष्टिं कर्तुमियेष सः ।
सद्योऽण्डात्पतितं सृष्टं रुद्रबीजं महीतले ॥ १५

इदमेव स्थलं श्रेष्ठं स्थलानां धूर्जटेस्स्मृतम् ।
मत्करात्सृष्टिबीजं यत्पतितं शीघ्रतः क्षितौ ॥ १६

तत्कारणात्स्थलस्यास्य प्रथा भ्रंशपुरं भवेत् ।
इति ब्रह्मा स्थलस्यास्य नामधेयं तथाऽकरोत् ॥ १७

अत एव स्थलस्यास्य ह्यण्डभ्रंशाह्व अगतः ।
अथावरुह्य सद्योऽण्डात्पञ्चभिस्स्वैर्मुखैस्तदा ॥ १८

स्पर्शनं कृतवान्ब्रह्मा स्वनेत्रैरस्पृशत्स्थलम् ।
अस्मिन्स्थले तदा ब्रह्मनेत्रैःस्पृष्टे मुनीश्वराः ॥ १९

पातालगङ्गा ह्युद्भिद्य सद्यो भूमिं समुत्थिता ।
दृष्ट्वाश्चर्यं तदा ब्रह्मा स्थलवैभवमुत्तमम् ॥ २०

पञ्चब्रह्माख्यकं तीर्थमिति नाम तदाकरोत् ।
आविर्भविष्यति शिवस्तीर्थस्यास्य समीपतः ॥ २१

त्रिकालज्ञानतो वक्ष्ये भविष्यति महास्थलम् ।
इत्युक्त्वा भगवान्ब्रह्मा सद्य एव तिरोदधे ॥ २२

पञ्चब्रह्ममुखं तीर्थं तदाप्रभृति पप्रथे ।
प्रश्नद्वयस्य युष्मभ्यं मयोक्तं ह्युत्तरं द्विजाः ॥ २३

*ஸூதர் விளக்குகிறார் - ''முன் கல்பம் முடிந்ததும் படைப்பாளரான பிரும்மா பிரும்மாண்டத்தைப் படைத்ததும் சிவபெருமானின் தலங்களைப் படைக்க நினைத்தார். அதற்குள் உடன் பிரும்மாண்டத்திலிருந்து ருத்ரபீஜம் நழுவி வெளியானது. இதுவே சிவஸ்தலங்களில் சிறப்பு பெற்றது. ''என் கையிலிருந்து படைப்பிற்கான விதை விரைவுடன் பூமியில் விழுந்ததால்*

*விழுந்த இடம் பிரம்சபுரம் (வழுவூர்) ஆனது. பிரும்மா இட்டபெயரே அண்டப்ரம்சபுரம் (வழுவூர்) என்பது. உடன் பிரும்மா தன்னிடத்திலிருந்து இறங்கி தன் ஐந்து முகங்களாலும் அந்த பீஜத்தைக் கண்டு கண்களில் ஒற்றிக் கொண்டார். அச்சமயம் பாதாள கங்கை பூமியைப் பிளந்து கொண்டு அவ்விடத்தில் வெளியானது. அதனால் பஞ்சபிரும்மதீர்த்தம் என்ற பெயர் வைத்தார். பிரும்மா முக்காலமும் உணர்ந்தவரானதால் 'இதனருகே சிவன் கோயில் கொள்வார். இந்த ஊர் பெரும் தலமாகும்' என்று கூறி மறைந்தார். அதனால் பஞ்சபிரும்ம தீர்த்தம் என அது வழங்கப் பெற்றது. உமது இரு கேள்விகளுக்கு விடைதந்தேன். (14-23)*

पुरा कदाचिन्मुनयस्स्थलमेतत्समाययुः ।
चत्वारिंशत्सहस्राष्टसहस्रपरिसङ्ख्यया ॥ २४

शिष्यप्रशिष्यसंपन्नास्स्थलेऽस्मिन्कर्म चक्रिरे ।
देवदारुवनं नाम प्रथितं प्रथमं भुवि ॥ २५

पश्चाच्युतपुरं नाम स्थलस्यास्य समागतम् ।
कदाचिन्मुनयस्सर्वे कुरुक्षेत्रं विहाय च । २६

वनं च दण्डकाख्यं तद्विहाय मुनयोऽखिलाः ।
एतद्दारुवनं प्राप्य तपः कर्म च चक्रिरे ॥ २७

व्रतश्च नियमश्चैव जपं होमं क्रतूंस्तथा ।
इदमेव स्थलं श्रेष्ठमण्डच्युतपुरं पुरा ॥ २८

इति मत्वा विहायान्यन्नैमिशारण्यमप्यथ ।
तस्मिन्नवसरे तेषामीश्वरानुग्रहो न हि ॥ २९

तद्वशात्प्राप्तमोहास्ते भ्रमं प्रापुर्मुनीश्वराः ।
कर्मैव तत्त्वं विज्ञाय कर्मठाः कर्मकारिणः ॥ ३०

कर्मापमानबाहुल्यात्कर्मिणस्तेऽभवन्द्विजाः ।
ईश्वरोपासनां त्यक्त्वा भक्तिमार्गं विहाय च ॥ ३१

ज्ञानमार्गं परित्यज्य कर्माहङ्कारिणोऽभवन् ।
एतेषामीप्सितं ज्ञात्वा परीक्षार्थं समागतः ॥ ३२

अगस्त्यो दण्डकारण्यादुपदेष्टुमुपासनाम् ।
एतद्दारुवनं प्राप्य चैतेषामाश्रमान्ययौ ॥ ३३

आगतं कुम्भजं ज्ञात्वा प्रत्युत्थानं न चक्रिरे ।
अथाप्यगस्त्यश्चाप्राप्य विकारं मनसि स्वके ॥ ३४

अस्मद्बन्धुजना ह्येते मदीयाः शिष्यवर्गजाः ।
पूजा कृता चेत्को लाभः का हानिरकृता यदि ॥ ३५

मानापमाने साम्यं मे मत्वा तेषां समीपगः ।

*முன்பு தன் சிஷ்யர் சிஷ்யருக்கு சிஷ்யர் என்ற முறையில் 48,000 முனிவர்கள் இங்கு தவமிருந்தனர். இது தேவதாருக்காடானதால் தேவதாருவனம் என்ற பெயர் பெற்றது. குருக்ஷேத்ரத்திலும் தண்டகாரண்யத்திலும் தவமியற்றி வந்த முனிவர்கள் அங்கிருந்து இங்கு வந்து தவம் வேள்வி என விரதமும் நியமமும் கொண்டு ஜபம் ஹோமம் வேள்வி முதலியவற்றிற்கு இதுவே ஏற்றதெனக் கண்டனர். நைமிசாரண்யத்திலிருந்தும் வந்தனர். ஆனால் இவற்றிற்கு ஈசுவரனின் அருள்பெற அவர்கள் முயலவில்லை. அந்த மதிமயக்கத்தால் கர்மம் செய்தால் போதும்; மேனிலை கிட்டும் என எண்ணி, கர்மத்திலேயே ஈடுபட்டு அதனைச் செய்வதிலும் தவறிழைத்தனர். ஈசனின் அருள்பெறுவதற்கான ஞான வழியையோ பக்தி வழியையோ ஏற்காமல் கரும வழியில் முனைந்தனர். இதனை அறிந்த அகஸ்தியர், இவர்களைப் போதிக்க எண்ணி தேவதாரு வனத்திலிருந்த இவர்களின் ஆசிரமத்தை அடைந்தார். ஆனால் இந்த அந்தணர்கள் அகஸ்தியரை வரவேற்று உபசரிக்கவில்லை. இவர்கள் சிஷ்யவர்க்கத்தைச் சார்ந்தவர்கள்*

*எனக் கருதிய அகஸ்தியர் இதனைப் பாராட்டவில்லை. எனக்கு மதிப்பளிப்பதால் லாபமுமில்லை; அளிக்காததால் குறையேதும் இல்லை என்று கருதி அகஸ்தியர் அவர்களை அணுகினார். (24-35)*

समीपगस्यागस्त्यस्य ददुः पश्चात्समर्हणाम् ।। ३६

आसनं चार्घ्यपाद्यादींश्चक्रुस्ते सुमनो विना ।
न ददुस्ते स्वहस्तैश्च ह्यातिथ्यं मुनयो मुनेः ।। ३७

किन्तु स्त्रीहस्ततः सर्वे चातिथ्यं प्रददुर्मुनेः ।
उपासनोपदेशं नः कुर्यात्संप्रति कुम्भजः ।। ३८

कर्मैव तथ्यमस्माकं कर्मैव फलदातृ नः ।
सर्वेषां कारणं कर्म स्वतन्त्रं कर्म एव नः ।। ३९

अत एव हि सर्वैश्च कर्माधीनमितीर्यते ।
ईश्वरश्चेत्स्वतन्त्रो हि दद्यात्कर्म विना फलम् ।। ४०

ददाति प्राणिनामीशः फलं कर्मानुरूपतः ।
तस्मान्नृभिर्न वक्तव्यमीश्वराधीनमित्युत ।। ४१

कर्माधीनमिदं वक्तुमुचितं प्राणिभिर्भुवि ।
इत्येवं मन एतेषां ज्ञात्वाऽगस्त्योऽवमन्वताम् ।। ४२

स्वमनः शमुमुद्युक्तं निगृह्याक्षेपकोपजम् ।
सर्वं सोढ्वा स्थलात्तस्मात्सद्यो निर्गतवान्मुनिः ।। ४३

दूष्यापारं तदीयञ्च निधाय मनसि स्वके ।
तत्स्त्रीदत्तं तदातिथ्यं मास्त्वित्युक्त्वा स कुम्भजः ।। ४४

कैलासपर्वते गत्वा वेश्म द्वारमुमापतेः ।
संप्राप्य सर्वलोकेशं कुम्भजः स्तोतुमारभत् ।। ४५

इति द्वितीयोऽध्यायः

—*—

அகஸ்தியர் அருகில் வந்ததும் மனமின்றி அவரை உபசரித்தனர். தம் கைகளால் உபசாரம் செய்யாமல் மனைவியர் மூலமாக உபசரித்தனர். அகஸ்தியர் தமக்கு ஈசனின் உபாஸனை பற்றி உபதேசிப்பார் என்ற எதிர்பார்வையுடன் "கர்மம் ஒன்றே ஏற்றது. கர்மமே பயனளிப்பது. கருமமே உலகின் இருக்கைக்குக் காரணம். கர்மம் தனித்து இயங்கவல்லது. பக்தி, ஞானங்களில் உதவியை நாடாதது. அனைத்துமே கர்மத்திற்கு அடங்கியதுதான். ஈசுவரனும் கர்மாவை ஒட்டித்தான் பலன் தருவான். ஈசுவரன் கருமத்தை எதிர்பார்க்காமல் தானே தனித்து இயங்குவார், பலனளிப்பார் என்பதில்லை. அதனால் வாழ்க்கை ஈசுவராதீனமல்ல. கர்மாதீனம் தான் என்பது தான் உசிதமாகும் என்று கருதி அகஸ்தியருக்கு மதிப்பை வழங்காதிருந்தனர். இதனை அடக்க எண்ணம் எழுந்தாலும் அதனால் கோபப்படாமல் பொறுத்து அங்கிருந்து அகஸ்த்யர் வெளியேறி முனிவரின் மனைவியர் தந்த உபசாரத்தை ஏற்காமல் வெளியேறி கைலாஸம் சென்று இறைவனைத் துதித்தார். (36-45)

—*—

## ।। अथ तृतीयोऽध्यायः ।।

## अगस्त्यकृतशिवस्तोत्रम्

सूत उवाच—

शृणुध्वमृषयस्सर्वेऽप्यगस्त्यस्तोत्रमुत्तमम् ।
सर्वपापहरं वक्ष्ये शृण्वतां मङ्गलप्रदम् ।। १

नमस्ते देवदेवाय महादेवाय शम्भवे ।
नमस्ते लोकनाथाय सर्गस्थित्यन्तकारिणे ।। २

नमः सन्मात्रतत्वाय बोधानन्दघनाय ते ।
नित्यानन्दस्वरूपाय पराशक्तिमते नमः ।। ३

समष्टिरूपिणे तुभ्यं व्यष्टिरूपाय ते नमः ।
सर्वक्षेत्रनिवासाय क्षेत्रभिन्नात्मशक्तये ।। ४

असक्ताय नमस्तुभ्यं सक्ताभासाय भूयसे।
निराभासाय नित्याय सत्यज्ञानसुखात्मने॥ ५

विशुद्धाय विदूराय विमुक्ताशेषकर्मणे।
नमो वेदान्तगुह्याय वेदमूलविकासिने॥ ६

नमो विविक्तचेष्टाय निवृत्तगुणवृत्तये।
नमः कल्याणवीर्याय कल्याणफलदायिने॥ ७

*அத்தியாயம் - 3*

அகஸ்தியரின் சிவஸ்துதி

*ஸூதர் கூறுகிறார்:- ''அகஸ்தியர் சிவனைத் துதித்தார். அதனைக் கேட்கப் பாபம் விலகும். மங்களம் கிட்டும்.*

*தேவர்களுக்கும் தேவரும் பெருந்தேவரும் உலகின் நாதரும் படைப்பு - காப்பு - ஒடுக்கம் என்ற மூன்றை புரிபவருமான உமக்கு நமஸ்காரம். பேரிருக்கை என்ற தத்துவவடிவினர். பேரறிவும், பேரானந்தமும் செறிந்தவர், நித்யானந்த வடிவினர். பேராற்றல் படைத்தவர். உலகின் மொத்த உருவும் பகுத்த உருவும் நீரே. எல்லா க்ஷேத்திரங்களிலுமிருந்து கொண்டு தன் பெருமையைத் தனித்துத் தனித்துக் காட்டுபவர், எதிலும் ஒட்டாதவர். ஒட்டுதலுள்ளவர் போன்று காட்சி தருபவர். வெளிப்படையான தோற்றம் கொள்ளாதவர். எப்போதும் நிலைத்தவர், பேருண்மையறிவும், ஆனந்தமுமானவர், மிகவும் தூயவர், வெகுதூரத்திலுள்ளவர். தனக்கெனத் தனிப்பணியற்றவர். உபநிஷதங்களின் மறைபொருளானவர், வேதங்களின் வேரை மலரச்செய்பவர், தனித்த செயல்முறை கொண்டவர். ஸத்வம் முதலிய குணங்களின் போக்கிலிருந்து விலகியவர். மங்களமான நடைமுறை கொண்டவர். மங்களப் பயனளிப்பவர். (1-7)*

विश्वरूपायानन्दाय शान्ताय महते नमः।
अघोराय सुघोराय घोराघौघविदारिणे॥ ८

भर्गाय भवबीजानां भञ्जनाय गरीयसे ।
नमो विध्वस्तमायाय विशदात्मगुणाय ते ॥ ९

अणोरणीयसे तुभ्यं महतोऽपि महीयसे ।
नमः पिनाकहस्ताय हेरम्बेष्टाय ते नमः ॥ १०

नमः प्रमथनाथाय पितृकाननवासिने ।
गिरीन्द्रधन्वने तुभ्यं नमस्त्रिपुरभेदिने ॥ ११

नमः षण्मुखताताय मृडानीपतये नमः ।
नमः कामारये तुभ्यं कालकूटविषादिने ॥ १२

नमस्ते वीरभद्राय दक्षाध्वरविघातिने ।
पाहि मां जगतां नाथ पाहि शङ्कर शाश्वत ॥ १३

पाहि रुद्र विरूपाक्ष पाहि मृत्युञ्जयाव्यय ।
नमस्ते लोकस्रष्ट्रे च रक्षकाय नमोऽस्तु ते ॥ १४

*உலகமனைத்தின் வடிவானவர், அமைதியுற்ற பெருமான். கோர வடிவற்றவர், கோரவடிவம் கொண்டவர். கோரபாபக் கூட்டத்தை அழித்தவர், ஸம்ஸாரபந்தத்தின் விதைகளை வறுத்தெடுத்தவர், மிகப்பெரியவர், மாயையை அழித்தவர், அதன் சிறப்புகளைத் தெளிவாகக் காட்டுபவர், அணுவிற்கும் சிறிய அணு. மிகப்பெரிதிற்கும் மிகப்பெரியவர். பிநாகம் ஏந்தியவர், விநாயகரிடம் அன்புகொண்டவர், பிரமத கணங்களின் தலைவர். மயானத்தில் வசிப்பவர், மேருவை வில்லாகக் கொண்டவர், திரிபுரமழித்தவர், ஆறுமுகனுரின் தந்தை, உமையின் கணவர், காமனின் எதிரி, காலகூடமருந்தியவர், வீரபத்திரராகி தக்ஷனின் வேள்வியைக் குலைத்தவர், அந்த ஈசனே உமக்கு வணக்கம். உலகின் நாதரே! என்னைக் காப்பீர்! சங்கரரே! அழியாப் பொருளே! ருத்ரரே! மாற்றுக்கண் (நெற்றியில்) கொண்டவரே! எமனை வென்றவரே! குறைவுறுதவரே! உலகின் படைப்பாளரும் காப்பாளருமான, உமக்கு வணக்கம். (8-14)*

नमस्ते लोकसंहर्त्रे तुरीयाय नमो नमः ।
ब्रह्मादिपूतिकान्तास्ते प्राणिनः पशवःस्मृताः ।। १५

कर्माख्यरज्जुभिस्तांस्त्वं बध्नासि हि यतःशिव ।
तस्मात्पशुपतिर्नाम प्रोच्यसे प्राणिभिस्सदा ।। १६

इत्यगस्त्येन मुनिना स्तुत आविरभूच्छिवः ।
अन्तःपुराद्विनिर्गत्य द्वारदेशे समागतः ।। १७

इदं स्तोत्रं जपेद्यस्तु शृणुयात्पठतीह यः ।
सर्वपापविनिर्मुक्तस्सर्वान्कामानवाप्नुयात् ।। १८

इति तृतीयोऽध्यायः

*உலகை மூலநிலைக்கு ஒடுக்குபவரும் மும்மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்டவருமான உமக்கு வணக்கம். பிரும்மாவிலிருந்து புழுவரை அனைத்து உயிரினமும் பசுக்கள். அவற்றை வினை என்ற பாசத்தால் பிணைப்பவரானதால் உம்மை பசுபதி என்பர்.'' என்றிவ்வாறு துதிக்கிற அகஸ்தியரின் எதிரில் சிவன் தோன்றினார். இந்த ஸ்துதியை அடிக்கடி படிப்பவனும் கேட்பவனும் பாபம் நீங்கி விரும்பியதைப் பெறுவர். (15-18)*

—*—

## ।। अथ चतुर्थोऽध्यायः ।।

### शिवसङ्कल्पः

सूत उवाच ।।

कैलासान्तःपुरात्सद्यो निर्गत्य प्राह कुम्भजम् ।
ब्रूहि स्तुत्या प्रसन्नोऽस्मि त्वदागमनकारणम् ।। १

इत्येवं शम्भुना पृष्टः कुम्भजो वक्तुमारभत् ।
देवदारुवने शम्भो मुनयो मूढचेतसः ।। २

शिवेन कृत्यमस्माकं ब्रह्मणा नास्ति विष्णुना ।
ते किमर्थं फलं दातुं कर्मैव क्षममत्र नः ॥ ३

एवं वदंतो विश्वेश मुनयो मोहमाययुः ।
आतिथ्यं मे स्वहस्तैस्ते न दत्वा स्त्रीकराद्दुः ॥ ४

कृता वसिष्ठमात्रेण स्वहस्तातिथिसत्कृतिः ।
वसिष्ठस्यास्ति विश्वासस्त्वयि विष्णौ विधावपि ॥ ५

अरुन्धत्याश्च विश्वास इतरेषामनादरः ।
तेषां शास्तिं कुरु क्षिप्रमनन्तरमनुग्रहम् ॥ ६

*அத்தியாயம் 4*

சிவபெருமானது திட்டம்

*ஸூதர் கூறுகிறார் - "கைலாஸத்து அந்தப்புரத்திலிருந்து வெளியே வந்த சிவபெருமான். அகஸ்தியரின் வருகைக்குக் காரணம் கேட்க, அகஸ்தியர் கூறினார் - "பெருமானே! மங்களத்தின் தோற்றுவாயே! முனிவர்கள் அறிவிழந்து மும்மூர்த்திகளாலும் நமக்கு ஆவதொன்றுமில்லை, கருமமே நாம் விரும்பியதை இட்டு நிரப்புவதென்று கருதி, மதிமயங்கியுள்ளனர். எனக்கும் தானே அளிக்காமல் தன் மனைவியரைக் கொண்டு உபசரித்தனர். வஸிஷ்டர் ஒருவரே என்னைத் தானே வரவேற்று விருந்திட்டார். வஸிஷ்டருக்கு உம்மிடமும், விஷ்ணுவிடமும், பிரும்மாவிடமும் பக்தியும் விச்வாஸமும் உள்ளது. அருந்ததியும் அவ்வாறே பக்தி கொண்டவள். மற்றவர்களுக்குத் தங்களிடம் மதிப்பில்லை. இவர்களைக் கட்டுப்படுத்தியபின் அருள்புரிவீர் என வேண்டினார். (1-6)*

अगस्त्यवचनाद्ज्ञात्वा मुनिभिस्स्वावहेलनम् ।
अनन्तरमथागस्त्यमब्रवीत्परमेश्वरः ॥ ७

त्वं गच्छागस्त्य मलये मद्वाक्याद्य शीघ्रतः ।
च्युतस्थले भवान्पश्चात्पुनरायातु मत्स्मृतः ॥ ८

निग्रहानुग्रहं कर्तुं तेषां गच्छामि तत्र वै ।
विसृज्य कुम्भजं शम्भुस्सद्यस्ससस्मार माधवम् ।। ९

स्मृत्युत्तरक्षणे विष्णुर्वैकुण्ठाच्छीघ्रमागतः ।
हरोऽब्रवीद्धरिं सद्यो मुनिव्यापारदूषणम् ।। १०

शम्भुरुवाच ।।

अम्बुजाक्षाक्रमं पश्य मुनीनां शृणु मे वचः ।
त्रिक्षणस्थमविज्ञाय कर्मानित्यं मुनीश्वराः ।। ११

कर्मैवास्माकमखिलं फलं दातुं हि कारणम् ।
ब्रह्मविष्णुहरा मास्तु फलं दातुं ध्रुवं हि नः ।। १२

इति मत्वाऽवजानन्ति त्वां च मां च प्रजापतिम् ।
कुर्वन्ति चेतसि मतिं सर्वे कुर्युश्च हेलनम् ।
तावद्बलस्य चैतेषां का शक्तिर्वर्तते वद ।। १३

इति चतुर्थोऽध्यायः

—*—

*முனிவர்கள் தன்னை மதிக்காதிருப்பதை உணர்ந்த ஈசன் அகஸ்தியரிடம் கூறினார் - "நீ என் ஆணையால் மலயமலை செல்வாய். நான் குறிப்பு தந்தபின் ச்யுதபுரிக்கு வரலாம். அங்கு அவர்களைக் கட்டுப்படுத்தி அருள் புரியச் செய்கிறேன். என்று கூறி அகஸ்தியருக்கு விடைதந்து, மாதவனை நினைத்ததும் உடன் அவர் வைகுண்டத்திலிருந்து விரைவுடன் வந்தார். அவரிடம் சிவன் முனிவரின் நடத்தை கெடுவதை தெரிவித்தார். "தாமரைக் கண்ணரே! முனிவர்கள் முறை பிசகி நடக்கின்றனர். மூன்றுநொடி நேரம் கூட நிலைத்திராத கருமம் அநித்யம் என்பதை உணராமல், கருமமே நான் விரும்பியதனைத்தையும் தரும். அது நிலைத்தது. மும்மூர்த்திகளால் கருமமின்றிப் பலன் தர இயலாது என்ற கருத்துடன் நம்மை அவமதிக்கின்றனர். அவ்வளவு தீவிர எண்ணத்திற்கு வலிவு தருவது எது? நீர் கூறுவீர்" என்றார். (7-13)*

## ।। अथ पञ्चमोऽध्यायः ।।

### भिक्षाटनम्

सूत उवाच ।।

महादेववचः श्रुत्वा महाविष्णुरथाब्रवीत् ।
सर्वलोकप्रभो साम्ब मुनयोऽस्मास्वनादरम् ।। १

कुर्वन्तिं चेत्स्वयं नष्टाः का नो हानिश्च तावता ।
विनास्मांस्ते फलं यान्तु कर्मसामर्थ्यतः प्रभो ।। २

तच्च जानीम ईशास्व तूष्णीं क्रोधोऽस्तु मा तव ।
शुद्धसत्वस्वरूपस्य श्रुत्वा सौम्यवचो हरेः ।। ३

अम्बिकापतिराहाथ लक्ष्मीपतिमिदं वचः ।
शम्भुरुवाच ।।

सह्यं त्वया यदि हरे ममास्य विरसं ध्रुवम् ।। ४

श्रीविष्णुरुवाच ।।

किं कर्तुं शक्यते सद्भिरस्ति चेद्वद शङ्कर ।

शंभुरुवाच ।।

त्वं चाहं च महाविष्णो देवदारुवनं प्रति ।। ५

यास्यावस्तत्र गोविन्द चित्तान्येषां परीक्षितुम् ।
भिक्षाटनस्वरूपेण निर्गच्छामि जनार्दन ।। ६

मोहिनीरूपमादाय निर्गच्छ त्वं मया सह ।
आवामुभौ ते दृष्ट्वापि न मोहं यान्ति चेद्धरे ।। ७

तेषां तदा वयं मास्तु कर्मैवेष्टानि यच्छतु ।

## அத்தியாயம் - 5

### பிக்ஷாடனம்

மஹாதேவரின் சொல்லைக் கேட்ட விஷ்ணு, கூறினர் - பெருமானே! முனிவர் நம்மை அவமதித்தால் அவர்களே வீணுவர். நமக்கேதும் அதனுல் குறையில்லை. கருமத்தின் ஆற்றலைக் கொண்டே அவர்களை நாடியதைப் பெறட்டும். ஈசனே! பொறுமையுடன் காண்போம். கோபம் வேண்டாம்.'' என்ருர். தூயஸத்வகுண வடிவினரான விஷ்ணுவின் சொல்லைக் கேட்ட சிவன் ''நீர் பொறுத்துக் கொள்வீர்; எனக்கு இது விரஸமாகப்படுகிறது'' என்ருர். ''இதில் நம்மால் என்ன செய்ய முடியும்? என்று கேட்ட விஷ்ணுவிடம், நீரும் நானும் தேவதாருவனம் சென்று அவர்களது எண்ணத்தைச் சோதிப்போம். நான் பிச்சை எடுப்பவராக வெளிப்படுகிறேன். நீர் மோஹினியாக வெளிப்படுவீர். நம்மிருவரையும் கண்டு அவர்கள் மயங்காவிடில், அவர்களுக்கு நமது உதவி தேவை இல்லை; கருமமே நாடியதைத் தருவதாகட்டும்'' என்ருர். (1-8)

एवमुक्त्वा तदा शम्भुर्भिक्षाटाकारमीश्वरः ।। ८

धृत्वा स्वहस्ते कटकं काञ्चीदाम सुनूपुरम् ।
जोलीकर्णावतंसञ्च ग्रैवेयं योगवेष्टिकाम् ।। ९

त्रिपुण्ड्रोदरबन्धञ्च तिलकं ह्यङ्गुलीयकम् ।
भिक्षापात्रञ्च रुद्राक्षमालामङ्गुलिभूषणम् ।। १०

भिक्षाटनार्थं नग्नोऽयमेवं वेषमधारयत् ।
रूपलावण्यसौन्दर्यजगन्मोहनधारणाम् ।। ११

सञ्चारव्याजनटनमूर्तिमादाय चाययौ ।
सर्वलोकभ्रमकरी मोहिन्यद्भुतवेषया ।। १२

भासज्जपाप्रसूनाभमूर्त्या विद्युन्निकाशया ।
सहाययौ देवदारुवनवीथ्यां शनैश्शनैः ।। १३

मुनयो मोहिनीं दृष्ट्वा देवदारुवने स्थिताः ।
चित्तभ्रमञ्च मोहञ्च विकारं परवश्यताम् ।। १४

ययुश्चेन्द्रियविक्षोभं कर्मसु व्यापृतिं तदा ।
अमुञ्चन्जपहोमौ च तत्यजुर्नियमं व्रतम् ।। १५

विसृज्य वेदान्शास्त्राणि सन्ध्यावन्दनकर्म च ।
मोहिनीदर्शनात्सर्वे रेतस्स्खलनमाययुः ।। १६

सद्यो भ्रष्टा बभूवुस्ते सर्वे ह्यब्राह्मणाः कृताः ।

*உடனே சிவன் பிக்ஷாடனரானார். கையில் காப்பு, இடுப்பில் அரைஞாண், காலில் சதங்கை, தொங்குகிற காதணி, கழுத்தணி, யோகவேஷ்டி, விபூதிப்பட்டை, இடுப்பில் கச்சை, நெற்றியில் திலகம், மோதிரம், பிக்ஷை எடுக்கப் பாத்திரம், ருத்ராக்ஷமாலை என்ற வேஷமிட்டு இடுப்பாடையின்றி ஆண்டியாக வேஷம் போட்டார். அழகும் சொகுசும் வனப்பும் உலகை மயக்கும்படி நடையே நடனமாக வலம் வந்தார். அவருடன் மோஹினியும் அற்புத வேஷத்துடன் உலகை மயக்குபவளாக, செம்பருத்திப் பூ போன்ற மேனிவண்ணத்துடன், மின்னல் ஒளிபோல் தேவதாரு வனப்பாதையில் மெள்ள மெள்ள நடந்து வந்தாள். முனிவர்கள் மோகினியைக் கண்டதும் மதிமயங்கி, கிரக்கத்துடன், வசியமாகிக் குழப்பமடைந்தனர். ஜபம், ஹோமம், நியமம், விரதம் எனப் பின்பற்றியதனைத்தையும் விட்டனர். வேதம் சாஸ்திரம் ஸந்தியாவந்தனம் என எல்லாவற்றையும் புறக்கணித்து மோகினியைக் கண்டதும் காமவசப்பட்டு வீரியம் நழுவ நிலைதவறி அந்தணத் தன்மை அனைத்தையும் இழந்தனர். (9-17)*

भिक्षुरूपञ्च नग्नं तं शिवं दृष्ट्वा च तत्स्त्रियः ।। १७

विहाय भर्तृशुश्रूषां होमकैङ्कर्यकृत्यताम् ।
गृहे रुदद्बालकांश्च तथा विस्मृत्य भोजनम् ।। १८

पातिव्रत्यत्य भङ्गश्च ययुस्ताः शिवदर्शनात् ।
ताः सत्योऽव्यभिचारिण्यो ह्यसत्यस्तास्तदाऽभवन् ॥ १९

सर्वासां मुनिपत्नीनां मोहकोऽभूच्छिवस्तदा ।
देवदारुवनाख्यस्य मध्यवर्तिनि मण्डपे ॥ २०

मोहिन्या सह तस्थौ स सरसं कृतवान्भवः ।
मोहिनीभिक्षुकौ दृष्ट्वा मुनयस्तत्स्त्रियस्तदा ॥ २१

परस्परञ्च न ज्ञात्वा मोहात्परवशं गताः ।
वीथ्यां समचरच्छम्भुर्भिक्षाचरणहेतवे ॥ २२

भिक्षां दातुं न शक्तास्ता मोहात्परवशं ययुः ।
निर्मोहारुन्धती चैका ददौ भिक्षाञ्च शाम्भवे ॥ २३

अरुन्धत्या मनश्चैव भृशं शम्भुरमोहयत् ।
बाहुमूलं प्रदश्यर्थ चोरुमूलं प्रदर्शयन् ॥ २४

तथापि प्राप मोहं सा न विकारमरुन्धती ।
सर्वलोकस्य मातेयं मत्वा भिक्षामथाग्रहीत् ॥ २५

पुरुषाणाञ्च मध्येऽयं वसिष्ठो ब्रह्मवित्तमः ।
सन्तोष्य तावुभौ शम्भुर्मोहयामास चापरान् ॥ २६

इति पञ्चमोऽध्यायः

*

*பிச்சையாண்டியாக ஆடையின்றி அலைகிற சிவபெருமானைக் கண்டதும் முனிவர்களின் பத்னிகள் கணவரின் பணிவிடையையும் ஹோமகைங்கரியத்தையும் மறந்து, அழுகிற தம் குழந்தைகளைப் புறக்கணித்து உணவை மறந்து கற்பை இழந்தனர். எல்லோரையும் மயக்கச் சிவன் விஷ்ணுவுடன் மண்டபத்தின் நடுவே அமர்ந்து காமவிளையாட்டில் ஈடுபட்டார்.*

இதனைக் கண்ட முனிவரும் அவர்களது பெண்டிரும் ஒருவரையொருவர் அறியாமல் அங்கு கூடினர். அவர்களது மனத்தைக் கவர்ந்த சிவனும் விஷ்ணுவும் வீதியில் பிச்சை எடுத்தனர். மதிமயக்கத்தால் பெண்கள் பிச்சைபோட மறந்தனர். அருந்ததி ஒருவள் மட்டும் இந்த மதிமயக்கத்திற்கு ஆட்படாமல், இருவரது உண்மை நிலை உணர்ந்து பிக்ஷை அளித்தாள். அருந்ததியின் மனத்தைக் கவரச் சிவனது முயற்சி பலன் தரவில்லை. இவளே உலகின் தாய் என உணர்ந்த சிவன் அவளது பிக்ஷையைப் பணிவுடன் ஏற்றார். ஆண்களில் வஸிஷ்டர் ஒருவரே பெருமகிழ்ச்சியுடன் அவரைத் துதித்தார். அவர்களிருவருக்கும் அருள்புரிந்த ஈசன் மற்றவரை மயக்கினார். (18-26)

—*—

॥ अथ षष्ठोऽध्यायः ॥

शास्तुरवतारः

सूत उवाच ॥

देवदारुवने वीथ्यां कचिद्देशे तु मण्डपे ।
अप्राप्तमोहवृत्तीनां केषाञ्चिद्योगिनां पुरः ॥ १

मोहनायाथ चिक्रीड मोहिन्या धूर्तवत्प्रभुः ।
हरस्यामोघवीर्येण मोहिन्यां तनयोऽप्यभूत् ॥ २

ममार्यः को ममार्यः कस्स पुत्रो मुहुराह तौ ।
शम्भुरुवाच ॥
तमाहूयाहमेवेति त्वं तिष्ठाद्य ममान्तिके ॥ ३

अहं पश्चात्स्थले ह्यस्मिन्कल्पयामि स्थलं सुत ।
तव शास्तेति नामास्तु दुष्टानामार्यकोऽपि च ॥ ४

*அத்தியாயம் 6*

**ஐயனாரின் தோற்றம்**

*தேவதாருவன வீதிகளில் மோஹத்திற்கு ஆட்படாத சில யோகிகளின் முன் அவர்களையும் மயக்க ஒரு மண்டபத்தில் மோகினியுடன் காமலீலையில் ஈடுபட ஹரனின் வீர்யத்தில் மோகினியிடம் ஒரு புதல்வன் தோன்றினான். என் ஐயன் (ஆர்யன்) யார்? என் ஐயன் யார்? என அவர்களைக் கேட்டதும், நீ என் புதல்வன்; என் அருகில் இரு! உனக்குத் தனி இடம் அமைத்துத் தருகிறேன். துஷ்டருக்கு நீ சாஸ்தா (கட்டுப்படுத்துபவன்). மற்றவர்க்கு நீ ஆர்யகன் (ஐயனார்), ஐயப்பன்) ஆவாய் என்றார். (1-4)*

एवं शिवेन कथिते मम को वा समो भवेत्।
इति गर्वमनुप्राप्य मया युद्धार्थमद्य वै ॥ ५

आगच्छागच्छ च मुहुः शिवमेवाजुहाव सः।
तदा हरं हरसुतश्चर्म खड्गं प्रगृह्य च ॥ ६

अतर्जयच्छिवं भिक्षुं मोहिनीञ्च मुहुस्तदा।
रूपं भैक्षाटनं त्यक्त्वा वीररूपं समाददे ॥ ७

त्यक्त्वा च मोहिनीवेषं लज्जयाऽन्तर्दधे हरिः।
भवोऽपि धीररूपेण चर्मखड्गौ प्रगृह्य च ॥ ८

अथार्यकाख्यपुत्रेण युयुधे गर्वशालिना।
आर्यकोऽपि शिवस्याङ्गे संताड्य प्रथमं युधि ॥ ९

शिव पास्यामि रक्तं ते तवाहमधुना मृड।
एवमुक्तस्स्वपुत्रेण चुकोपाशु शिवस्तदा ॥ १०

शशाप सद्यो भगवानार्यकं स्वसुतं रुषा।
यस्मात्त्वया वाक्यमुक्तं साहसादद्य मां प्रति ॥ ११

रक्तं पास्यामि पश्येति तस्मात्त्वं रक्तपो भव ।
शूद्रपूजा भवतु ते पीडाहारी सुदुर्गया ॥ १२

मद्बलाधिबलं मा ते भव हीनो बलान्मम ॥

एवं शप्तो हरेणाथ मन्दवीर्यबलोऽभवत् ।
सद्यस्तुष्टाव देवेशमार्यको भक्तिसंयुतः ॥ १३

इति षष्ठोऽध्यायः

*''எனக்கு எவர் ஈடானவர்'' என்று செருக்குற்று சிவனையே என்னுடன் போராட வா என்றழைத்தான். கேடயமும் கத்தியும் ஏந்தி இருவரும் போரிட்டனர். சாஸ்தா சிவனையும் மோஹினியையும் இழிவுபடுத்திப் பேசியதும் அதனைக் கேட்ட விஷ்ணு வெட்கி மறைய, சிவனும் பிக்ஷாடன வேஷத்தைக் கலைத்து வீர வடிவில் மகனுடன் போரிட்டார். ''சிவனே! உன் ரத்தத்தைப் பருகுகிறேன்'' என்று சாஸ்தா முன்வர, சிவன் தன் மகனிடம் கோபம் கொண்டு சபித்தார். ''ரக்தம் குடிப்பேன்'' என நீ கோஷமிட்டதால் நீ இனி ரத்தம் குடிப்பவனுவாய். சூத்திரரே உமக்குப் பூஜை செய்வார். என் வலிவைப் பெற இயலாததால் நீ வலிவிழந்தவனுவாய் என்றார். உடன் வலிவு குன்றிய ஐயன் சிவனைப் பக்தியுடன் துதித்தார். (5-13)*

——*——

॥ अथ सप्तमोऽध्यायः ॥

## शास्तुः शिवेनानुग्रहः

सूत उवाच ॥

शास्तुः स्तोत्रं प्रवक्ष्यामि शृणुध्वं मुनयोऽधुना ।
जय शङ्कर देवेश जय भक्तार्तिभञ्जन ॥ १

जय सुप्रिय कामारे दुष्टनिग्रहकारण ।
शिष्टपालक मां त्राहि सर्वाचिन्त्यपराक्रम ॥ २

नानामूर्तिधर स्वामिन्भक्तैश्वर्यप्रदायक।
योगाभ्यासरतैर्नित्यमज्ञातानन्दसद्गुण ॥ ३

हरिब्रह्मादिवन्द्येश भुक्तिमुक्तिफलप्रद।
आम्नायतत्वमञ्जस्थ परापर नमोऽस्तु ते ॥ ४

अद्य त्वया कृतं शम्भो विष्णुयोन्युद्भवस्य च।
ममात्यन्तमिदं नैच्यं कथं सोढुमहं क्षमः ॥ ५

*அத்தியாயம் 7*

ஐயனுக்கு சிவன் அருள்புரிதல்

*ஐயன் சிவனைத் துதித்தார் - ''சங்கரரே! பக்தனின் துயரை முறிப்பவரே! அன்புக்குரியவரே! துஷ்டனை அடக்குபவரே! கட்டுப்பாட்டிற்கு உட்பட்டவரைக் காப்பவரே! எவராலும் சிந்திக்க ஒண்ணாத பராக்ரமம் உள்ளவரே! பல வடிவங்கள் ஏற்பவரே! பக்தனுக்கு ஆளுமை அளிப்பவரே! தினமும் யோகம் பயின்றும் உணர இயலாத ஆனந்தமும் நற்குணமும் கொண்டவரே! ஹரியும் பிரும்மாவும் மற்ற தேவர்களும் வணங்குகிற ஈசனே! இம்மையில் சுகமும், முக்தியும் வழங்குபவரே! உபநிஷத தத்துவ மஞ்சத்தில் அமர்ந்தவரே! ஐய! ஐய! உமக்கு வணக்கம். சம்புவே! விஷ்ணுவிடம் தோன்றிய எனக்கு இந்தக் கீழ்மை ஏற்பட்டதை நான் எப்படித் தாங்குவேன்? என்று வேண்டினார். (1-5)*

आर्यकाख्यसुतेनैवं प्रार्थितः शम्भुराह सः।
आवश्यकमिदं विद्धि शूद्रपूजा च ते सुत ॥ ६

हरिं माञ्च विधिं विप्राः पूजयन्ति सदा भुवि।
शूद्रैः कर्तुमयुक्तं नः पूजनं विद्धि भूतले ॥ ७

त्वद्रूपेणावतीर्णाःस्मो ब्रह्मा विष्णुरहं सुत।
वयं न शूद्रैः पूज्यास्स्मस्तेषां भवतु सद्गतिः ॥ ८

शूद्राणां रक्षणार्थाय मया शापः कृतोऽधुना ।
यस्मात्त्वया मे युद्धार्थे वीराट्टहसनं कृतम् ।। ९

वीराट्टनाथ इत्येव स्थलेऽस्मिन्लिङ्गरूप्यहम् ।
अद्यैवाविर्भवामीह स्वयम्भूलिङ्गरूपतः ।। १०

तस्य मल्लिङ्गरूपस्य त्वमाखननये सदा ।
सर्वत्र प्राणिभिः पूज्यः शूद्रान् रक्षाखिलाञ्जनान् ।। ११

त्रयो वर्णास्तु सच्छूद्रैः कारयिष्यन्ति पूजनम् ।
भूतप्रेतपिशाचाद्यास्तव बिभ्यतु सर्वदा ।। १२

इत्युक्त्वान्तर्दधे सद्यो मुनीन्द्रैरप्यलक्षितः ।
तदाप्रभृति शास्ता च तत्राद्यापि प्रदृश्यते ।। १३

वीराट्टनाथलिङ्गस्य दक्षिणेऽरुन्धती तदा ।
लिङ्गप्रतिष्ठां कृत्वाथ स्वनाम्नाऽपूजयच्छिवम् ।। १४

भर्त्रा सह वसिष्ठेन शिवज्ञानस्य लब्धये ।
तथा शिवार्चनाप्राप्तज्ञानवैराग्यसम्पदा ।। १५

इति सप्तमोऽध्यायः

*சிவன் கூறினார் - ''என்னையும் விஷ்ணுவையும் அந்தணர்கள் வழிபடுகின்றனர். சூத்திரர்கள் வழிபடுவதில்லை. உன் வடிவில் நானும் பிரும்மாவும் விஷ்ணுவும் தோன்றியுள்ளோம். சூத்திரரும் உன்னை வழிபட்டு நற்கதி பெறவே உனக்குச் சாபமிட்டேன். என்னுடன் போரிடும்போது வீர அட்டகாசம் புரிந்தாய். அதனால் நான் வீராட்டநாதர் என்று லிங்கவடிவில் தான் தோன்றியாக (ஸ்வயம்புவாக)த் தோன்றியுள்ளேன். எனது பணியாளனாக இருந்து எல்லோரையும் காப்பாய். மற்ற மூவர்ணத்தினரும் சூத்திரர்களைக் கொண்டே உன்னை வழிபடுவர். பூத - பிரேத - பிசாசங்கள் உன்னிடம் நடுங்கி உன்னை வழிபடுபவரை அணுகாது என்று கூறி சிவன் மறைந்தார். சாஸ்தா என்ற ஐயனும்*

*அங்குள்ளார். வீராட்ட நாதரின் தென்புறத்தில் (அருந்ததி சிவனை வழிபட்ட லிங்கம்) அருந்ததீசரைத் தன் கணவருடன் அருந்ததி சிவஜ்ஞானம் பெற வழிபட்டு வருகிருள். சிவனை வழிபட்டதால் ஜ்ஞானமும் வைராக்யமும் பெற்று விளங்குகிருள். (6-15)*

*

## ।।अथ अष्टमोऽध्यायः ।।

## भिक्षाटनलीला

सूत उवाच ।।

शृणुध्वमृषयस्सर्वेऽप्यगस्त्यस्तोत्रमुत्तमम् ।
सर्वपापहरं वक्ष्ये शृण्वतां मङ्गलप्रदम् ।। १

देवदेवाय महते शम्भवे ते नमो नमः ।
नमस्ते लोकनाथाय सर्गस्थित्यन्तकारिणे ।। २

नमो विश्वादिरूपाय विश्वप्रत्यक्षसाक्षिणे ।
नमस्सन्मात्ररूपाय बोधानन्दघनाय ते ।। ३

नित्यानन्दस्वरूपाय पराशक्तिपते नमः ।
अरुन्धतीश्वरोऽद्यापि दर्शनात्प्रियसौख्यदः ।। ४

पुनर्निर्गत्य वीराट्टलिङ्गाद्भिक्षाटनस्य च ।
व्याजेन भिक्षुरूपः सन्नुत्तरां दिशमाययौ ।। ५

भिक्षाटनाकृतिं तं तु पुनर्दृष्ट्वा मुनीश्वराः ।
उत्थाय सहसा तस्य पृष्ठभागं गतास्तदा ।। ६

अज्ञानिनो महादेव वयं सर्वेऽपराधिनः ।
क्षमध्वमपराधं नः कृपया पाहि शङ्कर ।। ७

एतैरनुद्रुतो देव उत्तरां दिशमाययौ ।
सद्यस्तिरोहितस्तत्र मुनिकोपवशात्प्रभुः ।। ८

அத்தியாயம் - 8

அகஸ்தியர் மலயத்திலிருந்தவாறு சிவனைத் துதித்தார். ''தேவதேவர், பெருமான், மங்களம் தோன்றுமிடம், உலகின் நாதர், உலகைப் படைப்பும் காப்பும் ஒடுக்கமும் செய்பவர், உலகின் ஆதிவடிவினர், உலகின் நடைமுறையை நேரில் காண்கிற ஸாக்ஷி, பேரிருக்கை, பேருணர்வு, பேரானந்தம் என்ற நிலையிலுள்ளவர், பரா சக்தியின் கணவர். அந்த உமக்கு நமஸ்காரம் என்றார்.

ஈசன் அருந்ததீசுவரனாக இன்றும் காட்சி தருகிறார். தரிசனத்தால் அன்பும் ஆனந்தமும் தருகிறார். வீராட்டலிங்கத்திலிருந்து வெளிப்பட்ட சிவன் பிக்ஷாடனராள ஆண்டியாக அங்குமிங்கும் சுற்றினார். அவர்களைக் கண்ட முனிவர்கள் ஈசனது பின்புறம் நின்று, ''நாங்கள் அறிவிலிகள். எல்லோரும் பிழை செய்தோம். எம்பிழையைப் பொருத்தருள்வீர்'' என வேண்டினர். முனிவர்கள் கோபிப்பரோ என்று எண்ணி வடபுறம் சென்று உடன் மறைந்தார். (1-8)

अदृष्ट्वा मुनयः शम्भुं तत्पद्मयश्च व्यथां ययुः ।
अरुन्धतीवसिष्ठौ तौ विना दृष्टमहेश्वरौ ।। ९

तेषां मध्ये तदा के च मुनयोऽन्यानवादिषुः ।
यूयं प्राप्ताः किमर्थं वै खेदमद्य मुनीश्वराः ।। १०

अयं शम्भुरकृत्यानि करोति मुनिदूषकः ।
एतद्विरुद्धं शास्त्रस्य लोकस्याधर्ममक्रमम् ।। ११

कदाचिदपि गोविन्दो न करोत्येवमक्रमम् ।
कदाचिदपि धाता च न करोत्येवमक्रमम् ।। १२

शम्भुरेवायमेवेति करोत्यन्यायकर्म च ।
युवतीनामृषिस्त्रीणां को वा शिश्नप्रदर्शकः ।। १३

करिष्यामो वयं सर्वे तस्य कर्माभिचारकम् ।
इति निश्चित्य ते सर्वे समाजं चक्रुरञ्जसा ।। १४

अन्तर्धानप्रदेशस्य तिरोधानपुरप्रथा ।
तस्मान्निर्गत्य सहसा च्युतस्थानमवाप्य च ॥ १५

वीराट्टलिङ्गस्याग्नेये होमं कर्तुमथारभन् ।
आभिचारस्थलस्यापि ज्वालाश्रेणी प्रथा ह्यभूत् ॥ १६

इति अष्टमोऽध्यायः ॥

*அவரைக் காணாத முனிவரும் அவர்களது மனைவியரும் அருந்ததியும் வஸிஷ்டரும் துயருற்றனர். அப்போது முனிவர் கூட்டத்திலிருந்த சிலர், மற்ற முனிவர்களிடம் கூறினர். "சிறந்த முனிவர்களே! ஏன் வீணே துயரப்படுகிறீர்கள். சிவன் முனிவர்களைக் கெடுப்பதற்கே செய்யத்தகாததை எல்லாம் செய்கின்றார். இவரது நடைமுறை சாஸ்திரத்திற்கு மாறானது. அதர்மமும் முறையற்றதும் கூட. கோவிந்தனோ பிரும்மாவோ இந்த முறையற்ற செயலைச் செய்வதில்லை. சிவன் மட்டுமே இவ்வாறு பெண்களை அவமதித்துக் கெடுக்கிறார். அதனால் இவர் மீது அபிசாரம் செய்வோம் என்று கூடிப் பேசினர். சிவன் மறைந்த இடம் திரோதானபுரம் எனப்படும். அதிலிருந்து வெளிப்பட்ட அந்த முனிவர்கள் வீராட்டலிங்கத்தின் தென்கிழக்கில் அபிசார ஹோமம் செய்ய முற்பட்டனர். அந்த இடத்தை ஜ்வாலா சிரேணீ (கொள்ளிக்காடு) என்பர். (9-16)*

—*—

॥ अथ नवमोऽध्यायः ॥

मुनिकृताभिचारनिष्फलीकरणम्

सूत उवाच ॥

अथर्ववेदविधिना मन्त्रवैकल्यवर्जितम् ।
आभिचारांश्च जुहुवुरुद्दिश्य मुनयः शिवम् ॥ १

शास्त्रज्ञा अपि सर्वज्ञा मुनयो मोहमाययुः ।
सर्वलोकेश्वरे शम्भौ तेऽकुर्वन्स्वाभिचारकम् ॥ २

स्वयं विघातमभवत्का हानिः शूलपाणिनः ।
जाज्वल्यमाने वह्नौ तु होमकर्मणि तैः कृते ॥ ३

व्याघ्रः समुत्थितः पूर्वं कुर(क्रूरा)ङ्गुलिनखो बली ।
तं दृष्ट्वा भगवान्शम्भुर्वीराट्टेश्वरलिङ्गतः ॥ ४

आभिचारस्थलाभ्याशज्वालाश्रेणीसमीपगः ।
व्याघ्रं दृष्ट्वा समायान्तं तस्याभिमुख आययौ ॥ ५

ज्यायुतं धनुरादाय भूमावास्फलयच्छिवः ।
शिथिलाङ्गो नदन्नार्तोऽभवद्व्याघ्रो मृतस्ततः ॥ ६

उत्कृत्य व्याघ्रचर्माशु दधाराम्बरमेव तत् ।
व्याघ्रचर्माम्बरधरस्तदाप्रभृति शङ्करः ॥ ७

*அத்தியாயம் - 9*

முனிவரின் அபிசாரம் வீணானது.

*ஸூதர் கூறுகிறார் - ''முனிவர்கள் முனைந்து மந்திரப் பிழையின்றி அபிசார ஹோமம் செய்தனர். சாஸ்திர அறிவுடன் எல்லாமறிந்த முனிவர்களும் மதிமயக்கத்தால் உலகமனைத்தின் ஈசனான சிவன் மீது அபிசார கருமங்களைச் செய்தனர். அபிசாரத்தால் ஏவப்பட்டவை தானே மடிந்தன. சிவனிடம் எந்தக் குறையும் ஏற்படவில்லை. கொழுந்து விட்டெரிகிற நெருப்பிலிருந்து கூர்மிக்க நகங்களுடன் புலி வெளியாயிற்று. அபிசார ஹோமம் நடந்த இடத்தின் அருகாமையில் உள்ள ஜ்வாலாச்ரேணியின் அருகில் இருந்த சிவன் தன்னை நோக்கி வருகிற புலியைக் கண்டு நாணேற்றிய வில்லைத் தரையில் தட்ட, அந்தப் புலி நடுங்கிக் கூக்குரலுடன் செத்து விழுந்தது. அதன் தோலைக் கீறி எடுத்து ஆடையாகச் சிவன் உடுத்திக் கொண்டார். அது முதல் புலி தோலாடை உடுத்துபவரானார். (1-7)*

कङ्कालवेषमादाय वीक्ष्यातिष्ठत तान्पुनः ।
पुनश्च होमं कर्तुं ते मुनयश्च समाहरन् ॥ ८

जाज्वल्यमाने वह्नौ तु गजश्रेष्ठः समुत्थितः ।
कङ्कालवेषो भगवान्ददर्श गजमागतम् ॥ ९

स्वसमीपे गजं दृष्ट्वा तूष्णीं तस्थौ महेश्वरः ।
तमग्रसद्गजोऽप्याशु कङ्कालाकृतिमाग्रहात् ॥ १०

ग्रस्तस्सन्भगवान्शम्भुरुत्पाट्योदरमुत्थितः ।
कङ्कालवेषं त्यक्त्वाशु स्वयम्भूलिङ्गरूपभाक् ॥ ११

गजचर्म समुत्कृत्य प्रसार्यास्योत्तरीयकम् ।
मृतस्य गजवर्यस्य नृत्यन्शिरसि दृश्यते ॥ १२

अद्याप्यष्टभुजाकारा सैवासौ भाग्यदायिनी ।
आभिचारात्पुनश्चापि मृगसर्पाग्नयोऽभवन् ॥ १३

मृगं सर्पं तथा वह्निं सन्दधे द्वीपिनं तथा ।
मुनीनेवाभिचाराग्निस्सद्यो दग्धुं समारभत् ॥ १४

स्वव्याघातमभूत्तेषां प्रत्यङ्गेन श्रुतीरितम् ।
सद्यः पापायितास्सर्वे मुनयो मूढमानसाः ॥ १५

वीराट्टनाथलिङ्गस्य चोत्तरे छादने पुरे ।
तत्र स्वनाम्ना लिङ्गं तत्प्रतिष्ठाप्याशु कुम्भजः ॥ १६

त्रिकालं शाङ्करं लिङ्गे पूज्य ज्ञानं शिवाद्ययौ ।
अद्याप्यगस्त्यनाथोऽपि दर्शनान्मुक्तिदो नृणाम् ॥ १७

*கங்காளராக உடன் எலும்புக் கூடு வடிவினரானார். மறுபடி ஹோமம் செய்ய அதிலிருந்து பெருயானை வெளியானது. தன் எதிரில் வந்த யானையைக் கண்ட சிவன் அசையாமல் நின்றார். எலும்புக்கூடும் புலித்தோலுமாக நின்ற சிவனை யானை விழுங்கியது. உடன் அதன் வயிற்றைக் கிழித்து வெளிவந்த பெருமான் கங்காளவடிவம் நீக்கி, தானே தோன்றிய (ஸ்வயம்பூ)*

*லிங்கமானார். இறந்த யானையின் தோலைப் போர்த்திக் கொண்டு இறந்த யானையின் தலையின் மீது நர்தனமாடுபவராகக் காட்சி தருகிறார். எட்டு கைகளுள்ள அந்த மூர்த்தி இன்றும் பாக்கியமளித்து வருகிறது.*

*மீண்டும் முனிவர்களின் அபிசார ஹோமத்தீயிலிருந்து மானும் பாம்பும் அக்னியும் வெளியாயின. அவற்றைச் சிவன் தன் கைகளில் ஏந்தி நின்றார். தன் சக்தி வீணடிக்கப்பெற்றதால் அபிசாரத் தீ முனிவர்களைத் தாக்க, முனிவர்கள் மனக்கலக்கமுற்றனர். அகஸ்தியர் வீரட்டநாதரின் வடக்கில் சாதனபுரத்தில் (மறையூரில்) அகஸ்தியேசலிங்கத்தை அமைத்து வழிபட்டு சிவனிடமிருந்து ஜ்ஞானம் பெற்றார். இன்றும் அகஸ்தியேசர் முக்தியளித்து வருகிறார். (8-17)*

एते च मुनयः शम्भुं ज्ञात्वा निग्रहकारणम् ।
सर्वलोकेश्वरं ज्ञात्वा राजराजाधिकेश्वरम् ।। १८

पितरं सर्वलोकानामदृष्ट्वा तपनं ययुः ।
वयं भ्रष्टा न सन्देहः पतिताश्च विशेषतः ।। १९

अब्राह्मणा वयं सर्वे सन्ध्यामन्त्रोऽपि विस्मृतः ।
पुनरस्तूपनयनं पुनरध्ययनादिकम् ।। २०

इतः परं नः किं कृत्यं स्वयं नष्टा वयं ध्रुवम् ।
करिष्यामस्तपः सर्वमुद्दिश्योत्तरदेशके ।। २१

असतीभिः सहस्त्रीभिर्निर्गता दारुकावनात् ।। २२

इति नवमोऽध्यायः

*

*சிவனே தம் சக்தியடக்கத்திற்குக் காரணம், குபேரனுக்கும் ஈசன், உலகின் ஈசன், உலகின் தந்தை என உணர்ந்தனர். சிவன் மறைந்ததால் தாபமடைந்தனர். ''நாம் நிலை தவறிவிட்டோம். ஐயமில்லை. நாம் பாபிகள். அந்தணத் தன்மை இழந்ததால்*

ஸந்தியா - மந்திரமும் மறந்து விட்டது. மறுபடி உபனயனம் செய்யப்பெற்று வேதமோதுவதே வழி. வாழ்க்கை வீணானது. வடக்கே சென்று மறுபடி தவமியற்றுவோம் என்று தீர்மானித்து கற்பிழந்த தம் மனைவியருடன் தேவதாரு வனத்திலிருந்து வெளியேறினர். *(18-22)*

—*—

## ।। अथ दशमोऽध्यायः ।।

### सूत उवाच ।।

औत्तरं देशमाश्रित्य तपस्तेपुर्मुनीश्वराः ।
तेषां समीपमागत्य शङ्करो वाक्यमब्रवीत् ।। १

यूयमत्र किमर्थञ्च कुरुध्वे यत्नमुल्बणम् ।
गजं संहृत्य तच्चर्म चोत्तरीयं दधौ यदा ।। २

समीपस्था शिवा भीत्या किञ्चित्पश्चात्प्रदेशगा ।
अद्यापि दृश्यते गौरी यूयं तां सेव्यभक्तिकाम् ।। ३

वीराट्टनाथलिङ्गस्य ह्याग्नेये तप उत्तमम् ।
उपास्तिञ्च भवन्तो वै तत्र कुर्वन्तु गच्छत ।। ४

तपस्स्थलमिदं लोके युष्माकं प्रथितं भवेत् ।
श्रीतपोग्राम इत्येव कैलासाचलवासवत् ।। ५

दृश्यतेऽद्यापि लोकेस्मिन्नुन्नतस्थो जनैःसदा ।
अतियत्नोपासनेन मुनीनां सुप्रसन्नकः ।। ६

कैलासनाथ इत्येव कैलासाचलवासवत् ।
सर्वं शान्तं दुःखमिदं मया क्षान्तं मुनीश्वराः ।। ७

युष्मत्स्त्रीणाञ्च युष्माकमुपदेशं करोम्यहम् ।
वीराट्टनाथलिङ्गस्य ममागच्छत पश्चिमे ।। ८

अद्यप्रभृति वीराट्टलिङ्गस्याशु महीतले।
कृत्तिवासेशसंज्ञा च प्रसिद्धिर्भूतलेऽस्तु मे ॥ ९

*அத்தியாயம் - 10*

*ஸூதர் விளக்குகிறார் - வடக்கே சென்று தவம் புரிகிற முனிவர்களின் அருகே சிவன் சென்று கூறினார். "நீங்கள் வீணே கடும் முயற்சி எடுத்துள்ளீர்கள். யானையைக் கொன்று அதன் தோலை நான் போர்த்திக் கொண்டதும் என் தோற்றத்தைக் கண்டு பயந்த கௌரீதேவி என் பின்புறத்தில் தனித்து வீராட்ட நாதலிங்கத்தின் தென் கிழக்கில் தவம் புரிகிறார். நீங்களும் அங்கு சென்று தவம்புரிவீர். நீங்கள் தவம் புரிகிற இடம் தபோக்ராமம் (திருத்தவத்துறை) எனப்புகழ்பெறும். கைலாஸம் போன்று தவம் புரிகிற இடம் இது. இது மக்கள் கண்களில் சற்று உயர்ந்த இடமாகத் தெரியும். கைலாஸ நாதராக அங்குள்ளேன். உங்கள் துயரம் அடங்கிவிட்டது. நானும் உங்கள் பிழையைப் பொறுத்துக் கொண்டுவிட்டேன். உங்கள் மனைவியருக்கும் உங்களுக்கும் அங்கு ஞானம் உபதேசிக்கிறேன். வீராட்டநாதரின் மேற்கில் கூடுவீர். இன்று முதல் வீராட்டநாதருக்கு கிருத்திவாஸேசர் என்ற பெயர் புகழ்பெறும்" என்று கூறி மறைந்தார். (1-9)*

इत्युक्त्वाऽन्तर्हितस्तत्र कृत्तिवासेशपश्चिमे।
आविर्भूतः शिवः शीघ्रं स्वयंभूलिङ्गरूपिणः ॥ १०

एते च शीघ्रं तत्रैव गतवन्तो मुनीश्वराः ।
तस्मिन्स समये पाकशासनस्तत्र आगतः ॥ ११

रथमारुह्य वेगेन न ज्ञात्वा लिङ्गमुत्थितम्।
लिङ्गस्योपरि चाकाशे रथस्थं वासवं शिवः ॥ १२

दृष्ट्वा चुकोप गर्वेण मच्छीर्षस्योपरि स्थितः ।
रथेन सह देवेन्द्रो नत्वा स्तुत्वा महेश्वरम् ॥ १३

प्रणनाम मुहुर्भीत्या सद्यस्तुष्टोऽभवच्छिवः ।
न मल्लिङ्गोर्ध्वदेशे त्वमद्य प्रभृति सञ्चर ॥ १४

उपदिष्टाऽथ बुद्धिश्च देवेन्द्राय शिवेन हि।
अद्यप्रभृति देवेन्द्र इदं स्थानं भवत्विति ।। १५

रथमज्जनसुक्षेत्रं प्रसिद्धं भवति द्विजाः ।
लिङ्गान्निर्गत्य देवेशो मुनीनामखिलागमान् ।। १६

अध्यापको भवत्यस्मात्तस्माल्लिङ्गस्य नाम च ।
अध्यापकेश्वर इति प्रसिद्धमभवद्भुवि ।। १७

वेदवेदाङ्गशास्त्रादि ह्यधीतं तत्पुरीश्वरात् ।
तत आहूय तस्मात्तान्स्ववीराट्टाख्यसन्निधौ ।। १८

तथा ज्ञानोपदेशश्च कृतवान्दयया शिवः ।
सभा ज्ञानसभा चेति प्रथिता ह्यभवत्तदा ।। १९

परमेष्ठी गुरुर्वस्ते यूयं तच्छिष्यसन्ततिः ।। २०

इति दशमोऽध्यायः

*கிருத்திவாஸேசரின் மேற்கில் ஸ்வயம்பூலிங்கமாகச் சிவன் விளங்கினார். முனிவர்களும் தவம் செய்ய அங்கு சென்றனர். அந்த சமயத்தில் அங்கு வந்த இந்திரன் தன் தேரில் ஏறி லிங்கத்தின் மீது பறந்தான். அவன் செருக்கை அடக்கத் தேரைத் தரையில் தட்டச் செய்த சிவன் அவன் பிழையை உணர்ந்து வணங்கித் துதித்ததும் சிவனது லிங்கமுள்ள இடத்தில் அதன்மீது வானில் செல்லக் கூடாதென்பதை உணர்த்தினார். தேர் தன் சக்தி இழந்ததால் ரதமஜ்ஜன(க்ன)க்ஷேத்திரம் (தேர்ழுந்தூர்) ஆனது. லிங்கத்திலிருந்து வெளிப்பட்டு முனிவர்களுக்கு சாஸ்திரமனைத்தின் தத்துவத்தை உபதேசித்ததால் சிவன் அத்தியாபகரானபடியால் அத்தியாபகேச்வரரானார். முனிவர்கள் உபதேசம் பெற்ற இடம் ஜ்ஞானஸபை. ஜ்ஞான ஸபாநாதராக குருவாக அங்கு சிவன் உள்ளார். நீங்கள் அனைவரும் அவரது சிஷ்யர்கள்'' என்றார் ஸூதர். (10-20)*

——*——

॥ अथ एकादशोऽध्यायः ॥

सूत उवाच ॥

कृत्तिवासेश्वराग्नेये ज्वालाश्रेण्यनुवर्तते ।
वागीशनाम तस्यापि शृणुध्वं कारणं द्विजाः ॥ १

मुनीनां वाक्प्रविष्टासि तस्मात्त्वां प्रशपाम्यहम् ।
वाग्देवी धृतवेणीति मन्यन्ते त्वामुदीरिताः ॥ २

अद्य प्रभृति कैलासे न गन्तव्यं त्वया तु गीः ।
इत्युक्ता सा तदा वाणी क्षमस्वेति पुनः शिवम् ॥ ३

ज्वालाश्रेणीसमीपे तु स्वनाम्ना लिङ्गमुत्तमम् ।
प्रतिष्ठाप्याकरोत्पूजां लिङ्गे साम्बस्य भक्तितः ॥ ४

ततः प्रसन्नो वाणीं तां प्राह मे सर्वदा प्रिया ।
त्वत्पूजितस्य लिङ्गस्य वागीश्वर इति प्रभुः ॥ ५

वागीशोऽद्यापि भक्तानां वाक्प्रदो दृश्यते सदा ।
वसिष्ठो वामदेवश्च भिक्षुं दृष्ट्वा च मोहिनीम् ॥ ६

मोहेनेमौ सञ्जतावित्युत्सेकात्परिबभूवतुः ।
गर्वेण ज्ञानभङ्गोऽस्त्वित्येतौ द्वौ शप्तवाञ्छिवः ॥ ७

द्वाभ्यां गर्वापनोदाय ज्ञानलाभाय चेश्वरात् ।
कृत्तिवस्त्रस्य चैशान्ये किञ्चिल्लिङ्गद्वयं शुभम् ॥ ८

प्रतिष्ठितं तदद्यापि दर्शनात्सौख्यदं नृणाम् ।

*அத்தியாயம் 11*

*ஸூதர் கூறுகிறார் - ''கிருத்திவாஸேசரின் தென்கிழக்கில் ஜ்வாலாச்ரேணீ உள்ளது. அங்குள்ள சிவன் வாகீசராவார். தேவதாரு வனத்து முனிவரது வாக்கில் ஸரஸ்வதி அமர்ந்திருந்ததால் சிவன் கோபமடைந்து, கைலாஸத்தில்*

நுழைய ஸரஸ்வதிக்குத் தடைவிதித்தார். வாணி தன் பிழையைப் பொறுத்துக் கொள்ளும்படி வேண்ட, ஜ்வாலாச்ரேணிக்கருகில் வாகீசலிங்கத்தை ஸ்தாபித்து வழிபட்டதும் வாணியிடம் தாபம் நீங்கி அவளைத் தன் அன்புக்கு உரியவளாக்கினார். வாகீசர் இன்றும் அடியார்களுக்கு நல்வாக்கு பெற அருள் புரிகிறார். வஸிஷ்டரும் வாமதேவரும் பிக்ஷாடனரையும் மோஹினியையும் கண்டதும் இவ்விருவரும் காமப்பித்தர் என்று பரிகசித்ததால் அவர்கள் பெற்றிருந்த பேரறிவை இழந்தனர். அவர்கள் தம் செருக்கு அடங்க, ஈசனிடமிருந்து மறுபடி பேரறிவு பெற, கிருத்திவாஸரின் வடகிழக்கில் இருலிங்கங்களை ஸ்தாபித்து வழிபட்டனர். அவை இன்றும் அருள் புரிகின்றன.

कृत्तिवस्त्रेशलिङ्गस्य स्थलस्योत्तरभागतः ॥ ९

कैलासनाथनामा च नित्यं सन्निहितः शिवः ।
मन्निन्दां कारणात्पूर्वं त्वं कृते कृतवत्यसि ॥ १०

मुनीनां मुनिपत्नीनां तस्मात्कोपोऽस्ति मे त्वयि ।

इत्युक्ता पार्वती देवी शिवकोपप्रशान्तये ॥ ११

प्रतिष्ठिते गौतमेन लिङ्गे स्वयमपीश्वरम् ।
शिवभक्तियुता देवी ह्यल्पकालमपूजयत् ॥ १२

गौतमेन किमर्थञ्च प्रतिष्ठितमिति ब्रुवे ।
शैवागमानां शास्त्राणां परतत्वविबुद्धये ॥ १३

कृत्तिवस्त्रोत्तरे भागे लिङ्गं स्थाप्याभजच्छिवम् ।
तथैव तस्मिन्साम्बोऽपि शास्त्रपारमतिं ददौ ॥ १४

तदाप्रभृति लिङ्गस्य गौतमेश्वरनाम हि ।
तस्मिँल्लिङ्गे शिवं देवी संपूज्यैवाकरोत्तपः ॥ १५

अल्पेन तपसा तुष्टो ह्यल्पकालकृतेन वै ।
देवीमाह तदा शम्भुर्नाम धास्यामि तच्छृणु ॥ १६

प्रसिद्धिरस्य स्थानस्य भवेद्बालतपःपुरम्।
अल्पेन तपसा त्वञ्च सुप्रीतासि मम प्रिये।। १७

बालस्य रूपलावण्यसौन्दर्यस्याङ्कुरं ह्यसि।
बालाङ्कुरीति नामास्त्वित्युक्त्वैवमुमया सह।। १८

कृत्तिवस्त्राख्यलिङ्गस्य स्थलं प्राप्य तिरोहितः।
बालाङ्कुरीदर्शनेन नृणां सौख्यं शुभं ध्रुवम्।। १९

*கிருத்திவாஸரின் வடக்கில் கைலாஸநாதர். பார்வதி சிவனே பற்றி முன் கிருதயுகத்தில் இகழ்ந்து பேசினதால் ஏற்பட்ட சிவகோபம் தணிய பார்வதி சிவனே வழிபட்டாள். பின்னர் கௌதமர் ஸ்தாபித்த லிங்கத்தில் அவள் சில நாட்கள் வழிபட்டாள். கௌதமர் சிவாகமங்களில் விளக்கப்பட்ட பரதத்துவத்தைப் பற்றி மேலும் அறியத் தன் பெயரில் கௌதமேசரை ஸ்தாபித்து வழிபட்டு சாஸ்திரங்களில் சிறந்த பேரறிவு பெற்ருர். அங்கு தான் பார்வதியும் வழிபட்டபோது, அவளுக்கு அருள்புரிந்த பெருமான், அந்த இடத்திற்கு பாலதவப்புரம் என்று பெயரிட்டார். அங்கு செய்த சிறிதளவு தவத்திலும் அவரும் திருப்தியடைந்தார். தேவியும் பெரும் மனநிறைவு பெற்ருள். இதனைப் புகழ்ந்த சிவன் இளமையின் உருவ அழகும் வனப்பும் ஸௌந்தரியமும் இங்கு முளைவிட்டதால் பாலாங்குரீ என்ற பெயர் உனக்கு நிலைக்கட்டும் எனக்கூறி அவளுடன் இணைந்து கிருத்திவாஸ லிங்கத்தினுள் மறைந்தார். பாலாங்குராம்பிகையின் தரிசனத்தால் இன்பம் மங்களமும் நிச்சயம் ஏற்படும். (9-19)*

एवं च्युतिस्थलस्याशु कृत्तिवस्त्रधरेण वा।
नामागतमितीशस्य गजकृत्तिनिकृन्तनम्।। २०

इदमेकं स्थलं नृणां ह्यलं सौख्यप्रदं ध्रुवम्।
एतस्मिन्स्थल एकस्मिन्दृष्टे सति विनिश्चयः।। २१

सर्वस्थलानि दृष्टानि मानवैर्नात्र संशयः ।
बहुलिङ्गानि वर्तन्ते स्थलमेतत्ततः शुभम् ।। २२

क्षणं वा वसति ह्यस्मिन्नेकरात्रं द्विरात्रकम् ।
सर्वपापविनिर्मुक्तस्सौभाग्यं लभते ध्रुवम् ।। २३

अयं दक्षिणकैलास इत्यपि प्रथितो भुवि ।
प्रत्यहं गिरिशौ ध्यात्वा चैकब्राह्मणभोजनम् ।। २४

करोति श्रद्धया साकं तदनन्तफलप्रदम् ।
चैत्रे मासि सचित्रायां पूर्णिमायान्तु भक्तितः ।। २५

यस्तूत्सवं कारयति चोत्तरे काल एव वा ।
सौभाग्यं सन्ततिं प्राप्य दीर्घायुर्धनधान्यकम् ।। २६

इह लोके सुखं प्राप्य कैलासे स महीयते ।
युष्मभ्यञ्च मयाऽख्यातमेतत्सूत्सववैभवम् ।। २७

ये गृह्णन्ति च शृण्वन्ति पठन्ति च सदा मुदा ।
सर्वाभीष्टमनुप्राप्य लभेरन् तां गतिं स्थिराम् ।। २८

इति एकादशोऽध्यायः

इति स्कन्दमहापुराणोक्तं च्युतपुरमाहात्म्यं सम्पूर्णम् ।।

—*—

*ச்யுதிஸ்தலம் (வழுவூர்) கிருத்திவாஸேச்வரம் எனப்புகழ் பெற்ற இந்த இடம் யானைத்தோல் கிழித்தெடுத்த இடமாகவும் புகழ்பெற்றது. இன்பமளிப்பதில் நிகரற்றது. இதனைத் தரிசனம் செய்தாலே க்ஷேத்திரமனைத்தின் தரிசனம் செய்த பலன் கிட்டும். இங்கே பல புகழ்பெற்ற லிங்கங்கள் உள்ளன. ஒரு நொடிநேரம் வசித்தாலும் ஓரிருநாள் தங்கினாலும் பாபமனைத்தும் விலகும். இது தென் கைலாயம் எனப் புகழ்பெற்றது. சிவதம்பதியரைத் தியானித்து ஓர் அந்தணருக்கு உணவிட எல்லையற்ற நன்மை*

கிட்டும். சித்ராபூர்ணிமையன்று உற்சவம் கொண்டாட ஸௌபாக்யம், நற்சந்ததி, நீண்ட ஆயுள், செல்வம் என அனைத்தும் பெறுவர். இறுதியில் கைலாஸம் சென்றடைவர். இந்த வரலாற்றைச் சொன்னவரும் கேட்டவரும் விரும்பியதைப் பெறுவதுடன் நன்னிலை பெறுவர். (20-28)

ஸ்காந்தத்திலுள்ள ச்யுதபுரமாஹாத்மியம் முற்றிற்று.

*

श्रीमद्वेदव्यासमहामुनिप्रणीतश्रीपाद्मपुराणोक्तं

देवदारुवनमाहात्म्यं नाम

# च्युतपुरमाहात्म्यम्

(५९-६४ अध्यायात्मको भागः)

अथ प्रथमोऽध्यायः

सूत उवाच—

तत्रावसाने कौण्डिन्यशाण्डिल्यषढमर्षणाः ।
वत्सकुत्सवसिष्ठाश्च भारद्वाजश्च काश्यपः ॥ १

गौतमात्रिभृगुप्रांशुवाधूलहरिताह्वयाः ।
विष्णुवृद्धविशालाक्षबोधायनकृपालवः ॥ २

पराशरोद्दालकौ च कण्वकात्यायनामलाः ।
आपस्तम्बाणिमाण्डव्यद्राह्यायनमहोरगाः ॥ ३

कौषीतको याज्ञवल्क्यःसत्याषाढाश्वलायनौ ।
गर्गो वाजसनेयश्च शुनश्शेपश्च शौनकः ॥ ४

मुद्गलाङ्गिरसोन्मत्तसंवर्तगणकाह्वयाः ।
शक्तिः कौशिक आत्रेयः पुलस्त्यः पुलहःशुभः ॥ ५

मुद्गरो गालवश्चैव शिलादश्च महामुनिः ।
जाबालिर्जमदग्निश्च विश्वामित्रश्च कौण्डिनः ॥ ६

दाल्भ्योऽगस्त्यःशतानन्दो दुर्वासा ध्रुवरोमशौ ।
ऋश्यशृङ्गो मृकण्डुश्च बृहस्पतिविभण्डकौ ॥ ७

जैमिनिश्च मतङ्गश्च जातूकर्णिः कहोलकः ।
सुतीक्ष्णस्त्रिजटोऽघोरो निर्मलामलकप्रियौ ॥ ८

एतैः शिष्यैः प्रशिष्यैश्च सह नैमिशकानने ।
एते वेदान्तवेद्यार्थतत्वज्ञानपयोनिधिम् ॥ ९

अष्टादशपुराणज्ञमपृच्छन्मुनिपुङ्गवाः ।

*பாத்மபுராணத்தில் (59-64 அத்தியாயங்கள்)*
*தேவதாருவன மாஹாத்ம்யம் என்ற*
**ச்யுதபுரமாஹாத்ம்யம்**

*அத்தியாயம் 1*

*நைமிசாரண்யத்தில் ஸூதமுனிவர் எதிரில் பல முனிவர்கள் கூடினர். கௌண்டின்யர், சாண்டில்யர், ஷடமர்ஷணர், வத்ஸர், குத்ஸர், வஸிஷ்டர், பாரத்வாஜர், காசியபர், கௌதமர், அத்ரி, பிருகு, ப்ராம்சு, வாதூலர், ஹரிதர், விஷ்ணு வ்ருத்தர், விசாலாக்ஷர், போதாயனர், கிருபாளு, பராசரர், உத்தாலகர், கண்வர், காத்யாயனர், அமலர், ஆபஸ்தம்பர், ஆணிமாண்டவ்யர், த்ராஹ்யாயனர், மஹோரகர், கௌஷீதகர், யாஜ்ஞவல்க்யர், ஸத்யாஷாடர், ஆச்வலாயனர், கர்கர், வாஜஸநேயர், சுனச்சேபர், சௌனகர், முத்கலர், ஆங்கிரஸர், உன்மத்தர், ஸம்வர்தர், கணகர், சக்தி, கௌசிகர், ஆத்ரேயர், புலஸ்தியர், புலஹர், சுபர், முத்கலர், காலவர், சிலாதர், ஜாபாலி, ஜமதக்னி, விச்வாமித்ரர், கௌண்டினர், தால்ப்யர், அகஸ்தியர், சதானந்தர், துர்வாஸர், த்ருவர், ரோமசர், ருச்யச்ருங்கர், மிருகண்டு, பிருஹஸ்பதி, விபண்டகர், ஜைமினி, மதங்கர், ஜாதூகர்ணி, கஹோலகர், ஸுதீக்ஷ்ணர், த்ரிஜடர், அகோரர், நிர்மலர், ஆமலகப்ரியர் இவர்கள் தம் சிஷ்யர், பிரசிஷ்யர் முதலானோருடன் கூடி பதினெட்டு புராணங்களையும் கற்றறிந்த - வேதமுடிவு நூலான உபநிஷத்து கூறுகிற தத்வஜ்ஞானம் முற்றிலுமறிந்த ஸூதரிடம் கேட்டனர். (1-9)*

मुनय ऊचुः ॥

सूत वेदान्ततत्वज्ञ सर्वज्ञ करुणाकर ॥ १०

देवदारुवनेऽकार्षीत्कथं भिक्षाटनं शिवः ।
ऋषीणां तत्र वसतां कथं नृत्तं चकार सः ॥ ११

तेषां ज्ञानं कथञ्चासीदृषीणां कर्मशालिनाम्।
एतद्ब्रूहि सुविस्तार्य तन्माहात्म्यं विशेषतः ॥ १२

*எல்லாமறிந்த ஸூதரே! பரிவுள்ளவரே! தேவதாரு வனத்தில் சிவன் பிக்ஷாடனம் செய்ததும் நடனம் புரிந்ததும், ருஷிகளுக்கு ஞானம் உபதேசித்ததும் பற்றி விரிவாக விளக்குவீர்'' என்றனர். (10-12)*

सूत उवाच ॥

सम्यक्पृष्टं महाभागाः प्रार्थनीयं सुरैरपि।
पुरा नारायणं शान्तं श्रीभूमिसहितं विभुम्॥ १३

फणीन्द्रः पृष्टवान्युष्मत्पृष्टं सर्वं द्विजोत्तमाः।
तत्सर्वं वच्मि वो विप्रा विष्णुना यत्प्रकीर्तितम्॥ १४

भुजगेन्द्राय माहात्म्यं देवदारुवनस्य वै।
श्वेतद्वीपवरश्चास्ति वज्रचारुशिलातलः ॥ १५

पारिजातकसन्तानमन्दारहरिचन्दनैः।
स कल्पवृक्षैस्तत्रस्थैः शोभितोऽभीष्टसिद्धिदैः ॥ १६

सुवर्णकदलीबिल्वनालिकेरसमावृतः।
सहेमजम्बुजम्बीरदाडिमैरप्यलङ्कृतः ॥ १७

कनकाम्रार्जुनाश्वत्थवटराजिविराजितः।
रसालतालहिन्तालबीजपूरोपशोभितः ॥ १८

कुन्दतिन्दुकसन्तानैस्तत्र तत्र विराजितः।
वज्रस्फटिकनीलाश्मप्रवालमणिभिर्दृढम्॥ १९

कृतसोपानविलसच्चतुर्दिक्समलङ्कृतः।
सिद्धचारणसंसेव्यो देवकिन्नरसन्नुतः ॥ २०

देवर्षिमुनिभिः कीर्णो विद्याधरमहोरगैः ।
कैलासशैलसङ्काशकल्लोलकुलशोभिना ॥ २१

कैलासशिखराकारफेनसन्ततिमञ्जुना ।
सुशुक्तिशङ्खशम्बूकवराटततिशोभिना ॥ २२

क्षीरोदवेलासंसक्तसलिलेनाभिवेष्टितः ।
द्विकोटियोजनैर्विप्रा दैर्घ्येण च विराजितः ॥ २३

*ஸூதர் விளக்குகிறார் - ''முன் லக்ஷ்மியும் பூமியும் கூடிய பெருமான் நாராயணனிடம் ஆதிசேஷன் நீங்கள் கேட்டதையே கேட்டார். அவருக்கு விஷ்ணு கூறிய தேவதாருவனத்தின் பெருமையை நான் விளக்குகிறேன். வைரக்கற்கள் பரப்பிய சுவேதத்வீபம் எனும் தீவு உள்ளது. பாரிஜாதம் ஸந்தானம் மந்தாரம் ஹரி சந்தனம் என்ற கல்ப விருக்ஷங்களாலும் தங்க வாழை, வில்வம், தென்னை, தங்கநாவல், எலுமிச்சை, மாதுளை, தங்கமா, மருது, அரசு, ஆல், ரஸாளு, பனை, கூந்தற்பனை, நார்த்தை, பனச்சி முதலிய மரங்கள் நிரம்பியது. வைரம், படிகம், நீலம், பவழம், முதலியவை பதித்த படிகள் தீவின் நான்கு பக்கங்களிலும் உள்ளன. சித்தர், சாரணர், தேவர், கின்னரர், தேவரிஷிகள், முனிவர், வித்யாதரர், நாகர்கள் என்ற தேவரினத்தினர் நிரம்பியது. கைலாஸம் போன்ற அலைமிக்க அருவிகள், பனிக்கட்டிகள் நிறைந்தது. முத்துச் சிப்பி, சங்கு, சோழி, கிளிஞ்சல் பரவக்காண்பது. பாற்கடலின் நீரால் சூழப்பெற்றது. 2 கோடி யோசனை நீளமும் அகலமும் கொண்டது. (13-23)*

मण्टपं तत्र परितः कोटियोजनविस्तृतम् ॥ २४

दीप्तमाणिक्यसाहस्रस्तम्भबृन्दविराजितम् ।
तन्मध्ये मणिवेद्यन्तरनन्तभुजगाधिपे ॥ २५

शतोनकोटिविस्तारभोगमण्डलभास्वति ।
शेते नारायणो देवो योगनिद्रापरो हरिः ॥ २६

क्षीरोदधिपरिस्पर्धिगौराभोगार्कभास्वता ।
माणिक्यविलसच्छीर्षसहस्रफणशोभिना ॥ २७

चञ्चलद्रसनायुग्मसहस्रवदनेन च ।
शेषेण भोगिराजेन सुचुम्बितकिरीटकः ॥ २८

महानीलशिलास्पर्धिनिजवर्ष्ममहाप्रभः ।
साष्टविंशतिसाहस्रपञ्चलक्षसुयोजनैः ॥ २९

दीर्घविस्तारतो राजन्मुखमण्डलशोभितः ।
तावत्प्रमाणमकुटराजमानमहाशिराः ॥ ३०

अष्टाशीतिसहस्रैश्च लोचनैर्मितलोचनः ।
षट्सप्ततिसहस्राढ्यलक्षयोजनमात्रतः ॥ ३१

रत्नकुण्डलसंशोभिकर्णशष्कुलिराजितः ।
तावदायामविलसन्नासिकातिमनोहरः ॥ ३२

ससप्तविंशसाहस्रपञ्चलक्षसुयोजनैः ।
दीर्घविस्तारतो रम्यगण्डयुग्मातिसुन्दरः ॥ ३३

द्विलक्षयोजनमितपीनकन्धरमन्थरः ।
गुह्यादिकर्णपर्यन्तं योजनैरभिशोभितः ॥ ३४

लक्षत्रयोदशैर्विंशद्वेदसाहस्रसंयुतैः ।
पादादिगुह्यपर्यन्तमेकविंशतिलक्षकैः ॥ ३५

योजनैर्बाहुसाहस्रयुतैश्च परिलक्षितः ।
(उष्णीषात्पादपर्यन्तं माहात्म्यं मुनयो हरेः ।)
चतुर्विंशतिसाहस्रयुतैरपि च योजनैः ॥ ३६

लघुलक्षयुतैर्देवो राजमानवपुर्धरः ।
आदिशेषफणारत्नप्रदीपितकलेबरः ॥ ३७

कटकाङ्गदकेयूरमणिकुण्डलशोभितः ।
एवं ब्रह्माण्डदेहोऽयं साक्षाद्विष्णुर्द्विजोत्तमाः ।। ३८

नागपर्यङ्कशयनो नयनानन्ददायकः ।

*அதன் நடுவில் கோடி யோஜனை பரப்புள்ள மண்டபம்; மாணிக்கக் கற்களாலான ஆயிரம் தூண்கள் கொண்டது. அதன் நடுவே ரத்னத்தாலான மேடை, அதில் ஆதிசேஷன் நூறுகுறைந்த கோடி யோசனை அளவு விரிந்த படவரிசைகள் கொண்டவர். அதன் மீது யோகநித்ரையில் ஹரி சயனம் கொண்டுள்ளார். ஆதிசேஷனின் பாற்கடலின் நுரை போன்று வெளுத்த ஒளிமிக்க ஆயிரம் படங்கள். அவை மாணிக்கம் பதிக்கப்பெற்றது போல் நடுவில் சிவந்துள்ளன. ஆயிரம் முகங்களிலும் இரட்டை நாக்குகள் அசைந்து கொண்டிருக்கின்றன. ஹரியின் கிரீடத்தை முத்தமிடும் அளவில் ஆதிசேஷனின் தலைகள் முன்குவிந்துள்ளன; அதில் ஹரி, நீல ரத்னம் போன்று ஒளிர்கிற மேனி வண்ணத்துடன், 528000 யோசனைகள் விரிந்த முகமண்டலம். அதற்கேற்ற பெரும்கிரீடம். 28,000 யோசனைகள் விரிந்தகண்கள். 76,000 யோசனை விரிந்த ரத்தின குண்டலம் கொண்ட செவிகள். அதே விரிவுள்ள நாசிகள். 527000 யோசனைகள் விரிந்த இரு கன்னங்கள், இரு லக்ஷ யோசனை விரிவுள்ள பருத்த கழுத்து, காதிலிருந்து மறைவிடம் வரை, 13 24000 யோசனை விரிவு, காலடியிலிருந்து மறைவிடம் வரை 2100000 யோசனை நீண்ட உடல், ஆதிசேஷனின் படங்களில் உள்ள ரத்தின ஒளி பரவிய மேனி. காப்பு, தோள்வளை, கேயூரம், ரத்தின குண்டலம் என எண்ணற்ற ஆபரணங்கள், இவ்வாறு பிரும்மாண்டத்தையே தன் உடலாகக் கொண்ட விஷ்ணு ஆதிசேஷப்படுக்கை மீது கண்களுக்கு இனிய காட்சி தருபவராக உள்ளார். (24-38)*

कमलाक्षो जगन्नाथः केशवो मधुसूदनः ।। ३९

अच्युतः श्रीधरो लक्ष्मीपतिः श्रीवत्सलाञ्छनः ।
मुकुन्दो माधवो नन्दो भूपतिः पुरुषोत्तमः ।। ४०

योगनिद्रां समापन्नो हरिः शेते भुजङ्गमे ।

स च विश्वात्मको देवः परमानन्दरूपिणम्।। ४१

शङ्करं जगतां नाथमम्बया परमेश्वरम्।
देवदारुवने पूर्वं नृत्यन्तं करिमस्तके।। ४२

ध्यायंस्तरां परानन्दमग्नः परवशो ह्यभूत्।
तस्मिन्परवशे जाते शिवानन्देन केशवे।। ४३

विग्रहस्तस्य शेषस्य महाभारतरोऽभवत्।
आनन्दाद्विस्तृततनोः शिवस्य परमात्मनः।। ४४

अविषह्यतनोःशेषःसाक्षाद्विष्णोर्महाबलः।
तद्भारपीडिततनुर्हाहाकारं चकार सः।। ४५

तेन स्मृतशरीरोऽसौ विनिर्मुक्तशिवस्मृतिः।
शेषमाह महाविष्णुर्मा भैरिति फणीश्वरम्।। ४६

देवदारुवने पूर्वं नृत्यन्तं करिमस्तके।
शिवमालोक्य चानन्दाद्विस्मृतात्मतनुः फणिन्।। ४७

*தாமரைக்கண்ணர், உலகின் நாதர், கேசவன், மதுவை அழித்தவர், அச்யுதன், லக்ஷ்மியை மார்பில் தாங்குபவர், லக்ஷ்மியின் கணவர், ஸ்ரீவத்ஸம் எனும் மருவைக் கொண்டவர், முகுந்தன், மாதவன், நந்தர், பூமியின் கணவர், புருஷோத்தமன் என்ற பல பெயர்கள் பெற்ற ஹரி பாம்பின் மீது யோகநித்ரை கொண்டிருந்தார். பரமானந்த வடிவினரான உலகின் நாதரான சிவன் அம்பிகையுடன் தேவதாரு வனத்தில் யானையின் மத்தகத்தின் மீது நடனமாடுகிற கோலத்தை தியானித்து ஆனந்த பரவசரானார். அப்போது அவரது மேனி சேஷனால் தாங்க முடியாத சுமையாயிற்று. உடலும் மேலும் விரிவடைந்தது. அந்தச்சுமையைத் தாங்க இயலாத நிலையில் ஆதிசேஷன் ஹா ஹா எனக் கத்தினான். உடன் தன் நிலை உணர்ந்து சிவத் தியானத்திலிருந்து விடுபட்ட விஷ்ணு, ''பயப்படாதே!'' என ஆதிசேஷனுக்கு ஆறுதலளித்து, ''தேவதாரு வனத்தில் யானை*

*மத்தகத்தின் மீது ஆனந்த நடனமாடுகிற சிவனை நினைத்ததால் என் உடல் பற்றி மறந்திருந்தேன்'' என்றார். (39-47)*

इत्युक्तवति गोविन्दे श्रीपतौ पुरुषोत्तमे ।
किञ्चिद्विस्मयमापन्नोऽनन्तः प्राञ्जलिरब्रवीत् ।। ४८

शेष उवाच ।।

स्वामिन्विश्वगुरो विष्णो हरब्रह्मादिपूजित ।
नारायण जगन्नाथ श्रीपते गरुडध्वज ।। ४९

मुकुन्द गोविन्द हरे भूपते पुरुषोत्तम ।
न ज्ञायते महागोप्यं मम पूज्यवरः शिवः ।। ५०

त्वं ब्रह्म त्वं प्रजानाथस्त्वमिन्द्रस्त्वं बृहस्पतिः ।
विष्णुस्त्वमीश्वरस्त्वं हि सूर्याचन्द्रमसावपि ।। ५१

वरुणः पावको धाता विधाता पुरुषोत्तमः ।
एवंविधो महेशान ध्यायसि त्वं कमीश्वर ।। ५२

त्वत्तोऽधिकतरः कश्चिदीश्वरोऽस्ति किमुच्यताम् ।
अस्ति चेद्ब्रूहि मे देवं तमीशं परमेश्वरम् ।। ५३

कुत्र प्रकाशते सोऽपि विशेषेण परात्परः ।
कुत्र वा नृत्तमकरोदसावानन्ददायकः ।। ५४

विष्णुरुवाच ।।

भोगीन्द्र नैव वक्तव्यमेतत्केनापि सर्पराट् ।
शेष वच्मि महाभाग रहस्यातिरहस्यकम् ।। ५५

योगिध्येयं परानन्दलक्षणं शृणु तत्वतः ।
ममापि च त्रिमूर्तीनामस्ति कर्ता परेश्वरः ।। ५६

साम्बश्चन्द्रकलाचूडस्त्रिनेत्रः कालकन्धरः ।
सत्यज्ञानघनानन्दो भवः पूर्णःसनातनः ॥ ५७

वासी च परकैलासे परिपूर्णोऽभिशोभितः ।
च्युताभिधाननगरे बहिरण्डस्थिते वरे ॥ ५८

तत्प्रान्ताग्नेयकोणस्थदेवदारुवनाञ्चिते ।
आनन्दनृत्तमकरोदृषीणां भावितात्मनाम् ॥ ५९

तन्नृत्तमुरगाधीश दृष्ट्वाऽऽनन्दभरोऽस्म्यहम् ।

*ஆதிசேஷன் வியப்படைந்தவனாய் கைகூப்பி ஸ்ரீபதியான புருஷோத்தமரிடம் விண்ணப்பித்தான். ''உடையவரே! உலகின் பெருமானான நீர் ஹரனாலும் பிரும்மாவாலும் பூஜிக்கப் பெறுபவர். என்னிடம் மறைக்கத்தக்கதாக உம்மிடம் எதுவுமில்லை. நீரே பரம்பொருள். நீரே அனைத்து தேவர்களுமானவர். நீர் எவரைத் தியானிக்கிறீர்? உம்மை விடப்பெரிய ஈசுவரன் ஒருவர் உள்ளாரா? அப்படி ஒருவர் இருப்பின் அவர் யார்? எங்கு உள்ளார்? எங்கு நடனமாடி ஆனந்தமளிக்கிறார்? ஆதிசேஷனிடம் அந்த ரஹஸ்யத்தை ஹரி விளக்கினார். ''மும்மூர்த்திகளான எங்களுக்கும் மேலானவர் பரமேச்வரர். அம்பிகையுடன் கூடியவர். சந்திரகலை சூடியவர். முக்கண்ணர், கருத்த கழுத்தினர். ஸத்யமும் ஜ்ஞானமும் ஆனந்தமும் கூடிச் செறிவுள்ள மேனியர். பரகைலாஸத்தில் உள்ளார். அவர் பிரும்மாண்டத்திற்கப்பாலுள்ள ச்யுதபுரத்தில் உள்ளார். அந்த ச்யுதபுரம் தேவதாருவனம் வரை வியாபித்துள்ளது. அதில் முனிவர்களின் எதிரே ஆனந்த நடனமாடுகிறார். அதன் தர்சனானந்தத்தில் நான் மூழ்கி உள்ளேன் என்றார். (48-59)*

इत्युक्तः पद्मनाभेन शेषस्साश्चर्यमानसः ॥ ६०

प्रणम्य विनयोपेतः प्राब्रवीच्च कृताञ्जलिः ।

शेष उवाच ।।

मया श्रुतमिदं देव न कदापि मुखाम्बुजात् ।। ६१

तेऽश्रुतं श्रोतुमिच्छामि यत्प्रोक्तं तत्प्रसीद मे ।
देवदारुवनं देव कुत्र तिष्ठति भूपते ।। ६२

च्युतपूः परकैलासः कथं भूलोकमाश्रितः ।
किन्निमित्तं दारुवने ननर्त परमेश्वरः ।। ६३

प्रसीद कृपया देव मयि कारुण्यतो हरे ।

विष्णुरुवाच ।।

ब्रह्मविष्ण्वीशलोकानामुपर्यण्डं विधेस्ततः ।। ६४

राजते परकैलासः परिपूर्णःसनातनः ।
च्युतपूःशिवलोकोऽसौ ज्ञानिनां परमा गतिः ।। ६५

अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य तिष्ठति सा पुरी ।
इह भक्तिमतां नृणां शिवे पूर्णसनातने ।। ६६

सा गतिः परमानन्ददायिनी श्रीच्युताह्वया ।
यथा सर्वगातःशम्भुःसाम्बःसत्यादिलक्षणः ।। ६७

सा तथा सर्वगा चैषा श्रीमच्च्युतपुरी फणिन् ।

*பத்மநாபரின் சொல்லைக் கேட்ட ஆதிசேஷன் வியப்படைந்து பணிவுடன் அவரிடம் கேட்டான். ''தேவரே! இதுவரை நான் கேட்டறியாதது. தேவதாருவனம், பரகைலாஸம், சிவலோகம் எனப் பெயர்பெற்ற ச்யுதபுரம் எங்குள்ளது? அங்கு ஏன் பரமேசுவரன் நடனமாடுகிறார் என. விஷ்ணு விளக்கினார். பிரும்மா விஷ்ணு ஈசன் என்ற மும்மூர்த்திகளின் உலகமாகிய பிரும்மாண்டத்தின் வெளியே பரகைலாஸம் என்ற ச்யுதபுரம் உள்ளது. ஞானிகள் சென்றடையவேண்டிய பேரிடம் அது. அது பிரும்மாண்டத்தின்*

உள்ளும் வெளியிலும் பரவி நிற்கிறது. பரமசிவனது அடியார்கள் சென்றடைகிற இடம். உலகெங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரமன் உலகத்தின் வெளியிலும் உள்ளதுபோல் அவரது நகரமான ச்யுதபுரியும் உள்ளது. (60-67)

अण्डाद्बहिष्ठापि पुरी राजधानी परात्मनः ॥ ६८

अण्डान्तर्वर्तिनी चैव श्रीमच्च्युतपुराह्वया।
सा पुरी नाशरहिता ब्रह्माण्डप्रलये तथा ॥ ६९

यथा शरीरगो ह्यात्मा देहनाशेऽप्यनाशितः।
कावेरीदक्षिणतटे सा पुरी क्रोशमात्रतः ॥ ७०

भासते प्रान्तविलसच्चतुष्टयमहावनैः।
श्रीदेवदारुबदरीशमीपिप्पलकाह्वयैः ॥ ७१

तत्र श्रीकृत्तिवासेशलिङ्गं ब्रह्माङ्कुरं बभौ।
विराजा पूजितः पूर्वमादिसृष्टौ महेश्वरः ॥ ७२

तस्माद्विराडीश इति प्रसिद्धिमगमद्भुवि।
तस्य प्राग्दक्षिणे देशे देवदारुवने शुभे ॥ ७३

चत्वारिंशत्सहस्रैश्च साष्टभिश्च मुनीश्वरैः।
शिष्यप्रशिष्यसहितैस्सकलत्रैस्सपुत्रकैः ॥ ७४

वैदिकानि च कर्माणि स्वाश्रमोक्तोचितानि च।
कुर्वते स्माखिलस्मार्तान्यप्यनिन्द्यानि कानि च ॥ ७५

ज्ञानकाण्डं विहायात्र कर्माकुर्वन्महीधर।
कर्मठाश्चाग्निहोत्राग्नौ यजन्तः शशिभूषणम् ॥ ७६

*அண்டத்திலுள்ள ச்யுதபுரி, பிரம்மாண்டம் உருவிழக்கிற பிரளய நிலையிலும் உருவிழக்காதது. காவேரியின் தென்கரையில் கூப்பிடு தூரத்தில் தேவதாருவனம் பதரீவனம், சமீவனம் பிப்பலவனம் என்ற நான்கு காடுகளினிடையே பரம்பொருளின்*

முளையாக ஸ்ரீ கிருத்திவாஸேசலிங்கமாக விளங்குகிறது. படைப்பின் தொடக்கத்தில் உலக வடிவில் மாறவிருந்த விராட் புருஷனால் வழிபடப்பெற்றவரானதால் விராடீசர் என்பர். அதன் தென்புறத்திலுள்ள தேவதாரு வனத்தில் 48000 முனிவர்கள் தன் சிஷ்ய - பிர சிஷ்யர்களுடனும் மனைவி மக்களுடனும் தம் தம் ஆசிரம நிலைக்கேற்றவாறு வேதம் கூறிய சடங்குகளைச் செய்து வந்தனர். ஈனமானதென எதையும் செய்ய மாட்டார். ஜ்ஞான காண்டத்தைப் புறக்கணித்துச் சடங்குகளில் ஆர்வம் மிக்கவராக, அக்னி ஹோத்ரத் தீயில் சிவனைக் கண்டு அவிஸ் அளித்து வந்தனர். (68-76)

ततो देवो महादेवः संसारोदधितारकः

आत्मविज्ञानलाभाय तेषां प्रादुरभूत्पुरः ।। ७७

गोक्षीरधवलाकारः प्रलम्बितजटाधरः ।
विशुद्धकौपीनधरो ढक्कावाद्यविशारदः ।। ७८

मोहयन्मुनिपत्नीनां समूहमुदभूच्छिवः ।
मन्दहासमुखाम्भोजो लावण्यैकनिकेतनः ।। ७९

ततोऽहं तस्य नागेन्द्र भार्या भूत्वातिसुन्दरः ।
तत्पुत्राणां विमोहार्थं जगामानुमहेश्वरम् ।। ८०

तन्मायामोहिता विप्रा भिक्षमाणं महेश्वरम् ।
मोहयन्तं वधूजालं शेपुः कोपारुणेक्षणाः ।। ८१

शापाः पराहताश्शेष तैर्दत्ता मुनिसत्तमैः ।
शिवे परात्परे तस्मिन्नभिभूताश्च तूलवत् ।। ८२

श्येनैरभिचरन्तस्त ईजिरे शङ्करं प्रति ।
मत्वा कामातुरमिति प्रसह्य मदनान्तकम् ।। ८३

आभिचारात्मके यज्ञे तेषां वै कर्मशालिनाम् ।
भूतोरगमहाव्याघ्रमृगापस्मारवह्नयः ।। ८४

सप्तकोटिमहासंख्याः पिशाचा ब्रह्मराक्षसाः।
संबभूवुर्महानाग संहारार्थं महेशितुः ।। ८५

तान्सर्वानागतान्शम्भुर्विनिगृह्य महोरग।
परिवाराम्बराकल्पस्वायुधानि चकार ह।। ८६

पुनःसमन्यवो विप्रा देवदारुवने भृशम्।
आभिचारं महायज्ञं चक्रुस्सर्वे महेश्वरे।। ८७

*ஸம்ஸாரக் கடலைத் தாண்டச் செய்கிற சிவபெருமான் அவர்களை ஆத்மஜ்ஞானம் பெறச் செய்ய அவர்கள் முன் தோன்றினார். பசுவின் பால் போன்ற வெண்ணிற மேனி, தொங்குகிற சடை, தூய கௌபீனம் இடுப்பில், உடுக்கடிப்பதில் திறமை என வேஷம் கொண்டு முனிவரின் மனைவியரை மயக்குபவராக புன் சிரிப்புடன் அழகே உருவானவராகத் தோன்றினார். நான் அவரது மனைவியாகி அவரைத் தொடர்ந்து முனிகுமாரர்களை மயக்க மோஹினியாகிச் சென்றேன். தம் பத்னிகளைக் கவர்ந்த சிவனை அவர்கள் சபித்தனர். சாபம் சிவனிடம் பலிக்காமல் பயனற்றுவிட்டதை உணர்ந்த முனிவர்கள் ச்யேனயாகம் முதலிய அபிசார வேள்விகளில் முனைந்தனர். அதன் விளைவாக வெளிவந்த பூதம், நாகம், புலி, மான், அபஸ்மாரம் என்றநோய், தீ, பிசாசுகள், பிரும்மராக்ஷஸர் (ஏழுகோடி) என அனைவரையும் பரிவாரங்களாகவும் ஆடையாகவும் ஆபரணமாகவும் ஆயுதமாகவும் சிவன் மாற்றி ஏற்றுக் கொண்டார். மறுபடியும் அவர்கள் அபிசார வேள்வி நடத்தினர். (77-87)*

आविर्बभूव तत्राहो गजेन्द्रो विकृतस्वनः।
आजगाम शिवं नागो हन्तुं विप्रैःसमीरितः ।। ८८

विदार्य तं महाभीमं प्रावृत्य करिपुङ्गवम्।
ननर्त परमेशानो मस्तके तस्य कुम्भिनः ।। ८९

अहं ढक्कां गृहीत्वाथावादयं परमेशितुः।
तालं गृहीत्वा चन्द्रार्कावनाटयमुमापतिम्।। ९०

चतुर्मुखोऽपि भगवाञ्शिवभक्तिमतां वरः ।
तं नृत्तं गिरिजेशस्य कृत्तिवासेश्वरस्य च ॥ ९१

स्मृत्वा स्मृत्वा महानाग महानन्दप्रदं विभोः ।
तेन विस्मृतदेहोऽहं महाभारतरस्तव ।
जातोऽस्मि शेष नितरां तेन हाहाकृतस्त्वया ॥ ९२

इति प्रथमोऽध्यायः

*

*அதில் தோன்றிய பெரும்யானை காதிற்குக் கொடூரமான பிளிறலுடன் சிவனை அழிக்க வந்தது. அதனைக் கிழித்து ஆடையாக்கிக் கொண்ட பரமன் அதன் மத்தகத்தின் மீது நடனமாடினார். நான் அதற்கேற்ப உடுக்கை வாசித்தேன். சந்திரனும் சூர்யனும் தாள வாத்யமாயின. பிரும்மா அவற்றைக் கொண்டு தாளம் போட்டார். அதனை நினைத்து நினைத்துப் பேரானந்தமடைந்த நான் உடலை மறந்ததால் உனக்குப் பெரும் சுமையானேன். நீ ஹா ஹா என அலறினாய்! என்றார். (88-92)*

*

॥ अथ द्वितीयोऽध्यायः ॥

सूत उवाच ॥

एवं ब्रुवन्तं कमलाधरित्रीपतिं हरब्रह्मसुरादिपूज्यम् ।
कृताञ्जलिः केशवमप्यपृच्छत्प्रणम्य भक्त्या भुजगाधिराजः ॥ १

शेष उवाच ॥

वेदान्तवेद्य प्रणवप्रकाश पुराण नारायण विश्वमूर्ते ।
प्रसीद कारुण्यनिधे मुकुन्द मयि त्वदाराधनतत्परे त्वम् ॥ २

श्रुतप्रभावं च्युतपूरुदन्तं श्रुतिप्रसिद्धाचरणप्रसिद्धैः ।
प्रसिद्धयोगीन्द्रगणैश्च पूज्यं श्रुत्वाऽत्र भक्त्या मम तुष्यते मनः ॥ ३

ब्रह्माण्डतो बाह्यविवर्तिनी सा ब्रह्मादिभिः पूजितसत्प्रभावा।
वासः शिवस्यात्मभुवः कथं वा चैनां भुवं प्राप्तवती च्युताह्वा ।।४

कैरभ्युपेता कमलासहाय कैलासवर्या मुनिभिश्च धन्यैः।
तस्यां सुतीर्थानि च सिद्धिदानि सन्त्यप्रमेयात्मगुणानि कानि ।।

तत्प्रान्तमुन्याश्रितदेवदारुकान्तारमाहात्म्यमपि प्रचक्ष्व।
तदाश्रितानां यमिनां क्रियाश्च विशुद्धविज्ञानसुदानदक्षाः ।। ६

सूत उवाच ।।

एवं प्रपृष्टः स तु शार्ङ्गपाणिर्ध्यात्वा शिवं साम्बमतीव भक्त्या।
निमील्य नेत्रे निखिलात्मदेवं पुनः शिवानन्दनिधौ निमग्नः ।। ७

*அத்யாயம் - 2*

*ஸூதர் விளக்குகிறார் - லக்ஷ்மிக்கும் பூமிக்கும் கணவரும் ஹரன் பிரும்மா மற்றும் தேவர்களால் வழிபடப் பெற்றவருமான கேசவனை அணுகிப் பக்தியால் வணங்கி ஆதிசேஷன் வினவினான்- ''வேதாந்தத்தால் அறியத் தக்கவரே! ஓங்காரத்தின் ஒளியே! பழையவரே! நாராயண! உலகின் வடிவானவரே! கருணையின் வைப்பிடமே! முகுந்த! உம்மை மகிழ்விப்பதில் ஆர்வமிக்க என்னிடம் அருள்புரிவீர். வழுவூரின் வரலாறு புகழ்பெற்றது. வேதத்தில் விளக்கப்பெற்ற சடங்குகளைப் புரிவதில் தேர்ந்த புகழ்பெற்ற யோகியரால் வழிபடப் பெற்றது. அதனைப் பக்தியுடன் கேட்ட என்மனம் மகிழ்கிறது. பிரும்மாண்டத்திற்கு அப்பாற்பட்ட சிறந்த ச்யுதபுரீ, ஸ்வயம்புவான சிவபெருமானின் இருப்பிடமாயிருந்தது, எவ்வாறு பூமியில் இடம்பெற்றது? அதில் எந்த முனிவர்கள் வாழ்ந்தனர்? அதனுள் எண்ணற்ற சிறப்பு மிக்கவையும் நாடியதை அளிப்பவையுமான தீர்த்தங்கள் எவை?'' என ஆதிசேஷனால் கேட்கப்பட்ட சார்ங்கபாணி சிவனை உள்ளத்தில் நினைத்து கண்கள் மூடியவராய் சிவானந்தத்தில் ஆழ்ந்திருந்தார். (1-7)*

ततः शिवानन्दरसं निपीय ब्रह्मादिदेवप्रमुखैरलभ्यम्।
उन्मील्य नेत्रे कमलासहायो वाचा शिवेति प्रवदन्मुकुन्दः ।। ८

उवाच माहात्म्यमतीव चित्रं च्युताभिधानस्य पुरस्य विप्राः ।
तस्योपकण्ठस्थितदेवदारुकान्तारमाहात्म्यमिह द्विजानाम् ॥ ९

श्रीभगवानुवाच ॥

सम्यक्प्रपृष्टं भुजगाधिराज समस्तकैवल्यपदप्रदातृ ।
उपासकानां मम वल्लभानां शिवार्चकानामिह वासिनां च ॥ १०

हिताय वक्ष्ये जगतां जनानां शिवाङ्घ्रिसंसक्तमनोम्बुजानाम् ।
च्युताभिधानस्य पुरस्य तेऽद्य माहात्म्यमात्मप्रतिबोधकं तत् ॥ ११

पुरा कदाचित्प्रलये विधातुः प्रनष्टताराधिपसूर्यऋक्षे ।
ग्रहादिशून्येऽप्यसृजद्विराजं भूम्यादितत्त्वात्मकमम्बिकेशः ॥ १२

स्वस्मिन्षडाधारतलेषु योगी लिङ्गानि षट् कल्प्य महेश्वरस्य ।
स पूजयामास शिवात्मसिद्ध्यै स्वद्वादशान्तोपरि चातिभक्त्या ॥ १३

बाह्यस्थितं पूर्णमनन्तमाद्यं ज्योतिः परञ्चाधिशिरो विधाता ।
आनर्च देवं शिवमम्बिकेशं लिङ्गं स्वनाम्ना परिकल्प्य सोऽस्मिन् ॥ १४

*பிரும்மா முதலானவருக்கும் கிட்டாத சிவானந்தத்தின் சுவையில் ஆழ்ந்த லக்ஷ்மீபதி கண்களைத் திறந்து சிவ! என வாயால் கூறி ச்யுதபுரி மற்றும் அதனருகில் உள்ள தேவதாரு வனத்தின் பெருமையைக் கூறினார். சிவனை உபாசிப்பவர்கள் என் அன்புக்குரியவர். அவர்களுக்கு கைவல்யம் என்ற ஆத்மானுபவ நிலையை அருள்வது ச்யுதபுரி பற்றிய வரலாறு. சிவனது திருவடிகளில் உள்ளத்தாமரையை ஆழப்பதித்துள்ள மக்களின் நன்மை பொருட்டு அதனைக் கூறுகிறேன். பிரும்மாவின் பிரளயத்தின்போது ஸூர்யன் சந்திரன் நக்ஷத்திரங்கள் மற்றும் கிரஹங்கள் ஒளியிழந்து மறைந்த நிலையில் பூமி முதலிய ஐந்து தத்துவங்களின் மூல நிலையான விராட்புருஷனை ஈசன் உருவாக்கினார். அந்த விராட்புருஷன் யோகநிலையின் மூலம், மூலாதாரம் முதலிய ஆறு இடங்களில் ஈசனை லிங்கவடிவினராக்கி வழிபட்டுப்பின், இந்த ஆதாரங்களுக்கும் அப்பாற்பட்ட*

*துவாதசாந்தத்தில் தான் சிவ நிலைபெற மிக பக்தியுடன் வழிபட்டார். பூர்ணனும் எல்லையற்றவரும் எல்லாவற்றிற்கும் ஆதியுமான அந்த ஜோதியை தன் பிரும்மரந்திரத்தின் மேலிருப்பதான பாவனையுடன், விராடீச்வரர் எனப் பெயரிட்டுப் பூஜித்தார். (8-14)*

बाह्यच्युतं भावनया विराजश्चान्तः परं धाम सुपूर्णमैशम्।
तद्ब्रह्मरन्ध्रान्तरगं धरायां चकासयामास स लिङ्गमाद्यम्॥ १५

तस्माच्च्युतत्वात्पुरमादिधाम साम्बेन साकं परिवर्तितं तत्।
च्युताह्वयं द्राक्पुरवैरिणैव बभूव नित्यं वरयोगिजुष्टम्॥ १६

ततो विराडीश इति प्रसिद्धं श्रीकृत्तिवासेश्वर इत्यपि प्राक्।
अण्डाद्बहिष्ठं परिपूर्णमाद्यं ज्योतिर्मयं तत्र समाससाद॥ १७

बालाङ्कुराम्बा परमेशशक्तिः शिवेन सार्धं रमते सदात्र।
बालार्भकस्कन्दनिषण्णसव्यविलग्नका वाञ्छितसिद्धिदात्री॥ १८

प्रत्यूहकालानलकालमेघः प्रपन्नदारिद्र्यहिमोष्णरश्मिः।
पक्षीशवाहादिनुताङ्घ्रिपद्मः क्षिप्रप्रसादोऽत्र बभौ गणेशः॥ १९

स्वपादपद्मार्पितमानसानां सरस्वतीश्रीमतिदानदक्षः।
शिवप्रियाणामपि विश्वमूर्तिः क्षिप्रप्रसादोऽत्र बभौ गणेशः॥२०

*விராட்புருஷனின் அந்த பாவனாயோகத்தில் அந்த ஜோதி நழுவி பிரும்மரந்திரத்தினுள் நிறைந்து பின் பூமியில் ஆதிலிங்கமாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டது. ஆதிப்பொருள் தானே விராட்புருஷனின் துவாதசாந்தத்திற்கும் மேலிருந்த நிலையிலிருந்தும் நழுவி, பிரும்மரந்திரத்தினுள் தெளிவாகக் காட்சி தந்து அங்கிருந்தும் நழுவி ச்யுதபுரத்தில் சிவபெருமானாலேயே வெளிப்படுத்தப்பட்டது. சிறந்த யோகிகள் அதனை அடைந்தனர். அண்டத்திற்கு வெளியிலிருந்த ஆதி பெரும் ஜோதியே விராடீசராக கிருத்திவாஸேசராக, இங்கு நிலை பெற்றுர். அந்த பரமேசனின் சக்தியான பாலாங்குராம்பாள், தன் மடியில் பாலஸுப்ரம்ஹண்யனை அமர்த்திக் கொண்டவளாக*

*எப்போதும் நாடியதை அருள்பவளாக சிவனுடன் விளையாடுகிறாள், இங்குள்ள கணபதி இடையூறுகள் எனும் நெருப்பை அழிக்கிற கருமேகம், அடியாரின் ஏழ்மை எனும் பனிக்கு சூர்யன், விஷ்ணு முதலானோரால் வணங்கப்பெற்றவர். எளிதில் அருள்பவர். தன் திருவடிகளில் தன் உள்ளத்தை அர்ப்பணம் செய்பவருக்கு வாக்குவன்மை செல்வம் நன்மதி அளிப்பவர். சிவனடியார்களுக்கும் உடன் விரைவில் அருள்பவர். (15-20)*

नृत्यन्तमत्रेभशिरस्युदीक्ष्य परं शिवं जातु भुजङ्गवीर।
सद्यो विमुक्तो भवति द्विजो वा शूद्रोऽथवाऽन्योऽपि महाघकारी॥ २१

यो माघमासे पितृतारके तु सपर्वणि प्रातरुमासहायम्।
नृत्यन्तमाद्ये सदसि प्रमुक्तो दृष्ट्वा भवेद्धस्तिसरोऽवगाही॥ २२

पापाधिको वा पुरुषाधमो वा द्विजाधमो वाऽऽदिसभाङ्गणे तत्।
श्रीवीरनृत्तं क्रियमाणमीशा दृष्ट्वा विमुक्तो भवति क्षणेन॥ २३

यः प्रातरुत्थाय पुरं च्युताह्वं स्मरेत्स्वचित्ते सुविनिर्मलान्तः।
शिवं परं ज्योतिरतीव गुह्यं जीवन्स मुक्तो भवति क्षणेन॥ २४

दिनं दिनार्धं च्युतपूर्निवासं करोति यः कश्चन नागराज।
स मुक्त एवानिशमत्र वासी किमात्मकस्तच्छिव एव वेत्ति॥ २५

च्युताह्वयं प्राप्य पुरं नरो यो मृतिं परत्रापि लभेत भूयः।
न लप्स्यते जन्म शिवस्वरूपी वसत्यवश्यं शिवसन्निधौ सः॥२६

ये स्थावरास्तत्र भवाश्च गावो गुल्मा मनुष्याः खलु पक्षिणस्ते।
सजीवमुक्तास्सकला भवन्ति सत्यं पुनस्सत्यमिदं हि वच्मि॥ २७

इदं पुरं श्रीच्युतनामधेयमण्डाद्बहिष्ठं सकलैरुपास्यम्।
मुमुक्षुभिर्वाथ गृहाश्रमस्थैर्वनाश्रमस्थैरपि वर्णिभिर्वा॥ २८

सर्वेष्वपि क्षेत्रवरेषु मुक्तवपुष्मतां भस्मवतां नराणाम्।
एषा गतिः श्रीच्युतराजधानी सत्यं पुनः सत्यमिहोरगेश ।। २९

गोघ्नः कृतघ्नो गुरुमित्रघाती यो ब्रह्महा मद्यपहेमचोरौ ।
तूष्णीमसौ श्रीच्युतपूः प्रवेशात् मुक्तो भवत्येव हि सत्यमुक्तम्।। ३०

यः प्रातरुत्थाय नरोऽपि पञ्चब्रह्माभिधानं स्मरतीह तीर्थम्।
उपैति मुक्तिं स्मरणात्स तत्राम्भसि प्रवाच्यं किमुताप्लुतो ना ।। ३१

*யானை மத்தகத்தில் நடனமாடுகிற ஈசனைத் தரிசிப்பவர் எவராயினும் உடன் முக்திபெறுவர். மாசி மாதத்தில் பித்ருக்களுக்குகந்த மகநக்ஷத்திரத்தன்று உமையுடன் கூடிய ஸபாநாதரை தரிசனம் செய்வதும் ஹஸ்தி தீர்த்தத்தில் நீராடுவதும் பாபத்தை நீக்கவல்லவை. முக்தி தருபவை. வழுவூரைக் காலையில் எழுந்ததும் நினைக்க, சிவனெனும் பரம்ஜோதியை தியானிக்க, ஜீவன் முக்தனாவான், ஒருநாளோ அரைநாளோ அங்கு வசிக்க அவன் முக்தனே. அவனது பெருநிலை பற்றிச் சிவனே அறிவார். வழுவூரில் தங்கி மற்றதொரு ஊரில் உயிர் நீத்தாலும் அவனுக்கு மறுபிறப்பில்லை. சிவஸன்னிதியில் வாஸம் கிட்டும். அங்குள்ள தாவரங்கள், பசுக்கள், புதர்கள், மனிதர், பறவைகள் என அனைவரும் ஜீவன் முக்தர்களாவர். எந்த ஆசிரமத்தைச் சார்ந்தவரும் இதில் வஸிப்பது பெரும் மேன்மை தரும். சிறந்த புண்யக்ஷேத்திரத்தில் உயிர் நீத்தவரின் சாம்பலை அடக்கம் செய்ய ஏற்றதலமிது. பசுவதை, நன்றி மறத்தல், குரு - நண்பர் - அந்தணர் இவர்களைக் கொன்றது, மது குடித்தல், தங்கம் திருடுவது என்ற மகாபாபங்கள் இங்கு நுழைந்த உடன் அகலும். விழித்தெழுந்தவன் பஞ்ச பிரும்ம தீர்த்தத்தில் நீராடினாலோ நீரைத் தெளித்துக் கொண்டாலோ நினைத்தாலோ முக்தி பெறுவான்.* **(21-31)**

अन्यस्थलेष्वार्जितपापराशिः पुण्यस्थलेषु प्रविनश्यति प्राक्।
तत्रार्जितः पापसमूह एव शिवस्थलेषु प्रलयं हि याति ।। ३२

तत्रार्जितं कर्म विनाशमेति पापञ्च काश्यां कृतमात्मकर्म।
विनाशमेष्यत्यविमुक्तकेऽपि तत्रार्जितं श्रीच्युतराजधान्याम्।। ३३

तत्रार्जितानामपि कर्मणाञ्च तत्रैव नाशः शुभकल्मषाणाम्।
श्रीकृत्तिवासेश्वरमाश्रितानां मनुष्यगोपक्षिमृगादिकानाम्।
न पुण्यपापे सततं जनानां नास्त्येव सत्यं कथितं मया ते ।। ३४

अनन्तमानन्दमचिन्त्यवैभवं चिरन्तनं चिन्मयमच्युतं च्युतम्।
ध्यानाद्विराजोऽन्तरतः पुरं महः पूर्णं परं ज्योतिरमेयमीशितुः ।। ३५

तस्मात्पुरी श्रीच्युतनामधेया ब्रह्माण्डगोलान्तरितापि सत्या।
अण्डस्य नाशोऽपि न तद्विनाशो यथा शरीरापगमे च जीवः ।। ३६

अनेकजन्मार्जितपुण्यबृन्दैः शिवाश्रितैः श्रीच्युतराजधानी।
संप्राप्यते श्रीशिवपञ्चवर्ण - जपादृतैर्भक्तवरैर्मुनीन्द्रैः ।। ३७

*மற்ற இடங்களில் செய்தபாபம் புண்யஸ்தலத்தில் தங்குவதால் நீங்கும். புண்யஸ்தலத்தில் செய்த பாபம் சிவஸ்தலவாஸத்தால் நீங்கும். சிவஸ்தலங்களில் செய்த பாபம் காசியில் நீங்கும். காசியில் செய்த பாபம் வழுவூரில் நீங்கும். வழுவூரில் சேமித்த பாபம் தன் பாபத்தன்மையை இழக்கும். இங்கு புரிகிற புண்ய பாபங்கள் இங்கேயே மறையும். கிருத்திவாஸரை அண்டிய மனிதர் பசு பக்ஷி மிருகம் முதலியவர்களுக்குப் புண்யமோ பாபமோ இல்லை. இந்த ஸ்தலம் எல்லையற்ற ஆனந்தவடிவானது. இதன் பெருமையை மனத்தாலும் காண இயலாது. ஞானமயம், மிகப்பழமையானது, நழுவிப் பாபத்தில் விழவிடாதது. தான் அண்டத்தின் வெளியிலிருந்து நழுவியது. விராட்புருஷன் தன் த்யானத்தால் பூர்ணமான ஈசனின் பரம்ஜோதி எனக்கண்ட பேரொளி. அதனால் பிரும்மாண்ட கோளத்தினுள் நழுவி விழுந்ததாயினும் பிரும்மாண்டத்திலுள்ளது போல் அநித்தியமாக இராமல் நித்தியமானதே. அண்டம் நசித்தாலும் இது நசியாது. உடல் நீங்கிய பிறகும் ஆத்மா நிலைத்துள்ளதுபோல் இது நிலைத்துள்ளது. பல பிறவிகளில் செய்த புனித கருமங்களின் பயனாக சிவனடியார்கள் இவ்விடம் வருகின்றனர். சிவபஞ்சாக்ஷரம் ஜபிக்கிற சிறந்த பக்தர்களே இதனை அணுகுவர். (32-37)*

शिवाश्रितानामहमेव देहो वर्णाश्रमाचारसमाश्रितानाम्।
आत्मा स तेषां परमेश्वरोऽसौ साम्बः स कल्याणगुणोऽभिरामः ।। ३८

तैरेव भक्तैरनिशं पुरी सा सम्भावनीया च्युतनामधेया।
यस्याश्च पुण्यानि कृतानि भोगिन् पापानि नो सन्ति तदाश्रितानाम्॥ ३९

योगैर्विनाष्टाङ्गयुतैर्ऋतेऽपि सदा प्रजप्तैरिह पञ्चवर्णैः।
विना शिवार्चाभिरुमेशनत्या जीवन्प्रमुक्तः खलु वासशीलः॥ ४०

च्युताह्वयायां शिवराजधान्यां निवासिनां नैव च गर्भवासः।
जातोऽथवा योऽथ मृतोऽत्र देही विद्वान्सुमूर्खो मृगपक्षिणौ वा॥ ४१

वह्नीशरक्षोऽनिलकोणदेशे भूम्यम्बुतेजोमरुदाह्वयानि।
तीर्थानि रम्याणि शुभोदकानि स्नानेन विद्याप्रददक्षिणानि॥ ४२

पञ्चशिलीमुखपातमितानि पञ्चविधातृसरांस्यभितश्च।
सञ्चितपापहराणि च तानि स्नानत एव शिवाकृतिदानि॥ ४३

चतुर्णामपि तीर्थानां भूम्यादीनामहीश्वर।
माहात्म्यमतुलप्रख्यं मया वक्तुं न शक्यते॥ ४४

तीर्थरूपस्य देशस्य ब्रह्मभूतस्य वै पुनः।
तीर्थराजस्य महिमा मया वक्तुं न शक्यते॥ ४५

तीर्थानि सन्तीह पदे पदेऽहे सुपुण्यवारीणि सुशीतलानि।
अनेकमाहात्म्ययुतान्यगण्यसुपुण्यकल्याणगुणप्रदानि॥ ४६

*வர்ணாசிரம நெறிப்படி நடக்கிற சிவனை அண்டியவர்களின் உடல் நான். ஆத்மா அந்த பரமேசுவரன். அவர் மங்கள குணங்களுடன் மனத்தைக் கவர்பவர். அதனால் வழுவூர் சிவபக்தர்களின் மதிப்பிற்குரியது. இதில் செய்த செயல்களனைத்தும் புண்யமாகும். இதனை அண்டியவரின் எந்தச் செயலும் பாபமாவதில்லை. எட்டங்கமுள்ள யோகநிலைகள், பஞ்சாக்ஷரஜபம், சிவனது வழிபாடு, சிவனை வணங்குவது இவற்றில் ஈடுபடுபவரே இங்கு வசிப்பர். இங்கு வசித்தவருக்கு மறுபடி கருவறை வாசமில்லை. அறிவாளியாயினும் அறிவிலியாயினும் மிருகமோ பக்ஷியோ ஆயினும் அவருக்கு மறுபிறப்பில்லை. தென்கிழக்கிலும், வடகிழக்கிலும்,*

*தென்மேற்கிலும், வடமேற்கிலும் புனிதமிக்க நீர்நிலைகள் உள்ளன. இவற்றில் நீராட, கல்வி அறிவு பெருகும். பஞ்சபிரும்ம தீர்த்தத்தைச் சுற்றிலும் ஐந்து வில்லடி தூரத்திற்குள் அவை உள்ளன. நீராடுபவருக்குச் சிவநிலை அருள்பவை. அந்த தீர்த்தங்களுக்கும் ஸ்தலத்திற்கும் உள்ள பெருமையைக் கூற, விஷ்ணுவான என்னாலும் இயலாது. தீர்த்தமும் பரம்பொருளே! தீர்த்தமாக அமைந்த இடமும் பரம்பொருளே. அடிக்கொரு தீர்த்தம் இங்கே உள்ளது. புனித நீர் நிரம்பியது. குளிர்ச்சி தருவது. பல பெருமைகள் கொண்டது. புனிதமும் மங்களமுமான சிறப்பை வழங்குவது. (38-46)*

श्रीकुञ्जराशनशमीबदरीवनानां
श्रीमच्युताह्वयपुरीविदिगास्थितानाम्।
माहात्म्यमद्य गदितुं न मयालमेत-
न्मध्यस्थलिङ्गमहिमानमपि द्विजेन्द्र॥ ४७

तदग्निकोणस्थितदेवदारु वनस्य माहात्म्यमपि प्रशस्तम्।
वक्तुं न शक्यं हि सुसूक्ष्ममेव मयालमेतस्य किमूरगेश॥ ४८

स्थूलं तथापि प्रवदामि तस्य माहात्म्यमद्वैतनिकेतनस्य।
शिवप्रसादादपि तस्य नित्यं तदाश्रितानामपि सच्चरित्रम्॥ ४९

रुद्राब्जासनपङ्कजेक्षणमुखैः सेन्द्रामरैः सेविते
श्वेतद्वीपवरे कपित्थकदलीखर्जूरबिल्वान्विते।
जम्बीरासनदाडिमार्जुनवटप्लक्षाम्रजम्बूधव-
प्रोद्यद्वीरतरुप्रफुल्लवकुल श्रीचम्पकैरञ्चिते॥ ५०

भक्तैर्योगिभिरावृते मम विभुर्देव्या च विश्वाधिको
मुक्त्वा तत्र पुरातनं च्युतपुरं ब्रह्माण्डबाह्यास्थितम्।
गत्वा विश्वपतिस्तपन्तमनिशं भस्मासुरं छन्दयन्
स्वच्छन्देन वरेण हस्तगवनक्षारो भवेत्याह तम्॥ ५१

सोऽयं दुरात्मा परिपूर्णमेनं शिवं परानन्दघनं ह्यविद्य।
स्प्रष्टुं समाक्रामत शोधनार्थं शिवः प्रधावत्यभिमर्शकातरः॥ ५२

तद्भक्तिरूपोऽहमतीव दुष्टमुपायतस्तं विनिगृह्य दैत्यम्।
तद्धस्तविन्यस्तशिरः प्रदेशो मया स वै मारित एव सर्पः॥ ५३

*வழுவூரின் விதிக்குகளில் அமைந்துள்ள அரசங்காடு, வன்னிக்காடு மற்றும் இலந்தைக் காட்டின் பெருமையையும் அவற்றின் நடுவிலுள்ள லிங்கங்களின் சிறப்பையும் சொல்ல என்னால் இயலாது. அதன் தென்கிழக்கிலுள்ள தேவதாருவனத்தின் சிறப்பும் சொல்லிலடங்காதது என்றாலும் அது பற்றி ஸ்தூலப்பார்வையில் சிவனருளால் உணர்ந்ததை அங்கு வசித்த பெரியோர்களின் வரலாற்றுடன் கூறுகிறேன். சிவன் பிரும்மா ஹரி இந்திரன் முதலான தேவர்கள் சென்றடைகிற சுவேத த்வீபம். விளா, வாழை, பேரீச்சை, வில்வம், எலுமிச்சை, வேங்கை, மாதுளை, மருது, ஆல், இச்சி, மா, நாவல், ஓமம், மகிழ், சம்பகம் முதலிய மரங்கள் நிரம்பியது. பக்தர்களான யோகிகள் நிறைந்தது. பிரும்மாண்டத்தின் வெளியிலுள்ள ச்யுதபுரத்திலிருந்து வெளியேறிய சிவபெருமான் இங்கு பஸ்மாஸுரனின் தவத்திற்குப் பயன்தர இங்கு வந்தார். தன் விருப்பப்படி கை பட்டவனைச் சாம்பலாக்குகிற வரத்தை அவன் கேட்க, அப்படியே ஆவாய் என அருள் புரிந்தார். பேரானந்தச் செறிவின் வடிவினரான சிவபெருமானது உண்மை நிலையை உணராத பஸ்மாஸுரன் கெட்ட எண்ணம் கொண்டவனாகி, சிவனையே தொட அணுகினான். சிவன் இவனது ஸ்பர்சத்தில் பயந்து ஓடினார். அவரது பக்தனான நான் உபாயத்தால் அவனை அடக்கி அவனது கையாலேயே அவனது தலையைத் தொடச்செய்து அழித்தேன். (47-53)*

अथ किल परमेशो मां मुनिप्राप्तमोह
प्रकरणपटुदेहं प्रार्थयामास शम्भुः।
मम तव महिलाया दर्शयस्वेति रूपं
निखिलहृदयमोहं क्षिप्रमापादयत्तत्॥ ५४

अहिवर परमेशे दर्शितं देवदारु-
प्रवरगहनभूमावङ्गनारूपमाशु।
सवनकरणशूरांस्तेन सम्मोहयित्वा
विधिवदुपदिदेश ज्ञानमार्यो मुनीनाम्॥ ५५

इति द्वितीयोऽध्यायः

—*—

*முனிவரை மயக்குகிற உடல் வனப்பு கொண்ட என்னிடம் நீ பெண்ணுருக்கொண்டு அதனை எனக்குக் காட்டுவாய் என்று கோரினார். அது அனைவரின் உள்ளங்களையும் உடன் மயக்கியது. பாம்பரசனே! பரமேசுவரரிடம் காட்டிய அதே மோஹினி வடிவைக் கொண்டு தேவதாருவனத்தில் வேள்விபுரிவதில் திறமைமிக்க அந்தணரை மயக்கி அவர்களனைவருக்கும் ஆத்மஜ்ஞானத்தை உபதேசித்தார். (54-55)*

—*—

अथ तृतीयोऽध्यायः

भस्मासुरसंहारः

शेष उवाच—

देवदेव करुणापयोनिधे माधवार्य मधुकैटभान्तक।
शङ्करो जगदधीश्वरः शिवः पूर्ण एवं सचराचरं जगत्॥ १
देवदारुवनमाप्तमात्मना तत्कथं कथय मय्यनुग्रहात्।
शङ्करस्य च कदा तव प्रभो कुत्र वा समुदभून्महात्मनः॥ २
अच्युत च्युतपुरं पुरातनं त्वण्डबाह्यनिलयं विसृज्य च।
किन्निमित्तमगमच्छिवः क्षयं श्वेतमेतमखिलात्मकः प्रभुः॥ ३

सूत उवाच॥

इति ब्रुवन्तं फणिपुङ्गवं तं विनीतिमन्तं त्वतिभक्तिमन्तम्।
उवाच विष्णुर्वरयोगिजिष्णुर्हिताहितश्चापि सदा सहिष्णुः॥ ४

அத்தியாயம் 3

பஸ்மாஸுரனை அழித்தல்

சேஷன் ஸ்ரீமன் நாராயணனிடம் விண்ணப்பித்தார். ''தேவதேவரே! கருணைக்கடலே! மாதவ! ஐயனே! மதுகைடபர்களை அழித்தவரே! உலகின் ஈசனுன சிவன் எங்கும் நிறைந்துள்ளவர். அவரே அசைவதும் அசையாதிருப்பதுமான உலகமும். அவர் ஏன் குறுக்கிக் கொண்டு தேவதாரு வனத்திற்குச் சென்ருர்? நீங்களும் அத்தகையவரே! ஏன் தம்மைக் குறுக்கிக் கொண்டு அங்கு சென்றீர்? அண்டத்திற்கு வெளிப்பட்ட மாபெரும் ச்யுதபுரம் விட்டகன்று ஏன் ச்வேத க்ஷேத்திரம் சென்ருர்'' என்று பணிவுடன் கேட்ட சேஷனிடம் பொறுமைமிக்கவரும், சிறந்த யோகிகளையும் தன் வசமாக்குபவருமான விஷ்ணு கூறினுர். (1-4)

विष्णुरुवाच ॥

शृणुष्व वेदाखिलसारमेतत्पृष्टं त्वया योगिगणार्थनीयम् ।
वक्ष्यामि नाथस्य ममाव्ययस्य चित्रं चरित्रं परमाद्भुतं तत् ॥ ५

विरिञ्चनारायणशङ्करेशसदाशिवातिप्रियमिष्टदं तत् ।
चिरन्तनं चिन्मयमप्रमेयमनन्तमव्यक्तमगण्यमस्ति ॥ ६

सहस्रशीर्षा पुरुषस्सहस्राक्षस्सहस्रपात् ।
स भूमिं विश्वतो वृत्वाऽत्यतिष्ठद्दशाङ्गुलम् ॥ ७

पुरुष एवेदं सर्वं यद्भूतं यच्च भव्यम् ।
उतामृतत्वस्येशानो यदन्नेनातिरोहति ॥ ८

एतावानस्य महिमाऽतो ज्यायांश्च पूरुषः ।
तस्य काचित्प्रभा शक्तिरखण्डज्ञानरूपिणी ॥ ९

पुन्नपुंसकयोस्तुल्या महिलासु विशिष्यते ।
सैवाहमहमेवासौ पुंश्च स्त्रीव्यक्तिधारिणौ ।
ईश्वरस्य हरीशस्य सच्चिदानन्दरूपिणः ॥ १०

*சேஷனே! நீ கேட்டது வேதத்தின் ஸாரமான உண்மை. யோகிகள் இதையே தேடுகின்றனர். எம்மிருவரின் பெரு வியப்புக்குரிய நடைமுறையை விளக்குகிறேன். பிரும்மா நாராயணன் சங்கரன் ஈச்வரன் ஸதாசிவன் என ஐவராக இருப்பது சித் ஸ்வரூபம். இதனை விளக்க இயலாது. (புருஷஸூக்தம் கூறும்) அந்தப் பரமபுருஷன் ஆயிரக்கணக்கான தலைகள் கண்கள் கால்கள் கொண்டவர். அவர் பூமி எங்கிலும் பரவி நிற்பதுடன் அந்த அண்டகோசத்தின் வெளியே பத்தங்குலம் வியாபித்துள்ளார். (அறிவிற்கெட்டிய எல்லையைத் தாண்டியும் உள்ளார்.) அவரே இதுவரை தோன்றியதனைத்தும். இனித் தோன்றவிருப்பதும் அவரே! அவரே அமுதநிலையின் பேராளுனர். உணவால் வளர்வதனைத்தும் அவரது கட்டுப்பாட்டில் உள்ளது. இந்த அளவு பெருமை உண்டு. ஆனால் அதற்கும் அப்பாற்பட்டவர். அவரது ஒளியே சக்தி. அவளும் துண்டாடப்பெறாத பூர்ணஜ்ஞான வடிவினள். ஆணினத்திடமும் பெண்ணினத்திடமும் அவள் ஸமமாகவே உள்ளாள். எனினும் பெண்ணிடம் சற்று அதிக அளவில் உள்ளாள். அவளே நான். ஆணே சிவன். அந்த பேரிருக்கையும், பேருணர்வும், பேரானந்தமுமே வடிவான ஈசுவரனின் இனிய துணைவி நான். (5-10)*

शम्भोश्च मे नास्ति कदापि कश्चिद्भेदो हरीशाब्जजपूज्ययोश्च।
यथार्कभान्वोस्तिलतैलयोश्च ज्योत्स्नाहिमांश्चोर्मणिरोचिषोश्च॥ ११

ओंकाररूपोऽहमहीन्द्रवीर तदर्थवाच्यः शिव एक एव।
न ब्रह्मविष्णू न च रुद्र ईशस्सदाशिवो नाहमपि द्विजेन्द्र॥ १२

ब्रह्म ध्रुवस्तारक ओंकृतिश्च वेदादिगद्यः प्रणवश्च सत्यम्।
वदन्ति तुर्याश्रममाश्रितास्ते पर्यायशब्दान्प्रणवस्य धीगः॥ १३

पूर्वं त्वकारश्च तथाप्युकारो मकारबिन्दू च तथा च नादः।
तेषां समूहः प्रणवाभिधान इत्यामनन्ति प्रणवात्मनिष्ठाः॥ १४

तदुद्भवा ब्रह्महरीश्वराद्यास्सदाशिवान्ताः प्रणवश्च सर्वः।
तदात्मकोऽहं भुजगाधिराज तद्वाच्यकास्ते सदसत्स वाच्यः॥ १५

अतः शिवस्यापि ममापि भेदो नास्त्येव सत्यं त्विह वच्मि सत्यम् ।
लीला च मे तस्य शिवस्य लीला यथा ममाज्ञैव तथा शिवाज्ञा ॥ १६

तत्कङ्कणोऽभूर्ह्यहिराजराज शय्या ममाजस्य बभूविथापि ।
स निष्कलः शाश्वत ईशिता च जम्भारिमुख्यामरलोकपानाम् ॥ १७

*ஸூர்யன் - ஸூர்யனின் ஒளி, எள் - எண்ணெய், சந்திரன் - நிலா, ரத்தினம் - ஒளி இவற்றின் இடையே வேற்றுமை இல்லை. அதுபோல் எங்களிருவருக்கும் இடையே வேற்றுமை இல்லை. நான் ஓங்காரம், அவர் அதன் பொருள். அவர் ஒருவரே உள்ளார். பிரும்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசுவரன், ஸதாசிவன் என ஐவரும் அவரை விட வேறுபட்டவரல்ல. துறவிகள் ஓங்காரம் என்பதன் மாற்றுச் சொல்லாக, பரம்பொருள், துருவன், நக்ஷத்திரம், ஓங்காரம், வேதம் முதலிய நூல்கள் எனக் கூறுவர். அகாரம், உகாரம், மகாரம், பிந்து, நாதம் என்ற ஐந்தின் கூட்டே ஓங்காரம் என்பர். அந்த ஐந்தின் வெளிப்பாடே பிரும்மா முதலிய ஐவரும். ஓங்காரம் அவர்களின் முழு உருவம். அதன் முழுவடிவமே நான். அதனால் குறிப்பிடப் பெறுபவர் அந்த ஐவரும். ஸத்தானதும் ஸத்தல்லாததும் அனைத்தும் அவரே. அதனால் சிவனுக்கும் எனக்குமிடையே எந்த வேறுபாடுமில்லை. என் லீலையே அவரது லீலை. என் ஆணையே அவரது ஆணை. நீ அவருக்குக் கங்கணமானாய். எனக்குப் படுக்கை ஆனாய். அவர் அவயவவேறு பாடற்ற முழுப்பொருள். இந்திரன் முதலிய அனைத்து தேவர்களுக்கும் மேலாளர். (11-17)*

लिङ्गात्मकोऽहं परमेश्वरस्य लिङ्गी च देवः प्रमथाधिनाथः ।
लिङ्गस्य भेदो न हि लिङ्गिनश्च सत्यं पुनस्सत्यमहे ब्रवीमि ॥ १८

स्वलीलयाऽसौ जगतां हिताय द्विधा विभज्य प्रमथाधिनाथः ।
आत्मानमेकः स्वयमेव साक्षी हरिर्हरश्चाभवदित्यहीन्द्र ॥ १९

पूर्णः सदानन्दघनो महात्मा सर्वस्य साक्षी जगतामनन्त ।
इतस्ततस्सोऽपि च देवदारुवने चचारेति मृषा फणीन्द्र ॥ २०

मयैव साकं परमेश्वरोऽसौ प्रादुर्बभूवासुरपुङ्गवस्य।
भस्मासुरस्यात्र च तप्यतस्तन्माहात्म्यमानन्दमवेक्ष्य वक्ष्ये॥ २१

*பரமேசுவரனுக்கு நான் லிங்கம் (அடையாளம் காட்டும் உடல்) அவர் லிங்கி. (உடலினுள் உள்ள ஜீவன்.) லிங்கத்திற்கும் லிங்கிக்கும் இடையே வேறுபாடு இல்லை. உலகின் நலனுக்காக அவர் விளையாட்டாக எடுத்த வடிவம். நானும் ஹரனும். ஒரே ஆத்மா தான். அவரே ஸாக்ஷீ. ஆனால் வடிவம் இரண்டு. எங்கும் நிறைந்த நிலைத்த பெரும் ஆத்மாவான அவர் தேவதாரு வனத்தில் அங்கும் இங்கும் அலைந்தார் என்பது வெறும் தோற்றமே. இவரேதான் பஸ்மாஸுரனது தவத்திற்காக வந்ததும். அதுவும் மாயத்தோற்றமே. என்றார். (18-21)*

शेष उवाच–

नास्त्येव भेदो युवयोर्मुरारे यदि प्रसीद प्रणवस्वरूप।
तमीश्वरं ध्यायसि किं महात्मंस्त्वमेव स स्यात्कमलाक्ष चेत्तत्॥ २२

शक्तेश्च शक्तिर्न हि विश्ववन्द्य गन्धस्य गन्धोऽपि यथा तथा यत्।
शिवस्य शक्तेस्तव का मुकुन्द परंपराऽभूत्त इयं प्रसीद॥ २३

हरिरुवाच॥

आत्मानमेवात्मनि विश्वरूपो ध्यायेऽहमानन्दमयं परेशम्।
देहः शिवस्याहमसौ शरीरी देहात्मनोर्नास्ति भिदा फणीन्द्र॥२४

यथा घटत्वस्य घटस्य भेदो यथैव जीवात्मपरात्मनोर्न।
यथैव विश्वस्य महेश्वरस्य तथैव भेदो न हि नौ च शेष॥ २५

फणिन्मदीये भवतश्च शक्ती महीरमे मे करुणा च कीर्तिः।
पद्मा दया मे धरणी च कीर्तिरिति ब्रुवन्ति श्रुतिपारगार्याः॥२६

अहे शिवस्याहमभिन्नशक्तिरित्येव मां विद्धि भुजङ्गनाथ।
पृथग्जना भेदतया वदन्ति मन्मायया मोहितमानसास्ते॥ २७

சேஷன் கேட்டார் - ''முரனின் எதிரியே! நீரும் அவரும் ஒருவரே எனில் நீர் ஏன் அவரைத் தியானம் செய்கிறீர். சக்திக்கு சக்தி கிடையாது. மணத்திற்கு மணமில்லை. சிவன் சக்தி, நீர் உடல் என்றால் இந்தத் தியானம் எதற்காக?'' சேஷனிடம் ஹரி விளக்கினார் - ''நான் உலகவடிவில் நின்று என்னுள் என் ஆத்மாவைத் தியானிக்கிறேன். அவர் பேரானந்த வடிவினர். என் ஆத்மா. நான் அவரது உடல். உடலிலுள்ள ஜீவன். இந்த ஜீவன் தன் உண்மை நிலையான ஆத்மாவைத் தியானத்தில் உருவகப்படுத்திக் கொள்ளலாம் அல்லவா? குடம் உள்ளது. குடத்தின் தன்மை என்று உள்ளது. குடம் உருவமாகக் காட்சி தருவது. அதன் தன்மை சிவப்பு, நீர் முதலியவற்றைத் தாங்குவது என்பதாக வேறுபடும். ஆனால் இரண்டையும் தனித்துக் காண முடியாது. ஆனால் உணர முடியும். அதேபோல் ஜீவாத்மாவையும், பரமாத்மாவையும் பிரித்து உணர முடியாது. உலகையும் ஈசனையும் பிரித்து உணர முடியாது. என்னிடம் லக்ஷ்மீ, தயை, பூமி, கீர்த்தி என்ற பல சக்திகள் உண்டென்பர். அதேபோல் எனக்கும் சிவனுக்கும் வேறுபாடுள்ளதாக மாயை வசப்பட்டவர் கூறுவர். ஆனால் நான் சிவனிடமிருந்து சிறிதும் வேறுபாடற்ற சக்தி என்பதே உண்மை நிலை. (22-27)

पुराऽत्र कश्चिच्छिवमादिदेवं शम्भुं समुद्दिश्य तपश्चचार।
भस्मासुरो नामत इत्यजस्रं नित्यत्वमाप्तुं गिरिशात्सुघोरम्॥ २८

ततः प्रसन्नो भगवान्परारिः तपन्तमत्यद्भुतमादिदैत्यम्।
वरं वृणीष्वाद्य तपोमहिम्ना तव प्रसन्नोऽस्म्यहमासुरेन्द्र॥ २९

एवं ब्रुवाणे सति देवदेवे स्तुत्वा च दैत्येन्द्र उवाच देवम्।
कृताञ्जलिः शङ्कर लोकवन्द्य वरं वृणे त्वां शिव तत्प्रसीद॥ ३०

यन्मूर्ध्निहस्तो मम मन्मथारे न्यस्तस्सकृद्भस्म भवेन्मया सः।
देवासुरा वा गणपो मनुष्यो गन्धर्वविद्याधरपन्नगाश्च॥ ३१

विष्णुरुवाच ॥

इत्युक्तवन्तं दनुजं शिवोऽपि तथा भवत्वित्यवदन्महात्मा ।
साङ्गं ऋषिध्यानयुतञ्च सर्वं संहारमन्त्रं समुपादिशत्सः ॥ ३२

आद्यन्तशून्ये परमेश्वरे च संहाररक्षोद्भवहेतुभूते ।
विद्यापरीक्षार्थमसौ स्वहस्तं प्रागारभन्न्यस्तुमथास्य मूर्ध्नि ॥ ३३

तदा शिवस्स्वोक्तवचोभिरक्षाविशारदः प्राकृतवत्परात्मा ।
प्रधावति द्राक्भसितासुरस्य तेनानुयातो जगतामधीशः ॥ ३४

एवं हि जातेऽप्यहमन्तरालं तयोः प्रविश्याखिलमोहरूपम् ।
वामाङ्गनावेषमभूतपूर्वं स्थितोऽस्मि दैत्यस्य फणीन्द्र कृत्वा ॥ ३५

दैत्यस्तदालोकनजातचित्तभवार्तिसम्पीडितमानसःसन् ।
शिवं विहायाशु मदीयरूपं विलोकयामास च रागवेगात् ॥ ३६

मन्मोहनाकारविमूढचित्तं भस्मासुरं प्रावदमन्तकारेः ।
पृष्ठानुयातं विनिगृह्य दृष्ट्या किमर्थमीशं त्वनुधावसि त्वम् ॥ ३७

इति ब्रुवाणे मयि सोऽपि रागात्स्थित्वा पुरो मे निखिलं शिवोक्तम् ।
जगाद दैत्यो निजहस्तलग्नशीर्षा स भूयादिति भस्मभूतः ॥ ३८

*முன்னர் பஸ்மாஸுரன் என்பவன் இறப்பின்மை வேண்டி சிவனைக் குறித்துத் தவமியற்றினான். சிவன் அந்தக் கடும் தவத்தில் மகிழ்ந்து அவன் முன் தோன்றித் தாம் அருள்புரிய வந்துள்ளதால் வரம் கேட்கச் சொன்னார். இதனைக் கேட்ட அஸுரன் கை கூப்பிச் சிவனிடம் வேண்டினான் - ''மன்மதனின் எதிரியே! எவர் தலையில் என் கை வைக்கப்படுகிறதோ அவன் தேவனோ, அசுரனோ, கணத்தலைவனோ, மனிதனோ, கந்தர்வனோ, வித்யாதரனோ, நாகனோ எவனாயினும் சாம்பலாகட்டும்'' இதனைக் கேட்ட சிவன் அப்படியே ஆகட்டும் எனக் கூறி, ஸம்ஹார மந்திரத்தை, ருஷி சந்தஸ் முதலான நியாஸ முறையுடன் உபதேசித்தார். அந்த உபதேசம் பெற்றதும் மந்திரத்தின் ஆற்றலைச் சோதிக்கச் சிவனது*

*தலையில் கை வைக்க அஸுரன் முற்பட்டான். தன்னைக் காத்துக்கொள்ளத் திறனிருந்தும் பாமரன் போல் சிவன் நடுங்கி ஓட அஸுரன் துரத்தினான். நான் இடையே புகுந்து அழகிய மோஹினியாக அவன் முன் தோன்றினேன். என்னைக் கண்டதும் காமவசப்பட்ட அவன் சிவனை விட்டு என்னை உற்று நோக்கினான். மதிமயங்கி நிற்கும் அவனை நான் 'ஏன் சிவனைத் துரத்துகிறாய்?' எனக் கேட்க அவன் நிகழ்ந்ததைக் கூறி 'சிவனது தலையில் நான் கை வைக்க அவர் சாம்பலாவார்' எனக் கூறினான். (28-38)*

एवं वदन्तं त्ववदं सुरारिं निशम्य वाचं च तदास्यजाताम्।
शृणुष्व भस्मासुर तेऽद्य मन्त्रो विना ऋषिन्यासमियात्फलं न॥ ३९

लोके महान्तः खलु मन्त्रजापधराः प्रविन्यस्य शिरोहृदास्ये।
छन्दो मुनीन्दैवतमासुरेन्द्र पश्चात्प्रयोगश्च वितेनुरार्याः॥ ४०

तस्मादिदानीं प्रविधाय सम्यगृष्यादिकं न्यासममर्त्यशत्रो।
स्वयं तु नित्यस्य महेश्वरस्य पिनाकिनःस्पर्शनमारभस्व॥ ४१

इत्युक्तवत्येव मयि द्विजेन्द्र भस्मासुरश्चापि तथाकरोत्सः।
भस्मावशेषःस्वयमेव जातो दुरात्मनां दुष्फलदो हि धर्मः॥ ४२

तस्मिन्मृते शम्भुरमेयतेजा निवृत्य भूयः पुरुषाकृतिं माम्।
जगाद रूपं महिलात्मकं ते प्रदर्शयानन्ददमस्य चेति॥ ४३

ततो महेशं प्रकृतेः परं तं स्वस्मादभिन्नं शिवमादिदेवम्।
प्रत्यब्रुवं भक्तजनेष्टदानविशारदं शारदचन्द्रभासम्॥ ४४

शम्भो इतः पूर्वमहीन्द्रभूष मुनीश्वराणामपि कर्मठानाम्।
ज्ञानोपदेशाय च देवदारुवनस्थितास्तेऽतिविमोहनीयाः॥ ४५

सुसिद्धिधिकारमनोज्ञवेषवांस्तद्योषितां मानसरागकारिणीम्।
धत्स्वाकृतिं तत्सुतचित्तहारिणीं ह्यहं विधास्ये महिलाकृतिं वराम्॥ ४६

तं द्रक्ष्यसि त्वं महिलास्वरूपं पुम्मानसद्रावणपेशलं च ।
स्वतेजसा धिक्कृतमारयोषिद्रूपं च तं चारुमुखारविन्दम् ।। ४७

श्रुत्वा महात्मा वचनं मुरारेर्ममेति शम्भुर्निरागात्पयोधेः ।
स कामतः प्राप पुरं च्युताह्वां श्रीदेवदारुद्रुममण्डितान्ताम् ।। ४८

*அதனைக்கேட்ட அஸுரனிடம் கூறினேன் - ''மந்திரம் ருஷிநியாஸமின்றி பலன் தராது. மந்திர நுட்பமறிந்தவர் ருஷியையும் சந்தஸையும் தேவதையையும் தியானித்து, தலையிலும் வாயிலும் இதயத்திலும் கைவைத்து நியாஸம் செய்வர். அதனால் ருஷி முதலிய நியாஸங்களைச் செய்தபின் மந்திர சக்தி பெற்று சிவனைத் தலையில் தொடுவாய்'' என்றேன். உடன் ருஷிநியாஸம் செய்ய அவன் தன் தலையைத் தொட்டதும் சாம்பலானான். கெட்டவனுக்கு தர்மமே கெட்டதைத் தரும். அவன் இறந்ததும் என் அருகில் வந்த சிவன் ஆண் வடிவிற்கு மாறிய என்னிடம் ஆனந்தமளிக்கிற உன் பெண் உருவை எனக்குக் காட்டுவாய் என்றார். மூலப்பிரகிருதிக்கு அப்பாற்பட்ட பெருமான் அவர். ஆதிதேவர். பக்தர் நாடியதை உடன் வழங்குவதில் நிபுணர், சரத் காலத்து நிலவு போன்ற ஒளிர்பவர். அவரிடம் நான் கூறினேன். ''தேவதாருவனத்தில் சடங்குகளையே நம்பியிருந்த முனிவர்களுக்கு ஜ்ஞானம் புகட்ட இனிது அவர்களுடன் பேசி மயக்கிய அந்த பிக்ஷாடன வேஷத்தை நீர் ஏற்பீர். உடன் நானும் அவர்களின் புதல்வர்களை மயக்க இந்த மோகினி வேஷத்தை ஏற்கிறேன். ஆணின் உள்ளத்தை மயக்குவதும் மன்மதனின் மனைவியை இகழ்கிற அழகுள்ளதுமான மோஹினி வேஷத்தை நான் ஏற்பதைக் காணலாம் என்றேன். உடன் அவர் கடல் சூழ்ந்த சுவேதத் வீபத்தை விட்டு தேவதாருவனத்திடையே அமைந்த ச்யுதபுரியை பூர்ணஸம்மதத்துடன் அடைந்தார். (39-48)*

नत्वा पुरा यत्र चतुर्मुखत्वं समाप वेधाः परमेश्वरात्सः ।
संपूज्य भक्तैकमुखोऽपि नाम्ना लिङ्गं प्रतिष्ठाप्य च सृष्टिशक्तिम् ।। ४९

मन्देन कृष्णेन च विक्रमेण चोलेन कल्माषपदा मदेन ।
वाण्या च जीवेन च तारया च संपूज्यते यत्र च कृत्तिवासाः ।।५०

बालाङ्कुराम्बा सकलेष्टदात्री यत्रैव साक्षात्क्रियते द्विजेन।
श्रीशुक्रवारार्चनया च शम्भुशर्माह्वयेन प्रणतार्तिहन्त्री ।। ५१

तत्र स्थित्वा विमलमणिभिः कल्पिते दिव्यपीठे
नन्दीशाद्यैः प्रमथनिवहैस्सेवितः पार्श्वयुग्मे।
कैवल्यश्रीविबुधविटपी ह्याचचक्षे शिवो मां
योषिद्रूपं प्रकटय मुनीपुत्रसम्मोहनार्थम् ।। ५२

सिद्धाकृत्याऽऽश्रममुनिवरप्रान्तयोषित्कुलानां
पातिव्रत्यप्रचुरहृदयोन्मादकारी भवामि।
भास्वत्तेजः प्रवहनिवहैर्धिक्कृतानङ्गकोटिः
भूयासं द्राक्सकलयमिनामग्रतोऽहं शरण्यः ।। ५३

*அங்குதான் முன்பு தவமிருந்து பிரும்மா சிவபெருமானிடமிருந்து நான்கு முகமுள்ள நிலை பெற்ருர். தன்பெயரில் லிங்கம் அமைத்து வழிபட்டுப் படைப்பாற்றலைப் பெற்ருர். சனி, கிருஷ்ணன், விக்ரம சோழன், கல்மாஷபாதன், ஸரஸ்வதி, பிருஹஸ்பதி, தாரை எனப் பலரால் கிருத்திவாஸப் பெருமான் வழிபடப் பெறுகிருர். அங்குதான் பாலாங்குராம்பாள் விரும்பியதனைத்தையும் தருபவளாக சம்புசர்மா என்ற அந்தணனுல் வெள்ளிக்கிழமை தோறும் வழிபடப்பெற்ருள். அங்கு ரத்னங்களால் அமைக்கப் பெற்ற திவ்ய பீடத்தின் மீது அமர்ந்த சிவன். நந்தீசுவரர் முதலான பிரமத கணங்களால் இருபுறமும் சூழப்பட்டவராக, மோக்ஷலக்ஷ்மியை அருள்கிற கற்பக விருக்ஷமாக, அமர்ந்து என்னை முனிவர்களின் புதல்வர்களை மயக்க ஏற்ற பெண்வடிவை ஏற்றுக் காட்சிதரப் பணித்தார். தானும் சித்தர் வடிவேற்று முனிவர்களின் மனைவியரின் கற்பை இழக்கச் செய்யவல்ல கோடி மன்மதர்களின் வனப்பை இகழ்கிற வடிவழகுடன் முனிவர்கள் முன் தோன்றுவேன்'' என்ருர். (49-53)*

इत्युक्तोऽहं परमयमिनामग्रगण्येन तेन
ब्रह्मेशश्रीपतिमुखसुरैः पूजिताङ्घ्रिद्वयेन।

नत्वा पादद्वयमपि विभोः पूज्ययोगीन्द्रवन्द्यं
भक्त्या कुर्यामिति लघुतरमथ प्रोक्तमार्याय तस्मै ॥ ५४

अहं शक्तिरुमा देवी भूत्वाप्यानन्ददायिनी ।
एका सा साक्षिणी शम्भोर्नित्यकल्याणदायिनी ॥ ५५

एका शक्तिश्च शम्भोर्विनियमनविधौ सा चतुर्धा विभिन्ना
क्रोधे काली विजाता च समरसमये साऽभवत्तस्य दुर्गा ।
भोगे सृष्टौ नियोगे च सकलजगतां सा भवानी च जाता
सर्वेषां रक्षणानुग्रहकरणविधौ तस्य विष्णुर्भवेत्सा ॥ ५६

अहमेव च सा गौरी गौर्येवाहं महाफणिन् ।
उमाया यान्ति मद्भक्ता उमाभक्ताश्च मे पदम् ॥ ५७

उमया मे चाभेदेन धृतस्त्रीनरवेषयोः ।
उभयोर्भेदमुक्त्वा तु प्राप्नुयान्नरकार्णवम् ॥ ५८

तस्माच्छम्भोरपररमणोत्पत्तिहेतुं यमारेः
प्रायो रूपं मम किल फणिन्स्त्रीस्वभावं शिवस्य ।
तद्रूपञ्च प्रकटितमहो देवदेवे शिवेऽस्मिन्
सत्यज्ञाने सकलविदुषामप्यचिन्त्ये शरण्ये ॥ ५९

इति तृतीयोऽध्यायः

—*—

*இவ்வாறு புலனடக்கமிக்கவர்களின் முன்னோடியான வரும், மும்மூர்த்திகளாலும், தேவர்களாலும் திருவடிகளில் வணங்கப் பெற்றவருமான சிவன் கூறியதும் நான் அவரது திருவடிகளை வணங்கி பக்தியால் இதனை எளிதில் ஸாதிப்பதாகக் கூறினேன். ஆனந்தமளிக்கிற பராசக்தியான உமாதேவியே நான். சிவபெருமானது மங்களப் பணிகளுக்கு உதவுகிற அவரது ஸாக்ஷியாக இருப்பவள். அந்த சக்தியே உலகைக் கட்டுப்படுத்த நான்கு வடிவங்களை ஏற்றுள். கோபமிக்க நிலையில் அவள் காளி.*

போரில் எதிர்க்க இயலாத துர்க்கா. உலகைப் படைக்க, அதற்கு வழிகாட்ட, மகிழ்ச்சி தர அவள் பவானீ, உலகைக் காக்க அவள் எடுத்த வடிவம் விஷ்ணு. அதனால் நானே கௌரி, கௌரியே நான். என் அடியார்களும் தேவியின் அடியார்களும் சென்றடையுமிடம் ஒன்றே. அது அவளே. ஆணாகவோ, பெண்ணாகவோ நாங்கள் தோன்றுவதால் எமக்குள் வேற்றுமை காண்பவன் நரகமடைவான். பேரறிஞர்கள் முழுதும் காணப்பெறாத சிவபெருமானின் முன்பு அவரை மறுபடி மகிழ்விக்க பெண்மையடைந்து என் வடிவைக் காட்டினேன். *(54-59)*

—*—

॥ अथ चतुर्थोऽध्यायः ॥

। ऋषिगणमोहनम् ।

विष्णुरुवाच -

शेष ज्ञानवतां श्रेष्ठ देववदारुवने धृतम् ।
तद्रूपं ते प्रवक्ष्यामि मुनिव्रातविमोहनम् ॥ १

शिवस्य सिद्धवेषश्च मुनिस्त्रीबृन्दमोहनम् ।
शृणुष्व सर्पराजेन्द्र सावधानेन चेतसा ॥ २

श्रोतॄणां सर्वपापघ्नं पठतां सर्वसिद्धिदम् ।
कल्याणदं दरिद्राणां वन्ध्यास्त्रीणां सुतप्रदम् ॥ ३

प्रफुल्लचम्पकप्रसूनबृन्दभाहसत्प्रभं
मुनीन्द्रलोकमानसाब्धिपानलोलकुम्भजम् ।
कचप्रभानिराकृताम्बुदालिनीलिमाञ्चयं
सितेतरालिकालकं विशालफालपट्टकम् ॥ ४

अमन्दभासचन्द्रबिम्बरम्यफालमध्यग
प्रफुल्लपङ्कजोल्लसल्ललामसुन्दरं मुखम् ।

सुसूक्ष्मनीलवक्त्रदीर्घचारुसुभ्रुवोः
युगद्युतिप्रकुञ्चकामपुण्ड्रकार्मुकप्रभाचयम्॥ ५

विलोलतारकोल्लसद्द्विरेफलोचनद्वयं
तिलप्रसूनकान्तिराजिचोरनासिकारुचिम्।
प्रमन्दहासनिर्गलद्रद द्युतिच्चयोल्लसत्
सुपक्वबिम्बतुल्यदन्तवाससा मनोहरम्॥ ६

அத்தியாயம் 4

முனிவர்களை மயக்குதல்

*விஷ்ணு சேஷனிடம் கூறுகிறார். சேஷனே! தேவதாரு வனத்தில் முனிவர் கூட்டத்தை மயக்கிய என் மோஹன வடிவம் பற்றிக் கூறுகிறேன். சிவனும் முனிவர்களது மனைவியரை மயக்க எடுத்த வடிவம் பற்றியும் கூறுகிறேன். கேட்பவரது பாபமனைத்தும் விலகும். சொல்பவருக்கு ஸித்திகளனைத்தையும் வழங்கும். ஏழ்மை நீங்கும். மலடிகளுக்குப் புத்திரப் பேறு கிட்டும். நான் எடுத்த தோற்றம் - மலர்ந்த சம்பகப்பூ போன்ற மேனி ஒளி, முனிவர்களின் எண்ணக் கடலைக் குடித்த அகஸ்தியர், கேசவனப்பால் கார்மேகத்தின் கருமைக்கு இழிவு, கருத்த முன் உச்சிமயிர் மூடிய விரிந்த நெற்றி, சந்திர பிம்பம் போன்ற ஒளி குன்றாத நெற்றி, அன்றலர்ந்த தாமரை போன்ற முகம், நீண்ட அழகிய புருவம், காமனின் கரும்பு வில்லை ஒத்த புருவ வளைவு, நீண்ட வண்டு போன்ற இரு கருவிழிகள், எள்ளுப் பூ போன்ற நீண்ட நாசி, புன்சிரிப்பால் வெளியே தெரிகிற பற்களின் ஒளிபடர்ந்த - கோவைப்பழம் போன்று சிவந்த உதடுகள், (1-6)*

सुपर्णपाशराजमानतप्तरुक्मपत्रिका
च्युतांशुकोरकाभिरामगण्डमण्डलद्वयम्।
सुवृत्तशङ्खचारुकण्ठशोभिरत्नभूषणं
कलाधरातिसुन्दरोरुहारराजिशोभितम्॥ ७

सचम्पकप्रसूनदामवामबाहुराजता-
ङ्गदाभिरामकङ्कणोर्मिकावलीविराजितम्।
सलीलकुम्भिकुम्भशातकुम्भकुम्भहृत्
पयोधराधरीकृतक्ष्माधराधिपाधिपम्॥ ८

प्रभाप्रहेमनीप्रियप्रलोलभङ्गमानसद्
वलित्रयातिशोभगाधवृत्तनाभिपङ्कजम्।
कुचद्वयातिभारभीरुनम्रसूक्ष्ममध्यग
प्रतप्तचारुकाञ्चिकागुणैरतीव राजितम्॥ ९

समुद्यदर्ककोटिदीप्तिभक्षकं विडम्बयत्
कुसुम्भरागचेलरामणीयसत्कटीतटम्।
प्रमत्तचित्तभूशताङ्गचक्रराजिकुत्सयद्
बृहत्सुवृत्तसन्नितम्बबिम्बकातिसुन्दरम्॥ १०

सुकर्दमक्ष्मास्थलीकुरङ्गसच्छफोपमा
सुवर्णचक्रतुल्यपुष्पकार्मुकालयाञ्चितम्।
अरोमशोरुजातकान्तिधिक्कृतेभनासिकं
सुमीनकेतुकाहलीसमानजङ्घयुग्मकम्॥ ११

ललायमानपद्मरागकीलितांसकद्वया
भिरामवृत्तगूढगुल्फरञ्जितं मनोहरम्।
सुनिक्वणन्मणीन्द्रजालक्लृप्तहेमनूपुर
द्वयोल्लसत्पदारविन्दधिक्कृताम्बुजावलिम्॥ १२

सुवेषमेवमाकलय्य शाम्भवे प्रदर्शितं
मदीयरूपमम्बिकामुपास्य साधुभिर्वृतम्।
अनेकमङ्गलप्रदैश्च मल्लिकाप्रसूनकैः
महाफणिन्बभूव सर्वलोकसाक्षिणे मया॥ १३

*கருடனின் இறக்கை போன்று தங்க ஒளி கொண்ட கேச அணியின் ஒளியால் பளபளக்கிற கன்னங்கள், சங்கு போன்ற வட்டக் கழுத்தில் தொங்குகிற ரத்தின கண்டஹாரம், சந்திரப் பிறை போன்ற முத்து மாலை பூண்ட கழுத்து, சம்பக மாலையும் வெள்ளித் தோள்வளையும், காப்பும் கங்கணமும் மோதிரமும் கொண்ட கைகள், யானை மத்தகம் போன்ற மேடிட்ட மலைச்சிகரம் போன்று உயர்ந்த மார்பகங்கள், ஒளிவட்டத்தால் உள்ளத்தைக் கவர்கிற மூன்று மடிப்புகளும், வட்டத் தாமரை போன்ற தொப்புளும், மார்பகத்தின் சுமை மிகுதியால் வளைந்த மெலிந்த இடுப்பில் ஒலிக்கிற இடுப்புச் சங்கிலி, உதிக்கின்ற செங்கதிரோனின் ஒளியைக் கவர்கிற சிவந்த பட்டாடை துலங்குகிற இடை, மதர்த்த மன்மதனின் தேர் சக்கரம் போன்ற பருத்த உருண்ட புட்டம், உரோமமற்ற துதிக்கை போன்ற தொடை, மன்மதனின் அம்புறாத் தூணி போன்ற முழங்கால், ஒளிமிக்க பத்மராகக் கல்பதித்த காப்பணிந்த கணுக்கால் முட்டு, இனிது ஒலிக்கின்ற சதங்கை கொண்ட தங்கச் சிலம்பு, தாமரையைப் பழிக்கின்ற திருவடிகள், இவ்வாறு வேஷம் கொண்ட அழகியாக சிவன் எதிரில் நின்றேன். என் உள்ளத்துள் அம்பிகை நிறைந்திருந்தாள். மங்களமளிக்கின்ற மல்லிகை மாலையுடன் உலகமனைத்தின் ஸாக்ஷியான பரமனின் முன் நின்றேன். (7-13)*

इत्थमखिलागमगुणामृतसमुद्र
सत्वमबलावपुरिदं मम विलोक्य।
सिद्धवरवेष अहिराज गिरिशेन
क्षिप्रमभिसूचित अहो तदभिवित्यै ॥ १४

शङ्खहिमवालुकशशाङ्कहिममुक्ता
सङ्कसितभस्मवरलेपितशरीरः।
चित्तजसहस्रनुतिचित्करणरूपो
भक्तजनहृत्कुमुदविस्फुटनचन्द्रः ॥ १५

हाटकसुपिङ्गलजटापटलकोटिः
स्फाटिकसमेन्दुशकलाभरण ईशः ।
बालशशिधिक्करणपाटवविराजत्
फालतिलकीकृतहुताशनमनोज्ञः ॥ १६

कोमलरतीशकरचापरुचिहारि
श्रीमदभिरामतनुनीलवरभाभ्रूः ।
जम्भरिपुनीलमणिसन्निभवराल्य-
भ्यन्तरपयोजदलदीर्घनयनाब्जः ॥ १७

मन्दहसनिर्गलितदन्तरुचिराभा
बृन्दरदनच्छदसुविद्रुमलताश्रीः ।
आननपयोगृहविशालसुषमाली
धिक्कृतसुशीतहिमपूर्णशशिबिम्बः ॥ १८

इन्द्रमणिकीलितसुमध्यगुरुशङ्ख
प्रोज्झितसुपीवरसितेतरशिरोधिः ।
हस्तिवरहस्तजयपेशलपृथुश्री
हस्तधृतशूलडमरूरगकपालः ॥ १९

*வேதமனைத்தும் சிறக்கக் கூறுகிற அமுத ஸத்து நிரம்பிய என் பெண்வடிவைக் கண்டதும் உடன் அதனை ஆட்கொள்கிற சிறந்த ஸித்தரின் வேஷத்தை சிவன் ஏற்றார். சங்கு, பனிக்கட்டி, சந்திரன், முத்து போன்ற வெண்ணிற விபூதி பூசிய உடல், ஆயிரம் மன்மதர்களால் வணங்கத்தக்க பேருணர்வுமிக்க வடிவழகு, பக்தர் மனமாகிய ஆம்பலை மலர்விக்கிற சந்திர ஒளி, சொக்கத்தங்கம் போன்ற விரிந்த சடையில் படிகக் கல் போன்ற பிறைத்துண்டாகிய அணி, இளஞ்சந்திரனை இகழ்வதில் சிறந்த நெற்றித் திலகமாகத் துலங்குகிற நெற்றிக் கண், அழகுமிக்க மன்மதனின் கையில் உள்ள வில்லை ஒத்த அழகிய புருவம், இந்திர நீலரத்னக் கல்லின் ஒளிகொண்ட தாமரை இதழ் போன்ற நீண்ட*

கண்கள், புன்முறுவலின் இடையே வெளிப்படுகிற பற்களின் ஒளியை மூடுகிற பவழக்கொடி போன்ற உதடு, பூர்ண சந்திரபிம்பத்தை ஏளனம் புரிகிற முகமாகிற பால் கிண்ணத்தின் அழகு. பெரிய வட்டமான சங்கை ஒத்த பருத்த கழுத்தில் இந்திர நீலக்கல் பதித்த கழுத்தாரம், துதிக்கை போன்று தடித்த அழகிய கைகளில் சூலமும், உடுக்கையும் பாம்பும் கபாலமும். *(14-19)*

अच्छवरकान्तिमदपश्चिमवपुःश्री
तुच्छकरणप्रपटुसज्जठरकान्तः ।
पीवरविशालतरवक्षसि विराजत्
स्थूलतरमौक्तिकसरैस्सुकृतशोभः ॥ २०

दारुवनवासिमुनिवामनयनानां
मानसविलोलनपटुप्रवरशोफः ।
श्लक्ष्णपृथुवृत्तमृदुसुन्दरवरोरुः
मारशरधिप्रतिभटप्रचुरजङ्घः ॥ २१

ऊढरणिगुल्फमणिहंसकयुगश्रीः
पादकमलाश्रितसुपादुकमणिश्रीः ।
झन्झणकृदुच्चलितकिंकिणिविराजद्
गुल्फयुगलः परशिवः प्रमथनाथः ॥ २२

वीक्ष्य कुशेशयविलोचनयुगे मां
मारचयसुन्दरमनूपममनिन्द्यम् ।
ऋक्षगणनाथरुचिहासिभसिताङ्गः
कुक्षिजजगत्त्रय इतीश अवदन्माम् ॥ २३

தூய ஒளிமிக்க உடலின் முன் பகுதியை அதிகப்படுத்துகிற வயிற்றின் அழகு, பருத்த விசாலமான மார்பில் துலங்குகிற பெரும் முத்துக்களின் சரங்களின் அழகு, தேவதாருவனத்துப் பெண்மணிகளின் மனத்தை ஆட்டுவிக்கிற இடுப்பு பின் முன்புறம், மென்மை மிக்க பருத்த வட்டமான அழகுமிக்க

*தொடைகள், மன்மதனின் அம்புறுத்தூணிக் கொப்பான முழங்கால்கள், கணுக்கால் முண்டின் மீது துலங்குகிற ஒலிமிக்க சிலம்புகள், தாமரை போன்ற சரணங்களின் மீது படர்ந்த பாதச் சங்கிலி, ஒலிமிக்க சதங்கை கொண்ட கொலுசு, இப்படி பிரமதநாதனின் வனப்பு மிக்க தோற்றம். இந்த தோற்றத்துடன் என் எதிரில் நின்ற பெருமான் மன்மதர் பலரின் அழகு கொண்டு ஒப்புவமையற்ற தோற்றத்துடன் உள்ள என்னை உற்று நோக்குவாய் எனக் கூறினார். சந்திரன் ஒளிகொண்ட விபூதியை உடல் முழுதும் பூசியிருந்தார். அவர் வயிற்றினுள் மூவுலகங்களும் உள்ளன. (20-23)*

इत्थमभिरामतनुरद्भुतचरित्रः
सिद्धवरवेष उपधावति महेशः ।
सिद्धतनुरूप उपगूहति च मां वै
देहरुचिधिक्कृतरतीशमहिलाङ्गीम् ॥ २४

पञ्चशरनिर्जितवपुर्मदनवैरी
कुञ्जरमुखादिनुतपादकमलोऽपि ।
शेष यभते स्म भजतामपि हिताया
शेषजगतामधृतधैर्यनिलयो माम् ॥ २५

कोमलतनुर्मरतकोपलनिकाशो
दुग्धचषकं करतले च निवहन्वैव ।
मन्दहससुन्दरमुखो मम शिवस्य
प्रादुरभवत्सकललोकगणशास्ता ॥ २६

सोऽपि दनुजास्रपपिशाचमुनिसिद्धैः
चारणमहोरगशकुन्तसुरयक्षैः ।
पूजितपदः प्रवरयोगिगणवन्द्यो
मार इव तत्र विरराज किल शास्ता ॥ २७

अनन्तरमनन्तगुणनीरनिधिरीशो
नन्तमणिभातनुमिमं कमलनेत्रम्।
अनन्तसुरवन्द्यचरणाब्जयुग ऊचे
ऽनन्तमहिमा शशिकलाधरकिरीटः ॥ २८

*அழகிய உடலும் வியக்கத்தக்க நடையும் சிறந்த ஸித்தர் வேஷமும் கொண்ட மஹேசன், ரதி போன்று அழகிய என்னை இறுக அணைத்துக் கொண்டார். மன்மதனின் எதிரியான அவர் மன்மதனால் வெல்லப்பட்டார். கணபதி முதலானவர் வணங்கி நிற்கிற அவர் உலகின் நன்மைக்காக உறுதி குலைந்தவராக என்னுடன் கூடினார். உடன் உலகமனைத்தையும் கட்டுப்படுத்துகிற சாஸ்தா வனப்பு மிக்க உடலுடன் மரகதரத்ன ஒளி கொண்டவராக கையில் பால் கிண்ணம் ஏந்தியவராக புன்சிரிப்புடன் வெளிப்பட்டார். அஸுரன் ரத்தம் குடிக்கிற பேய், பிசாசம், முனிவர், ஸித்தர், சாரணர், நாகர், பக்ஷி, தேவர், யக்ஷர், யோகிகள் எனப் பலர் அவரை வணங்கி நின்றனர். மன்மதன் போன்று விளங்கினார். உடன் எண்ணற்ற தேவர்களால் வணங்கப்பெற்ற பிறை சூடியான எல்லையற்ற குணக்கடலான ஈசன், எண்ணற்ற ரத்னமேனி ஒளி கொண்ட இந்த தாமரைக் கண்ணனிடம் (என்னிடம்) கூறினார். (24-28)*

याहि मधुसूदन मुनीन्द्रनिकुरुम्बान्
मोहय गुणैस्तव मनोहरविलासैः।
तापससुशीलगुणमानयुतयोषि
ज्जालमलमाकलयते लघुमधस्तात्॥ २९

एवमवनीसुरसमूहमुपदेष्टुं
वेदशिरसोदितगुणो विबुधदेवः।
कर्मनिवहान्सुपरिमार्ष्टुमपि
तेषामाविरभवत्सुयमिवेषधर ईशः॥ ३०

तत्र तलवासनिरता मुनिवरेण्या
श्चित्रवरकर्मनिपुणाः प्रकृतिभावाः ।
मुक्तिमिह दातुमलमाचरणमीशौ
शक्तिरहिताविति विधाय हृदि शङ्काम् ।। ३१

कृच्छ्रमतिकृच्छ्रमपि सान्तपनकृच्छ्रं
तप्तमपि संशितमपीतर विधाय ।
सोमयजनादिविविधाध्वरविधाने
प्राभृतहृदः स्युरपि कर्मनिरताश्च ।। ३२

इत्यवनिदेवमहिलाः स्वपतिपूजा
सक्तहृदयाः सततयौवननिवासाः ।
शैलतनयार्चनमकुर्वत परं तत्
न्याय्यकरणे निखिलकर्मफलसिद्ध्यै ।। ३३

*''மதுஸூதனரே! முனிவர் கூட்டத்தை அணுகுவீர். உமது அழகிய களியாட்டங்களால் அவர்களை மயக்குவீர். நன்னடத்தை கொண்ட சிறப்பும் மானமும் மிக்க பெண்களின் கூட்டம் சிறுமையடைய நான் வருகிறேன்'' இவ்வாறு கூறி ஸித்தர் வேஷம் கொண்டார். அந்தணர் ஸமூகத்திற்கு உபநிஷத்து கூறும் தத்துவத்தை உபதேசிக்க, அவர்களது சடங்குச் சுமையை அழிக்கவும் வெளியே தோன்றினார். அந்தத் தலத்தில் வசிக்க விரும்பிய முனிவர்கள், விசித்திரமான சடங்குகள் புரிவதில் தேறியவர். இயற்கையோடு ஒட்டி வாழ்பவர். முக்தி தருவதற்குச் சடங்குகளே போதும்; சிவனும் விஷ்ணுவும் முக்தி தரச் சக்தியற்றவர்கள் என்று உள்ளத்தில் எண்ணம் கொண்டவர்கள். மிகவும் உடலை வருத்தி கிருச்ரம், அதிக்ருச்ரம், ஸாந்தபன கிருச்ரம் என்ற பல சடங்குகளைச் செய்வர். ஸோமயாகம் முதலிய பல வேள்விகளைச் செய்வதில் உள்ளத்தால் முனைந்தவர்கள். அவர்களது மனைவியரும் தம் கணவர்களை வழிபடுவதில் ஆர்வமுள்ளவர்கள். யௌவன வயதினர். தம் கணவர்களது பணிகள் முறைப்படி நிறைவுறச் செய்ய உமாதேவியை வழிபட்டனர். (29-33)*

तत्त्वनयजालमखिलागमपुराण
श्रौतनिगमादिषु समर्थमतिसिद्धम्।
वेदगदिताखिलसुकर्मनिरतं तत्
तापसवरं प्रमुदितं तरुणमार्यम्॥ ३४

इत्थमतिरम्यमृगपक्षिकुलराजद्
दारुवनवासरसिका मुनिवरिष्ठाः।
दारसुतमित्रनिजबन्धुनिकुरुम्बैः
घोरमतपंस्तप अहो ह्यमृतसिद्ध्यै॥ ३५

केचिदनले हृदि च घोररुचिबिम्बे
केचिदचलामरशरीरनिचयेषु।
शम्भुयजनं विदधति स्म कुसुमानि
लिङ्गयजनं परशिवस्य च विहाय॥ ३६

ईदृशमुनीशनिचयं तदबलानां
आवलिमपत्यनिवहं प्रथितकर्म।
मोहयितुमौलिबिलिपूजितपदाब्जः तत्र
भुजगाधिप मया सह जगाम॥ ३७

शम्भुमवलोक्य परिमुह्य मुनिवामा
बृन्दमतिसुन्दरतनुं ह्यनुजगाम।
मन्मथशिलीमुखसुविद्धहृदयं तद्
भ्रष्टवसनं विगलिताभरणजालम्। ३८

*முனிவர்களின் புதல்வர்களோ, ஆகமம், புராணம், வேதம், ஆகமம் என அனைத்திலும் நிபுணர்கள். கை தேர்ந்தவர்கள், வேதம் கூறிய நற்சடங்குகளைச் செய்வதில் ஆர்வமிக்க இளைஞர்கள். இவ்வாறு மனைவி - மக்கள் - நண்பர் - உறவினர் கூட்டத்துடன் முனிவர்கள் தேவதாரு வனத்தில் இனிது வாழ்ந்தனர். தேவநிலை*

பெறக்கடும் தவமாக சடங்குகளை இயற்றி வந்தனர். பரமசிவனின் லிங்க வடிவை வழிபடாதவராயினும் ஹோமத் தீயிலும் சூரிய பிம்பத்திலும் தேவர்களின் வடிவிலும் பூக்களால் சிவனை வழிபட்டு வந்தனர். இந்த முனிவர் கூட்டத்தையும் அவர்களது மனைவி மற்றும் புதல்வர்களையும் மயக்க குபேரனால் வழிபடப்பெற்ற சிவன் என்னுடன் அங்கு வந்தார். மிக அழகிய சிவனது தோற்றத்தில் மயங்கிய முனியுவதிகள் சிவனைப் பின் தொடர்ந்தனர். அவர்களின் உள்ளம் காமவசப்பட்டதால், ஆடை ஆபரணங்கள் நழுவுவதை அவர்கள் கவனிக்கவில்லை. *(34-38)*

काचिदवलोक्य शिवमाह मम देहं
भुंक्ष्व वरयौवनमतिप्रवर मोहात् ।
काचिदखिलेशमुपगम्य गुणरम्या
ऽऽलिङ्गनपरा भवति शेष मुनिपत्नी ॥ ३९

काचन मनोहरतनुर्विवसना तं
कामशरताडितमना उरग वीक्ष्य ।
धावति विभो रम रमामलशरीरे
मामिति पिकोल्ललितवागवददीशम् ॥ ४०

इत्थमहिनाथ मुनिवामनयनानां
आवलिरभूज्झटिति दर्पकविकारैः ।
मोहितमनस्सरसिजा परशिवेन
प्रोच्चजलसन्ततसुधानिधिरिवारम् ॥ ४१

मामपि समीक्ष्य कपटस्त्रियमभूवन्
कामवरकार्मुकसुबाणविषयास्ते ।
तापससुतास्तरुणभानुसमभासः
पापचयजालततिचण्डपवमानाः ॥ ४२

केचन नमन्ति मम योनिमवलोक्य
प्रेमवदरोमरमणीयकवरोरुम् ।

केचिदभिवीक्ष्य मम सुन्दरशरीरं
मोहमगमन्चपलचित्तकमलास्ते ॥ ४३

सुन्दरमुखी सुदयिते सुनयनाब्जे
ईषदवलोकय पुनीहि रतिदानैः ।
देह्यधरपल्लवमये मधुरवाणी
त्याहुरपरे मुनिसुताः परममोहात् ॥ ४४

केचिदमलं मम शरीरमनुभुंक्ष्व
सम्यगुपगूह्य तनया मुनिवराणाम् ।
इत्यनुदिनं रमणि नः परिविधेहि
श्रीपदयुगाम्बुजसुपूजनरतानाम् ॥ ४५

केचिदचिरांशुततिकुत्सनपटुं
मद्देहमतिकोमलमनेकमणिभूषम् ।
दध्युरुपगूहनपरा इव रतौ प्राङ्
मीलितविलोचनसरोजमुकुलास्ते ॥ ४६

*சிவனை நோக்கி மயங்கிய ஒருவள் கூறினாள் - 'நல்ல யௌவனத்திலுள்ள என் உடலை ஏற்பீர்' என. மற்றொருவள் குணச் சிறப்பால் அழகியவள். அவள் சிவனைத் தானே அணைத்துக் கொள்ள முற்பட்டாள். மற்றவள் ஆடை நழுவ, காம அடிபட்டவளாக, ஓடி வந்து என் உடலை அனுபவிப்பீர் எனக் குயில் போல் கூவினாள். இவ்வாறு அப்பெண்களின் கூட்டம், கொந்தளிக்கிற கடல் போன்று ஆரவாரம் செய்தது. முனிவர்களின் புதல்வர்களான யுவர்கள் பெண்வேடமிட்ட என்னைக் காம வெறியுடன் அணுகினர். முன் பகலில் காண்கிற தருண சூர்யனின் ஒளியுடன் பாபக் குவியலைப் புயல் காற்றாக எதிர்த்து அகற்றுகிறவளே, அழகிய முகம் உள்ளவளே! என் அன்பிற்கு இனியவளே! கண்ணழகி! என்னைச் சிறிது பார்ப்பாய். ரதி சுகமளித்து இன்புறச் செய்வாய்! உன் உதட்டைத் தருவாய்! என்று வேண்டினர். என் உடல் தூய்மை மிக்கது. உன்*

*திருவடிகளை வழிபடுவதில் ஈடுபடுவோம். எங்களைக் கட்டி அணைப்பாய் என்று வேண்டினர். சிலர் சந்திரனுக்கொப்பான குளிர்ச்சி தருவதும், எண்ணற்ற ஆபரணங்கள் பூண்டதுமான மென்மை மிக்க என் உடலைக் கட்டி அணைத்து கண்களை மூடித் தியானத்தில் ஆழ்ந்தனர். (39-46)*

भृष्टमृदुचीरमृदुचर्मवसनेऽहे
सुन्दरि मरालगमने कनकगौरे।
तिष्ठ सुरमेति निगमागमविधिज्ञाः
केचन च मामनुसरन्ति मुनिपुत्राः ॥ ४७

तिष्ठ रम तिष्ठ मयि शिष्टतरगात्रे
दर्शय वरोरुमबले तव सुभृत्ये।
केचन मुनीन्द्रतनया इति विमोहात्
मारशरताडितहृदो जगुरहे माम्॥ ४८

तिर्यगभिवाद्य मुनिराजतनयाः प्राक्
केचन वदन्त्युरग मां प्रथितधीराः।
एहि सदनं सुरतमाशु मम देहि
प्राञ्जलय ईप्सितवचांसि परिमोहात्॥ ४९

इत्यवनिदेवरमणीयतनयास्ते
शीघ्रमभवन्नपितरामुरगराज।
भ्रष्टचरिताः परशिवेन च मयाऽमी
रुष्टमनसोऽभवनतिप्रबलवृद्धाः॥ ५०

प्रस्फुरितदन्तवसनाः परमकोपाद्
वह्निनिभरक्तनयनाः कलुषचित्ताः।
मामपि शिवं समवलोक्य मुनिसङ्घाः
शप्तुमुपचक्रुरजशक्रसुरवन्द्यम्॥ ५१

शेपुश्च शापैरपि देवदेवं माश्चापि विप्राः परिणीतकोपाः ।
साकं मया भूतपतिर्महात्मा शापैस्तदीयानभिभूत एव ॥ ५२

इत्थं जाते सकलजगतामीश्वरे प्राणनाथे
भूयः कोपात्परममुनयः प्रारभन्त्यागमार्गम् ।
कृत्वा त्र्यश्रं रिपुचयहनं होमकुण्डं हुताशं
तत्र स्थाप्य श्रुतिजविधिना सर्वमन्त्रैस्समग्रैः ॥ ५३

तत्रोद्बभूवाथ नखायुधोग्रो व्याघ्रो महान्भीममुखोऽतिकोपः ।
तत्प्रेरितो देवमुपाजगाम हन्तुं परानन्दसुखं परेशम् ॥ ५४

*முனிவர்களின் புதல்வர்கள், என்னைக் கொஞ்சிக் கெஞ்சினர். உன் பட்டாடை மிகவும் மென்மையுடன் உள்ளது. அன்னம் போல் நடையால் நீ அழகி. தங்கம் போன்று மஞ்சள் வண்ணம் கொண்ட நீ இங்கே நிற்பாய்! என்னுடன் ரமிப்பாய் என்றனர். உன் மேனி திட்டவட்டமாய் கட்டுடன் உள்ளது. உன் அழகை இந்தப் பணியாளிடம் காட்டுவாய் என்றருகில் நின்று கெஞ்சினர். சிலர் தரை மீது விழுந்து வணங்கி என் வீட்டிற்கு வருவாய், காம இன்பம் தருவாய் என வேண்டினர். ஆதிசேஷனே! நடத்தையில் பிசகிய அவர்களைக் கண்ட முதுமை பெற்ற முனிவர்கள் கோபம் அடைந்தனர். உதடு துடிக்க, கண் சிவக்க, என்னையும் சிவனையும் சபிக்கத் தொடங்கினர். அவர்களது சாபம் என்னையும் சிவனையும் சிறிதும் பாதிக்கவில்லை. அதனால் உலகின் நாதனான சிவனிடம் கோபம் பொங்கி வர, வேள்விக்காக திரிகோண குண்டம் அமைத்து மந்திரங்களால் அபிசார ஹோமம் செய்யத் தொடங்கினர். ஹோமத் தீயிலிருந்து கூர்மிக்க நகத்தை ஆயுதமாகக் கொண்ட புலி வெளிப்பட்டு அவர்களால் தூண்டப்பெற்று பேரானந்த வடிவினனான பரமேசனை நோக்கிப் பாய்ந்தது. (47-54)*

विदार्य तं धूर्जटिरद्भुतं तं व्याघ्रं महासत्वमतीव रुष्टम् ।
दधार चर्म स्वकटिप्रदेशे तस्याखिलेशः स्मयमानवक्त्रः ॥ ५५

ते भूतवेतालपिशाचरौद्रवैनायकक्रूरग्रहान्वरिष्ठान्।
संप्रेषयामासुरमी मुनीन्द्राः कुण्डोद्भवान्क्रूरदृगुग्रवेषान्॥ ५६

समागतान्भूतगणान्विलोक्य मुनीन्द्रकोपोच्चलितान्महेशः।
ईशोऽपि नृत्तञ्च चकार तत्र तेनाभ्यभूवन्परिचारकास्ते॥ ५७

भूयस्ततो मन्युसमेतचित्ताः सोमं वितेनुर्मुनिपुङ्गवास्ते।
तत्राविरासीद्गजपुङ्गवश्च सनीरजीमूतनिकायकायः॥ ५८

आयान्तमानन्दवपुर्महात्मा कोष्ठप्रदेशे प्रविदार्य तं सः।
प्रावृत्य तच्चर्म ननर्त शम्भुस्तन्मस्तके दक्षमखान्तकोऽसौ॥ ५९

ततो हि ढक्कां प्रतिगृह्य शम्भोर्नृत्तानुकूलं समवादयं वै।
विहाय रूपं परमत्तकेश्याः व्यलोकयं तादृशमम्बिकेशम्॥ ६०

சிவபெருமான் அந்தப் பெரும் புலியைக் கிழித்து அதன் தோலை இடுப்பில் தரித்தார். அவர் உலகநாதர். அவர் முகத்தில் புன் சிரிப்பு திகழ்ந்தது. பூதம், வேதாளம், பிசாசம், விநாயககணம், ருத்ரகணம், குரூரகிரகம் எனப் பல ஹோம குண்டத்திலிருந்து எழுந்தன. அவர்களைக் கண்ட பெருமான் நடனமாட, அவர்கள் அடங்கிவிட்டனர். மீண்டும் கோபவசப்பட்ட முனிவர்கள் ஹோமம் செய்ய, அதிலிருந்து கார்மேகம் போன்ற கருத்த பெரும் யானை வெளியானது. ஆனந்தத்துடன் நடனமாடுகிற சிவன், தன்னை நோக்கி வருகிற யானையின் குடலைக் கிழித்து அந்தத் தோலைத் தன் மேலாடையாக விரித்துப் போர்த்திக் கொண்டு, அதன் மத்தகத்தின் மீது நடனமாடினார். அவர் கையிலிருந்த உடுக்கையை வாங்கிக் கொண்டு நடனத்திற்கேற்ப அதனைத் தட்டினேன். மோகினி வேஷத்தைத் துறந்து நன்கு அந்த அம்பிகைமணாளனை உற்று நோக்கினேன். (55-60)

ब्रह्मा च तालात्तकरस्सरस्वती वीणां दधाना कमलाब्धिसम्भवा।
उपाङ्गमाचारवती शचीपतिर्वेणुं दधत्ते ह्यभजन्नुमापतिम्॥ ६१

पीत्वा ह्यादिसभाङ्गणे पशुपतेः श्रीवीरनृत्तोद्भवा
नन्दस्वादुरसं प्रसन्नहृदयास्ते तापसाः कर्मठाः ।
नत्वा प्राञ्जलयो नगेन्द्रतनयोपेतं परं शाश्वतं
नित्यानन्दमयं स्वयंप्रभममुं द्राक्तुष्टुवुः शङ्करम् ।। ६२

तस्माद्ब्रह्महरीश्वराः प्रमथपाः श्रीनन्दिकेशादयः
चन्द्रेन्द्रादिसुरोत्तमाः सदसि दिक्पालाश्च पूर्वामराः ।
स्थित्वादौ परितः सभेशितुरुमानाथस्य सर्वेशितुः
सेवन्ते स्म निरन्तरात्मनि शिवज्ञानेच्छया शङ्करम् ।। ६३

*பிரும்மா தாளம் போட்டார். ஸரஸ்வதி வீணை ஏந்தினாள். லக்ஷ்மி லயாங்கமாகப் பாடினாள். இந்திரன் புல்லாங்குழல் ஊதினான். அனைவரும் இவ்வாறு பெருமானை வழிபட்டனர். ஆதிஸபையின் முன் அங்கணத்தில் பசுபதியின் இந்த வீர தாண்டவத்தைத் தரிசித்துச் சுவைத்து உள்ளம் மகிழ, அந்த முனிவர்களும் கை கூப்பி வணங்கினர். நித்யானந்தனும் ஸ்வயம்பூவும் ஆன சிவனைத் துதித்தனர். சித் ஸபையின் ஈசனை அவரைச்சுற்றி மும்மூர்த்திகள், பிரமதகணத் தலைவர்களான நந்தி முதலானோர், சந்திரன் இந்திரன் முதலிய தேவர்கள், திக்பாலகர்கள், சூழ்ந்து நிற்க சிவஜ்ஞானம் பெற விரும்பிய முனிவர்கள் சிவனைத் துதித்தனர். (61-63)*

मुनय ऊचुः ।।

विधिहरिहरनिर्जरेन्द्रमुख्यैर्विबुधवरैर्नुतपादपङ्कजाय ।
तुहिनगिरिसुतासमाश्रिताय प्रथमसभापतये नमः शिवाय ।। ६४

मदजलभृदिभोत्तमाङ्गमध्यस्तिमितमनोहरनृत्तवैभवाय ।
सनकमुनिवरनुताय तुभ्यं प्रथमसभापतये नमः शिवाय ।। ६५

विबुधमुनिगणैर्महानुभावैः परिणुतपादपयोरुहाय पूर्वैः ।
विविधसजगदण्डकोटिनेत्रे प्रथमसभापतये नमः शिवाय ।। ६६

घनतरशिवबोधदेशिकाय प्रलयहुताशनरूपिणे मलानाम्।
विविधविधिशीर्षनाशिने च प्रथमसभापतये नमः शिवाय ॥ ६७

सुतपशुतनयादिमीननक्रे भवजलधौ सुखदुःखभङ्गजाले।
शिव शिव परिपाहि साधु मग्नान्प्रथमसभापतये नमः शिवाय ॥ ६८

முனிவர்களின் துதி

*ஆதிஸபாபதியான சிவனே! உமக்கு வணக்கம். மும்மூர்த்திகள் இந்திரன் முதலான தேவர்கள் இவர்களால் வணங்கப் பெற்ற திருவடி கொண்டவரும் மலைமகளைச் சார்ந்துள்ளவருமான உமக்கு வணக்கம். மதநீர் பெருகுகிற யானையின் மத்தகத்தின் மீது அழகாக நடனமாடுகிற பெருமானுக்கு ஸனக முனிவரால் வணங்கப் பெற்றவருக்கு ஆதிஸபாநாதருக்கு நமஸ்காரம். பேராற்றல் மிக்க தேவரிஷிக் கூட்டத்தால் திருவடித் தாமரைகளில் வணங்கப் பெற்றவருக்கு, பல பிரும்மாண்டங்களை ஆள்பவருக்கு, ஆதிஸபேசருக்கு நமஸ்காரம். கம்பீரமான சிவஜ்ஞானத்தை உபதேசிப்பவருக்கு, பாபம் முதலிய அழுக்குகளைப் பிரளயாக்னியாகச் சுட்டெரிப்பவருக்கு, பிரும்மாவின் தலைகளைக் கொய்தவருக்கு, ஆதிஸபாநாதருக்கு நமஸ்காரம். மக்கள், பசுக்கள், பெண்கள் என்ற முதலைகளும் சுறாமீன்களும் சுற்றி வருகிற - சுகம் துக்கம் என்ற அலைவரிசை கொண்ட ஸம்ஸாரக் கடலில் மூழ்கித் தத்தளிக்கிற எங்களைக் காப்பாற்றுவீர். சிவனாகிய உமக்கு நமஸ்காரம். (64-68)*

विष्णुरुवाच ॥

इति स्तुत्वा महादेवं नृत्यन्तं तं परात्परम्।
प्रणेमुर्दण्डवद्भूमौ देवदारुवनालयाः ॥ ६९

संसारदावानलदह्यमानान्मुनीश्वरान्कर्मरतान्विलोक्य।
ज्ञानोपदेशं च चकार तेषामाम्नायवाक्योद्भवमादिदेवः ॥ ७०

संप्रापिरे ज्ञानघनात्परेशाद् ज्ञानं च वेदान्तभवं मुनीन्द्राः।
सर्वेऽपि मुक्ताः परमेशरूपाः सदाऽनुभूयात्मतया शिवं स्वम् ॥ ७१

इति चतुर्थोऽध्यायः

*தேவதாரு வனத்திலிருந்த முனிவர்கள் நடனமாடுகிற பரமனைத் துதித்துத் தரையில் தடிபோன்று விழுந்து வணங்கினர். சடங்குகளில் ஈடுபட்டு ஸம்ஸாரக் கடுந் தீயில் வாடுகிற முனிவர்களைக் கண்ட ஈசன், வேத வாக்யங்களைக் கொண்டே ஜ்ஞான உபதேசம் செய்தார். ஜ்ஞானச் செறிவுள்ள பரமேசனிடமிருந்து வேதாந்த ஜ்ஞானம் பெற்ற முனிவர்கள் அவரைத் தமது ஆத்மாவாக உணர்ந்து பரமேசநிலை பெற்று முக்தி பெற்றனர். (69-71)*

—*—

## अथ पञ्चमोऽध्यायः ॥

### मुनीनां ज्ञानोपदेशः

शेष उवाच ॥

हरे सर्वजगन्नाथ पुरुषोत्तम शाश्वत ।
कथं ज्ञानोपदेशं स चकार परमेश्वरः ॥ १

ज्ञानं मम महाविष्णो तत्प्रसीद कृपानिधे ।
पावनं मम भक्तस्य परात्परतरं वद ॥ २

श्रीभगवानुवाच ॥

या सा च्युतपुरी भोगिन्कृत्तिवासेश्वराज्ञया ।
मम या परमा साक्षात्तीर्थोपनिषदुत्तमा ॥ ३

तन्माहात्म्यं मया वक्तुं कल्पकोटिशतैरपि ।
न शक्यं विस्तराच्छेष संक्षेपेण वदामि ते ॥ ४

अण्डबाह्याच्च्युतमिति यत्तद्विष्णोः परं पदम् ।
समस्तोपनिषद्वेद्यं न यस्मात्परमं पदम् ॥ ५

श्रीमच्च्युतपुरीत्युक्त्या साक्षाद्विष्णोः परं पदम् ।
तस्यां छित्वा पशून्पाशान्विशोष्य च विदाह्य तान् ॥ ६

पावनादमृतीकाराच्छिवत्वस्य प्रभावनात् ।
त्यक्त्वा पशुत्वं मां प्राप्य न क्वचिज्जायते पुनः ॥ ७

पाशच्छेदमकृत्वा यो मोक्षमिच्छति मानवः ।
प्राप्तोऽपि परमैश्वर्यं पुनरावर्तते ध्रुवम् ॥ ८

*அத்தியாயம் 5*

முனிவருக்கு ஜ்ஞான உபதேசம்

*ஆதிசேஷன் பகவான் விஷ்ணுவிடம் கேட்கிறார் - ''உலகமனைத்தின் நாதரான ஹரியே! புருஷோத்தம! என்றும் நிலையாக நிற்பவரே! பரமேசுவரன் உபதேசித்த ஜ்ஞானத்தை எனக்குக் கூறுவீராக! கருணையின் வைப்பிடமே! பக்தனை என்னை அது தூய்மை பெறச்செய்யும். பெரிதிலும் பெரிதானது அது.'' பகவான் கூறுகிறார் - ''கிருத்திவாஸரின் ஆணையால் தோன்றிய வழுவூர் எனக்கு பெரும் க்ஷேத்திரம். தீர்த்தங்களை அருகில் கொண்டது. அதன் பெருமை சொல்லிலடங்காது. அண்டத்தின் வெளியிலிருந்து நழுவி அண்டத்தினுள் இடம்பெற்றது. உபநிஷத்துகளில் வெளிப்படுத்தப்பட்டது. அது எங்கும் பரவியுள்ள பரம்பொருளின் மேலான இடம். பசுநிலையையும், பாசநிலையையும் உலர்த்தி விலக்குமிடம். தூய்மைப் படுத்துவதாலும் சிவ நிலையை வெளிப்படுத்துவதாலும் பசுநிலை நீங்கி மறுபடி எங்கும் பிறப்பதில்லை. இந்தக் கட்டை அறுக்காமல் முக்தி பெறுவது இயலாது. மேனிலை பெற்றாலும் மறுபிறப்பு அவனுக்கு உண்டு. (1-8)*

शेष उवाच ॥

संप्राप्तैस्तैर्मुनिवरैर्वेद्यं वेदान्तवेदिभिः ।
कृतं कर्मैव सततं मुनिभिर्वेदपारगैः ॥ ९

अस्मात्परं पदं किं वा वदस्व निजवल्लभ ।
श्रीविष्णुरुवाच ॥
वक्ष्ये शेष महाभाग शृणुष्व सुसमाहितः ॥ १०

पदं मे द्विविधं प्रोक्तं वेदशास्त्रपुराणकैः ।
अपरं च पदं भोगिन्परमं च पदं मम ॥ ११

भोगैश्वर्यप्रवृत्तानामपरं मे परं पदम् ।
विरक्तानां विमुक्तानामात्यन्तिकलयार्थिनाम् ॥ १२

भस्मज्योतिर्दिदृक्षूणां शिवं तं सोममीश्वरम् ।
अपरावृत्तिदं साक्षात्परमं पदमिष्यते ॥ १३

तत्पदं लिङ्गमाख्यातं शिवो येनैव दृश्यते ।
शरीरेण यथैवात्मा लिङ्गी देवो महेश्वरः ॥ १४

आपूर्वमण्डलेनैव तत्सूक्ष्मं चन्द्रमा यथा ।
वर्णाश्रमसमायुक्तः कृत्वा पाशुपतव्रतम् ॥ १५

योगं पाशुपतं युञ्जन्पदमभ्येति मे परम् ।

*வேதம் உணர்த்துகிற பெருநிலையை ஏற்கனவே அடைந்த முனிவர்கள் மீண்டும் அடைய வேண்டிய பெருநிலை யாது? என்ற கேட்ட ஆதிசேஷனுக்கு பகவான் விளக்குகிறார். பரமபதம், அபரபதம் என இரண்டு உள்ளன. ஸுகானுபவத்தையும் செல்வத்தையும் நாடுபவர் என் அபரபதத்தை அடைகின்றனர். பற்றற்று மறுபடி பிறப்பிறப்பில்லாதவாறு என்னுடன் லயமடைய விரும்புபவர் பரமபதத்தை அடைகின்றனர். எரிபொருள் எரிந்தபின் உணரப்பெறுகிற ஜோதியான உமையுடன் கூடிய சிவனைக் காண விரும்புவர் மறுபடி பிறப்பற்ற பரமபதம் அடைவர். அதுவே லிங்க வடிவிலுள்ளது. சிவனை அதனால் காணலாம். சரீரமாகிய லிங்கத்தினுள் ஆத்மாவான தேவன் மகேசன் காணப்பெறுகிறான். அது பூர்ண சந்திர தர்சனமாகும். வர்ணாசிரம முறைப்படி நடப்பவன் பாசுபத விரதமிருக்க பாசுபதயோக நிலையில் பரமபதம் அடைகிறான். (9-15)*

शेष उवाच ॥

किं तद्व्रतं कथं कार्यं पाशसंछेदनञ्च किम् ॥ १६

शोषणं दहनं प्लावममृतीकरणं प्रभो ।
को वा पाशुपतो योगः कथं वा शिवभावना ॥ १७

का मुक्तिः किं च विज्ञानं परं यस्मान्न विद्यते ।
कः शिवः कः शिवानन्दः प्रसीद पुरुषोत्तम ॥ १८

श्रीविष्णुरुवाच ॥

शृणु वच्मि महाभाग यल्लिङ्गं तत्परं पदम् ।
तल्लिङ्गपूजा न कृता देवदारुवनालयैः ॥ १९

दृष्ट्वापि सहितं शम्भुं मया मोहवशं गताः ।
न कर्म सहते सा च श्रौतस्मार्तात्मकं फणिन् ॥ २०

शिवार्पितानि कर्माणि न बन्धाय विमुक्तये ।
शिवलिङ्गार्चनात्तैस्तु दृष्टः साम्बः सनातनः ॥ २१

ज्ञानानन्दघनः शुद्धः साक्षी लोकस्य शाश्वतः ।
मेधापीठे समानीतो गुरुवेषधरः प्रभुः ॥ २२

सर्वेषामुपकाराय ज्ञानं समुपदिष्टवान् ।

*''பாசுபதவிரதம், பாசம் நீக்குதல், பாசத்தை உலர்த்தி எரித்து நீரில் கரைத்து அமுதமாக்குவது என்பவை எப்படி நிகழ்கின்றன? பாசுபதயோகம் என்பது என்ன? சிவபாவனை, முக்தி, என்பது என்ன? சிவன் சிவானந்தம் என்பது என்ன? விளக்குவீர் என சேஷன் கேட்க விஷ்ணு விளக்குகிறார் - 'லிங்கமே பரமபதம் என்றேன். தேவதாரு வனத்து முனிவர்கள் அந்த லிங்கபூஜை செய்யவில்லை. என்னுடன் சிவனைக் கண்டதும் மயங்கினர். வேதமும் ஸ்மிருதியும் பணித்த சடங்குகளால் லிங்கபூஜை நடப்பதில்லை. சிவனிடம் தாம் செய்த சடங்குகள் அனைத்தையும் பலனின் எதிர்பார்ப்பு இன்றி அர்ப்பணம் செய்ய பாசப்பிணைப்பு*

*ஏற்படாது. முக்திக்கு உதவும். சிவலிங்கத்தை வழிபடுவதால் உமையுடன் கூடிய சிவனை அவர்கள் காண்கின்றனர். ஜ்ஞானமும் ஆனந்தமுமே செறிவுற்ற தூய ஆத்மா, உலகின் ஸாக்ஷி அவர். குருவாகி மேதா(ஜ்ஞான) பீடத்தில் அமர்ந்து உலகனைத்தின் நன்மைக்காக முனிவர்களுக்கு ஜ்ஞானம் உபதேசித்தார்.* **(16-22)**

शेष उवाच ।।

विधिहरीशनुताङ्घ्रियुग प्रभो मम गुरो स्मरशासनवल्लभ ।
मुनिवरेषु शिवो यदुपादिशत्तदुपदेशितुमर्हति मे हरे ।। २३

कमलया सह निर्मलविग्रह प्रणतभक्तभवार्णवतारण ।
परशिवस्य तु बोधमुपादिश प्रभवनाशविनाशनहेतुकम् ।। २४

सूत उवाच ।।

इत्युक्तो भोगिराजेन साक्षाद्विष्णुर्जगत्पतिः ।
ध्यात्वा साम्बशिवं देवं जगाद मुनिपुङ्गवाः ।। २५

विष्णुरुवाच ।।

अशेषजगदाधार शेष भोगीन्द्रसत्तम ।
शिवोपदिष्टं यद्ज्ञानं मुनिभ्यस्तद्ब्रवीमि ते ।। २६

परात्परतरं ज्ञानं वेदैस्साङ्गैर्निरूपितम् ।
गुह्याद्गुह्यतमं साक्षादज्ञानमज्ञैर्बहिष्कृतम् ।। २७

मद्भक्ते तत्प्रदातव्यं शिवपूजापरायणे ।
गृहस्थेभ्यो विशेषेण यतीनां तुर्यगामिनाम् ।। २८

औपनायनिकाग्नीनां श्रोत्रियब्रह्मचारिणाम् ।
क्षत्रियाणां च वैश्यानां त्रयाणां नान्यवर्णिनाम् ।। २९

यथावदनुगृह्णामि ज्ञानं योगिनिषेवितम् ।
अत्याश्रमेषु सर्वेषु चतुर्ष्वप्याश्रमेषु च ।। ३०

यः पशुस्तत्पशुत्वञ्च पते नान्येन स त्यजेत्।
तं हत्वा न स पापीयानिति शास्त्रविनिश्चयः ॥ ३१

आत्मानः पशवः प्रोक्तास्सर्वे संसारवर्तिनः ।
तेषां पतिरयं देवो रुद्रः पशुपतिः परः ॥ ३२

*இதனைக் கேட்ட சேஷன் முனிவருக்கு சிவபெருமான் உபதேசித்தனைத்தையும் கேட்க விரும்பினான். பிறப்புமிறப்பு மற்ற நிலை பெறச் செய்கிற அதனைக் கேட்டான். உடன் பகவான் விஷ்ணு அம்பிகையுடன் உள்ள சிவபெருமானைத் தியானித்து விளக்கினார். சேஷனே! நீ உலகைத் தாங்குகிறாய். சிவன் முனிவருக்கு உபதேசித்ததைக் கேட்பாயாக. அது அங்கங்களுடன் கூடிய வேதங்கள் வெளியிட்ட தத்துவம். ரஹஸ்யத்திலும் ரஹஸ்யமான மேலான ஜ்ஞானம். அறிவிலிகள் அதனைப் புறக்கணிப்பர். என் பக்தன். சிவபூஜையில் ஆர்வமிக்கவன், இல்லறத்தான், துறவி, வேள்வித் தீயை நன்கு வழிபடுபவர், வேதமோதிய பிரும்மசாரி, இவர்களுக்கு இதனை விளக்கலாம். ஆசிரம தர்மத்தை விட்டு அவதூதர்களானவர் இவர்கள் இதனைக் கேட்கத் தகுதியுள்ளவர். பசுத் தன்மையை அதன் பதியான சிவனைத் தவிர வேறு யாரும் நீக்க இயலாது. இந்தப் பசுவைக் கொல்பவன் பாபியல்ல. ஸம்ஸாரத்தில் ஆட்பட்ட அனைவரும் பசுக்களே. அவர்களை மேய்ப்பவன் ருத்ரன். பசுபதி இவருக்கு அப்பாற்பட்டவர். (23-32)*

भूतानामधिपो रुद्रः क्रीडंस्तन्त्रिचरो वृषा ।
स्वेच्छयापि न यस्याभूद्धतसंसारसङ्ग्रहम् ॥ ३३

अस्मात्पशुपतेरन्यद्यत्किञ्चिज्जगदीरितम् ।
सर्वे ते पशवः प्रोक्ता वशी पशुपतिश्शिवः ॥ ३४

मायापाशेन बध्नाति पशूनेतान्स लीलया ।
तमेव मोचकं प्राहुः पशूनां वेदवादिनः ॥ ३५

मायापाशेन बद्धानां मोचकोऽन्यो न विद्यते ।
तमृते परमात्मानं भूताधिपतिमीश्वरम् ॥ ३६

चतुर्विंशतितत्वानि मायाकर्मगुणाः प्रभोः ।
एते पाशाः पशुपतेः क्लेशाश्च पशुबन्धनाः ॥ ३७

உயிரினமனைத்தின் தலைவர் ருத்ரன். கையில் மூக்கணாங்கயிற்றால் பசுவைக் கட்டிக் காளைபோல் விளையாடுகிறான். இந்த பசுபதியைத் தவிர மற்றதனைத்தும் பசுவே. அவர்களைத்தன் வசத்தில் கொண்டவர் பசுபதியான சிவன். அவர் விளையாட்டாக மாயை எனும் கயிற்றால் இந்தப் பசுக்களைக் கட்டுகிறார். அவரே விடுவிப்பவரும் கூட. வேறு எவரும் இந்தக் கட்டிலிருந்து விடுவிக்க முடியாது. ஜீவனைக் கட்டுகிற பாசம் என்பது 24 தத்துவங்களாகும். மாயையின் செயலும் குணம் கொண்டவை அவை. பாசம் (கட்டு) என்றும் க்லேசம் (துன்புறுத்துவது) என்றும் இதனைக் கூறுவர். (33-37)

भूम्यम्बुवह्निमरुतः खाहङ्कारौ मतिर्मनः ।
एताः प्रकृतयस्त्वष्टौ विकाराश्च तथा परे ॥ ३८

श्रोत्रे त्वक्चक्षुषी जिह्वा घ्राणश्चैव तु पञ्चमम् ।
पायूपस्थं करौ पादौ वाक्परा दशमी मता ॥ ३९

शब्दस्स्पर्शश्च रूपं च रसो गन्धो महीसुराः ।
त्रयोविंशतिरेतानि तत्वानि प्राकृतान्यपि ॥ ४०

चतुर्विंशकमव्यक्तं प्रधानं गुणलक्षणम् ।
अनादिमध्यनिधनं कारणं जगतः परम् ॥ ४१

सत्वं रजस्तमश्चेति गुणत्रयमुदाहृतम् ।
साम्यावस्थितिमेतेषामव्यक्तं प्रकृतिं विदुः ॥ ४२

सत्वं ज्ञानं ततो ज्ञानं रजोमिश्रमुदाहृतम् ।
गुणानां बुद्धिवैषम्याद्वैषम्यं कवयो विदुः ॥ ४३

धर्माधर्माविति प्रोक्तौ पाशौ द्वौ कर्मसंज्ञितौ ।
शिवेऽर्पितानि कर्माणि न बन्धाय तु मुक्तये ॥ ४४

*பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம் (என்ற பூதங்கள்) அஹங்காரம், புத்தி, மனம் இவ்வெட்டும் உலகின் மூலப்பொருட்கள் (பிரகிருதி). மற்றவை இவற்றிலிருந்து தோன்றியவை (விக்ருதி - விகாரம்). அவையாவன - இருகாதுகள், தோல், இருகண்கள், நாக்கு, மூக்கு என ஐந்து, மலத்துவாரம், சிறுநீர் துவாரம், இருகைகள், இருகால்கள், வாக்கு என ஐந்து, ஒலி, தொடுஉணர்ச்சி, உருவம், சுவை, மணம் என ஐந்து இந்த 23ம் அந்த விகாரங்கள் (இவை பிரகிருதியிலும் அடங்கும்.) 24வதான தத்துவம் பிரதானம். இது ஸத்வம் ரஜஸ்தமஸ் என்ற குணங்களால் உணரப் வெது. இதற்கு ஆதியோ, நடுவோ, முடிவோ கிடையாது. உலகின் மூலகாரணம். ஸத்வம் முதலிய முக்குணங்களின் ஸமநிலேயே மூலப்பொருளான பிரகிருதி ஆகும். ஸத்வகுணம் ஞானநிலேயாகும். ரஜோகுணத்துடன் கூட மிச்ரஜ்ஞானமாகும். புத்தியின் சலனத்தால் ஏற்படுகிற தடுமாற்றம் குணங்களின் ஸமநிலே மாறுவதால் நேர்கிறது. அதனுல் ஜீவனின் செயல் தர்மம் அதர்மம் என்ற இரு நிலேகளாக மாறுகிறது. இவ்விரண்டுமே பாசம் எனப்படும். ஜீவனின் செயல் (கர்மம்) அனேத்தையும் ஈசுவரனிடம் அர்ப்பணிக்க அவை பாசமாகிக் கட்டுவதில்லே. மேலும் முக்திக்கும் காரணமாகிறது. (38-44)*

अविद्यामस्मितां रागं द्वेषं चाभिनिवेशकम्।
क्लेशाख्यानचलान्प्राहुः पाशानात्मनिबन्धनान्॥ ४५

एतेषामेव पाशानां माया कारणमुच्यते।
मूलप्रकृतिरव्यक्ता सा शक्तिस्तिष्ठतीश्वरे॥ ४६

अस्वामित्वादयं देवःस्वामित्वादखिलात्मनाम्।
क्लेशाद्यैरपरामृष्टो विपरीतेन कर्मणाम्॥ ४७

एवमाद्यैरसंस्पृष्टः स्वेच्छयापि कथञ्चन।
देशकालादिभिर्नित्यो यस्तस्मादीश्वरस्स्मृतः॥ ४८

बन्धमोचनकर्तृत्वात्पशूनां स पतिस्स्मृतः।
मायाकर्मात्मजमलमनादिः प्राणिनां यतः॥ ४९

स्वेच्छया नौषधं हन्ति द्रागित्येव भिषक्तमः ।
सर्वोपाधिविहीनत्वान्निर्मलत्वात्स्वतो यतः ॥ ५०

*இந்தப் பாசங்கள் ஐவகைப்படும். அவித்யா (அறியாமை) அஸ்மிதா (தான் என்ற எண்ணம்,) ராகம் (விருப்பு) த்வேஷம் (வெறுப்பு) அபிநிவேசம் (ஆழ்ந்த எண்ணப்பதிவு) என இவை க்லேசம் என்ற ஆத்மாவைக் கட்டுக்குள்ளாக்குகிற பாசங்கள். இப்பாசங்களின் மூலப்பொருளான காரணம் மாயை. இதுவே உலகின் மூலப்பொருளாகிய மூலப்ரகிருதி. அது வெளிப்படையாக உணர இயலாதது (அவ்யக்தா). அந்த சக்தி ஈச்வரனிடம் அடங்கியுள்ளது. ஈச்வரன் எல்லா ஆத்மாவிற்கும் உடமையாளர் (ஸ்வாமீ). இந்தப் பாசங்களின் ஸ்வாமி அல்ல. க்லேசங்கள் அவரிடம் ஒட்டாது. அதனுல் கட்டின்றித் தன் இச்சைப்படி செயல் புரிகிறுர். தேசமும் காலமும் அவரிடம் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தாது. அவர் அழிவற்ற நித்யர். அதனுல் ஈசுவரர். கட்டவும் கட்டிலிருநது விடுவிக்கவும் அவரால் இயலுமென்பதால் பசுபதி. மாயையால் ஏற்பட்ட செயல்முறை, அதனுல் ஏற்படுகிற அப்பழுக்கு; இது பிராணிகள் தோன்றும் போதே ஒட்டுவதால் இவை அநாதி. நம் இச்சைப்படி இந்நோயை நீக்க மருந்தில்லே. அவர் ஒருவரே இந்த நோய்க்கு மிகச் சிறந்த மருத்துவர். அவருக்கு எதன் உதவியும் தேவையில்லே. தானும் அப்பழுக்கற்றவர். நம் அழுக்கையும் நீக்குபவர். (45-50)*

प्रसन्नत्वात्स्वरूपेभ्यस्सर्वेभ्योऽयं शिवः परः ।
चतुर्विधमिति ज्ञात्वा धाम शैवं परं द्विजः ॥ ५१

न लिप्यते महापापैरपि पातकसम्भवैः ।
अलेपकमिदं योगिज्ञेयं धाम चतुष्टयम् ॥ ५२

तदेतद्भक्तितो वेद यो निरुक्तेन निश्चयात् ।
न लिप्यतेऽघसङ्घैस्स पद्मपत्रमिवाम्भसा ॥ ५३

असङ्गः सर्वपापानां शातशास्त्रमनुत्तमम् ।
स हुतैर्विरजाहोमैर्विरजा विमलस्स्वयम् ॥ ५४

छित्वापि पापानखिलान्शोषयित्वाऽग्निना दहेत्।
प्लावयेदमृतेनापि स्वं पुनर्भावयेच्छिवम्॥ ५५

*தன் வடிவான அனைத்திலும் இவர் உள்ளார். அதனால் இவர் பரனான சிவன். (எல்லாவற்றிற்கும் மேலானவர்) இந்த சிவ நிலையை நன்கு உணர்ந்தவர் மீது எந்த மஹாபாபமும் ஒட்டாது. பாபத்தால் நேர்கிற துயரமும் ஒட்டாது. யோகிகளே இதனை உணர முடியும். ஸ்வாமீ, பசுபதி, ஈச்வரன், சிறந்த வைத்யன் என்ற நான்கு நிலைகள் கொண்டதால் சைவபதம் எல்லாவற்றிற்கும் மேலானது. இதனைப் பக்தியால் உணர்பவர், உபநிஷத் முதலியதால் நிச்சய ஜ்ஞானம் பெற்றவர், தாமரை இலை மீதுள்ள நீர்த்துளி தாமரை இலையில் ஒட்டாதிருப்பதுபோல், பாபத்தின் தீண்டலற்று வாழ்வார். பாபங்கள் அனைத்தையும் வெட்டுகிற கூரான கத்தி பற்றற்ற நிலையே. விரஜா ஹோமம் செய்ய பாபம் ஒட்டாது. பாபத்தின் காரணமான பற்று நீங்கும். அப்படி பாபத்தை வெட்டிச் சாய்த்துக் காய வைத்து ஞானத்தீயிலிட்டுக் கொளுத்தி மீண்டும் எழாதபடி செய்தபின், தன் உடலிலுள்ள புனிதத்தை அமுத நீரிட்டுத் தூய்மைப் படுத்தித்தான் புண்ய பாபத் தொடர்பற்ற ஆத்மாவாகிச் சிவனானதாகப் பாவனை செய்ய வேண்டும். (அவ்வாறு ஆகிவிட்டதாக உணர்வதும் அதுவாகவே ஆவதும் தான் பாவனை.) (51-55)*

न भूयः पशुतां याति रुद्राग्नेर्भस्मभावितः।
पञ्चमं धाम विज्ञेयं चतुर्भ्यस्तूत्तमोत्तमम्॥ ५६

अपुनर्भाविनं धाम भस्मेति परमेश्वरः।
पञ्चाक्षरी परा विद्या शिवज्योतिरवाप्तये॥ ५७

ओंकारः प्रणवःसूक्ष्मो विद्यानां बीजमुत्तमम्।
पश्चिमाद्यं मनो नृणां भस्मभावाप्तये स्मृतः॥ ५८

तस्मादशेषतत्वानि प्रणवेन विशोधयेत्।
तथा तद्गुणसंख्यानामात्मानं भावयेच्छिवम्॥ ५९

शिवभूते शरीरेऽस्मिन्हंसेनात्मानमानयेत्।

ருத்ராக்னியில் மீந்த திருநீற்றால் தூய்மை பெற்றவன் மறுபடி பசு நிலை அடையமாட்டான். இவ்வாறு நான்கு தாம நிலைகளையும் கடந்த ஐந்தாவது இடத்தை மிக மிகச் சிறந்ததென்பர். மறுபிறப்பற்ற நிலை அது. (பஸ்மமான பின் அதில் முன் நிலையிலிருந்த எதுவும் மீதமிருக்காதல்லவா? அதனால் வினைமீதமில்லை. அதனால் பிறப்பிறப்புத் தொடராகிய ஸம்ஸாரத் தொடர் இல்லை.) சிவஜ்யோதியை அடைய பஞ்சாக்ஷர மந்திரம் மேலானது. ஓங்காரம் எப்போதும் புதிது. அதனால் அது பிரணவம். தூய்மை உருவானது. மந்திரங்களனைத்திற்கும் வித்து. மனம் திருநீறு நிலை அடைய அது உதவும். அதனால் உடலிலுள்ள தத்துவங்கள் அனைத்தையும் பிரணவத்தால் தூயதாக்க வேண்டும். முக்குணங்களும் பாதிக்கிற ஆத்மாவை சிவனாகபாவனை செய்ய முக்குணக் குறுக்கீடு அகலும். உடலான தத்துவங்கள் அனைத்தும் தூய்மை பெற்றதும் ஹம்ஸ: ஸோஹம் என புறத்துப்பொருள் எதுவும் ஒட்டாத தூயநீரில் தூய்மை குறையாமல் நீங்குகிற ஹம்ஸம், தூயதுடன் தூய்மையற்றதும் கலந்திருந்தால் தூயதல்லாததைத் தவிர்த்து தூயதை மட்டும் ஏற்கிற ஹம்ஸம், அதற்காகத் தனிமையை நாடுகிற ஹம்ஸம். இந்த ஹம்ஸநிலையை ஆத்மா பெற்றுள்ளதை ஹம்ஸ: ஸோஹம் ஸோஹம் ஹம்ஸ: ஹம்ஸமே நான் (ஆத்மா), நானே ஹம்ஸம் என்ற ஜபம் செய்யாமலே (செயலால் ஜபம் செய்யாமல்) உணர்வால் ஜபிப்பது சுவாஸமாக இயல்பாக நடைபெறுவதை, உணரவேண்டும். *(56-59)*

शिवाग्निभस्म तन्मन्त्रेणादाय च विशोधयेत् ॥ ६०

सितेनोद्धूलयेद्देहमग्निरित्यादिसप्तभिः ।
त्रियायुषञ्जमदग्नेरिति कुर्यात्त्रिपुण्ड्रकम् ॥ ६१

शिरोललाटश्रुतिषु कण्ठबाह्वोश्च चक्षुषोः ।
षडङ्गुलादित्रिषु च त्रिपुण्ड्रानि चतुर्ष्वपि ॥
कुर्यादज्ञानरूपाणि सितानि द्विजपुङ्गवाः ॥ ६२

ध्यायेच्च मन्त्रार्थमिति द्विजेन्द्रा यत्तत्पदं भस्म पवित्रमाद्यम्।
तदेव चाग्न्यादिसमस्ततत्त्वं योनिःस भस्मेति परानुभूतः ॥ ६३

*சிவாக்னியில் வெளியான பஸ்மம் பூசி மேலும் தூய்மைப்படுத்த வேண்டும். அக்நிரிதி பஸ்ம, வாயுரிதி பஸ்ம, ஜலமிதி பஸ்ம, ஸ்தலமிதி பஸ்ம, வ்யோமேதி பஸ்ம, ஸர்வம் ஹவா இதம் பஸ்ம, மந இத் யேதானி சக்ஷுஂஷி பஸ்மாநி என்ற ஏழு வாக்யங்களையும், த்ர்யாயுஷம் ஜமதக்நே: கச்யபஸ்ய த்ர்யாயுஷம், தத்தேவாநாம் த்ர்யாயு ஷம் தந்மே அஸ்து த்ர்யாயுஷம் எனக் கூறி சிரஸ், நெற்றி, காது, கழுத்து, கைகள், கண்கள் இவற்றின் மீது ஆறங்குலத்திலிருந்து மூன்று அங்குல அளவு மூன்று பட்டைகள் போட்டுக் கொள்ள வேண்டும். (சிவாக்னியில் எல்லாம் சாம்பலாகி விட்டதை அடிக்கடி நினைவிற்கொள்ளவும், ஞானம் பெறச் செய்கிற முயற்சிகள் ஆயுள் குறைவால் துண்டிக்கப் பெறுதிருக்க ஞானஸாதனைக்காகவே கடும் தவத்தால் மூன்று ஆயுட்காலம் (300 ஆண்டுகள்) பெற்ற ஜமதக்னி கசியபர் என்ற முனிவர்களையும் மரணமற்ற தேவர்களையும், தியானிக்கவும்) அஞ்ஞானமே நீர்த்துப் பஸ்மமாகி வெளுத்து விட்டதாக நினைக்க வேண்டும். அந்த பஸ்மம் தான் அனைத்தின் மூல காரணம். அதுவே தான் அக்னி வாயு முதலானவையானது. பரமாத்மானுபவத்திற்கும் அதுவே காரணம் என அந்த மந்திரத்தின் பொருளை நன்கு தியானம் செய்ய வேண்டும். (60-63)*

भावयेद्धृदये शम्भुमीशं शान्तं परं शिवम्।
उमाद्वितीयं भस्मान्तं द्योतिताखिलतेजसम्॥ ६४

वदन्त्यत्याश्रमाचारमिमं ब्रह्मविदो द्विजाः।
ज्ञानापरं पाशुपतं भस्मयोगं यथोदितम्॥ ६५

विहाय तद्द्विजेन्द्राशु ब्रह्माण्डाद्बाह्यनिर्गमे।
उपायो नास्ति शास्त्रेषु निखिलेष्वेव तत्वतः॥ ६६

ब्रह्माण्डाद्बाह्यदेशेऽस्मिंस्ते च प्राप्ताःस्म भूसुराः।
जीवन्मुक्ता न सन्देहो दर्शनात्तस्य सुव्रताः॥ ६७

மங்களத்தின் உத்பத்திஸ்தலம், ஆள்பவர், அமைதிமிக்கவர், உமையின் மணாளர், ஒளிமிக்க ஜோதி உள்ளவர், பஸ்மத்தையே முடிவாகக் கொண்டவர் எனச் சிவனை உள்ளத்தில் உணர வேண்டும். பிரும்மஜ்ஞானிகள் இதனை நாலாம் ஆசிரமமான துறவிற்கும் மேம்பட்டதென்பர். அபரஜ்ஞானம், பாசுபதம், பஸ்மயோகம் என இதனைக் கூறுவர். பிரும்மாண்டத்தின் கட்டிலிருந்து விடுபட இதனை விடச் சிறந்த உபாயமில்லை. பிரும்மாண்டத்திலிருந்து வெளி வந்தவர் ஜீவன் முக்தர். *(64-67)*

श्रीविष्णुरुवाच ।।

एवमुक्त्वा परानन्दविग्रहः परमेश्वरः ।
दर्शयामास विप्राणामेकान्ते चित्सभाङ्गणे ।। ६८

पञ्चभ्यो देवमुख्येभ्यो ब्रह्मादिभ्यः परं शिवः ।
स्वयमेव स्वमात्मानं सहितं श्यामया मम ।। ६९

अकार्यकारणाद्वैतनित्यकल्याणरूपया ।
महामोहतमोहारिस्वच्छन्दज्योतिरात्मनः ।। ७०

सद्धानं परमं ज्योतिः शिवं सर्वगमीश्वरम् ।
सूक्ष्मात्सूक्ष्मतरं शब्दपरिणामार्थसंज्ञितम् ।। ७१

एवं भूतं द्विधात्मानं विष्णोर्यत्परमं पदम् ।
हरं विपाप्मसंसर्गं गजदेहसुसंस्थितम् ।। ७२

जन्ममृत्युजरातीतं साक्षाद्विष्णोः परं पदम् ।
चतुर्बाहुमुदाराङ्गं त्रिणेत्रं सुन्दरं शिवम् ।। ७३

अजं नित्यं विभुं सूक्ष्मं निष्टप्तकनकप्रभम् ।

இவ்வாறு பேரானந்த மூர்த்தியான பரமேச்வரன் விளக்கிவிட்டு சித்ஸபையின் அங்கணத்தில் தனிமையில் மும்மூர்த்திகள், ஈசுவரன், ஸதாசிவன் என்ற ஐந்து நிலைகளுக்கு

*அப்பாற்பட்ட தானேயான தன்னை உமையுடன் காட்டினார். தேவியும் காரிய - காரண நிலைக்கு அப்பாற்பட்ட அத்வைதமான நித்யமான மங்களவடிவினளாக இருந்தாள். அந்த ஜோதி வடிவம் பெருமயக்கமெனும் இருளைப் போக்குகிற ஆத்ம ஸ்வரூபியான சிவனது தன் விருப்பப்படி ஆள்கிற ஜோதியாகும். ஸத்ஸ்வரூபமாகப் புலப்படுவது. எங்கும் பரவி உள்ளது. பரம மங்களமானது. நுண்ணிய பொருளுக்கும் நுண்ணியது. சப்தமே பொருளாக மாறிய நிலை: பரம் அபரம் எனத் தன் இருநிலைகளைக் காட்டினார். பரம்பொருள் விஷ்ணுவின் பெருநிலை. தூயதல்லாததன் கலப்பற்றது. அதுவே யானையைப் பிளந்து வெளியேறியது. யானையின் தலைமீது நடனமாடுவது. பிறப்பு, இறப்பு, நரை, திரை, மூப்பு என எதுவுமில்லாதது. அழகிய அவயவ அமைப்புடன் நான்கு கைகளுடன் முக்கண்களுடன் அழகியது. தோற்றமற்றது. நித்யமானது, எங்கும் அளாவி நிற்பது. மிக நுட்பமானது. உருக்கிய தங்க ஒளி கொண்டது. (68-74)*

इति प्रदर्श्य स्वात्मानं तदात्मानं परं शिवम् ।। ௭௪

निष्कलं निष्क्रियं शान्तं निरवद्यं निरञ्जनम् ।
वस्तुमात्रमुमाशक्तिं व्यापिनं वशिनं हरम् ।। ௭௫

शक्तिं शक्तिमदात्मानं मिथो व्याप्ताखिलास्पदम् ।
पयोरसमिवाद्वैतं तदात्मानमनामयम् ।। ௭௬

निदानं भस्मनस्तत्त्वं पुनस्तेषामुपादिशत् ।
शिव उवाच ।।

वेदैरनेकैर्वेद्योऽहमेवं वेदाकृतिर्द्विजाः ।
पुनर्वेदविदेवाहं वेदरूपोऽहमास्तिकाः ।। ௭௭

अणोरणीयान्महतो महीयानात्मा जनानां निहितो मनस्सु ।
तमक्रतुं पश्यत वीतशोकं धातुः प्रसादान्महिमानमीशम् ।। ௭௮

சிவன் தன்னை முனிவர்களிடம் விளக்கினார். "கலைகளோ, செயல்களோ, குறையோ, மறைப்போ அற்ற சாந்தன் நான். பேரிருக்கை மட்டும் உண்டு. உமையே சக்தி. எங்கும் வியாபித்திருப்பவன், தன்னையும் மற்றதையும் தன் வசத்தில் கொண்டவன். சக்தியாயும் சக்தி கொண்ட ஆத்மாவாகவும் எங்கும் நீக்கமற நிரம்பியிருப்பதாகவும் பாலும் சுவையும் போல் இணை பிரியாதிருப்பதாகவும் குறை ஏதுமற்றதுமாகத் தன்னைப் புரிந்து கொள்ளச் செய்தார். இதன்மூலம் விபூதியின் தத்வத்தையும் உபதேசித்தார். மறுபடி விளக்கினார். நானே வேதங்கள்! நானே அதன் உட்பொருள். வேதத்தை முழுதும் உணர்ந்தவன் நானே! வேதவடிவிலிருப்பவன் நானே. என்னை வேதம் இவ்வாறு அறிமுகப்படுத்தும். அணுவிற்குள் நுண்ணிய அணு. (இரண்டாக பலவாகப் பிரிக்க முடியாத ஸூக்ஷ்மப் பொருள் - மூலப் பொருள் அணுவாகும்.) மிகப்பெரிதிலும் மிகப் பெரியவன். உயிரினமனைத்தின் ஆத்மா. மனத்தினுள் மறைந்திருப்பவன். தனக்கெனச் செயல்பாடில்லாதவன். ஏக்கமற்றவன். படைத்தவனருள் கொண்டே இத்தகையவன் என உணரத்தக்கவன். (75-78)

अपाणिपादोऽहमहमचक्षुः श्रुतिरास्तिकाः ।
तथापि वच्मि पश्यामि शृणोम्यायामि याम्यहम् ।। ७९

युष्माकमात्मा साक्षी च सर्वेषां जगतामहम् ।
यथाम्बु पात्रभेदेन दृश्यतेऽनेकभेदतः ।। ८०

भानुः शरीरभेदेन चात्मा साक्षी ह्यनेकधा ।
युष्माकमिव देहो न मलत्रयसमुद्भवः ।। ८१

ज्ञानानन्दघनो विप्रा नित्यशुद्धो निरञ्जनः ।
जन्मनाशौ च मे न स्तः पुण्यापुण्ये न भूसुराः ।। ८२

वर्णाश्रमौ शरीरेण मे न स्तोऽज्ञानिवद्द्विजाः ।
यथैव रज्जुदण्डादौ कल्पितस्सर्पविभ्रमः ।। ८३

यथा च काचशुक्त्यादौ कल्पिता रौप्यकल्पना।
तथैव चोत्थितमिदं मायया मम हीच्छया॥ ८४

सर्वदृश्यं जगद्विप्रा भवत्येव न संशयः।

*கால், கை, கண், காது என்ற அறிய உதவுகிற பொறிகள் இல்லாதவனுயினும் பேசுகிறேன்; காண்கிறேன்; கேட்கிறேன்; செல்கிறேன்; வருகிறேன்; உமக்கும் உலகமனைத்திற்கும் ஆத்மா நானே. சூரியன் தான் பிரதிபலிக்க உள்ள ஜலபாத்திரத்தின் வேறுபாட்டால் பலவாகக் காணப்படுவது போல சரீரம் வேறுபட, நான் வேறுபட்டவனுகிறேன். ஒவ்வொன்றிற்கும் தனித் தனி ஸாக்ஷியாக உணரப் பெறுகிறேன். உங்களது உடல்போல் நான் மலத்திலிருந்து புழுப்பவனல்ல. ஜ்ஞானமும் ஆனந்தமும் வேறொன்றின் கலப்பின்றி செறிவு பெற்றவன். (ஜ்ஞானத்துடன் ஜ்ஞாதா ஜ்ஞேயம் என்ற இரண்டும் எப்போதும் உலகில் தொடரும். ஆனந்தமெனில் ஆனந்தத்தை அனுபவிப்பவனும், அதற்கு ஸாதனமும் திரிபுடியாகத் தொடரும். இங்கு ஜ்ஞாதா போக்தா ஜ்ஞேயம் போஜ்யம் என்ற வேறுபாடின்றி ஜ்ஞானமும் ஆனந்தமும் மட்டுமான நிலை.) எப்போதும் சுத்தன், என்னிடம் எந்த அழுக்கும் ஒட்டாது. பிறவி மரணம் என்பதில்லை. புண்யம் பாபம் என்ற செயலின் பின் விளைவு ஏதுமில்லை. உடலுடன் தொடர்பில்லாததால் வர்ணதர்மமும் ஆசிரம தர்மமும் என்னைப் பற்றுது. கயிற்றிலும் தடியிலும் பாம்பு என்ற பிரமை ஏற்படுவது போல், கண்ணுடியிலும் சிப்பியிலும் வெள்ளி என்ற மயக்கம் ஏற்படுவது போல, என் விருப்பப்படி இயங்குகிற மாயையின் விளைவால் அனைவரும் என்னிடம் உலகைக் காண்கின்றனர். (79-84)*

शरीरात्मप्रबोधेन द्विजाः कर्मणि जन्तवः॥ ८५

फलाभिलाषिणो नित्यं कुर्वन्ति मम मायया।
शरीरात्ममतिर्नो मे स्वभावान्मुनिपुङ्गवाः॥ ८६

अतो न कर्तव्यमिह त्रैलोक्ये नास्ति किञ्चन।
एकोऽहमासं प्रथमं मुनीन्द्रा ब्रह्मवित्तमाः॥ ८७

संभवामि च वर्तेऽहं पश्चाद्गच्छामि तत्वतः ।
मत्तो न किञ्चिदस्तीह पृथग्ब्रह्म मुनीश्वराः ॥ ८८

पूर्वं परं च मे नास्ति नान्तरं बाह्यमास्तिकाः ।
विकल्पधीः प्रमाता न प्रमाणं प्रमितिर्न च ॥ ८९

प्रमेयजातं च सदा नास्ति मे ब्रह्मवित्तमाः ।
विचारतः पृथङ्नास्ति मत्तस्सत्सुखलक्षणात् ॥ ९०

यथैव सिन्धूत्थघनो रसरूपो भवेद्द्विजाः ।
तथैव विज्ञानघनोऽप्यहमेव न संशयः ॥ ९१

नास्ति हेयं च नादेयं भूसुराः परमार्थिनः ।
अतो न साधनं साध्यं नास्ति मेऽविदुषामिव ॥ ९२

अजो नित्यश्शाश्वतोऽयं पुराणस्स्वभावतो निर्मलो ब्रह्मभूतः ।
न जायते म्रियते चापि नाम्ना नायं भूत्वा भविता चापि भूयः ॥ ९३

உடலே ஆத்மா என்ற எண்ணப் பதிவால் அந்தணர்களும் மற்றவரும் செயலின் பலனை எதிர்பார்த்து என் மாயைக்கு ஆட்பட்டு சடங்குகளைப் புரிகின்றனர். இயல்பாக எனக்கு என் தோற்றம்தான் ஆத்மா என்ற எண்ணமில்லாததால் எந்த வர்ணத்தையும் ஆசிரமத்தையும் சாராததால் அவற்றின் கடமைகளைச் செய்கிற அவசியமில்லை. முன்னரும் நான் ஏகனே. (தனியனே) அவ்வாறே வெளிப்படுகிறேன்; வாழ்கிறேன்; மறைகிறேன்; உண்மையில் என்னிலிருந்து வேறுபட்டது எதுவுமில்லை. முன்னரோ பின்னரோ இடையிலோ எதுவுமில்லை. மாறுபட்ட சிந்தனை, அதற்கான யுக்தி, அதற்குப் பிரமாணம், (அளவீடு) அளவிடுபவன், அளவிடப்படுவது என்ற எதுவும் என்னிடமில்லை. பேரிருக்கையும் பேரானந்தமுமாக இருப்பதால் வேறு பொருள் இல்லை. தவிர்க்க வேண்டியதோ ஏற்கவேண்டியதோ இல்லை. என் செயலுக்கு உதவ ஸாதனமோ, அதனால் ஸாதிக்க வேண்டியதோ எதுவுமில்லை. அறிவிலிக்குத்தான் அவை தேவை. ஒன்றிலிருந்து வேறாக

உண்டாகாதவன். நித்தியன், எப்போதும் இருப்பதால் முன்னதற்கும் முன்னவன், இயல்பாகவே அழுக்கற்றவன், பரம்பொருள், பிறப்பதுமில்லை, இறப்பதுமில்லை, ஒரு தடவை தோன்றி பின் மறைந்து மறுபடி தோன்றுபவனுமல்ல. (85-93).

एवं विजानन्ति न मामज्ञाश्च ब्राह्मणोत्तमाः ।
अहं तथा परेषां च भामि प्राग्भास्वरूपतः ॥ ९४

वेदविद्भिस्स्वरूपं मे जानन्ति विबुधाः पुरा ।
विहाय मोहजं कर्म ज्ञानं वेदान्तवाक्यजम् ॥ ९५

प्राप्य सन्त्यज्य विप्रेन्द्रा वर्णाश्रमविकल्पनाम् ।
शरीरमाभासतया विप्राश्चेदं विचिन्त्यताम् ॥ ९६

द्विजास्सुखेन वर्तध्वं विहायाविद्ययाऽऽगतम् ।
मनुष्यभावं शारीरं सकलं च विकल्पनम् ॥ ९७

विहाय वासनारूपं मुनीन्द्रा मदनुग्रहात् ।
सुषुप्त्यवस्था शुद्धे यद्वस्तुनि ब्रह्मवित्तमाः ॥ ९८

प्रकल्पिता स्वप्न इवाऽऽत्मनि विप्रास्तथैव च ।
स्वमाययाऽऽगतं जाग्रत्त्रितयं सकलं मृषा ॥ ९९

सदा तुरीयरूपं तत्त्रयाणामवभासकम् ।
स्वयमेव सदा भातं मायया मुनिपुङ्गवाः ॥ १००

अनावृतं ज्ञानमिदं विशुद्धं च पुरातनम् ।
महानुभावैर्युष्माभिरिहैतदनुभूयताम् ॥ १०१

क्रियमाणानि कर्माणि ज्ञानप्राप्तेरनन्तरम् ।
न संस्पृशन्ति विद्वांसं पद्मपत्रमिवाम्भसा ॥ १०२

இவ்வாறு வேதம் விளக்குகிற என்னைச் சிறந்த அந்தணராயினும் அறியாமையால் உணர்வதில்லை. ஜ்ஞானிக்கும் அஜ்ஞானிக்கும் நான் உள்ளொளியாகத் துலங்குபவன்.

*மதிமயக்கம் விளைவிக்கிற சடங்குகளில் பற்றின்றி, வேதாந்த வாக்யத்தால் ஏற்படுகிற ஜ்ஞானத்தைப் பற்றி வர்ணாசிரம வேறுபாடுகளால் உடலில் மேலெழுந்தவாரியாக எழுகிற ஆத்மா என்ற எண்ணத்தை ஆராய்ந்து அறியாமையால் உடலில் மனிதன் அந்தணன் என ஏற்பட்ட தடுமாற்றத்தை அகற்றி வாஸனை வடிவில் வந்த உலகை விலக்கி ஸுஷுப்தி நிலையில் துலங்குகிற சலனமற்ற ஜ்ஞானம் பெற்று கனவு போன்ற மாயையால் கல்பனை செய்யப்பட்ட உடலில் ஆத்மா பாவனையை மறந்து, விழிப்பு கனவு தூக்கம் என்ற மூன்று நிலைகளில் உணர்ந்ததனைத்தும் பொய்த்தோற்றம் எனக் கண்டு உணர்வீர். ஆவரணம் எனும் மறைப்பு நீங்கிய சுத்தஜ்ஞானம் பெற்று இம்மையிலேயே ஆத்மானந்தத்தை உணர்வீர். இந்த உண்மையறிவு ஏற்பட்டபின் நீங்கள் கர்மங்களைச் செய்தாலும் அதன் வினை உங்களைப் பற்றாது. தாமரை இலை மீது நிற்கிற நீர்த்துளி இலையிடம் ஒட்டாதிருப்பது போல். (94-102)*

बध्नाति कर्तारमपि स्वकर्म कर्तृत्वमेवास्ति विपश्चिताञ्च ।
तथापि कर्तृत्वमपि प्रभाति विपश्चितां दग्धसुचेलवच्च ॥ १०३

एतावता ज्ञानवतां न नाशः कर्तृत्वमेवोपनिषत्प्रवेशात् ।
तस्यैव नष्टादविवेकभानान्मुख्यस्य कर्तृत्ववरस्य नाशः ॥ १०४

प्रारब्धकर्मणां भोगात्क्षयो न ज्ञानवह्निना ।
विदुषोऽविदुषश्चापि द्विजा एवं श्रुतिस्मृती ॥ १०५

अनारब्धानि कर्माणि ज्ञानिनो ज्ञानवह्निना ।
प्रदूयन्ते यथा वह्नौ प्राप्ततूलं प्रदूयते ॥ १०६

*ஒரு ஆடை தீப்பற்றி எரிந்து சாம்பலான பின்னரும் அந்த சாம்பலைக் காற்றோ ஏனையதோ கலைக்காதவரை அது ஆடைபோன்று கண்ணில்படும். அப்படியே ஆத்மஜ்ஞானி செய்த கருமம், பின்விளைவு ஏற்படாதவாறு ஞானாக்னியில் பொசுங்கி விடுவதால் கருமமாகவே வெளிப் பார்வைக்குத் தோன்றினாலும் பின் விளைவற்று விடும். பின் விளைவில்லாததால் கர்த்தா, கரணம் என்ற இரண்டும் பயனற்று நிற்கும். இதுவரை*

கூறிய விளக்கப்படி ஞானி அழியவில்லை. அவன் மீது சுமத்தவிருந்த கர்த்தா என்ற தன்மைதான் அழிந்தது. இதுவரை அவன் கொண்டிருந்த தான் கர்த்தா என்ற எண்ணம், அறியாமை விலகியதால் நீங்கியது. இங்கு குறிப்பிட வேண்டியது ஒன்று உண்டு. ஜ்ஞானியான பின் செய்த கருமம் தான் பின் விளைவைத் தராது. ஜ்ஞானி ஆவதற்கும் முன் அவன் செய்த கருமம் பின் விளைவுள்ளதே. அந்தப்பின் விளைவை அனுபவித்த பின்னரே அந்தக் கரும பந்தம் விலகும். ஜ்ஞானாக்கினி பயன் கொடுக்கத் தொடங்கிய (பிராரப்த) வினையை எரிக்காது. பயன் கொடுக்கத் தொடங்காத (ஸஞ்சித) முன் கருமங்கள் ஜ்ஞான அக்கினியில் சாம்பலாகிவிடும். நெருப்பிலிட்ட பஞ்சுபோல். (103-106)

मल्लिङ्गपूजनं कार्यं युष्माभिर्द्विजसत्तमैः ।
प्राप्ते मद्विषयज्ञानेऽप्यनन्तं फलदायि च ॥ १०७

दानानि यज्ञाश्च महातपांसि सत्तीर्थयात्रा च जपव्रते च ।
सर्वं च लिङ्गार्चनया विहीनं फलाय न स्यादपि भूसुरेन्द्राः ॥ १०८

धर्माणां द्विजनृपवैश्यवर्णिसस्त्री
संन्यासिप्रवरवनौकसां द्विजेन्द्राः ।
सर्वेषां भवति परं महानुभावै
रित्युक्तं मम यजनं च लिङ्गमध्ये ॥ १०९

युष्माभिश्चिरदिनमर्चितो न लिङ्गे
सर्वज्ञः पुरुष अहो महीसुरेन्द्राः ।
युष्माकं मनसिभवो महांश्च मोहः
तस्मात्प्राग्घनतरबोधरूप एषः ॥ ११०

तस्माद्द्विजैरेव सदार्चनीयो लिङ्गे शिवस्साम्ब अनेकरूपः ।
फलेच्छुभिर्वाथ मुमुक्षुभिर्वा पुष्पोपहारैस्सजलैश्च शुद्धैः ॥ १११

इत्येवमुक्त्वा परमेश्वरोऽसौ ननर्त तेषां पुरतो महात्मा ।
तस्यां सभायामुरगाधिराज बालाङ्कुराम्बाहृदयाभिरामः ॥ ११२

पुराऽत्रेरपि यत्पत्न्याः करादेवाभवत्सुतः ।
स्वल्पांशेनापि गर्भस्य दुर्वासस्त्वमुदाहरन् ।। ११३

ब्रह्मापि भगवान्विष्णुर्जज्ञाते तत्सुतौ पुरा ।
असौ देवः क्रमात्पुत्रकारणात्स्नातया तया ।। ११४

सपुष्पाञ्जलिना भूमौ विससर्जांशुकं स्वकम् ।
अन्तरञ्जलिपुष्पैश्च प्रविश्यांशं पिनाकिना ।। ११५

गर्भावासो ह दुर्वासास्सपर्यावासेष्वितीरयन् ।
दुर्वासा नाम पुत्रोऽभूत्तस्याः पुष्पाञ्जलेश्शिशुः ।। ११६

इति पञ्चमोऽध्यायः

—*—

*என்னைப்பற்றி ஜ்ஞானம் ஏற்பட்ட பின்னர் சிறந்த அந்தணராகிய நீங்கள் லிங்கத்தை வழிபட வேண்டும். அது எல்லையற்ற பயன் தரும். லிங்கார்ச்சனையின்றி தானம், வேள்வி, தவம், தீர்த்தயாத்திரை, ஜபம், விரதம் என அனைத்தும் பயனற்றது. அந்தணன், அரசன், வைசியன், ஆண், துறவி, காட்டுவாசி என அனைவருக்கும் லிங்கத்தில் என் வழிபாடு மேலானது. நீங்கள் என்னை வெகுநாட்களாக லிங்கத்தில் அர்ச்சனை செய்ததில்லை. உங்கள் மனத்தில் குழப்பம் உள்ளது. அதனுல் அறிவில் தெளிவில்லை. பலனை எதிர்பார்த்தோ, முக்தியை விரும்பியோ பூவும் நீரும் வார்த்து என்னை வழிபடுவீர்.'' இவ்வாறு போதித்த பரமேச்வரன் அந்த ஞானஸபையில் உமையுடன் நடனமாடினுர். முன்னர் அத்திரியின் மனைவியான அனஸூயையின் புதல்வராக கர்ப்பம் முழுமை பெறுவதற்கு முன்னரே இங்கு வசிப்பது கஷ்டம் (துர் - வாஸம்) எனக் கூறி வெளிவந்த துர்வாஸர் சிவனே. பிரும்மாவும் விஷ்ணுவும் (சந்திரனும் தத்தருமாக) பின் அவளது புதல்வராகப் பிறந்தனர். அநஸூயை நீராடிப் புஷ்பாஞ்சலி போடும்போது அவளது மேலாடை நழுவியது. புஷ்பாஞ்ஜலியில் நுழைந்தவன் கர்ப்பவாஸம் கஷ்டம் தரும் வாஸம் எனக் கூறி அந்த*

மேலாடையுடன் நழுவி வெளிவந்தார். துர்வாஸர் எனப்பெயர் அதனால் வந்தது. (107-116)

—*—

॥ अथ षष्ठोऽध्यायः ॥

विष्णुरुवाच ॥

शृणुष्व शेषादिसभाधिनाथमाहात्म्यमानन्दकरं श्रुतीनाम्।
शिवार्चकानामपि केवलानां महाघहं पापवतां नराणाम्॥ १

पापाधिको वा पतितोऽपि मूर्खो गोघातको बालवराङ्गनाहा।
नृत्यन्तमेवादिसभाङ्गणे यः पूतो भवेद्वीक्ष्य विमुक्तिभाक्सः॥ २

प्रातस्सदोत्थाय नरः सुभक्त्या श्रौताग्निभस्माभिविलिप्तगात्रः।
जपन्मनुञ्चादिसभेश्वरस्य तत्सन्निधौ तत्पदमाप्नुयात्सः॥ ३

पञ्चब्रह्मसरोजलाप्लुततनुः पञ्चाघकारी नरो
नृत्यन्तं करिमस्तके प्रतिदिनं श्रीवीरनृत्तं शिवम्।
दृष्ट्वाऽऽनम्य मनुं रहः सनियमः सञ्जप्य साष्टं शतं
सत्यं सत्यमिदं ब्रवीमि फणिराट् पूतो भवेन्मासतः॥ ४

क्षणं क्षणार्धं वरवीरनृत्तं विश्वाधिकस्यास्य महेश्वरस्य।
दृष्ट्वा नरो घोरमहाघजालैरत्रैव मुक्तः परमेति लोकम्॥ ५

அத்தியாயம் - 6

விஷ்ணு சேஷனுக்கு விளக்குகிறார் - ஆதிஸபா நாதரின் பெருமையை விளக்குகிறேன். அது சிவனை வழிபடுபவரின் செவிக்கு ஆனந்தம் தரும். அதிகப் பாபம் செய்பவன், கீழ்நிலையடைந்தவன், அறிவிலி, பசுவைக் கொன்றவன், இள நங்கைகளைக் கொன்றவன் என பாபிகளனைவரும் ஆதிஸபையில் நடனமாடுகிற ஈசனைக் காணப் பாபத்தின் பின்விளைவிலிருந்தும் விடுபடுவர். வேள்வித் தீயில் கிடைத்த விபூதியை உடலில் பூசி,

ஆதிஸபேசரின் மந்திரத்தை ஜபித்து வருபவன் சிவபதமடைவான். பஞ்சபிரும்ம தீர்த்தத்தில் நீராடி யானை மத்தகத்தில் நடனமாடுகிற வீரதாண்டவப் பெருமானைக் கண்டு வணங்கி நியமத்துடன் அவரது மந்திரத்தை 10,8 தடவை ஜபிக்கத் தூய்மை பெறுவான். ஒரு நொடியோ, அரை நொடியோ வீர தாண்டவமாடுகிற உலகிற்கும் மேலான மஹேசனைத் தரிசிக்கக் கொடும் பாபமும் நீங்கி மேலுலகம் செல்வான். (1-5).

नृत्यन्तं प्रथमसभाङ्गणे महेशं स्तुत्यं तं ह्युपनिषदा विचारणीयम्।
अत्यन्तं य इह सुसेवते स मर्त्यः सत्यं ते कथितमिहाश्नुते विमुक्तिम्॥ ६

बालार्भकालंकृतवाममध्यां बालाङ्कुराम्बामभिवीक्ष्य किञ्चित्।
कालान्धकारेर्नटनं सुदृष्ट्वा कालाद्भयं नास्ति सुनृत्यतो नुः॥ ७

ब्रह्मघ्नः पशुघातकश्च पतितो गोघ्नः पितृघ्नो नृहा
मातृघ्नः परवीरहा परधनस्तेयी नरो मद्यपः।
माघे मासि च पूर्णिमातिथियुते तारे मखाख्ये तु यो
मार्ताण्डोदय ईश्वरस्य नटनं पश्येत्स पूतो भवेत्॥ ८

यः पश्येदुरगाधिप क्षितितले श्रीकृत्तिवासस्य तत्
नृत्तं प्रागरुणोदयान्मखदिने स्नात्वा विभूत्यङ्कितः।
पञ्चब्रह्मसरोऽम्भसि द्विरदके सन्नृत्यमानस्य तत्
सत्यं वच्मि पुनः पुनश्श्रुतिशिरस्सारं विदन्मुक्तिभाक्॥ ९

यत्पादाम्बुरुहं त्रिमूर्तिविलसच्चेतोद्विरेफाञ्चितं
संसारार्णवतारणोडुपमहे श्रीमत्सभायां परम्।
नृत्यन्तं गजमस्तके हरिहरब्रह्मादिदेवैर्नुतं
दृष्ट्वाऽऽनम्य च मानवो भवति सद्भक्तो विमुक्तो भवेत्॥ १०

श्रीकृत्तिवासेश्वरवीरनृत्तं यः पश्यति प्रत्यहमादरेण।
तस्यैव सायुज्यमुशन्ति सन्तःसाम्बस्य वेदोदधिपारगास्ते॥ ११

पञ्चब्रह्मसरस्स्नातो यो दृष्ट्वाऽऽदिसभाङ्कणे।
कृत्तिवासेशनृत्तं स जीवन्मुक्तो भवत्यलम्॥ १२

உபநிஷத்தும் ஆராய்ந்து கொண்டிருக்கிற ஈசன் துதிக்கத் தக்கவர். ஸபையின் முதல் அங்கணத்தில் நடனமாடுகிற அவரை வழிபடுபவன் இங்கேயே முக்தி பெறுவான். சிறுவனுன கந்தனை இடது மடியில் கொண்ட, பாலாங்குராம்பிகையை கண்டு யமனையும் அந்தகாஸுரனையும் அழித்த பெருமானது நடனத்தையும் கண்டபின் யமபயம் இருக்காது. மாசி மகத்தன்று பூர்ணிமையில் சூர்ய உதய வேளையில் ஈசனது நடனத்தைக் காண பிரும்மஹத்தி, கோஹத்தி, பித்ருஹத்தி, மாத்ரு ஹத்தி, திருட்டு, குடி, வீரஹத்தி என்ற மாபாதகங்களும் நீங்கும். அவன் உபநிஷத்தின் ஸாரத்தை அறிந்து முக்தி பெறுவான். மும்மூர்த்திகளும் வணங்குகிற திருவடி ஞான ஸபையில் நடனமாடுகிறது. ஸம்ஸாரக் கடலைக் கடக்கச் செய்கிற ஓடம். திரிமூர்த்திகளும் வண்டுகளாக அந்தத் திருவடித் தாமரையை மொய்க்கின்றனர். அதனிடம் மிகவும் பக்தி கொண்டவன் முக்தி பெறுகிறுன். தினமும் அதனைக் காண சிவஸாயுஜ்யம் பெறுவர். வேதக் கடலின் எல்லையை அடைவர். ஜீவன் முக்தராவர். (6-12)

विप्रा महीशा वणिजश्च शूद्रास्संकीर्णजाः पुल्कसमल्लभिल्लाः।
अत्र स्थिता वै तरुगुल्मघासा मुक्ताश्च ते सत्यमहे ब्रवीमि॥ १३

पाषण्डिनो वै परदारशीलाः श्रीचित्सभानाथमसेवकाश्च।
नित्यं फणीश च्युतपूर्निवासरताश्च रुद्राः खलु सत्यमुक्तम्॥ १४

ये वेदबाह्याः पितृकर्महीना वर्णाश्रमाचारबहिष्कृता ये।
पाषण्डिनो ये खलु वेदविप्रविद्वेषिणस्स्वोदरपूरकाश्च॥ १५

मायाविनो वेषधराश्च डम्भाः खला दुराचाररता विमूढाः।
पाषण्डिनो ये खलु वेदजार्थविदूषकाश्चारुवचोऽभिरामाः॥ १६

पाषण्डिनस्ते बहवः किलाहे दृष्ट्वादिसंसत्पतिमादिदेवम्।
मुक्ताः शरीरेण महानुभावा भक्ता महेशे परमेशतुल्याः॥ १७

अत्रैव तिष्ठन्ति च शान्तभावा विदीर्ण लोकाहतकालचक्राः ।
त्रिलोचनाश्चन्द्रकलावतंसाःश्रीनीलकण्ठा दितिजारिवन्द्याः ॥ १८

*நான்கு வர்ணத்தினரும் வர்ணக்கலப்பில் தோன்றியவரும் வேடுவரும் இங்குள்ள புல்லும் பூண்டும் முக்தி பெறுவர். நாஸ்திகனும், பிறர் மனைவியைத் தீண்டுபவனும் கூட வழுவூரில் வசித்து உமாநாதனை வழிபட ருத்ரராவர். வேதநெறிக்குட்படாதவர், பித்ருக்களுக்கான சடங்குகளில் ஈடுபடாதவர், வர்ணாசிரம நெறி மீறியவர். வேத - அந்தணர் துவேஷிகள், தன் வயிற்றை மட்டும் நிரப்பிக் கொள்கிற கருமிகள், வஞ்சகர், வேஷம் போடுபவர், செருக்குமிக்கவர், துஷ்டர், நெறிதவறியவர், அறிவிலிகள், வேதப்பொருளைத் தூஷிப்பவர், இவர்களைப் போன்ற மஹாபாபிகள், ஆதிஸபாநாதனைக்காண அவரிடம் பக்திமிகுந்து நன்னெறி வழிப்பட்டு, சிவனாகவே மாறுவர். இங்கு அமைதி மிக்கவரும், காலசக்கிரச் சுழலைத் தடுப்பவரும், சிவ நிலை பெற்று, முக்கண்ணரும் பிறை சூடியவரும் நீலகண்டரும் அஸுரர்களாலும் வணங்கத் தக்கவருமாகி இங்கேயே வசிப்பர். (13-18)*

शेष उवाच ॥

विश्वेश कमलाकान्त विश्वलोकाभिवन्दित ।
पाषण्डैश्च कथं प्राप्तं श्रीमच्च्युतपुराभिधम् ॥ १९

आप्तवन्तः कथं मुक्तिं योगीन्द्रैरपि दुर्लभम् ।
पाषण्डा वाऽभवन्के वा त एव कथमागताः ॥ २०

त एव कीदृशः पूर्वं तेषां वर्णाश्च को गुरुः ।
प्रसीद भगवन्मह्यं यथावत्कथ्यतां प्रभो ॥ २१

विष्णुरुवाच ॥
शेष वच्मि महाभोगिन्मद्भक्त भुजगाधिप ।
पाषण्डत्वं हि तन्त्राणामवलम्बेन सिद्ध्यति ॥ २२

केवलं धर्मशास्त्राणि त्यक्त्वा वेदोदितानि वै।
तच्च गौतमशापेन दधीचस्य महात्मनः ॥ २३

शापाच्च वैदिका एव पाषण्डाःस्युर्विमोहिताः।
पूर्वजन्मकृतात्पापाद्भ्रान्तिविज्ञानतः फणिन् ॥ २४

तन्त्रावलम्बे बुद्धिश्च भविष्यति च मोहतः।
तन्त्रावलम्बनाद्विप्राः पाषण्डाःस्युर्न संशयः ॥ २५

अपि तन्त्रावलम्बी स श्रीमच्च्युतपुराश्रयः।
मरणात्तत्र मुक्तः स्यात्सत्यं सत्यस्य दर्शनात् ॥ २६

पुरा कश्चिन्नृपश्चासीत्पाषण्डमतमाश्रितः।
दीक्षितः क्रतुषु श्रीमानपि पापवशादहे ॥ २७

स वै भ्रष्टसमाचारो हरद्वेषी सुनिष्ठुरः।
प्राप्य च्युतपुरीं पापी जीवन्मुक्तो बभूव ह ॥ २८

शेष उवाच ॥
श्रीकृष्ण कमलाकान्त हरे ब्रह्मसुरार्चित।
विश्वेश करुणावास प्रश्नमेतं वद प्रभो ॥ २९

कोऽसौ नृपो वैदिको वा तादृशस्तस्य को गुरुः।
कथं स वैदिको भूत्वा पाषण्डमतमाश्रितः ॥ ३०

गुरोः कस्योपदेशेन पापस्य कमलाप्रिय।
स कथं कस्य कृपया सद्गुरोर्वैदिकस्य वै ॥ ३१

प्राप्तवान्परमं विष्णो यत्तत्पदमनुत्तमम्।
एतत्सर्वं सुविस्तार्य पुरुषोत्तम कथ्यताम् ॥ ३२

*சேஷன் விஷ்ணுவிடம் கேட்கிறார் - ''உலகின் ஈசனே! லக்ஷ்மியின் மணாளரே! வழூருக்கு நாஸ்திகன் ஏன் சென்றான்?*

*ஏன் நாஸ்திகனுஞன்? இவன் முக்தி பெற்றது எவ்வாறு? இந்த வரலாற்றைக் கூறுவீர்?'' இதனைக் கேட்ட விஷ்ணு விளக்குகிறார். தந்திர சாஸ்திரங்களில் ஈடுபட்டு வேதநெறியைப் புறக்கணித்ததால் நாஸ்திகராயினர். கௌதமரும் ததீசியும் சிவனை நிந்தித்தவரை வேத தர்மநெறி தவறிப் பாஷண்டராகச் சபித்தனர். முன் பிறவியில் செய்த பாபத்தால் சிவனை வெறுத்துத் தந்திரமார்க்கத்தைத் தழுவியவர் சிலர். அத்தகைய நாஸ்திகனும் இத்தலத்தில் வசிப்பதால் மனநிலை மாறி நல்லவனுகி சிவபதம் அடைவான். முன்னர் ஓர் அரசன் பல வேள்விகள் புரிந்தவனுயினும் பாபம் காரணமாக நாஸ்திகனுகி சிவத்வேஷம் கொண்டு கொடூரனுஞன். அவனும் வழுவூர் வந்தடைந்ததும் மேலோனுகி ஜீவன் முக்தனுஞன் என்றுர் விஷ்ணு, ''அவன் யார்? வேத நெறிப்பட வேள்வி புரிந்தவன் நாஸ்திகன் ஆனது எப்படி? அவனை எந்த குரு தடுத்தாட்கொண்டு நல்வழிப் படுத்திஞர்? என சேஷன் வினவ விஷ்ணு கூறுகிறுர். (19-32)*

श्रीविष्णुरुवाच ॥
पुरा कश्चिद्द्वापरेऽस्मिन्युगे राजा बभूव ह ।
शिवभक्तो वैदिकश्च श्रीमत्काञ्चीपुरे वरे ॥ ३३

स तु काञ्चीपुराधीशो नाम्ना सत्यव्रतो महान् ।
श्रौतस्मार्तपरो नित्यं भूतिरुद्राक्षधारकः ॥ ३४

वेदवेदाङ्गविद्राजा सर्वयज्ञेषु दीक्षितः ।
धन्वी शूरो वदान्यश्च सदाचाररतो नृपः ॥ ३५

स तु सत्यरतो भोगिन्प्रजापालनतत्परः ।
एवं तु वर्तमानेऽस्मिन्धर्मिणि प्राणिवल्लभे ॥ ३६

मायाशास्त्ररतो भोगिन्नासीच्छाण्डिल्यसंज्ञकः ।
तस्मिन्पुरे महाधीरो ब्राह्मणो विप्रदूषकः ॥ ३७

शुष्कतर्करतो धीमान्स्वमतस्थापने पटुः ।
ऊर्ध्वपुण्ड्रधरो धूर्तः पाषण्डाचारवानभूत् ॥ ३८

तस्य लक्षणमाचष्टे धूर्तस्य भुजगाधिप।
शुद्धतान्त्रिकनिष्ठस्य महापापरतस्य च ॥ ३९

मृदा च सितया सम्यग्ललाटे च प्रयत्नतः।
छिद्रोर्ध्वपुण्ड्रधारी तन्मध्ये हारिद्रचूर्णधृक् ॥ ४०

तप्ताभ्यां शङ्खचक्राभ्यां समङ्कितभुजद्वयः।
वर्णाश्रमसमाचाराद्विमुक्तो बुद्धिपूर्वकम् ॥ ४१

पाञ्चरात्रागमाचारनिरतश्च कुमार्गगः।
वासुदेवं कुमार्गेण पूजयन्मां द्विजाधमः ॥ ४२

मद्वल्लभं महेशानं मां च भिन्नतया वदन्।
तस्मादभिन्नं भोगीश तस्योत्कृष्टतया च माम् ॥ ४३

सदा निन्दन्शिवं शान्तं प्राणनाथं ममामलम्।
मत्पूज्यश्च मदाशिष्टं मे विष्णोः परमं प्रियम् ॥ ४४

तिष्ये विप्रा यथा श्रौतमूर्ध्वपुण्ड्रं विमोहिताः।
विधरन्ति वृथा नित्यं दधाति च तथा फणिन् ॥ ४५

परदाररतो नित्यं परद्रव्यापहारकः।
परनिन्दापरो मूर्खः परलोभपरायणः ॥ ४६

स्नानहीनः पर्युषितमन्नमश्नाति चानिशम्।
कण्ठस्नाने रतो नित्यं कटिस्नाने कदाचन ॥ ४७

चाटुवाग्निपुणो नित्यमसत्यवचनालयः।
व्यर्थालापो दुष्टसङ्गस्सदा कोपी दुरुत्तरः ॥ ४८

स्वाश्रितेषु मनुष्येषु तप्तलाञ्छनतत्परः।
औपासनविहीनस्तु ब्रह्मयज्ञपराङ्मुखः ॥ ४९

वैश्वदेवादिकर्माणि त्यक्त्वाऽसत्कर्मकृत्सदा।
वश्यौषधपरो नित्यं वश्ययन्त्रक्रियान्वितः ॥ ५०

देहाभिमानी निर्लज्जो बभूवापरमार्थवित्।
तदास्य दर्शनादेव मनुष्यस्तद्वशोऽभवत् ॥ ५१

एवं तु वर्तमानेऽस्मिन्पुरे शाण्डिल्यके द्विजे।
कदाचित्तस्य गेहं स नृपस्सत्यव्रतो मुदा। ५२

प्रविवेश जनैस्साधं स्वाश्रितैर्ब्राह्मणैरपि।
तत्रापश्यत्स राजा तं पाषण्डमतमाश्रितम् ॥ ५३

शाण्डिल्यं स्वजनैर्युक्तं डम्भं मायाविनं पटुम्।
दासोऽहमिति साष्टाङ्गं नमस्कुर्वन्जनैर्वरैः ॥ ५४

वर्णाश्रमपरिभ्रष्टैस्समावृतमधार्मिकम्।
गोशृङ्गदीर्घसुश्वेतं पुण्ड्रफालविराजितम् ॥ ५५

शुभ्रवस्त्रपरीधानं सितवस्त्रोत्तरीयकम्।
पद्माक्षतुलसीकाष्ठमणिमालोरुवक्षसम् ॥ ५६

हस्ते तु तुलसीकाष्ठमण्यक्षगुणशोभितम्।
शुभ्रदन्तश्च बिम्बोष्ठफलास्यालोकलोचनम् ॥ ५७

मूर्तिमन्तमिवात्मीयं मायाजालमचञ्चलम्।
डम्भं मूर्तमिवाहीश स्थितं परमवञ्चकम् ॥ ५८

अब्रह्मण्यमसच्छ्रेष्ठमनन्तकपटाश्रयम्।
मत्कल्पिताशुद्धतन्त्रपाञ्चरात्रागमप्रियम् ॥ ५९

तिष्यदुर्ब्राह्मणमिव त्यक्तवेदोदितक्रियम्।
बुद्धिकल्पितशास्त्रेषु यामलाद्यागमेषु च ॥ ६०

अर्थालोचनसन्तुष्टमानसं भोगिपुङ्गव।
शरीरसौख्यसन्तुष्टं सदा दुर्ब्राह्मणाग्रहम्॥ ६१

विलोक्य भूमिपालोऽसौ शाण्डिल्यं तन्त्रतत्परम्।
अनेकजन्मसंपातपापव्रातानिलेरितः॥ ६२

वञ्चितस्तेन रूपेण समीपेऽस्य समाविशत्।
ततः कुतूहलयुतो राजा तस्य समीपगान्॥ ६३

मायाविनः प्रविनतांस्तच्छिष्यान्पर्यपृच्छत।
यूयं के मतमेतत्किं कः प्रभावोऽस्य वर्ण्यताम्॥ ६४

एवं पृच्छति राजेन्द्रे सोऽयं सर्पकुलोत्तम।
शाण्डिल्यो नृपतिं प्राह प्रस्तुवन्स्वमतिं द्विजाः॥ ६५

துவாபரயுகத்தில் காஞ்சிபுரத்தை ஆண்ட அரசன் சிறந்த சிவபக்தன், வேதம் ஸ்ம்ருதி காட்டிய நெறியைத் தழுவியவன். விபூதி ருத்ராக்ஷமணிபவன், ஸத்யவிரதன் என்பவன். வேள்விகளுக்கான தீக்ஷை பெற்று அவற்றை முறையோடு நடத்தி முடித்தவன். வில்லாளியான சூரன், வள்ளல், நன்னெறி நடப்பவன். மெய் பேசுபவன், மக்களைக் காப்பதில் ஆர்வ மிக்கவன், காஞ்சீபுரத்தில் மாயைஜாலம் புரிகிற சாண்டில்யன் என்ற அந்தணன், தீரன், அந்தணரை வெறுப்பவன், வரட்டுவாதம் செய்பவன், தன் நிலையே சரி என வாதாடுபவன், ஊர்த்வபுண்டிரம் தரிப்பவன், நாஸ்திக வழி நடப்பவன். தந்திர முறையைப் பின்பற்றுபவன், விஷ்ணுவைக் குறுக்கு வழியில் வழிபடுபவன். விஷ்ணுவும் சிவனும் வேறு வேறு. (ஒருவரல்ல) விஷ்ணு உயர்ந்தவர், சிவன் தாழ்ந்தவன் என வாதாடுவான் தவறான நடைமுறை. கொண்டவன். பிறர் பொருளைப்பறிப்பவன். ஔபாஸனமோ பஞ்சயஜ்ஞங்களோ வைசுவதேவமோ வீண் என வாதிடுபவன். வசிய மருந்தால் மனிதரை மயக்கி வசப்படுத்துபவன். காஞ்சியரசன் ஸத்யவிரதன் மற்ற அந்தணர்களுடன் அவன் வீட்டிற்கு வந்தான். டம்பமும் வஞ்சகமும் தன்னிடம் வசப்பட்டவரின் வலிவும் கொண்ட

*சாண்டில்யன். அரசனையும் வஞ்சகத்தால் தன் வசப்படுத்திக் கொண்டான். சாண்டில்யனைச் சுற்றி அடியேன் அடியேன் தாஸன் தாஸானுதாஸன் எனக் கூறி மக்களை ஏமாற்றுகிற கூட்டமிருந்தது. வியப்புற்ற அரசன் சாண்டில்யனின் கொள்கையைப் பற்றிக் கேட்டான். சாண்டில்யன் கூறினான். (33-65)*

शाण्डिल्य उवाच ॥

राजन्पृष्टं त्वया साधु जन्मसाफल्यमद्य ते ।
एतन्मतं महाभाग मतानामुत्तमं मतम् ॥ ६६

महच्छ्रेयस्करं दिव्यं विष्वक्सेनादिसंमतम् ।
अस्माकं मतमेतत्ते प्रवक्ष्यामि नृप शृणु ॥ ६७

वयं तु वैष्णवा राजन्मतं नो वैष्णवं स्मृतम् ।
प्रभावो वर्ण्यते तस्य श्रूयतां सावधानतः ॥ ६८

अचेतनेभ्यस्सर्वेभ्यश्चेतना अधिकास्स्मृताः ।
चेतनेभ्यस्समस्तेभ्यो वरिष्ठाश्चैव मानुषाः ॥ ६९

मनुष्येभ्योऽखिलेभ्यश्च वरिष्ठा आन्तरालजाः ।
वरिष्ठा आन्तरालेभ्यस्तेभ्यो वै प्रतिलोमजाः ॥ ७०

तेभ्योऽनुलोमजाश्श्रेष्ठास्तेभ्यो वै सङ्करा वराः ।
सङ्करेभ्यो मनुष्येभ्यो वरिष्ठा वर्णसम्भवाः ॥ ७१

वर्णसम्भवशूद्रेभ्यो वरिष्ठा वणिजस्तथा ।
तेभ्यो वरिष्ठा राजानस्तेभ्यो मुख्या महीसुराः ॥ ७२

महीसुरेभ्यस्सर्वेभ्यो ब्राह्मणा अधिकास्स्मृताः ।
ब्राह्मणेभ्यो वरिष्ठास्स्युरूर्ध्वपुण्ड्रधरा नृप ॥ ७३

तेभ्यो वरिष्ठास्सुश्वेतमृत्तिकाधारिणो द्विजाः ।
त्रिशूलमूर्ध्वपुण्ड्रञ्च धारिणः प्रवरास्तथा ॥ ७४

विष्णुभक्ता वरिष्ठास्स्युस्तेभ्यो राजशिखामणे।
शङ्खादिलाञ्छिता राजन्दोर्मूले सितया मृदा ।। ७५

ललाटे चोर्ध्वपुण्ड्रञ्च त्रिशूलं सहरिद्रया।
शङ्खादिलाञ्छनं यस्य दोर्मूले सितया मृदा ।। ७६

ललाटे वर्तते पुण्ड्रं त्रिशूलं सहरिद्रया।
स तु सर्ववरिष्ठस्स्याद्वैष्णवोत्तम एव सः ।। ७७

அரசே! எங்கள் வழி மிகச் சிறந்தது. சிறந்த விஷ்ணு பக்தர்களான விஷ்வக்ஸேனர் முதலானோரின் ஒப்புதல் பெற்றது. நாங்கள் வைஷ்ணவர்கள். எம் மதம் வைஷ்ணவம். உணர்வற்ற ஜடப்பொருட்களை விட உணர்வுள்ள சேதனர் சிறந்தவர். சேதனரில் மனிதர் சிறந்தவர். மனிதர்களின் பல ஜாதிகள் உண்டு. அவர்களில் நான்கு வர்ணத்தினர் சிறந்தவர். அவர்களில் அந்தணரும், அந்தணர்களில் ஊர்த்வபுண்டிரம் தரிப்பவரும் அவர்களிலும் வெள்ளைமண் தரிப்பவர், திரிசூலக் கோடு போடுபவர். அவர்களில் விஷ்ணு பக்தர். அவர்களில் தோளில் சங்கு சக்கிர முத்திரை ஏற்றவர், ஊர்த்வ புண்டிரத்துடன் மஞ்சள் கீற்று இடுபவர் மிகமிகச் சிறந்தவர். (66-77)

आचार्यचरणध्यानं पद्माक्षमणिधारणम्।
पवित्रमालाभरणं तुलसीमणिधारणम्।। ७८

श्रीमृत्तिकाधारणञ्च शरीरे द्वादशस्थले।
श्रीमन्त्रपठनञ्चेदं वैष्णवानां हि लक्षणम्।। ७९

अहो वैष्णवमाहात्म्यं मया वक्तुं न शक्यते।
श्वेतोर्ध्वपुण्ड्रधरणं दोर्मूलेऽसिगदाङ्कनम्।। ८०

पद्माक्षतुलसीमालाधारणं तन्त्रपारणम्।
यस्यैतानि च वर्तन्ते मया प्रोक्तानि भूपते ।। ८१

सत्यं वदामि नितरां सार्थकं तस्य जन्म हि।
साङ्ख्यं पाशुपतं योगं वैदिकं शाक्तमेव च ।। ८२

एतानि पञ्च राजेन्द्र साङ्ख्यादीनि मतानि च ।
वैष्णवस्य मतस्यास्य कलां नार्हन्ति षोडशीम् ॥ ८३

तेषु वैदिकमार्गं तु द्विविधं प्राहुरास्तिकाः ।
केचन ज्ञानमार्गश्च कर्ममार्ग इति प्रभो ॥ ८४

परस्परं विरोधःस्यात्तयो राजन्महामते ।
केनचिद्व्यासमुनिना कृता वेदा इति प्रथा ॥ ८५

स तु योजनगन्धाया जठरोद्भव एव हि ।
सा च नाविकपुत्री सद्भूपते भर्तृसङ्करा ॥ ८६

तत्पुत्रकल्पिता वेदास्तेषु प्रामाण्यमेव न ।
इदं तु वैष्णवमतं प्रोक्तं श्रीविष्णुना पुरा ॥ ८७

नष्टानि सर्वकर्माणि ब्राह्मणानां पुरा नृप ।
स्वापराधाच्छ्रीनिकेतमस्तुवंश्च ततो हरिम् ॥ ८८

ततः प्रसन्नचित्तेन दिव्यमङ्गलमूर्तिना ।
हरिणा पाञ्चरात्राख्यं ग्रन्थतः पञ्चलक्षणम् ॥ ८९

अनुगृहीतं विप्रादिवर्णानां करुणात्मना ।
तदाप्रभृति भूपाल मतमेतत्सनातनम् ॥ ९०

अन्वष्टाम वयं विष्णोः पदमापिम भूपते ।
जन्मान्तरे सुकृतिनां मनुष्याणां महामते ॥ ९१

महाभाग्यवतामेतत्सुलभं मतमेव हि ।

*ஆசார்யனின் திருவடிகளைத் தியானிப்பது, தாமரை மணிமாலை அணிவது, பவித்ரமாலை தரிப்பது, துளஸி மணிமாலை தரிப்பது, உடலில் பன்னிரண்டு இடங்களில் திருமண் காப்பு, திருமந்திரமாகிய அஷ்டாக்ஷரம் ஜபிப்பது இவை அவர்களின் அடையாளம்- இவ்வகையில் வாழ்பவனின் பிறவி*

*பயன்பெற்றது. ஸாங்கியமோ, பாசுபதமோ, யோகமோ, வைதிகமோ, சாக்தமோ வைஷ்ணவத்திற்கு ஈடாகாது. வைதிக வழியில் ஜ்ஞான மார்க்கம் கர்மமார்க்கம் என இரண்டு உள்ளது. ஒன்றுக்கொன்று முற்றிலும் எதிரானது. வியாஸர் என்பவர் வேதம் தொகுத்தவர் என்பவர். அவர் யோசனகந்தியின் புதல்வர். யோசன கந்தியோ ஓடக்காரனின் புதல்வி, இதில் வர்ண ஸங்கரம் நேர்ந்துள்ளது. அதனால் ஏற்கத்தக்கதல்ல. வைஷ்ணவமோ விஷ்ணுவால் உபதேசிக்கப் பெற்றது. அந்தணர்களின் வேள்வி முதலியவை மறைந்தபோது தம் தவற்றை உணர்ந்த அந்தணர்கள் விஷ்ணுவை வேண்ட, அவர் காட்டிய வழி இது. அதனால் அன்றிலிருந்து இந்த நொடிவரை அதனையே பின்பற்றுகிறோம். பூர்வ புண்யம்மிக்கவர்களே இதனைப் பின்பற்றுவர் என்றார். (78-92)*

श्रीविष्णुरुवाच ।।
इत्युक्तवति भूपालं द्विजे मायामये फणिन् ।। ९२

राजा तद्वशमापन्नः पप्रच्छ च कुतूहलात् ।
राजोवाच ।।
भगवन्वद भूदेव प्रसीद मतमात्मनः ।। ९३

कीदृग्भूतं क आचारस्तस्य किं लक्षणं द्विज ।
शाण्डिल्य उवाच ।।
विशांपते प्रवक्ष्यामि मतलक्षणमादरात् ।। ९४

यद्ज्ञात्वा भगवान्भूप प्रसीदति रमाप्रियः ।
विष्णुरेव सदा पूज्यः पाञ्चरात्रागमेन वै ।। ९५

वैष्णवैर्ब्रह्मविट्शूद्रैर्न पूज्यश्श्रुतिवर्त्मना ।
न वन्द्यास्सर्वदेवाश्च शिवसूर्यादयो नृप ।। ९६

श्रौतस्मार्तोद्भवा धर्मा नानुष्ठेयाः कदाचन ।
हरेर्निवेदितान्नं वै भोज्यं विष्णुपरायणैः ।। ९७

स्वयंपाकात्परं भूप प्रसादं वैष्णवं परम्।
पितृमातृमृताहेऽपि नैवेद्यान्नं हरेर्वरम्॥ ९८

विष्णुप्रसादं यो भुङ्क्ते चान्द्रायणशताधिकम्।
स प्राप्नोति महीपाल सत्यं तद्विष्णुनेरितम्॥ ९९

प्रसादे भुज्यमाने तु ब्राह्मणादिभिरादितः।
परिषेको न कर्तव्यः प्राणाहुतिरपि प्रभो॥ १००

तिष्ठन्गच्छन्सदा भुंज्यात्प्रसादममृतं यथा।
इदं तु वैष्णवमतं विष्णुप्रियकरं शुभम्॥ १०१

अनुष्ठाय मतं विष्णोः प्राप्नोति परमं पदम्।
वर्ज्यं वक्ष्ये विशेषेण वैष्णवैः शृणु भूमिप॥ १०२

यद्ज्ञात्वा सर्वमाप्नोति तत्समस्तशुभप्रदम्।
वैष्णवानां मनुष्याणामाचार्यपदसेविनाम्॥ १०३

एतदेव सदा वर्ज्यं हर्यप्रियकरं शुभम्।
रुद्रसन्दर्शनञ्चैव तस्य भक्तावलोकनम्॥ १०४

भस्मरुद्राक्षधरणं श्रौतस्मार्तादिकर्म च।
वेदेषु स्मृतिषु प्रोक्तमार्गानुष्ठानमेव च॥ १०५

वर्णाश्रमाचारभवधर्मत्राणार्थयाचनम्।
वैष्णवो वर्जयेदेतन्निश्शङ्कं नृपसत्तम॥ १०६

अवैष्णवैस्समं विप्रैर्भोजनस्पर्शभाषणम्।
सहवासञ्च राजेन्द्र न कुर्याद्वैष्णवः सदा॥ १०७

प्रातःस्नानं न कुर्वीत चौपासनमपि द्विजः।
अग्निहोत्रादिकं कर्म मनसापि न संस्मरेत्॥ १०८

सितमृद्धारणादेव शङ्खचक्राङ्कनादपि।
तदन्तरनिशाचूर्णधारणादाप्यते पदम्॥ १०९

नाप्नोति भस्मरुद्राक्षधारणाच्छिवपूजनात्।
श्रुतिपाठाच्च यज्ञाच्च वेदान्तश्रवणात्पदम्॥ ११०

शिवद्वेषाच्च तन्नामास्मरणात्तस्य हेलनात्।
तद्भस्मदूषणाच्चैव तथा ब्राह्मणदूषणात्।
श्रुतिस्मृतितिरस्कारात्प्राप्नोति परमं पदम्॥ १११

*அதனை விளக்கக் கூறும்படி ஸத்ய விரதர் கேட்க சாண்டில்யர் கூறுகிறார் - ''விஷ்ணுவை வழிபடத்தக்கவர், வேதவழி இதற்கேற்றதல்ல. சிவன் ஸூர்யன் முதலான மற்ற தேவர் வழிபாட்டிற்குரியவரல்ல. வேதம் ஸ்மிருதி கூறுகிற தர்மங்களைப் பின்பற்ற வேண்டியதில்லை. ஹரிக்கு நிவேதனம் பண்ணியதே உணவாகக் கொள்ளத் தகும். தானே தூயவழியில் சமைத்த உணவைவிட விஷ்ணுப் பிரஸாதம் சிறந்தது. தாய் தந்தையரின் சிராத்த தினத்தன்றும் விஷ்ணுவிற்கு நிவேதனம் செய்த பொருளையே அவர்களுக்கு இடவேண்டும். விஷ்ணுவிற்குப் ப்ரியமல்லாதது தவிர்க்கத்தக்கது. ருத்ரனை தரிசிப்பது, அவரது பக்தர்களைக் காண்பது. விபூதி ருத்ராக்ஷம் தரிப்பது, வர்ண - ஆசிரம தர்மப் பாதுகாப்பிற்காக தானம் பெறுவது, வைஷ்ணவரல்லாதவருடன் உணவேற்பதும் ஸஹவாஸமும் தவறு. (93-112)*

पुरा रुद्रं समाहूय द्विजानां मोहनाय वै।
प्रोवाच कमलाकान्त इदं तामसमानसम्॥ ११२

जटाश्च वल्कले धत्स्व व्याघ्रकृष्णाजिनानि च।
मोहनार्थं द्विजातीनां भस्मरुद्राक्षधारणम्॥ ११३

अनेन ब्राह्मणा मोहान्मदागमविदूषकाः।
तानि धृत्वा प्रयान्त्येव सुघोरं नरकं ध्रुवम्॥ ११४

इत्युक्त्वा भगवान्रुद्रं भार्गवीवल्लभः प्रभुः ।
तिरोबभूव सर्वेऽपि मुच्यन्त इति शङ्कया ॥ ११५

अत एव महाभाग रुद्रं तद्भक्तमण्डलम् ।
वर्जयेच्च विशेषेण नात्र कार्या विचारणा ॥ ११६

देवब्राह्मणदुष्टान्नं न भुञ्जीयाच्च वैष्णवः ।
ब्राह्मणो वाऽथ शूद्रो वा वैश्यो वा क्षत्रियोऽपि वा ॥ ११७

सर्वधर्मान्परित्यज्य धारयेत्सितमृत्तिकाम् ।
हरिद्रारजसा सार्धं ललाटे श्रद्धया सह ॥ ११८

दोर्मूले शङ्खचक्राङ्कं स्नानकर्म विहाय च ।
धृत्वा च वैष्णवश्रेष्ठः प्रयात्येव परं पदम् ॥ ११९

स्नानं दानं जपं होमं स्वाध्यायं पितृतर्पणम् ।
न कुर्याच्च न कुर्याच्च वैष्णवः क्षत्रियात्मज ॥ १२०

नान्यं देवं नमस्कुर्याद्द्विसन्ध्यावन्दनं न च ।
न शूद्रा भगवद्भक्ताश्श्वेतमृद्धारिणश्च ये ॥ १२१

शङ्खचक्राङ्कदोर्मूलास्ते वन्द्यास्सकलैरपि ।
वर्णाश्रमाचारधर्मविहीनास्सकला नराः ॥ १२२

श्वेतमृद्धारणादेव शङ्खचक्राङ्कनादपि ।
ते सर्वे वैष्णवाः प्रोक्ता आचार्यपदसेविनः ॥ १२३

प्रवृत्ते वैष्णवाचारे सर्वे वर्णास्सजातयः ।
न वेदस्मृतिधर्मोऽत्र प्रयोजनमिति स्मृतः ॥ १२४

वैष्णवानामयं धर्मः पाञ्चरात्रे विनिश्चितः ।
श्वेतमृद्धारणं फाले शङ्खचक्राङ्कनं भुजे ॥ १२५

पद्माक्षतुलसीमालाधारणं दासनाम च ।
यस्यैतानि च वर्तन्ते तस्य जन्म न विद्यते ।। १२६

यस्य दोर्मूलयोश्चिह्नं शङ्खासिभ्यां कृतं नृप ।
स एव च महाविष्णोः पार्षदो भवति ध्रुवम् ।। १२७

*முன்னர் விஷ்ணு ருத்திரனை அழைத்து அந்தணர்களை மயக்க வழி கூறினார். 'நீ சடைமுடி மரவுரி மான்-புலித்தோலாடை, விபூதி-ருத்திராக்ஷம் அணிந்து அந்தணரிருக்குமிடம் செல்வாய். உன்னிடம் மயங்கி, என் ஆகமநூல்களை நிந்தித்து நரகம் செல்வர். அனைவரும் முக்தி பெற்றுவிட்டால் அனர்த்தம் என நினைத்த விஷ்ணு இவ்வாறு ருத்ரனிடம் கூறி மறைந்தார். அதனால் ருத்ரனை வழிபடுபவருடன் பழகக் கூடாது. இதர தேவருக்கு நிவேதனம் செய்ததும் அந்தணருக்கிட்டதுமான அன்னத்தை ஏற்கக் கூடாது. விஷ்ணு பிரஸாதமே ஏற்கத் தக்கது. ஆசார்யனின் திருவடி ஸேவை, வெள்ளைத் திருமண் தரிப்பது, தோளில் சங்க சக்ர முத்ரை, விஷ்ணு பிரஸாதத்தை உணவாகக் கொள்ளுதல். தாமரை மணி, துளஸி மணி, பவித்ரமணி, மாலை தரிப்பது. இது வைஷ்ணவரின் அடையாளமும் கடைத் தேறுகிற வழியும் என்றார் சாண்டில்யர். (113-127)*

श्रीविष्णुरुवाच ।।
एवं श्रुत्वा स नृपतिः पाषण्डेन विमोहितः ।
तेनोपदिष्टः पापेन पुण्यात्मा नृपपुङ्गवः ।। १२८

तदुक्ताचारसंपन्नः शङ्खचक्राङ्कदोर्द्वयः ।
नृपो बभूव पाषण्डो निष्ठुरात्मा विशेषतः ।। १२९

विवासयामास राष्ट्राद्ब्राह्मणान्वैदिकानपि ।
रुद्राक्षधारिणो ये च त्रिपुण्ड्रललितालिकाः ।। १३०

शिवपूजारता ये च शिवसंकीर्तने रताः ।
अग्निहोत्ररता ये च दीक्षिता ब्रह्मवादिनः ।। १३१

अद्वैतवादिनो ये ते सर्वे राष्ट्राद्विवासिताः ।
यानि कानि च देशे स्वे शिवक्षेत्राणि पार्थिवः ॥ १३२

नाशयामास सहसा पाषण्डोक्तवचोन्वितः ।
परदाररतो नित्यं स्मार्तकर्म विहाय सः ॥ १३३

सर्वः शान्ताग्निहोत्रः स्यादित्येवं पुर्यवादयत् ।
कांस्येन च दुराचारो हरद्वेषी नृपाधमः ॥ १३४

ये रुद्रजापनिरता रुद्राधिक्यं वदन्ति ये ।
ब्रह्मार्णं शङ्करं विष्णोर्ये साम्यं प्रवदन्ति च ॥ १३५

भस्मरुद्राक्षभिदुरा ये सदा रुद्रजापकाः ।
पठन्ति शिवनामानि शिवलिङ्गार्चने रताः ॥ १३६

शाङ्कराणि च मन्त्राणि प्रजपन्ति च ये द्विजाः ।
पठन्ति शैवस्तोत्राणि ते प्रयान्तु स्वदेशतः ॥ १३७

शङ्खचक्राङ्कदोर्मूलाश्श्वेतमृल्लाञ्छितालिकाः ।
रुद्रद्वेषरता ये च भस्मविद्वेषिणस्तथा ॥ १३८

विप्रविद्वेषिणश्चैव ब्रह्मविद्वेषिणश्च ये ।
श्रौतकर्मविहीनास्ते तत्र तिष्ठन्तु सर्वदा ॥ १३९

इति प्रवर्तिते तेन दुर्वृत्ते वैदिका जनाः ।
देशान्तरगताश्शेष केचन ब्रह्मवित्तमाः ॥ १४०

केचित्तद्वशगा विप्राः पाषण्डाचारमाश्रिताः ।
केचनारामकान्तारे ब्राह्मणा वृत्तिकर्शिताः ॥ १४१

वश्यौषधपरा ये च चाटुवाग्वादिनश्च ये ।
ये गर्दभावरा मर्त्याः पिशुनाः परसूचकाः ॥ १४२

स्वोरःकुट्टनकेङ्काररवास्तेषु प्रियोऽभवत्।
हास्यज्ञा ये विटा मर्त्याश्शैलूषा नाटकाश्च ये॥ १४३

परिहासविनोदज्ञाः प्रियास्तस्य नृपस्य ते।
पिठरे कुट्टनं कृत्वा ये स्वनन्ति खरा इव॥ १४४

तस्य प्रिया बभूवुस्ते सितमृद्धारणे रताः।
छागला कूहका म्लेच्छाश्शङ्खचक्राङ्कदोर्द्वयाः॥ १४५

अवैदिकाश्च ये विप्रा राज्ञस्ते वै प्रिया अहे।
ये पूर्वं वैदिका विप्रा मन्त्रिणश्च पुरोहिताः॥ १४६

ते सर्वे तं परित्यज्य निन्दन्तश्च दुरासदाः।
राजान्तरं विचिन्वन्तो देशमन्यं प्रपेदिरे॥ १४७

एवं तु वर्तमानेऽस्मिन्राज्ञि सत्यव्रते फणिन्।
वैकुण्ठभक्तिव्याजेन शिवद्वेषोऽस्य चाभवत्॥ १४८

उत्पाटितानि लिङ्गानि राज्ञा तेन शिवस्य हि।
यः कुर्याच्छिवभक्तिश्च भस्मरुद्राक्षधारणम्॥ १४९

शिवलिङ्गार्चनश्चैव तं जहाति नराधिपः।
अग्निहोत्रं स्मार्तकर्म यः कुर्याच्च स्वदेशगः॥ १५०

सन्ध्यावन्दनकर्मापि ह्यत्याजयत तं नृपः।
असावेवं महाराजः पाषण्डमतमाश्रितः॥ १५१

स्वपुरे स्थापयामास पाषण्डानतिदुर्जनान्।
एवं बहुतिथे याते राज्ञा सत्यव्रतेन वै॥ १५२

प्रवर्तिते शिवद्वेषे ध्वस्ते कर्मणि वैदिके।
सर्वे पाषण्डिनो जाताः फणिंस्तद्देशवासिनः॥ १५३

त्यक्तवर्णाश्रमाचाराश्श्वेतमृच्चिह्नफालकाः।
ततस्स राजाऽनङ्गेषुविद्धदेहोऽतिदुर्गुणः॥ १५४

वरनारीलम्पटोऽभूत्परद्रव्यापहृत्सदा ।
अभ्यागतच्छलेनैव सर्वदाऽसौ परान्नभुक् ।। १५५

ब्रह्मद्वेषी शिवद्वेषी भस्मद्वेषी च पार्थिवः ।
द्विजद्वेषी च रुद्राक्षे धृतवैरश्च भूपतिः ।। १५६

*இதனை முழுவதும் ஏற்ற ஸத்யவரதன் தான் வைஷ்ணவனானதுமல்லாமல் நாட்டினரையும் வைஷ்ணவராக்கிஞன். மற்றவரை நாடுகடத்திஞன். சிவக்ஷேத்திரங்களை அழித்தான். வேதம் ஸ்மிருதி காட்டிய ஆசாரத்தைத் தடுத்தான். சிவத்துவேஷத்தை வளர்த்தான். நாட்டில் அமைதி குலைந்தது. சிவ பக்தர்கள் வெளியேறினர். அரசன் முறை தவறி நடந்தான். (128-156)*

गते ह्येवं बहुतिथौ राज्ञः पाषण्डिनस्तथा ।
परचक्रनृपैर्भक्तैश्शिवकाञ्चीपुरी हृता ।। १५७

तस्मात्पलायितो राजा स्वदारैस्सह पापधीः ।
त्यक्तालङ्कारनिकरो देशाद्देशान्तरं भ्रमन् ।। १५८

किरातैस्तस्करैर्भूपो हृतभार्यो हृतार्थकः ।
हृतवस्त्राकल्पजालो ह्येकोऽरण्ये चचार ह ।। १५९

अटित्वा बहुवर्षाणि वनानि स बहूनि च ।
निरन्नजठरो द्वेषाच्छिवस्य परमात्मनः ।। १६०

निरानन्दो महादुःखी निर्दारो निर्धनो रुदन् ।
मत्तवत्प्रलपन्नित्यं बहुक्लेशेन भूपतिः ।। १६१

प्राप तीरं पिनाकिन्याः क्षुत्तृष्णादाहसंयुतः ।
हा हेति क्रन्दमानस्सन्भ्रष्टो नष्टोऽस्मि हा विधे ।। १६२

हा जन्मान्तरपापेन निजवर्णाश्रमादहम् ।
भ्रष्टोऽस्मि च दरिद्रोऽस्मि निर्दारोऽस्मि निरन्नकः ।। १६३

भ्रष्टराज्यो वनचरो निष्पटो नितरामहम्।
प्रेतभूतोऽस्मि शिव भो भ्रष्टे न करुणा किल ॥ १६४

इति प्रविलपन्भूपो महाक्लेशसमन्वितः।
पिनाकिनीजले स्नात्वा पीत्वा तत्तोयमागलम् ॥ १६५

तत्र वृद्धं विशालाक्षं जटामकुटमण्डितम्।
चीरकृष्णाजिनधरं याज्ञवल्क्यं ददर्श सः ॥ १६६

दृष्ट्वा तपस्विनं शान्तं मुनीनामुत्तमोत्तमम्।
ब्रह्मिष्ठं शान्तमनसं कर्मठं योगिकुञ्जरम् ॥ १६७

दुराधर्षं तपोराशिं तेजसा द्विजपुङ्गवम्।
स्वानुरूपैर्द्विजैर्धन्यैरावृतं भस्मपाण्डरम् ॥ १६८

भूत्युद्धूलितवर्ष्माणं द्विजराजमिवोडुगम्।
कृष्णाजिनोत्तरीयं तं रक्षाशुभ्रितविग्रहम् ॥ १६९

हिमवन्तमिवानीलनीरदावलिसंवृतम्।
जाम्बूनदमिव स्वच्छजटापटलमण्डितम् ॥ १७०

कोटिधारितशम्बालिकैलासागमिव स्थितम्।
अध्यापयन्तं शिष्यांश्च ज्ञानेच्छून्ब्रह्मवित्तमान् ॥ १७१

श्रीदक्षिणामूर्तिमिव मुनिव्रातानि सन्ततम्।
मूर्तिमन्तमिव श्रीमत्तपोराशिं महामुनिम् ॥ १७२

आदित्यमिव दुष्प्रेक्ष्यं प्राकृतैर्ब्राह्मणैरपि।
नन्दिकेशमिव स्वच्छशिवज्ञानपयोनिधिम् ॥ १७३

ब्रह्माणमिव योगीन्द्रैरुपास्यमृषिसत्तमैः।
सभीर्विनयभक्तिभ्यां स्तुवन्वाग्भिर्जनाधिपः ॥ १७४

साष्टाङ्गं प्रणिपत्यैनं मुनिं सङ्गम्य योगिनम् ।
धन्योऽहमिति तत्तेजस्सुसंपूत उवाच ह ॥ १७५

*இவ்வாறு பல ஆண்டுகள் கடந்தன. ஒரு சமயம் வேறு நாட்டரசர்கள் கூடி காஞ்சியை முற்றுகையிட்டுப் போரிட்டுக் காஞ்சி அரசைக் கைப்பற்றினர். நாடிழந்த அரசன் விரட்டப்பட்டு மனைவி மக்களையும் இழந்து உணவின்றிக் காடுகளில் சுற்றி வந்தவன், பிநாகினீ நதிக்கரை வந்தான். பருகு நீரும் உணவுமின்றி தவித்தவன் சிந்தித்தான். நான் முன் செய்த வினையால் வழிகெட்டு நாடிழந்து உணவின்றி வாடுகிறேன். சிவனே! உம்மிடம் பிழை புரிந்த என்னைச் சவமாக்கிவிட்டீரே! கருணையில்லையா? என்று புலம்பினான். அங்கு நீராட வந்த யாஜ்ஞவல்கிய முனிவரைக் கண்டான். தவச்சீலர், அமைதிமிக்கவர், யோகிகளில் சிறந்தவர், வேதம் ஸ்மிருதி வழி சென்று வேள்விகள் புரிந்தவர், நெருங்க இயலாதவாறு தவத்தீயால் ஜ்வலிப்பவர். அவரைச் சார்ந்தவர்களும் தவத்திலும் நடைமுறையிலும் அவருக்கு ஈடானவர்களுமான பல அந்தணர்களால் சூழப்பெற்றவர். விபூதி போன்று வெண்ணிற மேனியில் மேலாடை கொண்டவர், கருமேகம் சூழ்ந்த ஹிமவான் போல், தங்கம் போன்ற சடைகளால் அழகியமுகமுள்ளவர், ஞானிகளாக ஆர்வம் கொண்ட சிஷ்யர்களுக்கு வேதப்பொருள் உபதேசிப்பவர், தக்ஷிணாமூர்த்தி போன்று முனிவர்களால் சூழப்பெற்றவர், தவமே உருவெடுத்தது போன்ற ஒளி மிக்கவர், ஸூர்யனைப் போன்று உற்றுப் பார்க்க இயலாத ஒளி கொண்டவர். நந்திகேசர் போன்று தெளிந்த சிவஜ்ஞானக்கடல், இவரைக் கண்டு அச்சமும் பணிவும் பக்தியும் கொண்டு துதித்துக் கொண்டே வணங்கி நின்றான். தான் மிகவும் பாக்யசாலி என மகிழ்ந்தான். அவரிடம் விண்ணப்பித்தான். (156-175)*

राजोवाच ॥
स्वामिन्मुनिकुलोत्तंस रक्ष मां शरणागतम् ।
पापभीरुं शठं दुष्टं भ्रष्टं वर्णाश्रमाद्गुरो ॥ १७६

निर्लज्जं कृपणं हिंसारतं प्राणिकुलस्य माम्।
शिवद्रोहरतं भ्रान्तं रक्ष रक्षाधमाधमम्॥ १७७

नृपमेवं प्रोक्तवन्तमंहोनिस्तेजसं मुनिः।
वीक्ष्य कस्त्वमिति ब्रूहीत्यूचे वृत्तान्तमादितः॥ १७८

राजोवाच॥
अहं सत्यव्रतो राजा श्रीमत्काञ्चीपुरालयः।
वैदिकाचारसंपन्नः शिवभक्तिपरायणः॥ १७९

शाण्डिल्येनातिपापेन वञ्चितश्चोपदेशतः।
भ्रष्टोऽस्मि पुत्रदाराद्यैस्सह ब्रह्मकुलोत्तम॥ १८०

तादृशं मुनिशार्दूल पाषण्डमतमाश्रितम्।
पुनीहि मां दृशा तेऽद्य त्वत्पादकमलानतम्॥ १८१

विष्णुरुवाच॥
इत्युक्त्वा च पुनः प्राह याज्ञवल्क्यं द्विजोत्तमम्।
वृत्तान्तं स्वस्य राजाऽसौ याज्ञवल्क्याय योगिने॥ १८२

दुःखेन महताविष्टो रुदन्पापात्मना कृतम्।
शाण्डिल्येन हृतं कर्म निजदुःखोपशान्तये॥ १८३

श्रुत्वा तत्सर्वमवनीनाथेनोक्तं महामुनिः।
धर्मात्मा याज्ञवल्क्योऽसौ प्रोवाच नृपतिं प्रति॥ १८४

''ஸ்வாமி! முனிவர்களில் சிறந்தவரே! சரணம் புகுந்த என்னைக் காப்பீர். நான் பாபத்தில் பயந்தவன் எனினும் நடைமுறை கெட்டவன், வர்ண ஆசிரம வழிமுறைகளைக் கைவிட்டவன். உயிரினத்தை வெட்கமின்றித் துன்புறுத்தியவன். சிவத்துரோகம் செய்தவன். மதிமயக்கமுற்றவன். தாழ்ந்தவனினும் தாழ்ந்தவன். என்னைக் காப்பீர்'' என

முறையிட்டான். நீ யார்? என அவர் கேட்க நடந்ததைக் கூறினன். ''நான் ஸத்ய விரதன், காஞ்சீபுரத்தரசனுயிருந்தவன், வேதம் கூறிய நெறிகளைக் கடைபிடித்தவன். சிவபக்தியில் திளைத்தவன். சரண்டில்யனுல் வஞ்சிக்கப்பெற்றுத் தவருன வழியில் சென்று மனைவி மக்களையும் இழந்தவன். நாஸ்திகவழியில் சென்றவன். உம் திருவடித் தாமரைகளைப் பற்றிய என்னைக் காப்பீர்'' என்ருன். சாண்டில்யனுல் நிகழ்ந்த தவறுகளை உணர்ந்த தர்மாத்மாவான யாஜ்ஞவல்க்யர் அரசனுக்கு வழிகாட்டினுர். *(176-184)*

याज्ञवल्क्य उवाच ॥

राजन्नेतस्य पापस्य शिवद्रोहस्य निष्कृतिः ।
श्रुतिस्मृतिपुराणेषु नास्तीति मुनयोऽब्रुवन् ॥ १८५

तथापि वक्ष्ये ते राजन्भक्तः पूर्वं शिवस्य हि ।
इदानीं तान्त्रिकादेशाद्भ्रष्टाचारोऽभवो नृप ॥ १८६

त्वमज्ञानकृतान्मोहादकरोस्तान्त्रिकोऽप्यघम् ।
वेदवादं परित्यज्य विष्णुतन्त्रावलम्बकः ॥ १८७

भवानिदानीं पापोऽसि पश्चात्तप्तो बभूविथ ।
पश्चात्तापी च पुरुषस्सर्वपापैः प्रमुच्यते ॥ १८८

अत एव तवाख्यास्ये मुक्तिकारणमञ्जसा ।
क्षेत्रमस्ति महीपाल सर्वक्षेत्रोत्तमोत्तमम् ॥ १८९

जीवन्मुक्तिकरं नृणां च्युताह्वं सर्वसाधनम् ।
स्मरणात्सर्वपापघ्नं दर्शनान्मुक्तिदं नृणाम् ॥ १९०

जीवन्मुक्तिकरं तत्र वासात्केवलमेव हि ।

நீர் செய்த சிவாபசாரம் என்ற பாபத்திற்குக் கழுவாயை வேதமோ ஸ்மிருதியோ புராணமோ கூறவில்லை. சிவபக்தனுயிருந்தும் தந்திரவழியில் செல்பவனின்

*வழிகாட்டலால் நடைமுறையில் பிழை செய்தீர். பாபியாயினும் செய்த தவறை நினைத்து வருந்துகிறீர். தவறை உணர்ந்து வருந்துவதே பாபத்தைப் போக்கவல்லது. எனினும் உன் விடுதலைக்குரிய க்ஷேத்ரம் ச்யுதபுரீ. நினைத்தால் பாபமகலும். தரிசிப்பதால் முக்தி பெறலாம். அங்கு வசிப்பதால் ஜீவன் முக்தி பெறலாம்' என்றார். (185-190)*

राजोवाच ॥

प्रसीद वद कुत्रास्ते स्थलं तादृशमाधिहन् ॥ १९१

मह्यं स्ववर्णधर्मोक्तकर्महीनाय पापिने ।

याज्ञवल्क्य उवाच ॥

शृणु राजन्प्रवक्ष्यामि सर्वदुःखोपशान्तिदम् ॥ १९२

जीवन्मुक्तिप्रदं वासाद्दर्शनात्स्मरणादपि ।
सर्वपापप्रहननं मोक्षदं वासिनामपि ॥ १९३

अण्डबाह्याच्च्युतं तेजः परात्परतरं शिवम् ।
क्षेत्राकारात्परिणतं लिङ्गज्योतिरलङ्कृतम् ॥ १९४

पञ्चब्रह्मस्वरूपेण तीर्थराजेन रञ्जितम् ।
अनेककोटितीर्थौघैर्भूमिदिव्याक्षगैः सुरैः ॥ १९५

उपासितं चतुर्दिक्स्थाघोरतत्पुरुषादिकम् ।
बालाङ्कुराम्बासदयावीक्षणामृतपूजितम् ॥ १९६

तरुगुल्मलताकारसिद्धयोगिनिषेवितम् ।
पशुपक्षिमृगाकारभक्तवर्यसुपूरितम् ॥ १९७

श्रीमच्च्युतपुरं नाम सर्वलोकेषु विश्रुतम् ।
श्रुतिस्मृतिपुराणेषु सागमेषु सुबृंहितम् ॥ १९८

अण्डबाह्यस्थितं क्षेत्रं परं ज्योतिः परात्परम् ।
तत्प्रदेशात्प्रमुक्तस्स्याज्जन्तुस्सर्वो न संशयः ॥ १९९

सर्वसाधारणं क्षेत्रं श्रीमच्च्युतपुरं परम्।
प्राप्नोति यो मृतो जन्तुर्यस्मिन्क्षेत्रे शिवस्य सः ।। २००

तेनैव राजन्सम्बन्धं शाश्वतं परमं पदम्।
तत्प्रवेशान्मोक्ष्यसे त्वं वाराणस्यां मृतो यथा ।। २०१

*அரசன் மேலும் விளக்கம் தர விண்ணப்பித்தான். வர்ணதர்மம் மீறிய தனக்கு பாபம் விலக உதவுகிற அதனைப் பற்றிக் கேட்டான். அண்ட வெளியிலிருந்து நழுவிய பரம்பொருளின் பேரொளி க்ஷேத்திரவடிவம் பெற்றது. தரிசனத்தாலும் ஸ்மரணத்தாலும் பாபம் நீக்கவல்லது. அங்கு வசிப்பவருக்கு ஜீவன் முக்தி அருள்வது. அந்தப்பெருஞ்சோதி லிங்கவடிவம் பெற்றது. ஸத்யோ ஜாதம் முதலிய ஐந்து பிரும்ம ஸ்வரூபம் கொண்ட சிறந்த தீர்த்தம் கொண்டது. பல்வேறு க்ஷேத்திரங்களிலுள்ள தீர்த்தங்களாலும், தேவர்களாலும் உபாசிக்கப்பெற்ற தீர்த்தம் அது. அகோரம் தத்புருஷம் வாமதேவம் ஈசானம் ஸத்யோஜாதம் என்ற இறங்கு துறைகள் உள்ளது. பாலாங்குராம்பிகையின் கருணை நிறைந்த பார்வை எனும் அமுதப் பெருக்கால் நிறைவு பெற்றது. மரமாகவும் புதராகவும் கொடியாகவும் உருமாறிய சித்தர்களாலும் யோகிகளாலும் வழிபடப் பெற்றது. சிவனது அடியார்கள் பசுவாக, பக்ஷியாக, மிருகமாக உருவேற்று வழிபடுகிற இடம், அந்த ச்யுதபுரத்தில் வசிக்கப் பாபமனைத்தும் விலகும். வேறு சிவக்ஷேத்திரத்தில் மரணமடைந்தவரே அந்த புண்யத்தால் இங்கு வசிக்கிற பாக்யம் பெறுவர். காசியில் மரணத்தால் மேனிலை பெறுவது போல் இங்கு சென்று வசிப்பாய். பெருநிலை பெறுவாய். **(191-201)***

प्रविश त्वं महाभाग श्रीमच्च्युतपुरं वरम्।
भस्मोद्धूलितसर्वाङ्गस्त्रिपुण्ड्राङ्कितमस्तकः ।। २०२

रुद्राक्षमालाभरणश्श्रीरुद्राध्यायजापकः।
तेन धन्योऽसि राजेन्द्र तत्प्रवेशान्महामते ।। २०३

विष्णोर्द्वेषो न कर्तव्यश्शक्तित्वात्परमेशितुः ।
शक्तिशक्तिमतोर्भेदो न कदाचिदपि श्रुतौ ॥ २०४

अत एव सदा वन्द्यः पूज्यो नारायणो हरिः ।
शिवभक्तैश्च भक्तैश्च हरेर्हरिहरावपि ॥ २०५

पूज्यौ तौ लोकवन्द्यौ च लोकानां पितरावपि ।
श्रीविष्णुरुवाच ॥
इत्युक्तस्तेन मुनिना राजा सत्यव्रताह्वयः ॥ २०६

श्रीमच्च्युतपुरं प्राप सिद्धयोगिगणैर्वृतम् ।
परं ज्योतिस्सदानन्दमण्डबाह्याच्च्युतं पुरम् ॥ २०७

अप्रमेयमचिन्त्यं तत्सर्वदोषविवर्जितम् ।
त्रैकालिकविनिर्मुक्तं वेदवेदान्तघोषितम् ॥ २०८

मरणस्मरणालोकजननान्मुक्तिदं विभु ।
अनेकजन्मसंसिद्धपुण्यैराप्तव्यमञ्जसा ॥ २०९

ततस्स नृपतिर्भोगिन्प्रविश्य पुरमुत्तमम् ।
महत्सन्दर्शनानन्दो दक्षिणद्वारमाश्रिताम् ॥ २१०

ददर्शादिसभामध्ये चिदानन्दमयीं शुभाम् ।

*உடல் முழுவதும் விபூதிபூசி, நெற்றியில் மூன்று பட்டைகளிட்டு ருத்திராக்ஷமாலை தரித்து, ஸ்ரீ ருத்ரஜபத்துடன் ஊருக்குள் பிரவேசிப்பீர். விஷ்ணுவிடம் துவேஷம் கொள்ளாதீர். அவர் சிவபெருமானின் சக்தி. சக்திக்கும் சக்திமானுக்குமிடையே வேறுபாடில்லை. அதனால் நாராயணன் வழிபட வேண்டியவர். சிவ பக்தராலும், விஷ்ணு பக்தராலும் சிவனும் விஷ்ணுவும் வழிபடத் தக்கவரே. இவ்விருவரும் உலகின் தாய் தந்தையர்.'' என்று யாஜ்ஞவல்க்யர் கூற ஸத்ய விரதன் வழுவூர் சென்றடைந்தான். அண்டவெளியிலிருந்து நழுவிய சிவப்பெரும் ஜோதி வழுவூரில் கோயில் கொண்டது. எப்போதும்*

ஆனந்தமாகவே இருப்பது. மதிப்பிடவோ சிந்தித்துப் பார்க்கவோ இயலாது. குறை ஏதுமில்லாதது. கடந்த - நிகழ்கிற - வரவிருக்கிற காலநிலைகளுக்குள் அடங்காதது. வேதத்தில் உபநிஷத்திலும் கோஷிக்கப் பெற்றது. அங்கு இறந்தாலும் பிறந்தாலும் அதனை நினைத்தாலும் தரிசித்தாலும் மேனிலைக்கு இட்டுச் செல்வது. பல பிறவிகளில் செய்த பெரும் புண்யக்குவியலால் மட்டும் அங்கு வசிக்கும் பாக்யம் பெற முடியும். அரசன் அதனுள் நுழைந்து ஆதிஸபையைத் தரிசித்தான்: நகரத்தின் தெற்கு வாயிலில் அது அமைந்துள்ளது. அதுவே சித்தும் ஆனந்தமும் உருப்பெற்றதாக மங்களமாக அமைந்திருந்தது. (202-210)

यत्रादौ भगवान्नृत्तं मुनीनामकरोत्पुरा ॥ २११

तस्मादादिसभा नाम देवदारुवने बभौ ।
येभ्यो ज्ञानमुपादिष्टं यत्र सर्वेश्वरेण वै ॥ २१२

सा तैर्ज्ञानिसभा प्रोक्ता मुनिभिर्वेदपारगैः ।
तत्प्रवेशात्प्रमुक्तोऽभूत्स राजा पृथिवीपतिः ॥ २१३

दृष्ट्वा तं देवदेवेशमादिसंसत्पतीश्वरम् ।
वाग्भिस्तुष्टाव राजासौ कृत्तिवासेश्वरं प्रभुम् ॥ २१४

தேவதாரு வனத்தில் ஆதிஸபையில் முனிவர்களுக்காக நடனம் செய்தார். அங்கேயே முனிவருக்கு ஜ்ஞானம் உபதேசித்தால் ஞானஸபையாயிற்று. அதனுள் நுழைந்ததும் அரசனைக் கட்டிலிருந்த வினைக்கட்டு அகன்றது. உடன் ஜ்ஞான ஸபாநாதனை அரசன் துதித்தான். (211-214)

राजोवाच ॥

यस्य प्रसादमजविष्णुहरादिदेवाः
संप्राप्य वाञ्छितफलं निजमापुराद्यम् ।
तं जन्ममृत्युकलुषापहमाश्रितानां
श्रीकृत्तिवासनटमादिसभेशमीडे ॥ २१५

*இவருடைய அருளைப்பெற்ற மும்மூர்த்திகள் முதலான தேவர்கள் விரும்பியதைப் பெற்றனர். இவரை அண்டியவர் பிறப்பு இறப்பு பாபம் இவை நீங்கப்பெற்றனர். அந்த ஆதிஸபேசனை கிருத்திவாஸ நடனைத் துதிக்கிறேன். (215)*

यच्छक्तिलेशकणलेशलवामृताङ्गः

सूर्योऽनलः पचति पाकविशेषवस्तु।

आह्लादयत्यखिलमेव पतत्यनिन्

तं कृत्तिवासनटमादिसभेशमीडे॥ २१६

*இவரது சக்தியின் துளியைப் பெற்றதால், அமர நிலைபெற்ற ஸூர்யன் விளங்குகிறான். அக்னி தான் பக்குவப்படுத்த வேண்டியதைப் பக்குவப்படுத்துகிறான். சந்திரன் எல்லோரையும் மகிழ்விக்கிறான். அந்த ஆதிஸபேசனை கிருத்திவாஸ நடனைத் துதிக்கிறேன். (216)*

भक्ताभिमानहमनन्तगुणामृताब्धिं

भस्मप्रदिग्धमगजाधिपमार्तबन्धुम्।

सर्वान्तरस्थमजकेशवशक्रवन्द्यं

श्रीकृत्तिवासनटमादिसभेशमीडे॥ २१७

*பக்தனின் செருக்கை அடக்குபவர். எல்லையற்ற குணக்கடல், விபூதி பூசியவர், மலைமகளின் நாதர், எளியவரின் பந்து, எல்லோர் உள்ளத்திலும் வசிப்பவர், பிரும்மா விஷ்ணு இந்திரன் இவர்களால் வணங்கப்பெறுபவர், அந்த ஆதிஸபேசனை கிருத்திவாஸ நடனைத் துதிக்கிறேன். (217)*

यं सूर्यमध्यगतमीश्वरमादिदेवं

वेदोदितप्रथितकर्मरता द्विजेन्द्राः।

ध्यायन्ति तत्सवितुरादिवरेण्यभर्गं

श्रीकृत्तिवासनटमादिसभेशमीडे॥ २१८

*வேதம் கூறிய நித்ய கர்மங்களைப் புரிகிற சிறந்த அந்தணர்கள் அந்த சூர்யனின் நடுவில் காணப்பெறுகிற அழகிய*

*விரும்பியதைத் தருகிற ஒளியாக தியானிக்கின்ற ஆதிஸபேசனை கிருத்திவாஸ நடனைத் துதிக்கிறேன். (218)*

वेदान्तवित्कपिलतार्किकसौगताद्यैः
शैवैश्च वैष्णवमतैश्च सशाक्तकैश्च ।
तत्तन्मतान्तरगतैस्समुपास्यते यः
तं कृत्तिवासनटमादिसभेशमीडे ।। २१९

*வேதத்தின் முடிவான அதன் கருத்தை உணர்ந்த கபிலரும் தர்க்க சாஸ்திர வல்லுனரும் பௌத்தரும் சைவரும் வைஷ்ணவரும் சாக்தரும் அந்தந்த மதக் கோட்பாட்டின்படி ஈசனை வணங்குகிற ஆதிஸபேசனை கிருத்திவாஸ நடனைத் துதிக்கிறேன். (219)*

इति स्तुत्वा महाराजो जीवन्मुक्तो दृढव्रतः ।
अदृश्यस्सर्वभूतानां जगद्दर्शी च पार्थिवः ।। २२०

त्रिणेत्रश्चन्द्रशकलो जटामण्डलमण्डितः ।
बभूव पृथिवीपालो देवैस्सर्वैर्नमस्कृतः ।। २२१

एवं पाषण्डधर्मिष्ठो मुक्तिं प्राप महीपतिः ।
महत्सन्दर्शनाच्चैव तस्यास्यैव च वैभवात् ।। २२२

सारूप्यपदवीं नित्यां च्युतश्रीनगराश्रयात् ।
मुक्तिं प्राप स भोगीश राजा सत्यव्रताह्वयः ।। २२३

अत्र सामान्यधर्मिष्ठः शिवज्ञानपरायणः ।
भूतिरुद्राक्षधृद्विद्वान्मतदूषणवर्जितः ।। २२४

वसेत्प्रारब्धभोगान्तमत्र सायुज्यमाप्नुयात् ।
वासं कुर्वन्ति ये नित्यं अनसूयादयान्विताः ।। २२५

पञ्चब्रह्मसरस्स्नाताः शिवलिङ्गार्चने रताः ।
मनुष्याश्चर्मणावेष्टय ते रुद्रा नात्र संशयः ।। २२६

येऽत्र कुर्वन्ति वासं वा सामान्यनियमाश्रिताः ।
ते रुद्रा एव भोगीन्द्र भस्मरुद्राक्षधारिणः ॥ २२७

இவ்வாறு துதித்த ஸத்ய விரதன் திடவிரதத்துடன் வழுவூரில் வாழ்ந்து ஜீவன் முக்தனானான். பிறர் கண்களில் புலப்படாத ஸித்தனாகி உலகைக் கண்டான். சிவனருளால் சிவனாகி முக்கண்ணனும் பிறைசூடியவனும் ஜடாதாரியுமாகி தேவர்களும் அவனை வணங்க முன் பாஷண்டனாயிருந்தவன் இப்போது முக்தி பெற்றான். மஹான்களைத் தரிசித்ததாலும் ச்யுதபுரியில் வசித்ததாலும் ஸாரூப்ய முக்தி பெற்றான். இங்கு பொது அறநெறியைப் பின்பற்றிச் சிவஜ்ஞானம் பெற்று விபூதி - ருத்ராக்ஷம் தரிப்பவன் பிறமதத்தைத் தூஷிக்காமல் தன் நிலையைக் காத்துக் கொள்பவன். பிராரப்தவினை கழிகிற வரை இங்கு வசிக்க சிவஸாயுஜ்யம் பெறுவான். அஸூயையின்றி உயிரினத்திடம் கருணையுடன் பஞ்சபிரும்ம தீர்த்தத்தில் நீராடி, சிவ லிங்கத்தை வழிபடுபவர் தோலால் மூடப்பட்ட மனித உருக்கொண்ட ருத்ரனே. இதில் சந்தேகமில்லை. விபூதி ருத்திராக்ஷம் தரித்து பொது அற வழியைப் பின்பற்றி இங்கு வசித்தாலும் ருத்திரனாவான். (220-227)

अत्र स्थित्वा विमलमतिभिस्साधुभिर्ब्राह्मणेन्द्रैः
शम्भोर्भक्तैर्युगपदमलज्ञानमाप्याम्बिकेशात् ।
मुक्तिः प्रापे किल फणिवर श्रीशिवानन्दसान्द्रैः
सत्यं ब्रूमस्त इह नितरां ज्ञानरूपा बभूवुः ॥ २२८

वर्णाश्रमाचारयुताश्च ये ते श्रीकृत्तिवासेशनटं भजन्ति ।
मनुष्यभावं च विहाय धीराः सदा शिवज्ञानरताः शिवास्स्युः ॥ २२९

इति षष्ठोऽध्यायः

அறிவு தெளிந்த அந்தணர் சிவபக்தி கொண்டு சிவனை வழிபட அம்பிகை மணாளனின் அருளால் சிவானந்தம் நிரம்பியவராக ஞானமே உருவானவராகி முக்தி பெறுகின்றனர் என்பது ஸத்யம். வர்ண - ஆசிரம நடைமுறைகளைப் பின்பற்றி

*ஸ்ரீ கிருத்திவாஸ நடேசனை வழிபடுபவர் மனித நிலையை விட்டு எப்போதும் சிவஞ்ஞானத்தில் திளைப்பவராக சிவர்களாவர். (228-229)*

—*—

॥अथ सप्तमोऽध्यायः ॥

शेष उवाच ॥

हरे केशव गोविन्द दामोदर जगत्पते ।
शिवानन्दैकसन्दोहरसिक श्रीजनार्दन ॥ १

मुकुन्दानन्द विश्वेश सनन्दादिसुपूजित ।
देवीमाहात्म्यमखिलं प्रसीदाचक्ष्व मे प्रभो ॥ २

श्रीविष्णुरुवाच ।

साधु पृष्टं त्वया भोगिन्लोकानां हितकाम्यया ।
तद्ब्रवीमि महादेव्या माहात्म्यमखिलप्रदम् ॥ ३

तद्भक्तानाञ्च माहात्म्यं तद्व्रतानाञ्च भोगिराट् ।
तत्पूजामहिमानञ्च तत्प्रसादस्य वैभवम् ॥ ४

यो नरः पूजयेद्देवीं श्रीमद्बालाङ्कुराम्बिकाम् ।
वागैश्वर्यसुसन्तानधर्ममोक्षफलप्रदाम् ॥ ५

शुक्रवारे विशेषाद्यो यजेद्बालाङ्कुराम्बिकाम् ।
लभेत पुत्रसौभाग्यं वागैश्वर्यं स शीघ्रतः ॥ ६

धर्मार्थकाममोक्षांश्च पुनश्चाभीप्सितानपि ।
नक्तव्रताशनश्चन्द्रदिवसे यः प्रपूजयेत् ॥ ७

महावन्ध्यापतिरपि स शीघ्रं पुत्रमेष्यति ।
अस्मिन्नर्थे पुरावृत्तमितिहासं पुरातनम् ।। ८

श्रवणात्पठनाद्भोगिन्वत्सरात्पुत्रमश्नुते ।

*அத்தியாயம் 7*

*சேஷன் விஷ்ணுவிடம் விண்ணப்பித்துக் கொள்கிறார் - ஹரே! கேசவ! கோவிந்த! தாமோதர! உலகின் நாதரே! சிவானந்தத்தில் மூழ்கி நிற்பவரே! ஜநார்தன! முகுந்த! ஆனந்த! ஸநந்தனர் முதலியவர்களால் வழிபடப் பெறுகிறவரே! பிரபோ! எனக்குத் தேவியின் பெருமை பற்றி விளக்குவீர்'' என. ஸ்ரீ விஷ்ணு கூறுகிறார். தேவியின் பெருமையையும் அவளது பக்தர்களின் பெருமையையும் அவளை வழிபடும் முறை, வழிபாட்டின் பெருமை, அவளது அருளின் சிறப்பு அனைத்தையும் விளக்குகிறேன். பாலாங்குராம்பிகையை வழிபட வாக்குவன்மை, மேலாளுமை, மக்கட்பேறு, அற நிறைவு, முக்தி என அனைத்து மேன்மைகளும் கிட்டும். வெள்ளிக்கிழமைகளில் வழிபடுபவர் மக்கட்பேறும் வாக்குவன்மையும் விரைவில் பெறுவர். அறம், பொருள், இன்பம், முக்தி விரும்பியதனைத்தும் பெறுவர். (1-8)*

पुरा कृतयुगे शेष वत्सगोत्र समुद्भवः ।। ९

सुमतिर्नाम विप्रर्षिर्वेदवेदान्ततत्त्ववित् ।
सर्वशास्त्रार्थविद्धीरो गुणराशिर्महामनाः ।। १०

बभूव स्वाश्रमाचारनिरतो गिरिजार्चकः ।
कमला नाम तस्यासीद्भार्या सर्वाङ्गसुन्दरी ।। ११

पतिव्रताशिरोरत्नं पुण्यशीला गुणोत्तरा ।
उभौ काश्मीरदेशस्थौ शिवव्रतपरायणौ ।। १२

सोमवारव्रतपरौ विशेषादगजाप्रियौ ।
सन्तानरहितौ दान्तौ सदा सन्तानकांक्षिणौ ।। १३

तयोर्बभूव नितरां चिन्ता चित्तार्तिकारिणी।
अनेकवत्सराण्यासन्नावयोर्न च सन्ततिः॥ १४

एवं चिन्तयतोश्शेष तयोः स्त्रीपुंसयोर्भृशम्।
चिन्ताफलोदय इव प्रादुरासीन्महामुनिः॥ १५

शिवप्रियो वामदेवो महायोगी महामनाः।
तयोर्जन्मान्तरारब्धपुण्यराशिरिवागतः॥ १६

वहुशिष्यसुसंवीतः परमेश्वरवेषवान्।

*முன்னர் கிருதயுகத்தில் வத்ஸகோத்திரத்தில் பிறந்த ஸுமதி என்பவர். வேதவேதாந்தங்களையும், சாஸ்திரங்களின் உட்பொருளையும் அறிந்தவர். குணச்சிறப்பும் பெருமனமும் தன் ஆசிரமத்திற்குரிய நடைமுறைகளில் ஆர்வமும் கொண்டவர். மலைமகளை ஆராதிப்பவர். கமலா என்ற அவரது மனைவி பேரழகி, கற்புக்கரசி, புனித பழக்கவழக்கங்கள் கொண்டவள், குணங்களால் மேலானவள். இருவரும் காச்மீரவாஸிகள். சிவவிரதம், ஸோமவார விரதம் அனுஷ்டிப்பவர்கள். தேவியிடம் பக்தி மிக்கவர். அவர்களுக்கு மக்கட்பேறில்லை. மக்களைப் பெற விரும்பி சிந்தித்தனர். பல ஆண்டுகளுக்குப் பிறகும் ஸந்ததி இல்லை என்று இருவரும் சிந்தித்திருக்கையில், அந்த எண்ணத்தின் பயன் கூடி வரும் என்று குறி கூறுவதுபோல் சிவபக்தரான வாமதேவர் என்ற யோகி வந்தார். முன் பிறவிகளில் செய்த புண்யச் செயல்களின் பலனே உருவெடுத்து வந்தாற்போல் பல சிஷ்யர்களுடன் சிவப்பழமாக அவர் முன் நின்றார். (7-16)*

तं दृष्ट्वा योगिनं विप्रस्साष्टाङ्गं प्रणिपत्य च॥ १७

देह्यावयोस्सुसन्तानमिति संप्रार्थितो मुनिः।
तस्य सन्तानकामस्य सुमतेर्मुनिपुङ्गवः॥ १८

योगी चोपदिदेशैतां विद्यां सन्तानभाग्यदाम्।
अप्रमेयगुणाधारां महासारस्वतप्रदाम्॥ १९

दारिद्र्यारण्यहुतभुग्निर्वापणघनावलिम्।
स तां गृहीत्वा योगीन्द्रं कमलासहितो द्विजः ।। २०

वामदेवं नमस्कृत्य स्वगुरुं योगिनां वरम्।
अपृच्छत्सुमतिर्धीरं नतः कमलया सह ।। २१

सुमतिरुवाच ।।
भगवन्योगिनां श्रेष्ठ शिवध्यानपरायण ।
प्रसीद विद्यां जप्त्वा तां कुत्र सिद्धिमवाप्नुयाम् ।। २२

वामदेव उवाच ।।
पूर्वादब्धेर्योजनात्तु नाम्ना च्युतपुरी शुभा ।
कावेर्या दक्षिणे भागे क्रोशदूरमिते स्थिता ।। २३

श्रीवाञ्छ्यादुत्तरे भागे योजनात्परतस्स्थिता ।
अतिगुह्यतरा लोके विशेषेण कलौ युगे ।। २४

काचिदस्ति च्युतपुरी ब्रह्माण्डाद्बहिरागता ।
अण्डनाशेऽपि विप्रर्षे सा न नष्टा च्युता पुरी ।। २५

तत्र बालाङ्कुरेत्यस्ति शक्तिराद्या सनातनी ।
ब्रह्मविष्णुमहेशानां जननी ज्ञानरूपिणी ।। २६

अनिर्वेद्या हरीशाद्यैः परिपूर्णा परा शिवा ।
महापातकिनां पुंसामार्तिघ्नी वर्णरूपिणी ।। २७

अनन्तगुणकल्याणा भक्तकल्याणवारिधिः ।
स्वस्वाभीष्टानि गीर्वाणदेवतानां प्रदायिनी ।। २८

अम्बाप्रसादं संप्राप्य ब्रह्मविष्णुहरीश्वराः ।
सदाशिवमुखा देवाःस्वां स्वां सिद्धिं प्रपेदिरे ।। २९

सर्वविद्याकरीं पुंसां सर्वसिद्धिकरीं शुभाम्।
सन्ताननिखिलैश्वर्यसिद्धिं प्राप्नुहि भूसुर ।। ३०

அவரை வணங்கி ஸுமதி புத்திர பாக்யம் அருளும்படி வேண்டினார். அந்த முனிவர் அதற்கான உபாயமாக ஒரு மந்திரத்தை, உபதேசித்தார். மிகச்சிறந்த அது. வாக்குவன்மை, ஏழ்மையை நீக்கிச் செல்வம் தருவது. அதனைத் தன் மனைவி கமலாவுடன் ஏற்ற ஸுமதி வாமதேவரை வணங்கி அந்த மந்திரம் ஸித்தி பெறச் சிறந்த ஸ்தலத்தைப் பற்றிக் கேட்டார். வாமதேவர் கூறினார். கீழ்கடலின் கரையில் ஒரு யோசனை தூரத்தில் ச்யுதபுரீ என்ற ஸ்தலம் காவேரியின் தென் கரையில் கூப்பிடு தூரத்தில் உள்ளது. ஸ்ரீ வாஞ்சியத்திற்கு வடக்கே ஒரு யோசனை தூரம். கலியில் மிக ரஹஸ்யமானது. பிரளயத்தில் பிரும்மாண்டம் உருக்குலையும் போது அழிவற்று நிற்பது. அங்கு ஆதி சக்தி பாலாங்குராம்பிகை உள்ளாள். மும்மூர்த்திகளின் தாய். ஞான வடிவினள். பூர்ணநிலையிலுள்ளவள். அதனால் ஹரி-ஹரர் முதலானோரால் கூடப் புரிந்து கொள்ள முடியாதவள். பெரும் பாபிக்கும் துயர் நீக்குபவள். அக்ஷரவடிவினள். எண்ணற்ற மங்கள குணகணங்கள் கொண்டவள். பக்தர்களுக்கு மங்களக்கடலாக இருப்பவள். தேவர்களுக்கும் அவரவர் விரும்பியதைத் தருபவள். பிரும்மா விஷ்ணு ருத்ரன் ஈச்வரன் ஸதாசிவன் என்ற ஐந்து பிரும்ம நிலையினரும் அம்பாளின் அருள் பெற்றுத் தம் தம் பொறுப்பை நிறைவுறச் செய்கின்றனர். வித்யைகளின் நிறைவைத் தருபவள். மக்கட்பேறு முதலிய அனைத்துச் செல்வங்களையும் அவளருளால் பெறுவாய் என்றார். (17-30)

श्रीविष्णुरुवाच ।।

इति श्रुत्वा ततः पश्चात्सुमतिर्भार्यया सह।
प्राप्य च्युतपुरीं नित्यां परञ्ज्योतिर्मयीं फणिन्।। ३१

शिवस्याग्नेयभागे तु पर्णशालां विधाय सः ।
निर्माय च तथा देवीं सुमतिर्भार्यया सह ।। ३२

सोमवारे तु संप्राप्ते महाकल्याणदायिनीम्।
सन्तानदीपिकां ज्ञानप्रदां तेषां महात्मनाम्॥ ३३

यजन्बालाङ्कुराम्बां तां सोऽर्चयद्विजराडहे।
अवाप महतीं लक्ष्मीं तया बन्धूकसन्निभाम्॥ ३४

अनल्पगुणसंयुक्तं पुत्रं मित्रसमप्रभम्।
अवाप कृपया देव्यास्तदाराधनतत्परः॥ ३५

स पुत्रं मित्रसङ्काशमादाय कनकप्रभम्।
चक्रे चादिसभानाथ इति भक्तिमतां वरः॥ ३६

सार्धसंवत्सरे तस्य शिशोस्तपनतेजसः।
तद्भक्तिशोधनार्थाय देवी प्राणाञ्जहार ह॥ ३७

तृणस्खलापदेशेन प्राप तन्मणिकुट्टिमे।
जहौ प्राणान्द्विजसुतो द्युमणित्विट्समद्युतिः॥ ३८

भूमौ निपतितं पुत्रं त्यक्तप्राणं सुकोमलम्।
प्रसार्य हस्तौ भोगीन्द्र दृष्ट्वा शोकातुरः पिता॥ ३९

विलप्य बहुधा विप्रः सुमतिश्चाब्रवीदिदम्।

இதனைக் கேட்ட ஸுமதி தன் மனைவியுடன் பெருஞ்ஜோதியாகத் திகழ்கிற வழுவூர் வந்தடைந்தார். சிவாலயத்தின் தென்கிழக்கில் குடிசை அமைத்து அங்கு வசித்தார். திங்கள் கிழமைகளில் பெருமங்களங்கள் தருபவளும் குடும்ப விளக்கை ஏற்றுபவளும் பேரறிவாளருக்கும் ஜ்ஞானம் வழங்குபவளுமான பாலாங்குராம்பிகையை வழிபட்டுப் பெருவாழ்வு பெற்றார். தேவியை வழிபடுவதில் ஆர்வமிக்க, அவர் நன்னாளில் சூர்ய ஒளி கொண்ட நன்மகனைப் பெற்றார். அவனுக்கு ஆதிஸபாநாதன் என்று பெயரிட்டார். அவரது பக்தியைச் சோதிக்க எண்ணிய தேவி மகனின் உயிரைப் பறித்தாள். புல் தடுக்கி விழுந்து கல்மேடையில் அடிபட்டு மகன்

உயிர் நீத்தான். அதனைக் கண்ட ஸுமதி கை விரித்து அலறினார். (31-39)

सुमतिरुवाच ।।

पुत्रशोकात्परो मृत्युः पुत्रशोकात्परोऽनलः ।। ४०

पुत्रशोकात्परं दुःखं नास्ति नास्ति जगत्त्रये ।
न पुत्रमरणादन्या हानिर्नान्यिद्ध्दयं तथा ।४१

न पुत्रमरणात्क्लेशो ह्यन्योऽस्ति भुवनत्रये ।
पुत्रोत्पत्तेः परो लाभः पुत्रोत्पत्तेः परं सुखम् ।। ४२

पुत्रोत्पत्तेः परो हर्षो नास्ति लोके किमप्यतः ।
अमृतं शिशिरे वह्निरमृतं क्षुधि भोजनम् ।। ४३

अमृतं राजसम्मानममृतं बालभाषणम् ।
पुत्रहानेः परश्शत्रुः पुत्रहानेः परा मृतिः ।। ४४

पुत्रहानेः पराऽऽर्तिश्च नास्ति किञ्चित्पुनर्भुवि ।
श्रीविष्णुरुवाच ।।
विललापेति भोगीन्द्र सुमती ऋषिपुङ्गवः ।। ४५

तद्भार्या कमला तत्र विललापाकुलेन्द्रिया ।
अंके निधाय तनयं सन्ताड्योरसि चोदरे ।। ४६

कमलोवाच ।।
हा पुत्र मन्नेत्र सुपूर्णचन्द्रसमानवक्त्राम्बुज मत्पितस्त्वम् ।
क गच्छसि त्वत्पितरं विहाय दुःखोदधौ स्थाप्य च मातरं माम् ।। ४७

स्वपिष्यरे किं वद तात वाचं पश्यातुरां ते जननीं विशोकाम् ।
कुरुष्व चोत्तिष्ठ गिरीन्द्रपुत्रि बालाङ्कुराम्बे तव पादपद्मम् ।। ४८

दृष्ट्वा चिरं कालमतीव भक्त्या लब्ध्वैतमर्थं किमु चेष्टसिद्धिः ।
बालाङ्कुराम्बे करुणा तवास्ति न किं ममार्ये करुणानिधाने ॥ ४९

यद्यस्ति ते शङ्करि दुःखमेतत्कथं मया प्राप्तमगेशकन्ये ।
त्वयैव दत्ता किल पुत्रसंपदस्मत्तपस्तोषितया भवानि ॥ ५०

कथं त्विदानीं मम पुत्रजीवः केनापराधेन हृतः परेशि ।
मद्भाग्यराशे मदनाभिराम हे चित्सभानाथ मदीयदृष्टे ॥ ५१

उत्तिष्ठ चोत्तिष्ठ ममार्भक त्वं विधेहि सन्तोषमिहावयोश्च ।
इति प्रलपमानां तां कमलां निजवल्लभाम् ।
शोकं निगृह्य सुमतिरन्तराश्वासयद्द्विजः ॥ ५२

*புத்ரனை இழந்த சோகம் பெரும் யமன்; பெருந்தீ; பெரும் துயர், இதனைக் காட்டிலும் மூவுலகில் பெருந்துயர் கிடையாது. புத்திரனைப் பெறுவதை விட சிறந்த லாபமோ, ஸுகமோ, மகிழ்ச்சியோ உலகில் இல்லை. குளிரில் நெருப்பும், பசியில் உணவும், அரசஸபையில் நன் மதிப்பும் சிறுவனின் கொச்சைப் பேச்சும் அமுதமே. புத்திரனை இழப்பதை விடப் பெரிய சத்ரு இல்லை. அதுவே பெருமரணம், பெரும் துயரம் என ஸுமதி கதறினான். கமலாவும் மகனை மடியிலிட்டு மார்பிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு கதறினாள். ''அழகிய முகத்தாமரையுள்ள மகனே! என் அப்பா! என் கண்ணே! என்னையும் உன் தந்தையையும் துயரில் ஆழ்த்திவிட்டு எங்கு சென்றாய்? தூங்குகிறாயோ! உன் தாயைப் பார்த்து ஒரு சொல் பேசு? என் துயரைத் துடைப்பாய். மலையரசனின் மகளான பாலாங்குராம்பிகையே! பக்தியுடன் வெகு காலம் கடந்து ஒரு மகனைப் பெற்றதால் விரும்பியதைப் பெற்றதாகுமோ? உனக்குப் பரிவு இல்லையா? எம் தவத்தால் மகிழ்ந்து நீ அருள் காட்டித் தந்த மகன் எந்த தவற்றிற்காக உயிர் நீத்தான்? என் பரமபாக்ய நிதியான ஞானஸபா நாதனே! மகனே! எழுந்திரு. எம் இருவரையும் மகிழச் செய்வாய்'' இவ்வாறு கதறுகிற கமலாவிடம் ஸுமதி ஆறுதல் கூறினான். (40-52)*

समारोप्याङ्कमादाय तनयं सूर्यवर्चसम्।
तदाननं समालोक्य निश्चलेनैव चक्षुषा ॥ ६८

आसूर्यास्तमयं पश्चाद्गम्यतामद्य न त्वया।
श्रीविष्णुरुवाच ॥
इत्युक्तस्तेन भोगीन्द्र सुमतिः शोकविह्वलः ॥ ६९

पुनः परेतभूमिं स ययौ पुत्रेक्षणातुरः।
गत्वा श्मशानं सुमतिः पुत्रशोकातुरो द्विजः ॥ ७०

मृतपुत्रं समादाय कोमलाकृतिमात्मनः।
विललापाङ्कमारोप्य पुत्र पुत्रेति चासकृत् ॥ ७१

अंके स्थापितवत्यस्मिन्ब्राह्मणे पङ्कजेक्षणम्।
पुत्रं विलपमाने च बहुधा बान्धवैर्वृते ॥ ७२

वटस्थो गृध्रराजोऽपि ब्राह्मणं सुतवत्सलम्।
मृतपुत्रः समायाति किमु चित्ते विचार्यताम् ॥ ७३

अत एव महाभाग त्यज पुत्रं झटित्यलम्।
प्रोवाच वाचं वैराग्याद्यथात्मजवपुस्त्यजेत् ॥ ७४

गृध्र उवाच ॥
हे ब्राह्मण महाभाग मा स्पृश त्वं शवं पुनः।
शवेनानेन किं ते भो सुमते शास्त्रवित्तम ॥ ७५

विलपस्यंकमारोप्य शवं मृतसुतं स्मरन्।
जीवात्मा गतवान्प्राणैस्त्यक्त्वा देहं सुताभिधः ॥ ७६

तद्देहो मलसंभूतः पित्रोस्सुरतसम्भ्रमात्।
तादृशं तादृशो विद्वान्दृष्ट्वा कायं ह शोचसि ॥ ७७

स्नानमस्तमनात्पूर्वं कुरुष्व ज्ञातिभिस्सह।

*அவன் வீடு நோக்கித் திரும்பும்போது எதிரில் ஒரு நரி வழி மறித்தது. அம்பிகையால் அதுவும் அனுப்பப்பட்டது. தன் வயிற்றை நிரப்பவும் பகலில் மயானம் சென்று சாப்பிடப் பயந்தும் அது கூறியது. ''ஸுமதி அந்தணனே! நல்லது நேர இருப்பதை உணரமாட்டாயா? யானைக் குட்டி போன்ற உன்மகன் நன்கு தூங்குகிறான். ஒரே மகன். சந்திர ஸூர்யர்களைப் போல் ஒளிர்பவன். அவனைக் கிடத்திவிட்டுச் செல்லாதே. அவனை மடியில் அமர்த்திக் கொண்டு ஸூர்யன் மறையும் வரை உட்கார்ந்திரு! இப்போது போகாதே! என்றது. இதனைக் கேட்ட ஸுமதி மறுபடி தன் மகனைக் காண மயானம் சென்றான். மென்மை மிக்க அந்த மகனை மடியிலிட்டு மகனே! மகனே! எனப் புலம்பினான். இதனைக் கண்ட மரத்திலிருந்த கழுகு, மகனை இழந்த இவன் ஏன் திரும்பிவந்தான் எனப் புரியாமல் ஸுமதியிடம் கூறியது - அந்தணனே! சவத்தைத் தொடாதே. இறந்த மகனை மடியிலிட்டு கதறுவதால் ஆவதென்ன? அந்த ஜீவன் உடலைவிட்டு நீங்கிய உயிருடன் சென்றுவிட்டான் இந்த உடல் பெற்றோரின் சிற்றின்பத்தில் வெளியான மலத்தில் உண்டானது. அதனைப் பார்த்துத் தாபப்படாதே! ஸூர்யன் மறையுமுன் உறவினருடன் நீராடி விட்டு வீட்டிற்குச் செல்வாய் என்றது. (64-77)*

श्रीविष्णुरुवाच ॥

तच्छ्रुत्वा ब्राह्मणो दीनो भूयस्स्नानाय बन्धुभिः ॥ ७८

जगाम तत्सत्यमिति तटाकं प्रति तत्ववित्।
मध्येमार्गं पुनः प्राह सृगालो मतिमत्तरः ॥ ७९

पुत्रशोकातुरं विप्रं सुमतिं बान्धवान्वितम्।
भो भो भूसुरदायाद दयाहीन शिलामनः ॥ ८०

प्रसुप्तमिव तं बालमत्यक्तप्राणमात्मजम्।
आलोलकुण्डलधरं सूर्यानलसमप्रभम्॥ ८१

अङ्कमारोप्य पश्यन्सन्नागसूनुमिवार्भकम्।
सूर्यास्तमनपर्यन्तं बन्धुभिर्ब्राह्मणोत्तमः ।। ८२

पश्चात्सायंतने स्नानं कुरुष्व सह बन्धुभिः ।
श्रीविष्णुरुवाच ।।
एवं वदति गोमायौ स विप्रःसुमतिः पुनः ।। ८३

ययौ श्मशानाभिमुखो दुःखयुग्बान्धवैस्सह।
पुनः पुत्रं समादाय स्वाङ्के चारोप्य मोहितः ।। ८४

हा पुत्र ताल तातेति रुदंस्तत्र स्थितो ह्यभूत्।
तत्रत्यवटवृक्षस्थगृध्रराजोऽपि तं द्विजम्।। ८५

वैराग्यैर्बोधयामास वाक्यैःस्वाङ्कस्थपुत्रकम्।
रुदन्तं पुत्र तातेति प्रलपन्तं मुहुर्मुहुः ।। ८६

स्वबन्धुभिः परिवृतं द्विजमाश्चर्यसंयुतैः ।
गृध्र उवाच ।।
सुमते सर्वशास्त्रज्ञ शिवज्ञानवर द्विज ।। ८७

मूढवत्पुत्रमादाय मृतमंके निधाय च।
किमर्थं रोदिषि ब्रह्मञ्जीवात्मनि गते सति ।। ८८

त्वगस्थिस्नायुरुधिररमांसमेदोमयं वपुः ।
अनेकव्याधिनिलयं पूयगन्धि सदाऽशुचि ।। ८९

अशुचिस्स्रावि सततं विष्ठामूत्रैकभाजनम्।
मृत्युग्रस्तञ्च सततं कृतघ्नं विपदां पदम्।। ९०

परेर्ष्यं पिशुनं कष्टं परनिन्दाकरं जडम्।
परप्रेष्यं पापसद्म वैरराशिनिकेतनम्।। ९१

पितृमातृमलोद्भूतं कष्टाशाशतसंकुलम्।
परिणामे श्वगोमायुगृध्रकाकादिभक्षणम्।। ९२

सुदुष्पूरं मलस्यापि नवद्वारं सदानृतम्।
नश्वरं शोकनिलयं द्वेषदूषणतत्परम्।। ९३

एकादशेन्द्रियवशं जरापलितमन्दिरम्।
कामातुरं सुवयसि वृद्धभावे मलालयम्।। ९४

शैशवेऽज्ञाननिलयं नरकप्रायमेव तत्।
एतादृशं वपुश्शापं वीक्ष्य चेतो विरज्यताम्।। ९५

अत्यन्तनिर्मले चित्ते शिवमानन्दरूपिणम्।
साम्बं चन्द्रकलामौलिमजरामरणप्रदम्।। ९६

मृत्युञ्जयं विरूपाक्षं सकलज्ञानदायकम्।
चिरं चिन्तय देवेशं सर्वदुःखहरं परम्।। ९७

*அதனைக் கேட்ட அந்த அந்தணன் ஏங்கி அதனை உண்மை என ஏற்று, நீராடக் குளத்தை நோக்கிச் செல்கையில் மறுபடி நரி குறுக்கிட்டது. புத்திர சோகத்தால் கலங்கி நிற்கிற அந்தணனை நோக்கி அது கூறியது - அசட்டு அந்தணரே! உமக்குப் பரிவு இல்லையா! உம் மனம் கல்லா! இன்னும் உயிர் நீங்காமல் தூங்குவது போலுள்ள உன் மகன் ஒளி குன்றாமல் யானைக் குட்டிபோல் உள்ளான். உறவினர்களுடன் ஸூர்யன் மறையும் வரை மடியிலிட்டுக் காப்பாய். மாலையில் நீராடி விட்டு வீடு செல் என்றது. மறுபடி அவன் மயானம் நோக்கித் திரும்பி வந்து உறவினருடன் வருந்தி மகனை மடியிலிட்டு அப்பா அப்பா எனக் கதறினான். கழுகு மறுபடியும் வைராக்யம் வரும்படி போதித்தது. ''சிவஜ்ஞானம் பெற்ற அந்தணனே! நீ அறிவிலிபோல் செத்த மகனை மடியிலிட்டு அழுகிறாய். ஜீவாத்மா வெளிக் கிளம்பியதும் தோலும் ரத்தமும் தசையும் எலும்புமான உடல், சீழ் போன்று துர் நாற்றமுள்ளது. அழுக்கான நீரைக் கசிந்தது கொண்டிருப்பது. மலமும் சிறுநீரும் மட்டுமே அதனுள் உள்ளது. பெற்றோரின்*

மலத்தில் தோன்றியது. மலத்தை வெளியேற்ற ஒன்பது ஓட்டைகள் கொண்டது. அழியும் இயல்புள்ளது. வாழ்ந்தபோது விருப்பும் வெறுப்பும் காமமும் கொண்டு மனத்துடன் 11 இந்திரியங்களுக்கு வசப்பட்டது. யௌவனத்தில் காமத்தில் உழன்றது. முதுமையில் மலம் தங்குமிடம், சிசுப்பருவத்தில் அறியாமையின் இருப்பிடம். நரக வாழ்க்கை, இத்தகைய உடல் ஒரு சாபக்கேடு. இதனைக் கண்டு பற்றின்றி ஒடுங்க வேண்டும். மனத்தைத் தெளியச் செய்து ஆனந்த வடிவினனாகச் சிவனை தியானிப்பாய். அம்பிகையுடன் இருப்பவர், பிறை சூடியவர், மூப்பும் மரணமும் நீங்கச் செய்பவர். யமனை வென்றவர். பேரறிவனைத்தும் தருபவர். துயரனைத்தையும் நீக்குபவர். அவரை நீண்ட நேரம் நினைத்துக் கொள்வாய்'' என்றது. (78-97)

श्रीविष्णुरुवाच ॥

इत्युक्तवति गृध्रेन्द्रे देव्या सञ्चोदिते फणिन् ।
निश्चित्य तत्सत्यमिति विप्रो दध्यौ गुरुं शिवम् ॥ ९८

वामदेवं महायोगिप्रवरं मुनिपुङ्गवम् ।
जीवन्मुक्तं चिदानन्दरसभाजनमुत्तमम् ॥ ९९

आययौ वामदेवोऽपि ध्यातः शिवगणैर्वृतः ।
अनेकतारासंवीतश्चन्द्रमा इव पूर्ववत् ॥ १००

समागत्य शिवाज्ञां तां तत्पुत्रस्य मृतस्य च ।
मृतसञ्जीवनीमन्त्रं जपन्ध्यानपुरस्सरम् ॥ १०१

भस्मादायास्यमध्ये तु मृतबालस्य चाक्षिपत् ।
स बालःसोमकृपया सजीवःस्तनकांक्षया ॥ १०२

रुरोद तात तातेति ताताङ्कपरिनिष्ठितः ।
ततोन्मील्येक्षणे विप्रो गुरुभक्तिमतां वरः ॥ १०३

रुदन्तं तनयं स्थाप्य भूमौ सुमतिरादरात् ।
सम्भ्रमोत्फुल्लनयनो योगीश्वरपदद्वये ॥ १०४

ननाम रक्ष रक्षेति सुमतिर्भक्तसत्तमः ।
प्रणम्य च पुनर्भूयो देवीभक्त्योत्थितो द्विजः ॥ १०५

योगिश्रेष्ठं वामदेवं तुष्टाव रचिताञ्जलिः ।

*தேவியின் தூண்டுதலால் கழுகு பேசியது. அதனைக் கேட்ட ஸுமதி அதனை நேரான விளக்கமாகக் கொண்டான். குருவையும் சிவனையும் நினைத்தான் - வாமதேவர் யோகிகளுள் சிறந்தவர். ஜீவன்முக்தர். சிதானந்த ரஸானுபவம் பெற்றவர். நினைத்ததும் சிவபக்தர்களுடன் அங்கு தோன்றினர். நக்ஷத்திரங்களுடன் கூடச் சந்திரனே வந்தது போலிருந்தது. சிவனது ஆணையாகக் கருதி இறந்த சிறுவனின் காதில் ம்ருத ஸஞ்ஜீவனீ மந்திரம் ஓதித் திறந்திருந்த வாயில் விபூதியைப் போட்டார். ஈசனின் கருணையால் உயிருடன் எழுந்த சிறுவன் தாயின் பாலுக்கு ஏங்கி அழுதான். இதுவரை கண்களை மூடிநின்ற ஸுமதி மடியில் அழுகிற குழந்தையைத் தரையிலிட்டு பரபரப்புடன் வாமதேவயோகியின் திருவடிகளில் பணிந்து காப்பாற்றுவீர் காப்பாற்றுவீர் என வேண்டினன். தேவியிடம் பக்தி மிகுந்து எழுந்த ஸுமதி யோகியைத் துதித்தான். (98-105)*

सुमतिरुवाच ॥
नमस्ते योगिनाथाय शिवानन्दस्वरूपिणे ॥ १०६

वामदेवाय गुरवे शिवज्ञानैकसिद्धये ।
पञ्चाक्षरजपासक्तमानसाम्बुरुहाय ते ॥ १०७

नमो वेदैकविदुषे नमो वेदान्तवेदिने ।
नमोऽम्बापादकमलध्यानासक्तमनोम्बुज ॥ १०८

नमः शिवपदाम्भोजभ्रमरायितमानस ।
प्रसीद भगवन्योगिन्प्रसीद गुरुपुङ्गव ॥ १०९

प्रसीद वामदेवर्षे वामदेवशिवात्मक ।
विष्णुरुवाच ॥

इति स्तुत्वा स योगीन्द्रमानन्दाश्रुविलोचनः ।। ११०

तस्थौ तस्याग्रतो विप्रो न्यस्ताञ्जलिशिरा मुने : ।
ततः प्रसन्नो भगवान्वामदेवो महामुनिः ।। १११

विप्रं सुमतिमामृज्य पश्चात्कार्यमुवाच ह ।
वामदेव उवाच ।।
वत्स वत्स न भेतव्यं त्वया देव्या परीक्षितः ।। ११२

सृगालगृध्ररूपाभ्यां कृपाविद्भ्यां स्वतो द्विज ।
सुमतिरुवाच ।।
स्वामिन्ज्ञानविधे शम्भोर्ज्ञानिपूजापरायण ।। ११३

जम्बुकः कोऽतिवाचालो लौकिकैर्वचनैः पटुः ।
गृध्रराजो ज्ञानवतां श्रेष्ठो वैराग्यवाक्च कः ।। ११४

संशयद्वयमेतन्मेऽपोद्यतां गुरुपुङ्गव ।
वामदेव उवाच ।।

तत्कारुण्यं सृगालःस्यात्तद्ज्ञानं गृध्रराट्स्वयम् ।। ११५

ताभ्यां ज्ञानकृपाभ्यां त्वं शोधितोऽसि महीसुर ।
शृणु वत्स महाभाग देवीभक्तिमतां वर ।। ११६

येन देव्या शोधितोऽसि तद्वक्ष्ये द्विजपुङ्गव ।
विष्णुरुवाच ।।
इत्युक्त्वा वामदेवोऽसौ सुखासीनो महामनाः ।। ११७

समाधाय मनःपद्मं देवीं दध्यौ महेश्वरीम् ।
योगीन्द्रेणेति सा ध्याता देवी बालाङ्कुराम्बिका ।। ११८

साक्षाद्बभूव पुरतो वामदेवस्य योगिनः ।

யோகிகளின் தலைவரும் சிவானந்த வடிவினரும் சிவஜ்ஞானத்தை முற்றிலும் பெற்றவருமான வாமதேவ குருவை நமஸ்கரிக்கிறேன். பஞ்சாக்ஷரஜபம் செய்வதில் மனத்துடன் ஈடுபட்டவர். வேதம், வேதாந்தமறிந்தவர், பாலாங்குராம்பிகை சிவபெருமான் இவ்விருவரின் திருவடியில் மனத்தைப் பதித்தவர். இவருக்கு நமஸ்காரம் - யோகியே! சிறந்த குருவே! வாமதேவருஷியே! சிவ வடிவினரே அருள்புரிவீர் என ஸுமதி வேண்டினான். அவனது தலைமீது கைவைத்த யோகி வாமதேவர் தடவி ஆறுதலளித்து மேற்கொண்டு செய்ய வேண்டியதைக் கூறினார். ''குழந்தாய்! பயப்பட வேண்டாம். நீ தேவியால் சோதிக்கப்பட்டுள்ளாய். நரியும் கழுகும் அவளது ஏவலால் அவ்வாறு பேசினர்.'' இதனைக் கேட்ட ஸுமதி 'நரி நல்ல வாயாடி. உலகியல் ரீதியில் என்னுடன் பேசியது. கழுகு அறிவும் வைராக்யமும் கொண்டது. இவர்கள் யார்'' எனக் கேட்டான். ''கருணையே நரி, அறிவே கழுகு. இவ்விரண்டும் உன்னைச் சோதித்தன. நீ சிறந்த தேவீ பக்தன். அதனால் தேவி உன்னை இவர்கள் மூலம் சோதித்தாள்.'' என்றார். வாமதேவர் உடன் பாலாங்குராம்பிகையை மனத்தில் தியானித்து வேண்ட அவள் உடன் எதிரில் தோன்றினாள். (106-118)

प्रादुर्भूतां महादेवीं चन्द्रकोटिसुशीतलाम् ।। ११९

प्रोद्यत्सहस्रकिरणप्रभापुञ्जनिभां शिवाम् ।
तुष्टाव देवदेवेशीं वामदेवो महेश्वरः ।। १२०

கோடி சந்திரர்களின் குளிர்ச்சியுடன் உதிக்கிற சூர்யனின் ஒளி கொண்ட மேனியராக தேவதேவனின் இனியாளை வாமதேவர் துதித்தார். (120)

## श्रीबालांबिकाभुजङ्गस्तुतिः

वामदेव उवाच ।।
नमो देवि बालाङ्कुरे चन्द्रचूडे पुरारातिसौभाग्यदे शैलपुत्रि ।
शिवानन्ददात्रि त्वमानन्दरूपे महायोगिबृन्दारकैर्वन्दिताङ्घ्रे ।। १२१

*பாலாங்குரா தேவீ புஜங்கஸ்துதி*

*பாலாங்குரா தேவியே! பிறை சூடியவளே, இந்திரனுக்கு ஸௌபாக்ய மளித்தவளே! மலைமகளே! சிவானந்த மளிப்பவளே! ஆனந்த வடிவினளே! யோகிகளில் சிறந்தவர்களால் திருவடி தொழப் பெற்றவளே! நமஸ்காரம். (121)*

विरिञ्चेशविष्ण्वादयस्ते स्वरूपं जगद्धेतुकं नैव जानन्ति सूक्ष्मम्।
ततस्त्वां समाराध्य देवि प्रचक्रुर्जगत्सृष्टिसंहाररक्षास्वरूपम्॥ १२२

*உலகின் மூல காரணமும் மிக ஸூக்ஷ்மமுமான உன் வடிவை மும்மூர்த்திகள் முதலானோர் புரிந்துகொள்ளவில்லை. அதனால் உன்னை வழிபட்டுப் பெற்ற உன் அருளால் படைப்பு, ஒடுக்கம், காப்பு என்ற முப்பணிகளைச் செய்கின்றனர்.*

समुद्यद्दिनेशांशुधिक्कारकान्तिप्रवालप्रवाहामनौपम्यलीलाम्।
त्रिणेत्रोल्लसद्वक्त्रपद्मापहासि त्विडक्ष्णोः कटाक्षामनीशां भजेऽहम्॥१२३

*உதிக்கின்ற ஸூர்யனின் ஒளியைத் தாழ்த்துகிற பவழ அலையானவளும், உவமையற்ற லீலை புரிபவளும், மூன்று கண்களால் முகத்தாமரை அழகாக விளங்க, அதன் கடாக்ஷத்தால் அருள்புரிபவளும் தனக்குமேல் ஆள்பவனற்றவளுமான உன்னை ஸேவிக்கிறேன். (123)*

सुनेत्रां सुनासां सुवक्त्रारविन्दां सुमन्दस्मितां नौमि बिम्बाधरोष्ठीम्।
अनौपम्यहस्ताब्जराजत्पयोजाक्षमालाऽभयेष्टां महेशार्धदेहाम्॥ १२४

*அழகிய கண்கள், மூக்கு, தாமரை போன்ற முகம், அதில் புன்சிரிப்பு, கோவைப்பழம் போல் சிவந்த உதடு, உவமையற்ற அழகு கொண்ட கைகளில் தாமரையும் அக்ஷமாலையும் அபயவர முத்திரைகளும் கொண்டவளும் மகேசனின் பாதி உடலுமான தேவியைத் துதிக்கிறேன். (124)*

सुहृच्छङ्खकर्णां सुवक्षोजकुम्भां लसन्नाभिपद्मां बृहच्छ्रोणिबिम्बाम्।
स्फुरद्धस्तिहस्तोरुलावण्यशालां लसत्कामतूणीरजङ्घां भजेऽहम्॥ १२५

*(உன்னிடம்) நல்லெண்ணம், கொண்ட சங்கு போன்று காது, யானை மத்தகம் போன்ற அழகிய மார்பகம், தாமரை போன்று ஒளிர்கிற தொப்புள், பருத்த புட்டம், யானைத்துதிக்கை போன்ற தொடை, காமனின் அம்புருத்தூணி போன்ற முழங்கால் இவற்றால் மிக மிக அழகியை நான் ஸேவிக்கிறேன். (125)*

उमे गौरि शर्वाणि कामारिकान्ते शिवानन्दपीयूषधारे महेशि।
नमो देवि कल्याणि कात्यायनि त्वां भजे देवि बालाङ्कुराम्ब प्रसीद॥ १२६

*உமையே! கௌரியே! உலகைச் சிதைக்கிறவரின் மனைவியே! காமனின் எதிரியின் இனியாளே! சிவானந்தமெனும் அமுதத் தாரையே! பேராளுனளே! மங்களமானவளே, காத்யாயனரின் மகளே! பாலாங்குரா தேவியே! உனக்கு நமஸ்காரம். அருள்புரிவாய்! (126)*

नमः कालकण्ठप्रिये भक्तचेतस्सरोजार्चिताङ्घ्रिद्वये चारुमूर्ते।
नमश्चण्डमुण्डासुरेभेन्द्रसिंहि नमो देवि बालाङ्कुराम्ब प्रसीद॥ १२७

*கருத்த கழுத்துள்ள சிவனின் இனியாளே! பக்தனின் உள்ளம் மகிழ தாமரையால் அர்ச்சிக்கப் பெறுபவளே! அழகிய மேனியுள்ளவளே! சண்டன்முண்டன் என்ற யானை போன்ற அசுரர்களைச் சிங்கமாக அழித்தவளே! பாலாங்குராதேவியே, நமஸ்காரம். அருள்புரிவாய். (127)*

उमे शूलपाणिप्रिये मे प्रसीद शिवे दैत्यवैरिप्रजानाथवन्द्ये।
नमश्शङ्करप्राणनाथे भवानि नमो देवि बालाङ्कुराम्ब प्रसीद॥ १२८

*சூலத்தைக் கையில் கொண்டவரின் இனியாளே! விஷ்ணுவாலும் பிரும்மாவாலும் வணங்கப் பெற்றவளே! மங்களமானவளே! சங்கரனின் உயிர் நாயகியே! பவனின் மனைவியே! பாலாங்குராம்பிகா தேவியே அருள்புரிவாய்! (128)*

नमो भूमिगात्रे नमोऽम्बुस्वरूपे नमो वह्निदेहे नमो वायुमूर्ते।
नमो व्योमदेहे नमश्शब्दरूपे नमस्स्पर्शतेजोरसज्ञानरूपे॥ १२९

*பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம் இவற்றை உடலாகக் கொண்டவளே! ஒலி வடிவினளே! தொடுஉணர்ச்சி, ஒளி, சுவை இவற்றின் உணர்ச்சியாக உள்ளவளே! நமஸ்காரம். (129)*

नमो गन्धमूर्ते नमश्श्रोत्रगात्रे नमस्त्वक्शरीरे नमो नेत्रगात्रे ।
नमो घ्राणरूपे च जिह्वाशरीरे नमो वाक्स्वरूपे नमः पाणिपद्मे ॥ १३०

*மூக்கு, காது, தோல், கண்கள், மூக்கு, நாக்கு, வாக்கு, கை கால் என்ற இந்திரிய வடிவினளே நமஸ்காரம். (130)*

नमः पादपायुद्वयोपस्थरूपे वचोदानसञ्चाररूपे नमस्ते ।
सदानन्दरूपे विसर्गस्वरूपे नमो बुद्ध्यहङ्कारचित्तस्वरूपे ॥ १३१

*கால், குதம், சிறுநீர் குழாய் என்ற உறுப்பு வடிவினளே! பேசுவது, தருவது, நடப்பது என்ற செயலானவளே! ஸதானந்த உருவினளே! விஸர்க (:) வடிவினளே! புத்தி - அஹங்கார - சித்தமானவளே! நமஸ்காரம். (131)*

नमो लीलयाऽऽरब्धसुस्थापितानेकलोकामतीताखिलानेकलोकैः ।
मुनीन्द्रैरहोरात्रमामृग्यमाणां गिरीन्द्रात्मजां नौमि बालाङ्कुराम्बाम् १३२

*உலகை லீலையாகப் படைக்கத் தொடங்கிக் காப்பாற்றி நிலைபெறச் செய்தவளே! உனக்கு வணக்கம். சிறந்த முனிவர்களால் தேடப் பெறுபவளும் மலையரசனின் மகளுமான பாலாங்குராம்பிகையை வணங்கித் துதிக்கிறேன். (132)*

इति स्तोत्रमेतद्भुजङ्गप्रयातं जपेद्यस्तु बालाङ्कुराम्बापुरस्तात् ।
प्रदत्ते च तस्मै सुबालाङ्कुराम्बा चिरायुष्यसौभाग्यसन्तान भूतीः ॥ १३३

*புஜங்கப் பிரயாதம் என்ற விருத்தத்தில் பாலாங்குரா தேவீ புஜங்கஸ்துதியைப் படிப்பவனுக்குத் தேவி நீண்ட ஆயுளும் ஸௌபாக்யமும் ஸந்ததியும் செல்வமும் அருள்கிறாள். (133)*

श्रीविष्णुरुवाच ॥

इति स्तुता महादेवी श्रीमद्बालाङ्कुराम्बिका ।
तत्कृतस्तोत्रमुदिता मुनिं प्रोवाच योगिनम् ॥ १३४

देव्युवाच ॥

वामदेव महायोगिन्शिवप्रियमहार्भक।
वरं वरय भद्रं ते वरदाऽस्मि तवानघ ॥ १३५

वामदेव उवाच ॥
देवि त्वच्चरणाम्भोजे मच्चित्तं भ्रमरीभवेत्।
किञ्च मे भक्तिरतुला त्वयि स्याच्छङ्करप्रिये ॥ १३६

अत्र च्युतपुरे ये च पुत्रहीनास्त्वकिञ्चनाः।
सोमवारेऽर्चयेयुस्त्वां शिवां शिवयुतामपि ॥ १३७

नक्तव्रताशनपरास्तत्र त्वन्मन्त्रजापिनः।
त्वज्जपासक्तहृदयाःसदा त्वन्मन्त्रवेदिनः ॥ १३८

तेषां सौभाग्यसन्तानं देहि शङ्करवल्लभे।
कुबेरसाम्यकल्याणराशिं देहि शिवप्रिये ॥ १३९

ये मोक्षकामिनो मर्त्याःसोमवारव्रताश्रयाः।
प्रदेहि जीवन्मुक्तित्वं तेषां परशिवप्रिये ॥ १४०

एतस्य सुमतेर्देवि पुत्रो दीर्घायुराप्नुयात्।
महदैश्वर्यमाप्नोतु सुमतिस्ते कृपाबलात् ॥ १४१

श्रीविष्णुरुवाच ॥
इत्युक्ता योगिराजेन वामदेवेन शङ्करी।
तथा भूयात्प्रसादेन शिवस्य च मम प्रभोः ॥ १४२

एवमुक्त्वा वामदेवं योगीन्द्रं जगदम्बिका।
तिरोबभूव तत्रैव मुनीन्द्राणां प्रपश्यताम् ॥ १४३

*இவ்வாறு துதிக்கப்பெற்ற பாலாங்குராம்பிகை, அந்தத் துதியில் மகிழ்ந்து வாமதேவமுனிவரிடம் கூறினள் - ''வாமதேவயோகியே! சிவனின் அன்புக்குழந்தையே! நான்*

உனக்கு வரம் தர உள்ளேன். நீ விரும்பியதைக் கேட்பாய்! நல்லதாகட்டும் என்றாள். வாமதேவர் வேண்டினார் - உன் திருவடித் தாமரைகளில் என் உள்ளம் வண்டாகச் சுற்றட்டும். உன்னிடம் ஈடற்ற பக்தி அமையட்டும். இந்த வழூவூரிலுள்ள ஏழைகள் மக்கட் பேறற்றவர்கள். திங்கள் கிழமைகளில் ஈசனுடன் உன்னை வழிபடுபவர், பகலில் உண்ணாதிருந்து இரவில் உண்பதான விரதம் ஏற்றவர்கள். உன் மந்திரத்தை ஜபிப்பவர்கள், உன் மந்திரத்தின் உட்பொருள் அறிந்தவர்கள் ஸௌபாக்யமும் நன்மகப்பேறும் குபேரனுக்கு ஈடான செல்வமும் பெறட்டும். ஸோமவார விரதமிருந்து முக்தியை விரும்புபவர் முக்தி பெறட்டும். இந்த ஸுமதியின் மகன் நீண்ட ஆயுளுள்ளவனாகட்டும். உன் அருளால் பெரும் செல்வமும் பெறட்டும் என வேண்டினார். தேவி தன் அருளாலும் சிவபெருமானின் அருளாலும் அப்படியே ஆகும் என அருளி முனிவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே மறைந்தாள். *(134-143)*

वामदेवोऽपि स मुनिः सुमतिं चानुगृह्य च ।
यथागतो ययौ भोगिन्शिष्यानुग्रहतत्परः ॥ १४४

सजीवपुत्रः सुमतिर्महात्मा समाप लक्ष्मीं महतीं शिवायाः ।
कृपाबलेनैव गुरोः प्रासादाच्छ्रीवामदेवस्य महात्मनोऽस्य ॥ १४५

स सोमवारार्चनकृन्मुनीन्द्रो बालाङ्कुरायाः परमेशपत्न्याः ।
समायुतं प्राप्य सपुत्रपौत्रस्समाप शम्भोः पदमप्रमेयम् ॥ १४६

इति निगदितमेतत्सोमवारार्चनं ते
हिमगिरितनयायाःसर्प बालाङ्कुरायाः ।
पुनरपि तव वक्ष्ये शङ्करीवैभवं भो
सकलदुरितहन्तृ श्रोतृवक्त्रोर्मनोज्ञम् ॥ १४७

इति सप्तमोऽध्यायः

*வாமதேவரும் ஸுமதிக்கு ஆசி கூறித் திரும்பிச் சென்றார். ஸுமதி நீண்ட ஆயுளுள்ள நன்மகனையும் பெருஞ்செல்வத்தையும் குருவின் அருளாலும் ஈசதம்பதியரின் அனுக்கிரகத்தாலும் பெற்றான். ஸோமவார வழிபாட்டினைத் தொடர்ந்து செய்து நன்மக்களுடன் நீண்ட நாள் வாழ்ந்து சிவபதமடைந்தான். மலைமகளான பாலாங்குரையின் ஸோமவார வழிபாட்டின் பெருமையை விளக்கியது போல பாபமனைத்தையும் நீக்குகிற அம்பிகையின் பெருமையை மேலும் விளக்குகிறேன் என்று சேஷனிடம் விஷ்ணு கூறினார். (144-147)*

—*—

॥ अष्टमोऽध्यायः ॥

सारस्वतं मूकमोचनतीर्थम्

श्रीविष्णुरुवाच ॥

वत्स भोगीन्द्र वक्ष्यामि माहात्म्यममृतोपमम् ।
श्रोतॄणां श्रोत्रयोर्भक्त्या देव्या वक्त्रमुखामृतम् ॥ १

कूपोऽस्ति पुरतो देव्या ईषदाग्नेयकोणतः ।
इक्षुसारोपमाम्बुश्च तीर्थमद्भुतवैभवम् ॥ २

श्रीमद्बालाङ्कुराम्बायाः कूपः पीयूषपूरितः ।
भाषया निर्मितः पूर्वं योषया वेधसः प्रभोः ॥ ३

सौभाग्यवाक्प्रसिध्यर्थं वल्लभात्वस्य सिद्धये ।
तस्य सारस्वताख्यस्य कूपस्य भुजगाधिप ॥ ४

सदम्भःपानमात्रेण वाग्विभूतिर्विजृम्भते ।
देवस्येशानकोणस्थकूपस्यापि च पानतः ॥ ५

कृष्णवर्मा स भोगीन्द्र कृष्णकुष्ठाद्व्यमुच्यत ।
तस्य कूपस्य माहात्म्यं केन वा वर्ण्यते फणिन् ॥ ६

यत्कूपजलपानाद्वै मूकत्वमपि गच्छति ।
सारस्वताख्यकूपस्य मूकमोचन इत्यपि ॥ ७

तस्य प्रसिद्धिरगमन्महादेव्याः प्रसादतः ।
प्रातरुत्थाय यो मर्त्यः पिबेत्सारस्वताम्बु वै ॥ ८

गद्यपद्यात्मिका वाणी तस्य वक्त्राद्विनिःसरेत् ।
यो नरः प्रातरुत्थाय स्नात्वा पिबति तज्जलम् ॥ ९

गङ्गाप्रवाहवत्तस्य मण्डलाद्वाग्विजृम्भते ।
मूकमोचनतीर्थाख्यात्कूपात्सारस्वताह्वयात् ॥ १०

जलं गृहीत्वा यो देवीं श्रीमद्बालाङ्कुराम्बिकाम् ।
अभिषिञ्चेत्प्रयत्नेन सोऽश्नुते कवितां नरः ॥ ११

*அத்தியாயம் 8*

*ஸாரஸ்வத தீர்த்தம் எனும் மூகமோசன தீர்த்தம்*

*விஷ்ணு சேஷனிடம் கூறுகிறார் - தேவியின் வாக்கிலிருந்தே கேட்ட அமுதம் போன்ற தலப்பெருமையைக் கூறுகிறேன். தேவியின் எதிரே தென் கிழக்கில் அமுதம் நிரம்பிய கிணறு உள்ளது. கரும்பின் சாறு போன்று இனிக்கிற நீர். பிரும்மாவின் பத்னியான ஸரஸ்வதி தோற்றுவித்தது. ஸாரஸ்வதம் என்ற அந்தக் கிணற்றின் நீர் பருகியவனுக்கு உடன் சொல்வன்மை கிட்டும். ஈசனின் வடகிழக்கு மூலையிலுள்ள அந்தக் கிணற்றின் நீரைப் பருக குஷ்டநோயும் விலகும். கிருஷ்ணவர்மா என்ற அரசன் அதன் நீரைப் பருகி குஷ்டநோய் நீங்கப் பெற்றான். ஸாரஸ்வத தீர்த்த நீரைப் பருக ஊமைநிலை நீங்கும். அதனால் அதனை மூகமோசன தீர்த்தம் என்பர். செய்யுளும் உரை/ நடையுமாகச் சொற்கள் அவன் வாயிலிருந்து கங்கை பிரவாச போல் வெளியாகும். அதன் நீரைக் கொண்டு தேவியை நீராட் கவியாவான். (1-11)*

शेष उवाच ।।

मुकुन्द गोविन्द हरे सनन्दननुताङ्घ्रिक ।
सदा पूजारतिपर प्रमथेशपदाम्बुजे ।। १२

कोऽसौ तु कृष्णवर्मेति नृपः कुत्रत्यकेश्वरः ।
कस्माद्वै कृष्णकुष्ठत्वमगमत्स नृपः प्रभो ।। १३

अत्रागत्य कथं मुक्तः कृष्णकुष्ठाद्विशांपतिः ।
कुष्ठत्वमुपसंपन्नो नरो मूकत्वहेतुना ।। १४

पापेन केन देवेश शान्तिःस्यात्तस्य वा कथम् ।
कथमत्रागतःसोऽपि प्राप कस्योपदेशतः ।। १५

तयोर्मुक्तिः कथञ्चासीच्छिवस्य कृपया हरे ।
प्रसीद परमोदार छिन्धि मत्संशयं प्रभो ।। १६

श्रीविष्णुरुवाच ।।

कृष्णवर्मचरित्रं तु ब्रवीमि फणिपुङ्गव ।
सर्वपापहरं नित्यं श्रवणात्पठनादपि ।। १७

पुरा कृतयुगे भोगिन्दिवोदासो महीपतिः ।
षष्टिर्वर्षसहस्राणि ब्रह्मचर्यपरायणः ।। १८

ततापा योगी नितरां प्रथमाश्रममाश्रितः ।
ब्रह्माणं परया भक्त्याऽपूजयन्मुक्तिसिद्धये ।। १९

ततः प्रसन्नो भगवान्ब्रह्मा लोकपितामहः ।
राजानं मुक्तिमिच्छन्तं प्रोवाच प्रयतेन्द्रियम् ।। २०

ब्रह्मोवाच ।।

वत्स राजन्महाप्राज्ञ तपसाऽलं शृणुष्व मे ।
वचनं लोकरक्षार्थमङ्गीकुरु मम प्रिय ।। २१

राज्ञामनीत्या भूलोके दुर्भिक्षोऽभूद्दुरात्मनाम् ।
तेन वर्णाश्रमाचारा भ्रष्टाश्च नितरां नृप ॥ २२

तेन नष्टा विशेषेण साग्निहोत्रादयः क्रियाः ।
अतस्त्वं राजशार्दूल राज्यं पालय धर्मतः ॥ २३

अभिषिक्तःस्वयं तात सचिवैर्धर्मतत्परैः ।
अन्ते मुक्तिं महादेवस्ते दास्यति जगद्गुरुः ॥ २४

विश्वेशः करुणाम्भोधिस्स्वभक्तस्य च धीमतः ।

*சேஷன் விஷ்ணுவிடம் விண்ணப்பித்தார். முகுந்த! கோவிந்த! சிவபெருமானின் வழிபாட்டில் ஆர்வமிக்கவரே! கிருஷ்ணவர்மா என்பவன் யார்? எந்த நகரத்தின் அரசன்? கருங்குஷ்டம் ஏன் அவனுக்கு ஏற்பட்டது? எவ்வாறு அது இங்கு நீங்கியது? ஊமை நிலே எந்த பாபத்தால் ஏற்படுகிறது? யார் இவனுக்கு இந்த இடத்திற்கு வழிகாட்டியது? சிவன் அருள்பெற்று முக்தி பெற என்ன செய்தான்?'' இதனைக் கேட்ட விஷ்ணு கூறுகிருர். கிருதயுகத்தில் திவோதாஸன் என்ற அரசன் 10,000 ஆண்டுகள் பிரும்மசர்ய ஆசிரமத்திலிருந்து கொண்டு பிரும்மாவை நோக்கித் தவம் செய்தான். முக்தி பெற விரும்பிய அவனிடம் பிரும்மா, கூறினுர் - ''தவம் செய்தது போதும். மக்களை நன்கு பரிபாலிப்பாயாக! அரசன் நெறி தவறி அரசாளப் பஞ்சம் நேரும். மக்கள் அறவழி தவறுவர். நற்பணிகள் நடைபெருது. அதனுல் பட்டாபிஷேகம் செய்து கொண்டு மக்களை அறநெறியில் காப்பாயாக. இறுதியில் கருணைக்கடலான ஈசன் அறிவாளியான தன் பக்தனுக்கு முக்தி அளிப்பார். என்ருர். (12-24)*

श्रीविष्णुरुवाच ॥
इत्युक्तवति भाषेशे दिवोदासो विशांपतिः ॥ २५

नत्वा ब्रह्माणमात्मेशं बभाषे रचिताञ्जलिः ।
राजोवाच ॥
देवदेव जगत्कर्तः प्रजेश करुणालय ॥ २६

मम विज्ञापनं ब्रह्मंस्तव चित्ते निधापय।
राजा न लभते स्वर्गं राज्यश्रीलुप्तचेतनः ॥ २७

भोगलुप्तस्य भूपस्य भोगान्ते नरकं भवेत्।
यो राजा पृथिवीस्थान्नॄन् हिंस्यान्न्यायविवर्जितः ॥ २८

रौरवादिमहागर्ते पच्यते कालमक्षयम्।
अत एव महादेव राज्यं माऽस्तु ममाज भो ॥ २९

राज्यान्ते नरकप्राप्तिरिति वेदविदो विदुः।
राज्यदानं विहायाद्य मोक्षदानं प्रदेहि मे ॥ ३०

*இதனைக் கேட்ட அரசன் பிரும்மாவிடம் கை கூப்பி விண்ணப்பித்தான். அரசாட்சியில் ஆர்வத்தால் வெளிப்பணிகளில் ஈடுபடுபவனால் ஸ்வர்கம் செல்ல இயலாது. போகவாழ்வு முடிவில் நரகத்தைத் தரும். நேர்மை தவறி ஆட்சி புரிந்தாலும் நரகத்தில் நீண்ட நாட்கள் வாடுவான். அதனால் எனக்கு ராஜ்யம் வேண்டாம். ராஜ்யத்தை அளிக்காமல் முக்தி அளிப்பீர் என்று வேண்டினான். (25-30)*

ब्रह्मोवाच ॥

मुक्तिं दास्यति गौरीशो देहान्ते प्राणनायकः।
काश्यां लिङ्गार्चनादेव शिवस्य परमात्मनः ॥ ३१

प्रशास्मि त्वामहं ब्रह्मा मद्वाक्यं परिपालय।
धर्मी न चेत्पालयसे राज्यं कस्तत्प्रशास्यति ॥ ३२

मच्छासनात्पालय भो त्वमेव नियतः क्षितिम्।
विष्णुरुवाच ॥
इत्युक्तो विधिना भोगिन्दिवोदासो विशांपतिः ॥ ३३

काशीं विश्वेश्वरपुरीं प्राप्य राज्यमकारयत्।
तस्य पुत्रो महानासीत्कृष्णकुष्ठी विशांपतेः ॥ ३४

प्रारब्धकर्मपारुष्यात्कृष्णवर्मेति नामतः।
सर्वशास्त्रार्थतत्वज्ञो दिवोदासप्रसादतः॥ ३५

बभूव सकलास्त्रज्ञो नीतिमान्बलवानपि।
पुत्रे राज्यं प्रतिष्ठाप्य कृष्णवर्मणि धर्मवित्॥ ३६

दिवोदासः शिवं यष्ट्वा प्राप्तवान्परमं पदम्।
दिवं याते स्वपितरि दिवोदासे महात्मनि॥ ३७

कृष्णवर्मापि संपश्यन्कुष्ठदेहं तथात्मनः।
विरक्तस्सर्वकामेभ्यो वाराणस्यामुवास ह॥ ३८

तस्य पुत्रो महानासीत्काशीपतिरिति श्रुतः।
सर्वलक्षणसंपन्नस्सर्वशास्त्रविशारदः॥ ३९

*பிரும்மா கூறினார். காசியில் லிங்கத்தை வழிபட நம் உயிரின் நாயகனான ஈசன் உடலில் இறுதியில் முக்தியை வழங்குவான். நான் உனக்குக் கட்டளை இடுகிறேன். நீ என் வார்த்தைப்படி நடப்பாய். நீ நேர்மையுடன் அரசாளாவிடில் உன் ராஜ்யத்தை எவன் காப்பான்? அதனால் என் ஆணைப்படி நாட்டை ஆள்வாய் என்றார். இதனைக் கேட்ட அரசன் திவோதாஸன் விசுவேசனின் நகரமாகிய காசியை ஆண்டான். அவனது மகன் பிறவியிலேயே கடும் குஷ்டத்தால் துயருற்றான். அதனால் கிருஷ்ணவர்மா எனப் பெயர் பெற்றான. திவோதாஸனின் வழிகாட்டலில் பேரறிவும் நேர்மையும் வலிவும் பெற்றான். தன் மகன் கிருஷ்ண வர்மாவிடம் அரசாட்சியை ஒப்படைத்துத் திவோதாஸன் பரமபதம் அடைந்தான். கிருஷ்ணவர்மன் தான் குஷ்ட நோயாளியானதால் பற்றின்றி காசியில் வசித்தான். அவனது மகன் காசீபதி எல்லா தகுதிகளும் பெற்றுப் பேரறிவாளனானான். (31-39)*

राज्यं पुत्रे निवेश्यासौ तस्मिन्सद्गुणवारिधौ।
तीर्थयात्रापरो धीमान्कृष्णवर्मा महीपतिः॥ ४०

स्वदेहकुष्ठनाशाय शिवज्ञानाय केवलम्।
धर्मलाभाय नृपतिः प्रतस्थे नगरात्प्रभुः ॥ ४१

प्रयागं नैमिशारण्यं पुष्करं तीर्थमुत्तमम्।
कालाञ्जनं महाकालं गण्डकीं पुरुषोत्तमम्॥ ४२

श्रीशैलं वेङ्कटाद्रिञ्च सालग्रामं महागिरिम्।
श्रीकालहस्तिशैलञ्च श्रीमत्काञ्चीपुरं परम्॥ ४३

श्रीमद्व्याघ्रपुरं रम्यं ततो जल्पेश्वरं तथा।
श्वेतारण्यञ्च मायूरं मध्यार्जुनमतः परम्॥ ४४

छायावनं च श्रीवाञ्छ्यं श्रीरङ्गं श्रीतपोवनम्।
कुम्भकोणं च नागेशं द्रुतिस्नानं च सुन्दरम्॥ ४५

इत्यादीनि शिवक्षेत्रविष्णुक्षेत्राण्यनेकशः।
सञ्चरन्कृष्णवर्मासौ तत्तत्क्षेत्रोत्तमोत्तमे॥ ४६

तत्र तत्र महादेवं संपूज्य च हरिं मुदा।
न शर्म लेभे नृपतिर्ज्ञानं शैवञ्च शाश्वतम्॥ ४७

एकदा पर्यटन् राजा जन्मान्तरतपोबलात्।
मुनिं शमीवनेऽपश्यत्कैवल्यं तपतां वरम्॥ ४८

प्रतपन्तमिवादित्यं दीप्यन्तमिव पावकम्।
सुधाकरमिव श्वेतं दिग्धाङ्गं भवभस्मना॥ ४९

तं प्रणम्य च भूपालः कृष्णकुष्ठेन पीडितः।
उपसङ्गम्य विनयात्पप्रच्छ मुनिपुङ्गवम्॥ ५०

*தன் மகனிடம் நாட்டையாளும் பொறுப்பை ஒப்படைத்து தன் குஷ்ட நோய் நீங்கவும் சிவஜ்ஞானம் பெறவும் நகரிலிருந்து வெளியேறி பிரயாகை, நைமிசாரண்யம், புஷ்கரம்,*

*காலாஞ்ஜனம், மஹாகாளம், கண்டகீ, புருஷோத்தமம், ஸ்ரீ ஶைலம், ஸ்ரீ வேங்கடமலை, ஸாலக்ராமம், காள ஹஸ்தி, காஞ்சீபுரம், புலியூர், திருவையாறு ச்வேதாரண்யம், மாயூரம், மத்தியார்ஜுனம், சாயக்காடு, ஸ்ரீவாஞ்சியம், ஸ்ரீரங்கம், தபோவனம் (திருத்தவத்துறை) கும்பகோணம், நாகேச்வரம், த்ருதிஸ்நானம் என்றவாறு சிவ - விஷ்ணு க்ஷேத்திரங்களுக்குச் சென்று மஹாதேவனையும் ஹரியையும் வழிபட்ட பின்னரும் நிம்மதியின்றி சுற்றி வந்தான். முன் பிறவியில் செய்த தவத்தின் பயனாக வழுவூரில் வன்னி மரக்காட்டில் தவமிருந்த கைவல்ய முனிவரைக் கண்டான். தவத்தில் சிறந்தவர். ஸூர்யனைப் போன்று ஒளிமிக்கவர். சந்திரனைப் போன்று வெண்ணிறமேனி உள்ளவர். அக்கினி போன்று ஒளிர்பவர். அவரை அணுகி அரசன் பணிவுடன் கேட்டான். (40-50)*

राजोवाच ॥

नमस्ते मुनिनाथाय कैवल्याय महात्मने ।
स्वाश्रिताभीष्टदानाय कैवल्यपददायिने ॥ ५१

इदं शरीरं कुष्ठार्तं मदीयं मुनिपुङ्गव ।
केन पापेन मम वै जन्मान्तरकृतेन च ॥ ५२

कुत्र गत्वाद्य सन्त्यज्य कृष्णकुष्ठं मदीयकम् ।
शैवं पदमवाप्नोमि ब्रूहि कैवल्ययोगिराट् ॥ ५३

कैवल्य उवाच ॥

साधु पृष्टस्त्वया राजन्नयं प्रश्नो महामते ।
हितश्च सर्वलोकानां तवापि सुखदो भवेत् ॥ ५४

पूर्वजन्मनि राजेन्द्र त्वं तत्रापि महीपतिः ।
त्वया वेदपुराणानि धर्मशास्त्राणि पार्थिव ॥ ५५

दूषितानि सदा राजन्नैमित्तिकमकारणात् ।
सत्कर्म दूषितं मोहादश्रद्धया च तत्कृतम् ॥ ५६

ब्राह्मणा निन्दिता राजन्श्रुतिधर्मपरायणाः ।
देवता दूषिता ब्रह्मरुद्रविष्ण्वादयस्त्वया ।। ൫൭

तेन पापेन महता नीलकुष्ठी भवानभूत् ।
महाराजप्रसूतोऽपि राजभोगेन वर्जितः ।। ൫൮

शिवज्ञानेन वाञ्छा ते बभूवाऽन्यस्य दुर्लभा ।
राजोवाच पूर्वं राज्ञा कृतेनर्षे कर्मणा पापकेन वै ।
शरीरं कुत्सितं जातं ज्ञानेच्छा केन कर्मणा ।। ൫൯

*முனிவருள் சிறந்தவரே! தன்னை அண்டியவர் நாடுவதை அருள்பவரே! முக்திக்கு வழிகாட்டுபவரே! இந்த உடல் குஷ்டநோயுற்றது. முன்பிறவியில் என்ன பாபம் செய்தேனே அறியேன். எங்கு சென்றால் இது நீங்கும்? சிவபதம் கிட்டும்? அருள்புரிவீர் என வேண்டினன். கைவல்யர் கூறினர். நீ கேட்ட கேள்வி உனக்கு மட்டுமல்ல, உலகிற்கே நலம் தருவதாகும். நீ முன் பிறவியிலும் அரசன். வேதம் புராணம் முதலியவற்றைப் பற்றி அவதூறாகப் பேசியதால் இந்த நோய் வந்துள்ளது. அந்தணரையும் தேவர்களையும் மும்மூர்த்திகளையும் தூஷித்தாய். அதனால் கரும் குஷ்டம் ஏற்பட்டது. அரசகுலத்தில் தோன்றிய போதிலும் அரசபோகம் உனக்குக் கிட்டவில்லை. மற்றவருக்கு உண்டாகாத சிவஜ்ஞான நாட்டம் வியப்பிற்குரியது என்றார். உடல் கெட்ட நோய் வாய்ப்பட்டுள்ளபோது சிவஜ்ஞானத்தில் நாட்டம் எப்படி உண்டானது? என்று கேட்டான். (51-59)*

ऋषिरुवाच ।।

शृणु राजन्प्रवक्ष्यामि पुण्यं प्रागार्जितं त्वया ।
पूर्वस्मिन्जन्मनि विभो पूजिताः शिववल्लभाः ।। ൬൦

वाचा च न तु भोज्याद्यैस्तेन पुण्येन कर्मणा ।
तव जाता ज्ञानवाञ्छा पुनरावृत्तिवर्जिता ।। ൬൧

मद्दर्शनञ्च सुलभं बभूव नृपपुङ्गव।
यो निन्दति पुराणानि धर्मशास्त्राणि वै श्रुतीः ॥ ३२

स भुक्त्वा रौरवं घोरं कृष्णकुष्ठीह जायते।
यो निन्दति द्विजान्वेदाञ्छास्त्रज्ञान्धर्मवादिनः ॥ ३३

स महानरकं भुक्त्वा दुर्बुद्धिर्भुवि जायते।
यो निन्दति हरिब्रह्मरुद्रादीनपि दैवतान् ॥ ३४

स भुक्त्वा कालसूत्रन्तु दरिद्रो जायते भुवि।
तस्माद्वेदपुराणानां निन्दनं न कदाचन ॥ ३५

कुर्यान्न शृणुयाद्धर्मशास्त्रादीनाञ्च मानवः।
इदानीं कर्मविच्छित्यै वक्ष्यामि तव देहिनाम् ॥ ३६

கைவல்யருஷி கூறினார். முன் பிறவியில் சிவனடியார்களை வாயளவில் புகழ்ந்தாய். ஆனால் உணவு முதலியவற்றால் உபசரிக்கவில்லை. அதனால் மறுபிறப்பிற்கு உட்படாத முக்தி பற்றிய ஆர்வம் எழுந்தது. என்னைச் சந்திக்கிற வாய்ப்பும் கிட்டியது. புராணம் தர்மசாஸ்திரம் முதலியவற்றையும் சாஸ்திர அறிஞர்களான அந்தணர்களையும் மும்மூர்த்திகள் முதலான தேவர்களையும் நிந்திப்பவன் மறுபிறவியில் குஷ்டநோயாளியாவான். காலஸூத்ரம் முதலிய நரகங்களில் துயருற்றபின் ஏழையாகப் பிறப்பான். அதனால் இவற்றை நிந்திப்பதும், நிந்தனையைக் கேட்பதும் தவறு. இந்த வினைத் தொடர்பு அகல வழி கூறுகிறேன். (60-66)

दुर्लभं पापिना नित्यं क्षेत्रमद्भुतवैभवम्।
शृणु राजन्महाभाग कावेर्या दक्षिणे तटे ॥ ६७

क्रोशमात्रमिते दूरे तिष्ठति श्रीच्युताभिधम्।
अस्माद्वनात्समीपस्थं ब्रह्माण्डाद्बहिर्निर्गतम् ॥ ३८

जीवन्मुक्तिपुरं नित्यमण्डनाशेऽपि पार्थिव।
अस्मिन्बालाङ्कुराम्बाख्या शिवेन सह मोदते॥ ३९

सा शक्तिः परमेशानी परिपूर्णा सनातनी।
शिवानन्दमयी साक्षाच्छिवस्य सुखदायिनी॥ ७०

वाग्रमोमास्वरूपा च ब्रह्मविष्णुशिवात्मिका।
स्वतन्त्रा च परब्रह्ममहिषी तच्छुभप्रदा॥ ७१

हरिरुद्रविधीशानसदाशिवमुखप्रसूः।
वाणीरमोमाजननी वामदक्षिणवक्त्रतः॥ ७२

पञ्चवर्णमयी देवी पञ्चाशद्वर्णरूपिणी।
अम्बिका त्रिपुरा श्रीदा श्रीमत्पञ्चदशाक्षरा॥ ७३

निराकारापि सा देवी साकारा भक्तिमन्नृणाम्।
सर्वज्ञा नित्यतृप्ता चानादिबोधा स्वतन्त्रका॥ ७४

अलुप्ता चाप्यनन्ताऽथ सर्वाङ्गेषु विजृम्भिता।
शक्तिरशक्तिरिति श्रेष्ठा त्रिमूर्तीनां परस्य च॥ ७५

तां देवीं तु समभ्यर्च्य श्रीमद्बालाङ्कुराम्बिकाम्।
मूकमोचनकूपे तु स्नात्वा मुक्तो भविष्यसि॥ ७६

कृष्णकुष्ठविनिर्मुक्तः सूर्यतेजा नृपोत्तम।
हिरण्यवर्माख्य इति लोके ख्यातिं गमिष्यसि॥ ७७

तस्मिन्नादिसभां जीर्णामुद्धरिष्यसि भक्तितः।
तत्र कण्वोपदेशेन जीवन्मुक्तो भविष्यसि॥ ७८

காவேரியின் தென்கரையில் கூப்பிடு தூரத்தில் இந்த வன்னிக் காட்டிற்கு அருகே ஜீவன் முக்தி தருகிறபுரம் வழுவூராகும். பிரும்மாண்டம் மறையும் போதும் மறையாமல்

நிற்பது. இங்கு பாலாங்குராம்பிகை சிவனுடன் திகழ்கிறுள்: அவள் பூர்ணமான நித்யமான பராசக்தி. சிவானந்த வடிவினள். சிவனுக்கும் இன்பமளிப்பவள். ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி என்ற மூன்றின் மொத்தவடிவம். மும்மூர்த்திகள் வடிவினள். தன் விருப்பப்படி செயல்படுபவள். (அவளை எவரும் கட்டுப்படுத்த இயலாது). பரம்பொருளின் பட்டமகிஷி. பிரும்மா விஷ்ணு ருத்ரர் ஈசுவரர் ஸதாசிவர் என்ற ஐந்து பிரும்மங்களின் தாய். வாணியையும் லக்ஷ்மியையும் உமையையும் தோற்றுவித்தவள். பஞ்சாக்ஷர மந்திர வடிவினள், 50 எழுத்துக்களின வடிவானவள். சிறந்த தாய். முக்காலத்திற்கும் அப்பாற்பட்டவள். செல்வமளிப்பவள். 15 அட்சரம் கொண்ட ஸ்ரீ வித்யை வடிவினள். வடிவற்றவளாயினும் பக்தருக்காக வடிவுள்ளவள். எல்லாமறிந்தவள். எப்போதும் மனநிறைவுற்றவள். ஞானத்துடன் கூடத் தோன்றியவள். தன் விருப்பப்படி செயல்படுபவள். மறைவில்லாதவள், எல்லையற்றவள், மும்மூர்த்திகளுக்கும் பரம் பொருளிற்கும் சக்தி, மூகமோசன கூபத்தில் (ஊமைக் கிணற்றில்) நீராடியதும் இந்நோய் நீங்கப்பெறுவாய். ஸுர்ய ஒளி பெற்ற மேனி பெறுவாய். ஹிரண்யவர்மா என உன் பெயர் மாறும். இந்த ஆதிஸபையைப் புதுப்பித்து கண்வரின் உபதேசம் பெற்று ஜீவன் முக்தனுவாய் என கைவல்யர் கூறினுர். (67-78)

श्रीविष्णुरुवाच ॥

इत्युक्तो नृपतिस्तेन कैवल्येन महात्मना ।
तेनोपदिष्टमार्गेण ययौ च्युतपुराह्वयम् ॥ ७९

ततस्स नृपतिः प्राप्य पुरीं धर्मभृतां वरः ।
श्रीमद्बालाङ्कुरां देवीं पूजयामास भक्तितः ॥ ८०

मूकमोचनतीर्थे च स्नात्वा पीत्वा नृपोत्तमः ।
स्नानात्पानाच्च भूपस्य शरीरं सूर्यसन्निभम् ॥ ८१

बभूव सर्पाधिपते तस्य कूपस्य वैभवात् ।
ततष्षण्मासार्चनेन तस्य भक्तस्य भूपतेः ॥ ८२

प्रादुर्बभूव कल्याणी श्रीमद्बालाङ्कुराम्बिका ।
स्वार्चकं राजशार्दूलमुपवासकृशाङ्गकम् ॥ ८३

सूर्यतेजस्समानाङ्गं मूकमोचनतीर्थतः ।
वृणीष्वेति वरं राजन्प्रोवाच मधुराक्षरम् ॥ ८४

तां प्रसन्नां विशालाक्षीं प्रसन्नवदनाम्बुजाम् ।
कृताञ्जलिरुवाचेदं प्रणम्य शिववल्लभाम् ॥ ८५

राजोवाच ॥

एतत्तीर्थस्य माहात्म्यं दृष्टं चानुपमं मया ।
तव प्रसादाच्छर्वाणि मदङ्गं स्वर्णतां गतम् ॥ ८६

तीर्थस्यास्य च माहात्म्यं मूकमोचननाम च ।
कथं समागतं देवि केन वात्र च सेवितम् ॥ ८७

एतत्सर्वं प्रविस्तार्य करुणासारतो मयि ।
श्रीमद्बालाङ्कुरादेवि प्रसीद मम शङ्करि ॥ ८८

*அவர் கூறியவாறு வழுவூர் சென்ற அரசன் பாலாங்குரையை வழிபட்டான். மூகமோசன தீர்த்தத்தில் நீராடினான். அந்த நீரையே பருகினான். உடல் நோய் நீங்கப்பெற்று ஸூர்ய ஒளி பெற்றது. ஆறு மாதங்கள் தொடர்ந்து வழிபட்ட அரசனின் முன் தேவி தோன்றினாள். அவனிடம் வரம் கோரும்படி கூறினாள். ஹிரண்யவர்மா அவளை வணங்கிக் கை கூப்பி வேண்டினான். இதுவரை காணாதிருந்த இந்த தீர்த்தத்தின் பெருமையை இன்று கண்டேன். என் உடல் தங்கவண்ணம் பெற்றது. ஆனால் மூகமோசனம் என்று இதற்கு ஏன் பெயர் வந்தது? இதனைக் கருணையுடன் விளக்குவாயாக'' என்றான். (79-88)*

देव्युवाच ॥

राजन् तीर्थस्य महिमा वक्ष्यते श्रवणप्रियः ।
हिरण्यवर्मन् राजर्षे शृणुष्व सुसमाहितः ॥ ८९

पुरा दक्षिणकैलासे राजा नागाह्वयो बली।
वेदशास्त्रार्थसंपन्नः प्रजापालनतत्परः॥ ९०

शिवभक्तश्च दान्तश्च ब्रह्मज्ञो ब्रह्मवत्सलः।
तस्य पुत्रो जन्ममूको नाम्ना नागेन्द्रकङ्कणः॥ ९१

द्वात्रिंशल्लक्षणैर्युक्तस्सुकुमाराङ्गलक्षणः।
बभूव राजशार्दूल कालहस्तीशपूजया॥ ९२

मूकत्वशान्त्यै राजासौ तस्य यत्नं चकार ह।
मूकात्मजभवाज्जातमनोदुःखेन दुःखितः॥ ९३

सारस्वतैर्महामन्त्रैश्चतुर्वेदसुसम्भवैः।
अनेककोटिसञ्जप्तैर्ब्राह्मणैः सलिलैर्नृप॥ ९४

कारयामासाभिषेकं सुतस्य जगतीपतिः।
न गतं तस्य मूकत्वमेवं कृत्वापि भूपते॥ ९५

ततश्चिन्ताकुलो राजा भूयो यत्नं ततान ह।
श्रीमद्दक्षिणकैलासनाथस्य सविधे सुतम्।
निवेशयामास नृपो भक्तो मूकत्वशान्तये॥ ९६

*தேவி கூறினாள் - தென் கைலாஸத்தில் நாகன் என்ற வலிவுமிக்க அரசன். வேத சாஸ்திர - உட்பொருளறிந்தவன். அரசாட்சியை நேர்மையுடன் செய்வதில் ஆர்வமிக்கவன். சிவபக்தன். புலனடக்கமுள்ளவன். பிரும்மஜ்ஞானி. அந்தணரிடம் அன்பு பூண்டவன். அவனது மகன் நாகேந்திரகங்கணன் பிறவியில் ஊமை. 32 உடலழகுக் குறிகளும் கொண்டவன். காளஹஸ்தீசனை வழிபட்டதால் பிறந்தவன். அவனது ஊமை நிலையை நீக்க அரசன் நான்கு வேதங்களிலுமுள்ள ஸரஸ்வதியின் மஹாமந்திரங்களை பல கோடிகள் தடவை நல்ல அந்தணர்களைக் கொண்டு ஜபிக்கச் செய்தான். அவ்வாறு மந்திரித்த நீரால் மகனை நீராட்டச்செய்தான்.*

ஊமை நிலை நீங்காததைக் கண்டு மேலும் சிந்தித்த அரசன் முயன்று தென் கைலாஸநாதரின் அருகில் மகனை வாழச் செய்தான். *(89-96)*

अथ स्वप्ने समागत्य नृपतेः परमेश्वरः ।
तस्य मूकत्वशान्त्यै च प्रोवाच धरणीपतिम् ।। ९७

ईश्वर उवाच ।।

नागराज शृणु तव सुतमूकत्वशान्तये ।
जन्मान्तरकृतात्पापादिदं मूकत्वमागतम् ।। ९८

तत्पापशुद्ध्यै वक्ष्यामि मम स्थानान्तरं नृप ।
सर्वपापहरं नित्यं जन्मकोटिशतार्जितम् ।। ९९

अतिगुह्यतरं भूप प्रवेशात्किञ्चिदस्ति वै ।
नाम्ना च श्रीच्युतपुरमण्डबाह्याद्विनिर्गतम् ।। १००

तत्र च्युतपुरे कूपे देवीमन्मध्यमस्थिते ।
सुधोपमानसलिले नाम्ना सारस्वताभिधे ।। १०१

स्नात्वा पीत्वा जलं तस्य भूयात्कूपस्य वाक्पटुः ।
इत्युक्त्वान्तर्दधे देवो मदानन्दकरः शिवः ।। १०२

*ஒருநாள் கனவில் பரமேச்வரன் தோன்றி அரசனிடம் கூறினார் - முன் பிறவியில் செய்த தீவினை இந்நோயைத் தந்துள்ளது. எனது மற்றொரு புனிதஸ்தலம் அண்ட வெளியிலிருந்து தோன்றியது. ச்யுதபுரீ என்பது. அங்குள்ள ஸாரஸ்வதகூபம் எனக்கும் தேவிக்கும் இடையே அமைந்துள்ளது. அதன் நீரில் நீராடி அதனைப் பருக சொல்வன்மை பெறுவான் என்று கூறி மன்மதன் எதிரியான சிவன் மறைந்தார். (97-102)*

देव्युवाच ॥

इति स्वप्नोदितां वाचं श्रुत्वा शम्भोर्महीपतेः ।
तथैव कृतवांस्तत्र कूपाम्बुनि निजात्मजम् ॥ १०३

मूकत्वात्प्रविमुक्तोऽभूत्स च नागेन्द्रकङ्कणः ।
महावाग्मी बभूवाशु सूर्यतेजा ममाज्ञया ॥ १०४

इत्येतस्य च कूपस्य माहात्म्यं वर्णितं मया ।
मूकमोचननामापि प्राप्तः कूपो ममाज्ञया ॥ १०५

श्रीविष्णुरुवाच ॥

इत्युक्तो राजशार्दूलस्स्वर्णवर्मा भुजङ्गम ।
कण्वयोगिनमत्रैव ददर्श नगजाज्ञया ॥ १०६

तेनोक्तेनैव मार्गेण सभानिर्माणमास्तिकः ।
तथैव कारयामास नृपः सर्वेश्वरस्य सः ॥ १०७

रहस्यं शास्त्रतो राजा कारयामास भक्तितः ।
कृत्तिवासेशलिङ्गस्य शतहस्तप्रमाणतः ॥ १०८

ईशकोणे महादेव्या अपि स्वर्णमयीं सभाम् ।
नवरत्नविचित्राञ्च हरचक्रमनोहराम् ।
चकारादिसभां दिव्यां नाम्ना ज्ञानसभेति च ॥ १०९

एवं सुवर्णवर्मा च बहुकालं शिवाश्रितः ।
तत्रैव शिवसायुज्यं प्राप्तवान्नृपपुङ्गवः ॥ ११०

इति अष्टमोऽध्यायः ।

——*——

கனவில் பரமேசுவரன் கூறியவாறு அரசன் அவ்வாறே தன் மகனை ஸாரஸ்வத கூபத்தில் நீராட்டி அந்நீரைப் பருகச் செய்தான்.

நாகேந்திர கங்கணன் ஊமைநிலை நீங்கி பெரும் பேச்சாளனாக ஆனான். ஸூர்யனின் ஒளி பெற்றான். இதுதான் மூகமோசன தீர்த்தத்தின் பெருமை. பின்னர் ஸ்வர்ணவர்மா தேவியின் ஆணைப்படி கண்வர் என்ற யோகியைக் கண்டு வணங்கி அவரது ஆணைப்படி ஜ்ஞான ஸபையைச் செப்பனிட்டு அழகு படுத்தினான். ரஹஸ்யஸ்தானமும் அமைத்தான். கிருத்திவாஸ லிங்கத்திற்கு நூறு முழத்திற்கு அப்பால் தேவியின் வடகிழக்கில், நவரத்னங்கள் பதித்த தங்கமயமான ஆதிஸபையை அமைத்தான். ஜ்ஞானஸபை எனப் புகழ்ந்தான். இவ்வாறு ஸ்வர்ணவர்மா வெகு நாட்கள் நாட்டை ஆண்டபின் சிவனுடன் இரண்டறக் கலந்தான். *(103-110)*

—*—

॥ अथ नवमोऽध्यायः ॥

श्रीविष्णुरुवाच ॥

श्रीमद्बालाङ्कुराम्बाया भक्तमाहात्म्यमद्य वै ।
वक्ष्यामि शेष ते नूणां श्रोतॄणामघनाशनम् ॥ १

दिने दिने शङ्करवल्लभाया बालाङ्कुरायास्सविधे मुहूर्तम् ।
जपन्महादेवकुटुम्बिनीसन्मन्त्रं कुबेरस्य समः श्रिया स्यात् ॥ २

अहे पुरा गौडभवोऽग्रजन्मा नाम्ना सुदेवो निगमागमज्ञः ।
कार्पासदावानलदह्यमान इहाप्य देवीं समुपास्य जप्यैः ॥ ३

ततश्चिरात्सोऽपि गिरीन्द्रकन्याप्रसादतः प्रालभताग्रजन्मा ।
रथाश्वमातङ्गखरोष्ट्ररत्न सुवर्णदुर्वर्णचयान्सुधेनूः ॥ ४

அத்தியாயம் 9

சீர்மிக்க பாலாங்குராம்பிகையின் பக்தர்களின் பெருமையை விஷ்ணு மேலும் விளக்குகிறார் - ''சேஷனே! இதனைக்கேட்கப் பாபம் விலகும். தினந்தோறும்

*பாலாங்குராம்பிகையின் அருகில் அமர்ந்து தேவியின் மந்திரத்தை ஜபிப்பவன் குபேரனுக்குச் சமமான செல்வம் பெறுவான். முன்பு கௌடதேசத்தில் ஸுதேவன் என்ற அந்தணன் வேத - ஆகமங்கள் அறிந்தவன். பஞ்சுப்பொதியைக் காட்டுத்தீபோல் ஏழ்மை அவனை எரித்தது. இங்கு வந்து தேவீ மந்திரத்தை ஜபித்துத் தேர், யானை, குதிரை, கழுதை, ஒட்டகை, நல்ல பசுக்கள், தங்கம் மற்ற உலோகங்கள் முதலிய செல்வச் செழிப்பைப் பெற்றான். (1-4)*

शेष उवाच ॥

केशवाच्युत गोविन्द हरे मृडपदार्चक ।
शिवानन्दरसास्वादमत्तमानस मापते ॥ ५

कोऽसौ गौडभवो विप्रः कोऽस्याधारः किमात्मकः ।
कथं कार्पण्यमापन्न उपास्ते गिरिजां कथम् ॥ ६

ऐश्वर्यं स कथं प्राप गिरिजायाः प्रसादतः ।
कां वृत्तिञ्च विधायासौ गौडदेशे स्थितः प्रभो ॥ ७

देवीभक्तस्य माहात्म्यं प्रसीद पुरुषोत्तम ।

श्रीविष्णुरुवाच ॥

शेष वच्मि महाभक्तचरित्रं पापनाशनम् ॥ ८

दारिद्र्यनाशनं पुण्यं शृण्वतां पठतामपि ।
शृणुष्व सर्पराजेन्द्र सावधानमना भवन् ॥ ९

गौडदेशोद्भवः कश्चित्सुदेवश्चेति नामतः ।
उञ्छवृत्तिरतो नित्यं सर्वशास्त्रविशारदः ॥ १०

देवीपूजारतो नित्यं भिक्षान्नाशी च भूसुरः ।
अष्टौ कन्याः समभवन्द्वौ पुत्रौ तस्य धीमतः ॥ ११

दिने दिने च भिक्षित्वा देवीं संपूज्य भक्तितः ।
संसारयात्रां कुरुते कार्पण्यपरिपीडितः ॥ १२

जीर्णवस्त्रपरीधानो विशीर्णस्वनिकेतनः ।
तादृग्विधाश्च पुत्राश्च तादृग्भार्या बभूव ह ॥ १३

एवं सत्यपि विप्रेन्द्रस्सत्यसन्धो जितेन्द्रियः ।
स्वाश्रमाचारनिरतो गिरिजापूजने रतः ॥ १४

सर्वं प्रारब्धकर्मेति दारिद्र्याादिप्रपीडनम् ।
भुञ्जन्प्राक्तनकर्माणि देवीं न प्रार्थयद्वरम् ॥ १५

भार्यया च सुताभिश्च तनयाभ्यां सह द्विजः ।
उवास कतिचित्कालं सर्वं सोढ्वा द्विजाग्रणीः ॥ १६

*அவனைப் பற்றி மேலும் விளக்கம் தரும்படி விஷ்ணுவிடம் சேஷன் வேண்டினன். "அவன் யார்! கௌடதேசத்தில் எவ்வாறு வாழ்க்கை நடத்தினன்? எதனல் ஏழையானன்? தேவியை எவ்வாறு வழிபட்டான்? செல்வச் செழிப்பை எப்படிப் பெற்றன்? தேவீபக்தனை அவனது பெருமை என்ன?" என. விஷ்ணு கூறினர். அந்த மகாபக்தனின் வரலாறு பாபத்தைப் போக்கவல்லது. ஏழ்மையை நீக்கவல்லது. கௌடதேசத்தில் ஸுதேவன் என்ற அந்தணன். தினமும் உஞ்சவிருத்தியால் வாழ்க்கை நடத்தினன். எல்லா சாஸ்திரங்களிலும் தேர்ந்தவன். தினமும் தேவியை வழிபடுபவன். பிக்ஷை எடுத்து உண்பவன். அவனுக்கு எட்டு பெண்களும் இரண்டு புதல்வர்களும். ஏழ்மை அவனை வாட்டியது. கிழிந்த ஆடை, சிதிலமான குடிசை, ஆனல் உண்மை பேசுபவன், புலனடக்கம் கொண்டவன், தன் இல்லறத்து நியமங்களை ஒழுங்காகப் பின்பற்றுபவன். தேவியைத் தினமும் வழிபடுவான். இந்த ஏழ்மை முதலிய துன்பங்கள் முன் வினைப்பயனுக விளைபவை எனக்கொண்டு, உறுத்தலின்றி அனுபவிப்பான். தேவியிடம் எதனையும் வேண்டமாட்டான். இப்படி மனைவி மக்களுடன் வாழ்ந்தான். (5-16)*

मध्याह्नसमये भोगिन्कदाचिद्द्विजसत्तमः ।
गौरीमभ्यर्च्य विधिवत्पञ्चयज्ञं विधाय च ।
बुभुजेऽन्नं स्मरन्देवीं मन्दं मन्दं स भूसुरः ॥ १७

एतस्मिन्नन्तरे कन्याः क्षुत्पीडापरिपीडिताः ।
स्वमातरमयाचन्त रुदन्त्योऽन्नं परिव्रताः ॥ १८

अम्ब तात न भोक्ष्येऽन्नमिति काचिदुवाच ह ।
यवागु वाम्ब देहीति पास्ये वदति काचन ॥ १९

ददस्वान्नं ममाप्यम्ब यत्किञ्चिदिति काचन ।
काचिद्रोदित्यकस्माच्च मातरं प्रति कन्यका ॥ २०

भोक्तव्यमम्ब भोक्तव्यमिति काचिद्ब्रवीति च ।
तदीयं जीर्णवस्त्रान्तं गृहीत्वा रोदनान्विता ॥ २१

इतस्ततः प्रकर्षन्ती कन्या काचन धावति ।
काचिद्भोजनपात्रं वै समुद्धृत्य गृहान्तरे ॥ २२

देयमन्नं ममाम्बेति प्रोच्चैर्वदति कन्यका ।
अम्बाम्बेति गृहाणास्याः क्षुधा क्रोधार्तिः काचन ॥ २३

ततस्सा जननी खिन्ना सुदेवस्य वराङ्गना ।
तत्सर्वमविषह्याशु निश्चित्य प्राङ्गणे बहिः ॥ २४

सन्ताड्य जठरे वक्षस्यालुठन्ती रुरोद ह ।
न सहामि शिवे देवि दारिद्र्यपरिपीडनम् ॥ २५

मृतिं देहि ममार्येऽपि सर्वदुःखोपशान्तये ।
भर्तुः प्राग्मरणं स्त्रीणां वरं हि शिववल्लभे ॥ २६

अतो मे मरणं देहि प्रोद्धराद्य तु सङ्कटात् ।
इत्येवं विलपत्याशु वाचं दुःखसमन्वितम् ॥ २७

श्रुत्वा भूमिसुरोऽश्नन्स त्यक्त्वान्नं निरगाद्बहिः ।
प्रक्षाल्य मुखपादौ च हस्तावाचम्य वाग्यतः ॥ २८

तस्या निकटमागत्य चेदं वचनमब्रवीत् ।

*ஒருநாள் நடுப்பகலில் கௌரியை வழிபட்டபின் பிரும்மயஜ்ஞும் செய்து பின் மெள்ள உணவேற்றுன். அப்போது அவனது பெண்கள் பசியால் வாடியவராய் தாயைச் சுற்றி நின்று உணவு தரவேண்டினர். 'சாதம் போடு! கஞ்சியாவது தா! எதாவது கொடு! சாப்பிடவேண்டும்!' என அழுதனர். தாயின் கிழிந்த ஆடையைப் பற்றி ஒருவள் இழுத்தாள். ஒருவள் கோபித்தாள். இதனைக் கண்ட ஸுதேவனின் மனைவி வேதனை தாங்காமல் வயிற்றிலும் மார்பிலும் அடித்துக் கொண்டு அழுதாள். ''தேவி!'' இந்த ஏழ்மைக் கொடுமையைத் தாங்க முயவில்லை. அம்மா! இந்தத் துயரம் நீங்க மரணத்தைத் தருவாய். சிவனின் இனியாளே! கணவனுக்கு முன் மனைவி இறப்பது சிறந்தது. எனக்கு மரணம் தருவாய்! இந்த சங்கடத்திலிருந்து விடுவிப்பாய்'' என்று கதறினுள். இதனைக் கேட்ட ஸுதேவன் உண்பதை நிறுத்தி வெளியேறிக் கைகால்களை அலம்பி ஆசமனம் செய்தபின் அவளது அருகில் வந்து அவளைச் சமாதானப்படுத்தினுன். (17-28)*

सुदेव उवाच ॥

मा रोदीर्महिले कान्ते देवी दास्यति वाञ्छितम् ॥ २९

यथा चिरात्तव प्रीत्यै प्रयत्नं करवाण्यहम् ।
इति तामभिसान्त्वय्य निजभार्यां स भूसुरः ।
दारिद्र्यं प्राञ्जलिः प्राह विषण्णोऽन्तरनेकधा ॥ ३०

दारिद्र्य तेऽहं प्रणमामि भक्त्या सिद्धः प्रसादात्तव पूजितस्य ।
पश्यामि सर्वानहमेव नित्यं न केऽपि पश्यन्ति च तादृशं माम् ॥ ३१

इति दारिद्र्यतो विप्रो निर्विण्णो निजवल्लभाम् ।
विमृश्य गात्रं तां देवीं भक्तो वाचमुवाच ह ॥ ३२

विप्र उवाच ॥

क्षमावति प्रिये धीरे मानिनि प्रियवादिनि ।
मदाचारानुकूलेत्थं शृणुष्व वचनं मम ॥ ३३

कस्यापि भूयान्न दरिद्रता यत्पत्नीसुताः शत्रुवदामनन्ति ।
सुचोरवद्बान्धवदर्शनञ्च महासभायाञ्च पिशाचवत्स्यात् ॥ ३४

शत्रूणामपि दारिद्र्यं नेयात्प्राणान्त्यकारिणाम् ।
येन मानापमानञ्च न जानात्यपि मानवः ॥ ३५

न दारिद्र्यात्परं दुःखं न दारिद्र्यात्परा मृतिः ।
न दारिद्र्याच्च निरयं न दारिद्र्यादघं परम् ॥ ३६

विद्वाञ्छूरोऽपि गुणवान्सुन्दराङ्गोऽपि मानवः ।
दरिद्रो न च कुत्रापि पूज्यते कैश्चिदन्त्यजैः ॥ ३७

तेजोहानिश्च दास्यञ्च गौरवस्य च नाशनम् ।
सदा मानसपीडाञ्च दारिद्र्येणाप्नुयान्नरः ॥ ३८

दरिद्रः किङ्करो लोके सर्वेषां प्राणिनामपि ।
मलिनत्वं भवत्येव नात्र कार्या विचारणा ॥ ३९

शौर्यं धैर्यञ्च मानञ्च सद्वृत्तिं कृपणो नरः ।
त्यजति प्राकृत इव विद्वानपि च मानवः ॥ ४०

दरिद्राणां गतिर्नास्ति दारिद्र्यार्णवमज्जताम् ।
सदा पापानि कुर्वन्ति यदाश्रयबलान्नराः ॥ ४१

वदत्यसत्यं वित्तञ्च मुष्णाति च करोति च ।
पापकर्माणि कृपणः गृह्णात्यप्यन्त्यजाज्जनात् ॥ ४२

न प्राप्नुवन्ति कृपणाः शाश्वतं शिवमच्युतम् ।
यदि वैराग्यरहिताः संसारार्णवमग्नतः ॥ ४३

श्रीविष्णुरुवाच ॥

इत्युक्त्वा भूसुरोऽनन्त सुदेवो निर्मलाशयः ।
स भार्यां प्रतिसञ्ज्ञे तन्मनो ह्लादयन्निव ॥ ४४

"நீ அழாதே! தேவி நீ விரும்பியதைத் தருவாள். நீ மகிழ்ச்சி பெறும்படி நான் முயற்சி செய்கிறேன்" என்று தன் மனைவியை ஸமாதானப்படுத்தி விட்டு, தன் ஏழ்மையைத் தனிமையில் நொந்து கொண்டான். "ஏழ்மையே! உன்னை வணங்குகிறேன். உன் அருளால் நான் தேறிவிட்டேன். நான் அனைவரையும் தினமும் காண்கிறேன். ஆனால் இந்நிலையிலுள்ள என்னை எவரும் பார்ப்பதில்லை என்று புரிந்து கொண்டேன் என்று பலவாறு புலம்பினான். வேறு வழி காணாத அவன் தன் மனைவியிடம் பரிவுடன் பேசினான் - "பொறுமை மிக்கவளே! என் நடைமுறைக்கேற்ப நடப்பவளே! என் சொல்லைக் கேட்பாய். ஏழ்மை எவனுக்கும் நேரக்கூடாது. மனைவியும் மக்களும் அவனை எதிரியாகக் காண்பர். உறவினர் திருடனாகக் காண்பர். மக்கள் கூட்டத்தில் அவன் பிசாசு. என் உயிரைப் பறிப்பவனுக்குக் கூட ஏழ்மை வரக் கூடாது. இதனால் பிறர் மதிப்பதையும் அவமதிப்பதையும் உணர இயலவில்லை. ஏழ்மையை விடக்கொடும் துன்பமில்லை. இதனைவிட சாவு துயர் தராது. நரகம் கொடியதல்ல. கொடிய பாபம் இது. மனிதன் படித்தவனாக, சூரனாக அழகனாக இருந்தாலும் கீழ் மக்கள் கூட அவனை மதிக்க மாட்டார்கள். முகப்பொலிவு இழந்து மதிப்பிழந்து அடிமையாகி கொடும் மனத்துயரம் அடைகிறான். அனைத்து உயிரினத்திற்கும் அவன் அடிமை. தனது ஆற்றலையும் தைரியத்தையும் மானத்தையும் பிழைப்பையும் இழந்து பேரறிஞனும் பாமரனாக உலாவுகிறான். அவனுக்குப் போக்கிடம் இல்லை. மதிமயங்கி மேலும் மேலும் தவறிழைக்கிறான். கொடுமை தாங்காமல் பொய் பேசுவான். திருடுவான். கீழ் மக்களிடமும் யாசிப்பான். ஆனால் சிவனையோ, விஷ்ணுவையோ வழிபடமாட்டான். ஸம்ஸாரக் கடலில் ஆழ்ந்து கரை ஏற முடியாமல், வைராக்யமின்றி தவிப்பான்" என்று புலம்பிவிட்டு அவளுக்கு ஆறுதலளிப்பதற்காக இந்தத் துயரம் நேர்ந்ததற்குரிய

